# இளைஞர் இஸ்லாமியக் கலைக்களஞ்சியம்

மணவை முஸ்தபா

MP மீரா பப்ளிகேஷன்

# இளைஞர் இஸ்லாமியக் கலைக்களஞ்சியம்


மணவை முஸ்தபா, எம். ஏ.



விலை ரூ 90/-



வெளியீடு:

மீரா பப்ளிகேஷன்ஸ்

ஏஈ 103, அண்ணா நகர்,

சென்னை - 600 040.

# Ilaignar Islamia Kalaikkalanjiam

MANAVAI MUSTAFA, M.A.

PRICE Rs. 90/-

*Published by*



MEERAA PUBLICATION
AE-103, ANNA NAGAR
MADRAS-600040

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | Ilaignar Islamia Kalaikkalanjiam |
| Author | : | Manavai Mustafa |
| Language | : | Tamil |
| First Edition | : | 1991 |
| Copyright holder | : | Manavai Mustafa |
| Paper used | : | 16 kg White cream wove |
| Size of the book | : | D/Crown |
| Printing point used | : | 11 points |
| No. of Pages | : | 184+8=192 |
| Price | : | Rs 90 /- |
| Printer | : | Meeraa press<br>AE-108 Anna Nagar,<br>Madras-600 040. |
| Binding | : | Hord Bound |
| Publishing place | : | Meeraa Publication<br>AE-108, Anna Nagar,<br>Madras-600 040 |

# முன்னுரை

இஸ்லாமிய இளைய தலைமுறையினர் இஸ்லாம் தொடர்பான பல்வேறு செய்திகளை அறியவும் தெளிவு பெறவும் உறுதுணையாயமையவல்ல கையடக்க இஸ்லாமியக் கலைக்களஞ்சியமொன்றை உருவாக்க வேண்டுமென்ற பேராவல் பல ஆண்டுகளாக என் நெஞ்சத்தில் கனன்று கொண்டிருந்தது. இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று, இஸ்லாமியச் சிறுவர்கள் பல்வேறு காரணங்களால் இளமையில் இஸ்லாம் குறித்துப் போதிய அறிவுத் தெளிவுபெற வாய்ப்பில்லாத நவீன வாழ்க்கைச் சூழலில் வளர்ந்து வர நேர்ந்துள்ளது. இவ்வாறு சின்னஞ்சிறு வயதில் தவிர்க்க முடியா நிலையில் இஸ்லாமிய அறிவைப் பெற இயலாமற் போன அவர்கள் இஸ்லாமியத் தகவல்களைப் படித்தறிய வேண்டும் என்ற வேட்கையால் உந்தப்பட்டவர்களாக இருப்பதையும் நான் அறிவேன். அவர்கட்கேற்ற எளிய சொல்லாட்சியோடு இனிய நடையில் கையடக்க நூலாகத் தந்தால் அவர்கட்குப் பெரிதும் பயன்படும் என்ற என் உள்ளுணர்வின் விளைவே இந்நூல். அத்துடன் முஸ்லிமல்லாதவர்கட்கும் இஸ்லாமியத் தகவல்களை மொழித் தடையின்றித் தமிழில் படித்தறிய எளிதாக இருக்கும் என்பது என் உள்ளக்கிடக்கையாகும்.

தமிழில் இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் இல்லையே என்ற ஏக்கத்தைப் போக்கிய பெருமை பன்னூலாசிரியர் எம். ஆர். எம். அப்துற்-றஹீம் அவர்கட்கு உண்டு. இருபதாண்டுகட்கு முன்னர் அன்னார் உருவாக்கி வெளியிட்ட 'இஸ்லாமியக் கலைக்களஞ்சியங்கள்' மூன்று தொகுதிகள் வரலாற்றுச் சிறப்புடையப் பதிப்புகளாகும். இவ் விளைஞர் இஸ்லாமியக் கலைக்களஞ்சிய உருவாக்கத்திற்கு அத்தொகுதிகள் மூலாதாரமாக அமைந்தனவெனினும் பொருந்தும். இது போன்ற வழி நூல்கள் பல உருவாக ஆதாரமூல நூல்கள் (Source books) பலவற்றைத் தமிழில் உருவாக்கித் தந்த பெருஞ் சிறப்பும் அவர்களுக்குண்டு. அன்னார் இந்நூலுக்கு அரிய அணிந்துரையொன்றையும் எழுதி வாழ்த்தியுள்ளார்கள். என் முயற்சிகட்கு என்றும் துணையாயமைந்து வரும் பன்னூலாசிரியர் அவர்கள் முப்பது ஆண்டுகட்கு முன்னர் என்னை இஸ்லாமியத் தமிழ் இலக்கியத் தொண்டின்பால் ஆற்றுப்படுத்திய பெருமைக்குரியவர்.

*கடந்த அரை நூற்றாண்டு காலமாக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் முத்திரைப் பணியாற்றி வரலாறு படைத்துவரும் பன்னூலாசிரியர் அல்ஹாஜ் எம். ஆர். எம். அப்துற்-றஹீம் அவர்களின் அளப்பரிய இஸ்லாமியத் தமிழ்த் தொண்டுக்கு இந்நூலை காணிக்கையாக்குவதில் பெருமையும் பெருமிதமும் அடைகிறேன்.*

இந்நூல் செம்மையுறப் பெருந்துணையாயமைந்தவர் பன்மொழிப் புலவர் மௌலவி எம். அப்துல் வஹ்ஹாப் சாஹிப், எம். ஏ; பி. டிஹெச். அவர்களாவர். நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் படித்த காலம் தொட்டே என் முயற்சிகளுக்கெல்லாம் வழிகாட்டியாக விளங்கி வரும் மௌலானா அவர்கள்

இந்நூலின் கையெழுத்துப் பிரதிகளைப் பார்வையிட்டு அவற்றை உரிய முறையில் திருத்தி மாற்றியமைத்தும் அரிய ஆலோசனைகளை வழங்கியும் பெருந் துணை புரிந்தார்கள். அவர்கள் காட்டிய ஆர்வமும் உதவியும் என்னையே மலைக்கச் செய்தனவாகும். 'செய்வன திருந்தச் செய்' என்ற உயரிய நோக்குக்கு இலக்கணமாகத் திகழும் மௌலானா அவர்கள் இந்நூலுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் ஆய்வுரை வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள். அவர்கட்கு நான் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலின் அச்சுப் பதிவங்களைப் பார்வையிட்டு அரிய ஆலோசனைகள் பலவற்றை வழங்கிச் சிறப்பித்த 'ஜமாத்துல் உலமா' ஆசிரியர் மௌலவி ஹபுல் ஹஸன் ஷாதலி ஹஜரத் அவர்கட்கும் கையெழுத்துப் பிரதிகளை அவ்வப்போது பார்வையிட்டு கருத்துரை வழங்கிய சென்னை அண்ணாநகர் 'மஸ்ஜிதெ ஜாவீத்' பேஷ் இமாம் அல்ஹாஜ் அலாவுதீன் சாகிப் அவர்கட்கும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூல் உருவாக்கத்தின்போது தொய்வின்றி கருத்தூன்றிப் பணியாற்றப் பெரும் தூண்டுகோலாய் இருந்தவர் என் துணைவியார் திருமதி சித்தை சௌதா அவர்களாவர். அவர்களது, பரந்த இஸ்லாமிய ஞானம் என் முயற்சிக்கு உரமாயமைந்ததை நன்றிப் பெருக்குடன் நினைவு கூர்கிறேன்.

எனது முந்தைய இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் படைப்புகட்குப் பேராதரவளித்தத் தமிழுலகம் இந்நூலையும் ஏற்று ஆதரவளிக்கும் என்ற நம்பிக்கை என்றும் எனக்குண்டு. இன்றையச் சூழலில் நம் இளைய தலைமுறையினரின் இஸ்லாமிய ஞானம் பெருக்கும் ஊற்றுக்கண்ணான இந்நூல் ஒவ்வொருவர் இல்லத்திலும் இளைஞர் கரத்திலும் தவழச் செய்வர் என நம்புகிறேன்.

அன்பன்
மணவை முஸ்தபா

# அணிந்துரை

மனிதன் தான் கண்டும் கேட்டும் அறிந்த அறிவுகள் அனைத்தையும் ஒரே நூலில் பொதிய வைத்து மக்களினம் பயன் அடைய வேண்டும் என்னும் நன்னோக்கத்தின் மீது எழுந்தது தான் கலைக்களஞ்சியம் ஆகும். இம் மண்ணுலகில் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே கலைக்களஞ்சியம் எழுதும் பணி தொடங்கிவிட்டது. இந்த இரண்டாயிரம் ஆண்டுகளில் உலகின் பல்வேறு பகுதிகளிலும் இரண்டாயிரம் கலைக் களஞ்சியங்கள் வரை எழுதப்பட்டுள்ளன. ஆனால் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்குள்ளேதான் கலைக்களஞ்சியத்தை அகரவரிசைப்படி தயாரிக் கும் வழக்கம் ஆரம்பமாகியது.

உலகிலுள்ள முக்கியமான மொழிகளிலெல்லாம் கலைக்களஞ்சியங்கள் வெளியாகியுள்ளன. ஆங்கிலம், ஃபிரெஞ்சு, ஜெர்மன், ஸ்பானிஷ், போர்ச்சு கீஸ், ஜப்பானிய, சீன மொழிகளில் பல தொகுதிகளில் கலைக்களஞ்சியம் வெளியாகி உள்ளது. ஆனால் இவற்றிலெல்லாம் மிகப்பெரியது சீனக் கலைக்களஞ்சியமாகும். அது 5020 தொகுதிகளைக் கொண்டதாகும்.

இவ்வாறு உலகத்தின் முக்கியமான மொழிகளிலெல்லாம் கலைக் களஞ்சியம் வெளிவந்திருக்க, பழம்பெரும் மொழியான தமிழில் மட்டும் வெளிவராதது ஒரு பெரும் குறையாகவே இருந்தது. 21 ஆண்டு உழைப்பின் மீது அது 1968ஆம் ஆண்டு பத்துத் தொகுதிகளாக வெளிவந்து நிறைவு பெற்று அக்குறை நீக்கப்பெற்றது. அதைத் தொடர்ந்து தமிழில் குழந்தைகள் கலைக்களஞ்சியமும் பல தொகுதிகளில் வெளி வந்திருக்கிறது.

இவை தவிர யூத, கத்தோலிக்க, இஸ்லாமியக் கலைக்களஞ்சியங்களும் ஆங்கிலத்தில் வெளிவந்துள்ளன. நம் தமிழ் மொழியிலும் இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் மூன்று தொகுதிகளில் வெளிவந்துள்ளது.

எனினும் குழந்தைகளுக்கான இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் தமிழ் மொழியில் இல்லாதது ஒரு குறையாகவே இருந்துவந்தது. அதனை நிறைவு செய்யும் வகையில் கலைமாமணி மணவை முஸ்தபா அவர்கள் குழந்தைகள் படித்துப்புரிந்து பயனடைய ஒரு கலைக்களஞ்சியத்தை எளிய, இனிய தமிழில் தயாரித்துள்ளார்கள். இதன் பக்கங்களைத் தேவைப்படும் பொழுது மட்டும் திருப்பி பார்க்காமல் ஒரு நாளைக்குச் சில பக்கங்கள் வீதம் தொடக்கம் முதல் இறுதி வரைக் குழந்தைகள் படித்து முடிப்பார்களாயின் வெகு விரைவில் இஸ் லாத்தைப் பற்றியும் முஸ்லிம் நாடுகள், நகரங்கள், பெரியார்கள் பற்றியும் கணிசமான அறிவைப் பெறுவார்கள் என்பதில் ஐயமில்லை.

எம். ஆர். எம். அப்துற்-றஹீம்

# ஆய்வுரை

இளஞ் சிறார்களுக்கான இந்த இஸ்லாமியக் கலைக்களஞ்சியத்தை வாசகர்களுக்கு அறிமுகப்படுத்துவதில் பெரிதும் மகிழ்வடைகிறேன்.

அல்ஹம்து லில்லாஹ்

ஏதேனும் ஒன்றைப்பற்றித் தேவையான தகவல்களைத் தெரிந்து கொள்ள வேண்டுமாயின், அத்தகவல்கள் அனைத்தையும் சாதாரணமாக ஒரே நூலில் நாம் பெற்றுக்கொள்ள முடிவதில்லை. சான்றாக: ஒருநாட்டைப் பற்றி நாம் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறோம் அல்லது தேவைப்படு கிறோம். அதன் வரலாறு பற்றிச் சரித்திர நூலில் தேடுகிறோம். அதில் இருக் கும் மலைகள் போன்றவை பற்றி நில நூலில் பார்க்கிறோம். தட்பவெப்ப நிலைகள் பற்றிப் பிறிதொரு நூலில் படிக்கிறோம். அதன் தொழில் வளம் பற்றி அறிய வேறொரு நூலைத் தேடுகிறோம். இவையனைத்தையும் ஒரே தொகுப்பில் பெற்றுக்கொள்ள முடியுமானால் எவ்வளவு வசதியாக இருக்கும்? இதைத்தான் ஓர் என்சைக்கிளோபீடியா (Encyclopaedia) செய்து நமக்கு உதவுகிறது.

"என்சைக்கிளோபீடியாவுக்கு "பல்பொருள் விளக்க நூல்" அல்லது "கலைக்களஞ்சியம்" என்று பெயர் சூட்டுகிறது பேரகராதி.

இதற்கு முன்னோடியாக இருந்தவர்கள் பண்டைக் காலங்களில் பல துறைகளிலும் சாதனை நிகழ்த்தியவர்களான சீனர்கள்தாம் என்று என் சைக்கிளோபீடியாவின் வரலாறு தெரிவிக்கிறது. உலகின் மிகப் பெருங் கலைக்களஞ்சியம் ஒன்றை யுங்லோ (Yunglo) என்பார் 11,000 (பதினோ ராயிரம்!) தொகுதிகளில் இயற்றியதாகவும், அது 1900ஆம் ஆண்டில் பீகிங் (இன்றைய பெய்ஜிங்) தாக்கப்பட்டபோதும், அதற்கு முன்னர் 1644இல் நான்கிங் (Nanking) நகரம் தீப்பட்டபோதும் பெருமளவு அழிந்துவிட்டதாக வும், இப்போது அதன் சில தொகுதிகளே எஞ்சியுள்ளன என்றும் பல்பொருள் விளக்க நூல் வரலாறு கூறுகிறது.

இத்தகைய கலைக்களஞ்சியங்கள் தொகுத்தமையில் முஸ்லிம்களின் பணியும் கணிசமானதாகும். முஹம்மதுப்னு குதைபா தீனவரியுடைய பத்துத் தொகுதியிலான "கிதாபு உயூனில் அக்பார்," இப்னு அப்தி ரப்பிஹியின் 'மிஃப்தாஹுல் உலூம்" போன்ற கலைக்களஞ்சியங்கள் பத்து - பன்னி ரண்டு நூற்றாண்டுகளுக்கு முன்னரே அரபி மொழியில் வெளிவந்தவை யாகும்.

ஆனால், தமிழில் பொதுவான ஒரு கலைக் களஞ்சியம் இருபது ஆண்டு களுக்கு முன்தான் வெளிவந்தது. எனினும் இதில் இஸ்லாமிய வாழ்வு நெறி,

வரலாறு, இலக்கியம் போன்றவை பற்றிய தகவல்கள் மிகக் குறைவாகவே இடம் பெற்றிருந்தன, பன்னூலாசிரியர் அல்ஹாஜ் M.R.M. அப்துற்-றஹீம் B.A., அவர்களின் இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் வெளிவந்ததும் இக் குறை பெருமளவுக்கு நீங்கிற்று என்று சொல்லலாம். அன்னார் ஆற்றிய இச்சிறப்புமிகு பணிக்கு நாம் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றோம்.

முஸ்லிம் சிறார்களுக்கு இலகுவான நடையில், ஒரே தொகுதியாக கலைக்களஞ்சியம் ஒன்று வெளிவந்தால் அது எத்துணைச் சிறப்புடையதாக இருக்கும் என்று பலப்போதும் நான் எண்ணிப் பார்த்ததுண்டு. என் எண் ணத்துக்கு ஓர் ஆக்கபூர்வமான வடிவம் கொடுத்தமை போன்று கலைமாமணி மணவை முஹம்மது முஸ்தபா M. A. அவர்கள் ஓரழகிய தொகுப்பை வெளி யிட்டுள்ளார்கள்.

இதனைக் கையெழுத்துப் படியிலேயே வரிக்கு வரி படித்தேன்; தேவையான திருத்தங்களும் செய்தேன். எனினும் எங்கள் கவனத்தையும் மீறி ஏதேனும் பிழைகள் காணப்படின் வாசகர்கள் பொறுத்தருளுமாறும் அவற் றைத் தொகுப்பாசிரியருக்குத் தெரிவிக்குமாறும் வேண்டுகிறோம்.

இத்தகு அரிய, அவசியமான, பயன்மிக்க நற்பணியைச் செய்து முடித் துள்ள கலைமாமணி மணவை முஹம்மது முஸ்தபா அவர்கள் நம் நல்வாழ்த் துக்கு உரியவர். அல்லாஹு ஸுப்ஹானஹு வ தஆலா அவர்களுக்கும், இத் திருப்பணியில் அவர்களுக்கு உறுதுணையாக இருந்தோருக்கும் வாழ்க்கை யின் அனைத்து நலன்களையும் தந்தருளுமாறு துஆச் செய்கிறேன்.

நம் ஒவ்வொருவரின் இல்லத்திலும் இத்தொகுப்பு கட்டாயம் இருக்க வேண்டும் என்று பரிந்துரை செய்கின்றேன்.

வ ஆகிரு தஃவானா அனில் ஹம்து
லில்லாஹி ரப்பில் ஆலமீன்.

எம். அப்துல் வஹ்ஹாப், எம். ஏ; பி. டிஹெச்.

## இளைஞர்

# இஸ்லாமியக் கலைக்களஞ்சியம்

**அக்பர்:** இந்த அரபுச் சொல்லுக்கு 'மிகப் பெரிய' அல்லது 'மாபெரும்' என்பது பொருளாகும். வல்ல இறைவனை 'அல்லாஹ் அக்பர்' என்று நாம் போற்றுகிறோம். இதற்கு 'அல்லாஹ் மிகப் பெரியவன்' என்பது பொருளாகும்.

இந்தியாவை ஆண்ட மாபெரும் முகலாய மன்னர் ஒருவரின் பெயர் அக்பர். இவர் இந்திய மன்னர்களிலேயே பெரும் புகழ்பெற்ற முஸ்லிம் பேரரசர் ஆவார். இவரது முழுப்பெயர் ஜலாலுத்தீன் முஹம்மது அக்பர் என்பதாகும். இவருடைய தந்தை மன்னர் ஹுமாயூன் ஆவார். அக்பர் 1542ஆம் ஆண்டு பிறந்தார்.

இவர் பதின்மூன்றாவது வயதிலேயே முடி சூட்டப்பட்டார். சிறு வயது முதலே இவருக்குப் படிப்பதில் நாட்டம் செல்லவில்லை. இதனால் இவருக்கு எழுதப் படிக்கத் தெரியாமலே போயிற்று. படிப்பறிவு இல்லாவிட்டாலும் படித்த அறிஞர்களோடு உறவாடி தம் கேள்வி ஞானத்தைப் பெரிதும் வளர்த்துக் கொண்டார். படிக்காத மேதையாக விளங்கினார். இவர் தம் அரசவையில் பல்வேறு துறை அறிஞர்களையும் ஆதரித்து வந்தார்.

இவருக்கு இளமை தொட்டே விளையாட்டிலும் வேட்டையாடுவதிலும் ஆர்வம் மிகுதி. இதனால் இவருக்கு மனவலிமையும், வீரஉணர்வும் மிகுதியாக இருந்தன.

இவர் தம் ஆட்சிக் காலத்தில் பல பெரும் போர்களில் ஈடுபட்டு வெற்றி பெற்றார். தென்னகம் நீங்கலாக

உள்ள இந்தியப் பகுதிகள் அனைத்தையும் தம் ஆட்சியின் கீழ் கொண்டு வந்தார். இவர் ஐம்பது ஆண்டுகள் பேரரசராக இந்தியாவை ஆண்டு வந்தார். இவர் தம் குடிமக்களின் நல்வாழ்வையே உயிர் மூச்சாகக் கொண்டிருந்தார். இதற்காகப் பல சீர்திருத்தங்களைச் செய்தார்.

அக்பர் பரந்த மனப்பான்மையுடையவராக விளங்கினார். அனைத்துச் சமயத்தவர்களும் சம உரிமையுடன் சமத்துவமாக வாழவேண்டும் என விரும்பினார். இதற்காக மக்களிடையே காணப்பட்ட இன, சமய, மொழி, நிற வேறுபாடுகளை அகற்ற பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டார். அதன் விளைவாக இஸ்லாம், இந்து, சீக்கிய சமயங்களின் முக்கிய கொள்கைகளையெல்லாம் கொண்ட புதிய சமயம் ஒன்றை உருவாக்கினார். அதற்கு 'தீனே இலாஹி' எனப் பெயரிட்டார். ஆனால், இதற்கு மக்களிடையே ஆதரவு இல்லாததால், இது அவர் காலத்துக்குள்ளாகவே மறைந்து விட்டது.

**அத்தா:** தமிழ்நாட்டில் வாழும் முஸ்லிம்களில் ஹனபிகள் தந்தையை 'அத்தா' என்று அழைக்கின்றனர். துருக்கிய மொழியிலும் தந்தையைக் குறிக்க 'அத்தா' என்ற சொல்லையே பயன்படுத்துகின்றனர். துருக்கியின் மறுமலர்ச்சிக்கு மாபெரும் தொண்டு செய்த முஸ்தபா கமாலை 'அத்தா துர்க்' என்று பெருமையாக அழைக்கின்றனர். இதற்குத் 'துருக்கியின் தந்தை' என்பது பொருளாகும். எனவே, இச்சொல் துருக்கிச் சொல்லாக இருக்கலாம் என்று சிலர் கூறுகின்றனர்.

ஆனால், தமிழில் 'அத்தன்' என்ற சொல் 'தந்தை' எனும் பொருளில் இறைவனைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. சங்க இலக்கியத்தில் கூட தந்தை என்ற பொருளில் 'அத்தா' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. எனவே, அத்தா என்பது நீண்ட நெடுங்காலமாகத் தமிழில் இருந்து வரும் தமிழ்ச் சொல்லே என்று வேறு சிலர் வாதிடுகின்றனர்.

அத்தா என்ற சொல் முதல் மனிதரான — எல்லோருக்கும் ஆதித் தந்தையான 'ஆதம்' என்ற சொல்லினடியாகப் பிறந்தது என்ற கருத்தும் இருந்து வருகிறது. இதனால் 'அத்தா' என்ற சொல் உலகெங்கும் இருப்பதில் வியப்பு இல்லை அல்லவா?

**அதான்:** இது அரபிச் சொல்லாகும். தொழுகைக்கான நேரம் வந்ததும் மக்களைத் தொழ, பள்ளிவாசலுக்கு அல்லது தொழுகைத் தலத்துக்கு வருமாறு அழைப்பதே 'அதான்' ஆகும். இத்தொழுகை அழைப்பொலி 'பாங்கு' என்று பார்ஸீ மொழியில் அழைக்கப்படுகிறது. 'பாங்கு' எனும் இச்சொல்லே தமிழ்நாட்டில் பெருவழக்காக உள்ளது.

தொடக்கத்தில் தொழுகை நேரம் வந்தவுடன் பிலால் (ரலி) அவர்கள் தெருவில் சென்று **அஸ்ஸலாத்துன்** ஜாமிஅ(த்)தன்' என்று மக்களைத் தொழ அழைத்தார்கள். 'தொழுகைக்கு ஒன்றாகக் கூடுங்கள்' என்பது இதன் பொருளாகும்.

பிறகு, கிப்லாவாக கஃபத்துல்லாவை நோக்கித் தொழ இறையாணை வந்தது. அதன்பின் தொழுகை அழைப்புக்கு எம்முறையைக் கடைப்பிடிப்பது எனப் பெருமானார் தோழர்களோடு

ஆலோசனை செய்தார். அப்போது சிலர் தொழுகை நேரத்தில் தீப்பந்தம் ஏற்றி அறிவிக்கலாம் என்றனர். வேறு சிலர் சங்கொலி எழுப்பி அழைக்கலாம் என்றனர். மற்றும் சிலர் மணியோசை உண்டாக்கியோ, இரு கழிகளை அடித்து ஓசை எழுப்பியோ தொழுகைக்கு அழைக்கலாம் என்றெல்லாம் ஆலோசனை கூறினர். இம்முறைகள் அனைத்தும் பிற சமயத்தவர் கடைப் பிடிக்கும் வழிமுறைகள் ஆகும். எனவே இவற்றை ஏற்க பெருமானார் விரும்ப வில்லை.

நபித் தோழர் ஒருவர் மேடான ஓரிடத்தில் ஒருவர் நின்று உரத்த குரலில் தொழுகைக்கு அழைப்பது போல் கனவு கண்டதாகக் கூறினார். இக் கனவில் கண்ட முறையே சரியான வழிமுறை எனப் பெருமானார் ஏற்றார். பின்னர் உமறு (ரலி) அவர்கள் தாமும் அவ்வாறே கனவு கண்டதாகக் கூறினார்.

கனவு கண்டவர் கூறிய வழிமுறை ஏறத்தாழ இன்றைய முறையைப் போன்றே இருந்தது.

இம்முறையில் மிக உயரமான இடத்தில் ஏறி நின்று பாங்கு சொல்ல பெருமானார் பிலால் (ரலி) அவர்களைத் தேர்ந்தெடுத்தார். தொழுகை அழைப்புப் பணியை அவரிடம் ஒப்படைத்தார். இவர் முஸ்லிம் ஆவதற்கு முன்பு அடிமையாக இருந்தவர். கறுப்பு இனத்தவர். பின் அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்கப்பட்டவர். முதலில் 'பாங்கு' சொன்ன பெருமை இவரையே சாரும். அன்று முதல் இன்று வரை அதே பாங்கு முறைதான் உலகெங்கும் கடைபிடிக்கப்பட்டு வருகிறது. மலேசியாவில் 'பாங்கு' சொல்பவர் 'பிலால்' என்றே அழைக்கப்படுகிறார்.

**அஃப்கானிஸ்தான்:** இந்நாடு இந்தியாவின் வடமேற்கே அமைந்துள்ளது. இந்நாடு முற்காலத்தில் காந்தாரம் என அழைக்கப்பட்டது. இன்று இந்நாடு அஃப்கானிஸ்தான் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.

நீண்டகாலமாகவே மேற்கு ஆசிய நாடுகளுக்கும், இந்தியத் துணைக் கண்டத்திற்கும் ஓர் இணைப்புப் பாலமாக இந்நாடு விளங்கி வந்துள்ளது.

அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அரபு மண்ணில் இஸ்லாத்தை நிலை நிறுத்தினார். பின்னர் அம்மார்க்கம் பல்வேறு திசைகளிலும் விரைந்து பரவியது. உதுமான் (ரலி) காலத்தில் அஃப்கானிஸ்தானில் இஸ்லாம் பரவத் தொடங்கியது. கி.பி. 672 முதலே அவ்வப்போது இப்பகுதி முஸ்லிம்களின் ஆளுகையின் கீழ்வந்த போதிலும், 870-ஆம் ஆண்டில் யாகூப் இப்னு லைத் காபூலைக் கைப்பற்றிய பின்னரே முஸ்லிம்களின் ஆட்சியின்கீழ் நிரந்தரமாக வந்தது.

அன்று முதல் அஃப்கானிஸ்தானை முஸ்லிம்கள் ஆண்டு வந்தாலும் மங்கோலியர்கள், ரஷ்யர்கள், ஆங்கிலேயர்கள் படையெடுப்புக்கும் தாக்குதலுக்கும் அந்நாடு ஆளாகியே வந்துள்ளது.

நாடு முழுவதும் மலைகளும் பள்ளத் தாக்குமாக உள்ளன. இங்கு தஸ்மார்கோ, ரெஜிஸ்தான் என்ற இரு பாலைவனங்கள் உள்ளன. இந்நாட்டில் ஆறு பேராறுகள் ஓடுகின்றன. இந்தியாவைப் போன்றே இந்நாடும் பல்வேறு வகையான தட்பவெப்ப நிலைகளையுடையதாக அமைந்துள்ளது.

இங்குள்ள மக்களில் 99 சதவிகிதத்தினர் முஸ்லிம்களாவர். இந்நாட்டில்

உள்ளவர்கள் புஷ்டு மொழி பேசுகின்றனர். இங்கு உர்து மொழியும் பார்ஸீ மொழியும் பரவலாகப் பேசப்படுகிறது. இவை போக சிறுபான்மையினர் மொழிகளும் வழங்கப்படுகின்றன.

இந்நாட்டில் குறைந்த அளவே விவசாயம் செய்யப்படுகிறது. மலைப் பாங்கான பகுதிகளில் பழவகைகளும் ஆடு வளர்ப்பும் சிறப்பாக நடைபெறுகின்றன. கரக்குல் எனும் ஆடுகள் உயர்ந்த ரக ஆட்டு ரோமம் அளிக்கின்றன. அவற்றிலிருந்து உயர்ரகக் கம்பளிகள் நெய்யப்படுகின்றன. ஐரோப்பிய நாடுகளில் அவை நன்கு விலை போகின்றன. இரயில் போக்குவரத்தைக் காட்டிலும் சாலைப் போக்குவரத்தே மிகுதியாக உள்ளது. இங்குள்ள மக்களில் குறைந்த சதவிகிதத்தினரே கல்வியறிவு பெற்றுள்ளனர். காபூல் இந்நாட்டின் தலைநகர் ஆகும்.

**அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்):** 'முஹிய்யுத்தீன் ஆண்டகை' என உலக மெய்ஞ்ஞானச் செல்வர்களில் போற்றப்படுபவர் முஹிய்யுத்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள். இவர் 'சூஃபிகள்' எனப்படும் மெய்ஞ்ஞானிகளின் தலைவர் ஆவார்.

இவர் இன்றைய ரஷ்ய நாட்டிலுள்ள ஜீலான் அருகில் நீப் என்னும் சிற்றூரில் ஹிஜ்ரி 470 (கி.பி. 1078) ரமளான் மாதம் முதல்நாள் திங்கட்கிழமை பிறந்தார். இவர் தந்தை பெயர் ஸையிது அபூ சாலிஹ் இப்னு மூசா என்பதாகும். தாயார் பெயர் உம்முல் கைர் என்பதாகும். இவர் தம் அறுபதாவது வயதில் முஹிய்யுத்தீன் அப்துல் காதர் ஜீலானி (ரஹ்) அவர்களைப் பெற்றெடுத்ததாகக் கூறப்படுகிறது.

இவர் இளமையிலேயே தம் தந்தையை இழந்துவிட்டார். தம் பாட்டனாரால் வளர்க்கப்பட்டார். சிறு வயதிலேயே படிப்பில் பேரார்வம் உள்ளவராக விளங்கினார். கல்வியில் சிறந்து விளங்கியதால் உயர்கல்வி கற்க பக்தாது நகருக்கு அனுப்பப்பட்டார். புறப்படும்போது நாற்பது தங்கக் காசுகளை இவரது சட்டையில் வைத்துத் தைத்து அன்னை அனுப்பினார். இவர் ஒரு வணிகக் கூட்டத்துடன் பக்தாது நகரம் நோக்கிப் புறப்பட்டுச் சென்றார். பயணம் கிளம்பும்முன் 'எக்காரணம் கொண்டும் பொய் பேசக் கூடாது' எனத் தாயார் அறிவுரை கூறி அனுப்பினார்.

வழியில் கள்வர் கூட்டம் ஒன்று இவ்வணிகக் கூட்டத்தைச் சுற்றி வளைத்துக் கொள்ளையிட்டது. கள்வர் தலைவன் சிறுவர் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களை நோக்கி "சிறுவரே! உம்மிடம் என்ன இருக்கிறது?" என வினவினான். இக்கேள்விக்குச் சற்றும் தாமதியாது' "என் சட்டைப்பையினுள் 40 தங்கக் காசுகள் மறைவாக வைத்துத் தைக்கப்பட்டுள்ளன" எனக் கூறி, தைக்கப்பட்ட இடத்தையும் காட்டினார் சிறுவர் ஜீலானி. சிறுவர் பேசிய உண்மை மொழி கள்வர் தலைவனைத் திகைக்க வைத்தது, சிறுவரின் நேர்மையும் சத்திய உணர்வும் கள்வர் தலைவனின் மனத்தையே மாற்றியது. அக்கணம் முதல் கள்வர் தலைவனும் கொள்ளைக் கூட்டமும் திருட்டுத் தொழிலை விட்டொழித்து நேர்வழிப் பட்டனர் என்பது வரலாறு.

பக்தாது நகர் சென்ற சிறுவர் அப்துல் காதிர் ஜீலானி அங்கிருந்த நிஜாமிய்யா கல்லூரியில் சேர்ந்து கல்வி கற்றார். விரைவிலேயே இவர் கையிலிருந்த பண

மெல்லாம் செலவாகிவிட்டது. கடுமையான வறுமைக்கு ஆளானார். ஆயினும் தம் கல்வியை நிறுத்தாது படித்து வந்தார். இவ்வாறு கடுமையான வறுமையுடன் போராடிக் கொண்டே தொடர்ந்து ஏழாண்டுகள் கல்வி கற்று, படிப்பை முடித்தார். பின்பு, ஹம்மாது எனும் பெரியாரை அணுகி ஞான உபதேசம் பெற்று சூஃபித்துவம் அடைந்த மெய்ஞ்ஞானி ஆனார்.

அதன்பின் இருமுறை ஹஜ் கடமைகளை இனிது நிறைவேற்றினார். மேன்மேலும் மெய்ஞ்ஞானம் நிலைபெற இராக் நாட்டுக் காட்டிற்குள் சென்று கர்க் எனுமிடத்தில் தவ வாழ்வு வாழ்ந்தார். பத்தாண்டுகளுக்கு மேலாக பல்வேறு வழிகளிலும் இறைவனை நோக்கிக் கடும் தவ வாழ்க்கை நடத்தினார். இறுதியில் இறையருளைப் பூரணமாகப் பெற்ற மெய்ஞ்ஞானச் செல்வராக பக்தாது நகர் வந்தடைந்தார்.

இவரது மாபெரும் தவ வாழ்வை அறிந்திருந்த பக்தாது மக்கள் இவரை 'முஹியுத்தீன்' என்று அழைத்துப் போற்றினர். மெய்ஞ்ஞான வழியில் இஸ்லாமிய மார்க்கத்திற்குப் புத்துயிர் தர வேண்டினர். அப்போது பக்தாது நகரில் வாழ்ந்து வந்த மாபெரும் ஞானச் செல்வர் ஷைகு அபூ ஸயீத் முகர்ரமிடம் சென்று அவருடைய ஆத்ம சீடரானார். விரைவிலேயே அப்பெரியாரின் பிரதிநிதியாக -கலீஃபாவாக உயர்ந்தார். ஞானவழியில் மார்க்க போதனைகளைத் தீவிரமாகச் செய்தார்.

இவரது இனிய சொற்பொழிவு மக்களை ஈர்த்தது. இவரது பேச்சில் காணப்பட்ட மார்க்க ஞானமும், கருத்து நுட்பமும், தெளிவும் அறிஞர்களைத் திகைக்கச் செய்தன. ஞானவான்களுக்குப் புத்தெழுச்சியூட்டுவதாக இருந்தன.

இவரது பேச்சைக் கேட்க மக்கள் கூட்டம் மொய்த்தது. இரவில் நடக்கும் சொற்பொழிவைக் கேட்க பகலிலேயே மக்கள் குழுமுவது வழக்கமாகியது. வாரத்திற்கு மூன்று முறை இவர் சொற்பொழிவு செய்வது வழக்கம்.

இவரது நாற்பதாண்டுச் சொற்பொழிவுகளின் பயனாக இஸ்லாம் புத்துயிர் பெற்றது. ஞானவழியின் பெருமை நிலை நிறுத்தப்பட்டது. இவரது சொற்பொழிவுகள் நூலுருப் பெற்றன. இவரது ஞான வழி இவரது பெயரையொட்டி 'காதிரிய்யா தரீக்கா' என அழைக்கப்பட்டது.

ஏழை எளியவரிடம் இரக்க உணர்வு மிக்கவராக விளங்கினார். தமக்கென இருக்கும் பொருள் எதுவாயினும் அதனை இல்லாதோருக்கு வழங்கிவிடுவார்.

இவர் இல்லற வாழ்வை மேற்கொண்ட போதிலும், உலக ஆசாபாசங்களுக்கு அப்பாற்பட்டவராகவே வாழ்ந்தார்.

மெய்ஞ்ஞானத்துறையின் நிறைகுடமாக வாழ்ந்த அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் தமது 91ஆம் வயதில் ஹிஜ்ரி 561 (கி.பி.1166) ரபீயுல் ஆகிர் பிறை 11 அன்று இறையருள்படி காலமானார். பக்தாதில் உள்ள இவரது அடக்கவிடத்தில் சுல்தான் ஸுலைமான் ஹிஜ்ரி 941 (கி.பி. 1535) இல் பேரெழில் மிக்க தர்கா ஒன்றைக் கட்டினார்.

**அப்துல் மஜீதுப் புலவர்:** இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பணியாற்றியவர்களுள் குறிப்பிடத்தக்க ஒருவர் அப்துல் மஜீதுப் புலவர்.

வள்ளல் சீதக்காதி வழிவந்த இவர் கீழக்கரையில் பிறந்தார். இளம் வயதில் அரபி, தமிழ்மொழிகளில் புலமை பெற்றார். மார்க்க ஞானத்தோடு தமிழ் இலக்கிய அறிவும் நிரம்பப் பெற்றவராகத் திகழ்ந்தார். இளமையிலேயே தமிழில் கவிதை இயற்றும் ஆற்றல் பெற்றார்.

தொழில் நிமித்தம் இலங்கை சென்றார். அங்கு தொழில் தொடர்பான பணிகளுக்கிடையே இப்ராஹீம் நெய்னார்ப் புலவர் என்பவரிடம் இலக்கணம் கற்றார். இவ்வாறு இலக்கிய, இலக்கண அறிவு நிரம்பப் பெற்ற இவர், அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மீது கீர்த்தனைகள் பலவற்றைப் பாடினார். ஐம்பது கீர்த்தனைகளைக் கொண்ட அந்நூலுக்கு 'சங்கீர்த்தந மஞ்சரி' என்று பெயரிட்டார். இலங்கை வள்ளல் முஹம்மது தம்பி மரைக்காயரின் விருப்பத்திற்கேற்ப 'ஆசாரக்கோவை' என்ற நூலையும் இயற்றினார். இந்நூல் நூறு கட்டளைப் பாக்களால் ஆனது. அப்பாடல்களின் ஒவ்வொரு ஈற்றடியிலும் நன்றியுணர்வோடு கொடை வள்ளலின் பெயரை 'முஹம்மதுத் தம்பி மரைக்காய சகாயனே' எனக் குறிப்பிட்டுள்ளார். இந்நூல் 1902ஆம் ஆண்டில் வெளிவந்தது.

இவர் தமது 34ஆம் வயதில் இலங்கையில் உள்ள தேனி எனுமிடத்தில் காலமானார்.

எளிமையும் இனிமையும் இவர் பாடல்களின் தனிச்சிறப்பாகும்.

**அப்துல் முத்தலிப்:** இவர் அண்ணல் நபிகள் நாயகத்தின் பாட்டனார் ஆவார். குறைஷிகளின் தலைவராக விளங்கிய ஹாஷிம் என்பாரின் மகன். இவரின் தாயாரின் பெயர் ஸலமா என்பதாகும். இவர்களின் திருமகனாக கி.பி. 497ஆம் ஆண்டில் மக்காவில் பிறந்தார்.

மக்கா மாநகருக்கு வரும் பயணிகளுக்குத் தண்ணீர் தந்துதவும் பணியைச் செய்து வந்தார். ஒரு சமயம் மக்காவில் கடுமையான தண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டது. அப்போது கஃபா வரும் பயணிகட்குத் தண்ணீர் தந்து உதவ இயலவில்லையே என்று வருந்தினார், ஒரு நாள் அவர் தம் கனவில் ஜம்ஜம் கிணறு தூர்ந்துபோய்க் கிடக்கும் இடத்தைக் கண்டார். அக்கனவில் அதைத் தோண்டிப் பயன்படுத்துமாறு ஏவப்பட்டார்.

கனவில் கண்ட அடையாளப்படியே ஜம்ஜம் கிணறு மூடிக்கிடக்கும் இடத்தைக் கண்டுபிடித்தார். தம் ஒரே மகன் ஹாரிதுடன் அங்கு தோண்டினார். ஜம்ஜம் கிணற்றுத் தண்ணீர் மக்களின் தாகத்தைப் போக்கியது.

இவருக்குப் பத்தாம் மகனாகப் பிறந்தவர் அப்துல்லாஹ். இவரே பெருமானாரின் தந்தை ஆவார். பெருமானார் ஆமினாத் தாயாரின் கருவில் இருக்கும் போதே, தந்தை அப்துல்லாஹ் வணிகம் செய்யச் சென்ற இடத்தில் நோய் வாய்ப்பட்டுக் காலமானார். பெருமானாருக்கு ஆறு வயதாகும் முன்பே ஆமினாத் தாயாரும் காலமானார். அதன்பின் பாட்டனார் முத்தலிபின் பொறுப்பில் பெருமானார் வளரலானார்.

முத்தலிப் இறக்கும் தருவாயில் பெருமானாரைத் தொடர்ந்து வளர்க்கும் பொறுப்பைத் தம் மகனும் பெருமானாரின் சிறிய தந்தையுமான அபூதாலிபிடம் ஒப்படைத்தார்.

**அப்துல்லாஹ் இப்னு முத்தலிப்:** இவர் பெருமானார் (ஸல்) அவர்களின் தந்தை ஆவார். அப்துல்லாஹ்வின் தந்தையின் பெயர் அப்துல் முத்தலிப். தாயார் பெயர் பாத்திமா. ஸுபைரும் முத்தலிபும் இவருடைய உடன் பிறந்த சகோதரர்கள் ஆவர்.

மக்களின் நீர்பஞ்சத்தின்போது கனவில் கண்ட அடையாளப்படி முத்தலிப் ஜம்ஜம் கிணற்றைக் கண்டுபிடிக்க முற்பட்டபோது முத்தலிபின் ஒரே மகன் ஹாரிதும் தந்தைக்கு உதவி வந்தார். இம்முயற்சியில் வெற்றி பெறத் தமக்கு பத்து ஆண் மக்களை அளித்தால் அவர்களில் ஒருவரைப் பலி தருவதாக இறைவனிடம் வேண்டிக் கொண்டார். அவ்வாறே பத்து ஆண் மக்களும் பிறந்தனர். அவர்களில் அப்துல்லாஹ்வும் ஒருவர். முத்தலிப் ஜம்ஜம் கிணறு தோண்டும் முயற்சியில் பெரும் வெற்றி பெற்றார்.

இறைவனிடம் வேண்டிக் கொண்டபடி தம் மக்களில் யாரைப் பலியிடுவது எனக் குறி பார்த்தார். அப்துல்லாஹ்வின் பெயர் வெளிப்பட்டது. உடன் இருந்தவர்களின் ஆலோசனைப்படி மீண்டும் மூன்று முறை குறி பார்த்தார். மூன்று முறையும் அப்துல்லாஹ்வுக்குப் பதிலாக நூறு ஒட்டகைகளைப் பலியிட்டால் போதும் என்றே குறி வந்தது. அதன்படி ஒட்டகங்களைப் பலியிட்டார். இவ்வாறு அப்துல்லாஹ் பலியிடப்படாமல் காப்பாற்றப்பட்டார்.

அப்துல்லாஹ் அழகான தோற்றமுடையவர்; கட்டுடல் வாய்க்கப் பெற்றவர். இளமை எழில் கொழிக்கும் இவரை மணந்து கொள்ளப் பெண்கள் பலரும் விரும்பினர். ஆயினும், தம் தந்தை முத்தலிபின் விருப்பப்படி யத்ரிபில் வாழ்ந்து வந்த தம் உறவினரான ஆமீனா என்பாரை மணந்தார். ஆமீனா அழகும், இனிய நற்பண்புகளும் வாய்க்கப் பெற்றவர்.

திருமணம் முடிந்த சில நாட்களில் தந்தையின் கட்டளைப்படி வியாபார நிமித்தம் யத்ரிப் (மதீனா) சென்றார். அங்கு, தம் மாமனார் இல்லத்தில் நோயுற்று மரணமடைந்தார். அப்துல்லாஹ் இறக்கும்போது ஆமீனா இரண்டு மாத கர்ப்பிணியாக இருந்தார். இவ்வாறு பெருமானார் அன்னை ஆமீனாவின் கருவில் இருக்கும்போதே தம் தந்தை அப்துல்லாஹ்வை இழக்கும்படியாயிற்று.

**அப்பாஸிகள்:** நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பெரிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்கள். அவருடைய வழித்தோன்றல்கள் 'அப்பாஸிகள்' என அழைக்கப்பட்டனர்.

இவ்வழித் தோன்றல்கள் நாளடைவில் பெரும் எண்ணிக்கையில் நாடெங்கும் பரவினர். உமையாக்களின் ஆட்சியை அகற்றும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டனர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என்பதால் பொது மக்களும் இவர்களுடைய முயற்சிகளுக்குப் பேராதரவு நல்கினர். பெருமானாரின் மருகர் அலி (ரலி) அவர்களின் வழி வந்தவர்களும் இவர்களுக்குப் பெருந் துணை புரிந்தனர். இதனால் இவர்கள் உமையாயக்களை ஆட்சியிலிருந்து அகற்றி அப்பாஸிகளின் ஆட்சியை நிலைநிறுத்தினர். இம்முயற்சி வெற்றி பெற தொண்ணூறு ஆண்டுகள் ஆகின.

உமைய்யாக்களின் ஆட்சியைக் கைப்பற்றும் முயற்சியில் இறுதி வெற்றி பெற்றவர் அபுல் அப்பாஸ். ஹிஜ்ரி 132இல் ஆட்சித் தலைமையோடு தம்மை கலீபாவாகவும் பிரகடனப் படுத்தினார்.

அப்பாஸியக் கலீபாக்களில் மிகச் சிறந்து விளங்கியவர்கள் ஹாரூனுர் ரஷீத், அல் மாமூன் ஆகியோராவர். இவர்களின் ஆட்சிப் பகுதிகள் எல்லா வித வளமும், நலமும் பெற்று விளங்கின. எங்கும் அமைதியும், மகிழ்ச்சியும் நிலவின. இவர்களின் ஆட்சிக் காலம் பொற்காலமாக விளங்கியது. சுமார் 450 ஆண்டுகட்குப் பின்னர் 37ஆம் கலீபாவாக இருந்த அல் முஸ்தஃஸிமோடு அப்பாஸிகளின் ஆட்சி முடிவுற்றது.

**அபுல் அஃலா மௌதூதி;** அண்மைக் காலத்தில் வாழ்ந்து மறைந்த மௌலானா சையித் அபுல் அஃலா மௌதூதி (ரஹ்) இஸ்லாமிய மெய்ஞ்ஞானிகளின் வழித்தோன்றல் ஆவார். இவருடைய முன்னோரான காஜா குத்புத்தீன் சிஷ்தி என்பவர் தாம் புகழ்பெற்ற மெய்ஞ்ஞான குழுமமான 'சிஷ்தியா தரீக்கா'வை நிறுவியவர்.

இவர் ஔரங்காபாதில் 1903ஆம் ஆண்டு செப்டெம்பர் 25ஆம் நாள் பிறந்தார். இவரது தந்தை வழக்கறிஞராகப் பணியாற்றியவர். இளமையிலேயே மதிநுட்பம் மிகுந்தவராக இருந்த மௌதூதியை கல்விக்கூடங்களுக்கு அனுப்பாது வீட்டிலேயே கல்வி கற்க தந்தை ஏற்பாடு செய்தார். திறமைமிக்க ஆசிரியர்கள் இவருக்கு அரபி, பார்ஸீ, உருது, ஆங்கிலம் ஆகிய மொழிகளைக் கற்பித்தனர்.

இவருக்குப் பதினாறு வயது தொடங்கும்போது இவரது தந்தை காலமானார். அதன்பின் இவர் தன் குடும்பத்திற்கு வருவாய் தேட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. எனவே, இவர் இதழ்களுக்குக் கட்டுரைகள் எழுதி அதன்மூலம் வருவாய் தேடலானார். இவருடைய கட்டுரைகளில் கருத்து நுட்பமும் தெளிவும் மொழிச்சிறப்பும் அமைந்திருந்தமையால் மக்கள் அவற்றை விரும்பிப் படிக்கலாயினர்.

இஸ்லாம் பற்றி இவர் எழுதிய நூல்கள் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன. காலத்தின் போக்குக்கேற்ப எளிய உதாரணங்களுடன் இஸ்லாமிய நுட்பக் கருத்துக்களை அருமையாக விளக்கலானார். இவ்வகையில் இவர் 1926இல் எழுதி வெளியிட்ட 'அல் ஜிஹாத்ஃபில் இஸ்லாம்' என்ற நூல் மக்களின் கவனத்தைப் பெருமளவில் ஈர்த்தது. பலரும் விரும்பிப் படித்தனர். இவரது எழுத்துக்களின் மீது மக்களுக்குத் தனி ஆர்வம் ஏற்பட்டது. தொடர்ந்து 'ஜிஹாத் ஃபீஸபீலில்லாஹ்' போன்ற பல நூல்களை எழுதி வெளியிட்டார்.

இவர் ஆங்கிலத்தில் 'Towards understanding Islam' என்ற தலைப்பில் நூல் ஒன்றை எழுதினார். இந்நூல் பத்துக்கு மேற்பட்ட மொழிகளில் பல பதிப்புகள் வெளிவந்தன. பல்வேறு மொழிகளில் பெயர்க்கப்பட்ட இந்நூலைப் படித்த முஸ்லிம் அல்லாதவர் பலரும் இஸ்லாமை நன்கு உணர முடிந்தது.

இவர் பத்திரிகைத் துறைப் பணியிலும் ஈடுபட்டார். 1933ஆம் ஆண்டில் 'தர்ஜுமானுல் குர்ஆன்' எனும் இதழைத் தொடங்கி நடத்தினார்.

மாபெரும் இஸ்லாமியக் கவிஞர் இக்பால் இவரைத் தமக்குத் துணையாக லாகூருக்கு அழைத்துக் கொண்டார். கவிஞர் இக்பாலின் மறைவுக்குப் பின் இவர் லாகூர் இஸ்லாமியக் கல்லூரியில்

இஸ்லாமியத் துறைத் தலைவாராகப் பணியாற்றினார்.

இந்திய முஸ்லிம்கள் மேல்நாட்டு நாகரிகப் போக்கின் தீமையை உணராது அதில் நாட்டங் காட்டுவதைக் கண்டு வருந்தினார். பொருளியல் வாத அடிப்படையில் இறைச் சிந்தனை மங்கும் நிலையைப் போக்க விரும்பினார். இவ்விரண்டின் மாயத் தோற்றத்தை மக்களுக்கு விளக்கவும் இஸ்லாமியக் கருத்தும் சிந்தனையும் இவற்றையெல்லாம் விட உயர்ந்தது என்பதைத் தெளிவாக்கவும் அமைப்பொன்றை நிறுவினார். அந்த அமைப்பின் பெயரே 'ஜமாஅத்தெ இஸ்லாமி' என்பதாகும். இதன் மூலம் மார்க்கச் சிந்தனைகளை மக்கள் மத்தியில் தீவிரமாகப் பிரச்சாரம் செய்யலானார். இன்றும் இந்த அமைப்பு இஸ்லாமியப் பிரச்சாரமும் சமுதாய சேவையும் செய்து வருகிறது.

பாகிஸ்தான் உருவான பின் அந்நாட்டுச் சட்டங்கள் மார்க்க அடிப்படையில் முழுக்க முழுக்க அமைய வேண்டுமெனப் போராடினார். ஆட்சியாளர்களை எதிர்த்ததால் சிறைவாசம் போன்ற பல கொடுமைகளை அனுபவித்தார்.

சவூதி அரேபிய அரசின் விருப்பத்திற்கிணங்க மதீனா பல்கலைக்கழக உருவாக்கத்திற்கும் பாடத் திட்டங்களை வகுத்தளிக்கவும் பெரிதும் உதவினார். இவர் திருக்குர்ஆனை 'தஃப்ஹீமுல் குர்ஆன்' என்ற பெயரில் உர்துவில் பெயர்த்துள்ளார்.

**அபுல் காசிம் மரைக்காயர்:** இவர் வள்ளல் சீதக்காதியின் மறைவுக்குப் பின்னர் உமறுப்புலவரை ஆதரித்த வள்ளல், இவர் முஹம்மது பந்தர் என வழங்கப்பட்ட பரங்கிப்பேட்டையைச் சேர்ந்தவர். இவருடைய தந்தையின் பெயர் ஹுஸைன் நயினார் என்பதாகும்.

வள்ளல் சீதக்காதியின் ஆதரவால் உமறுப்புலவர் சீறாப் புராணத்தை எழுதி வந்தார். இது அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வாழ்க்கையைக் கூறும் காப்பியமாகும். நூல் முழுமையடையும் முன்னரே வள்ளல் சீதக்காதி மறைந்தார். அதன்பின் ஆதரிப்பார் யாரும் இல்லாத உமறுப்புலவர் வருந்தி நின்றார். இதை அறிந்த வள்ளல் அபுல்காசிம் மரைக்காயர் தாம் ஆதரவு தருவதாகவும், சீறாப்புராண காப்பியத்தை பாடி முடிக்கும்படியும் வேண்டினார். இவரின் கொடையால் உமறுப்புவவர் சீறாப்புராணக் காப்பியத்தை தொடர்ந்து எழுதலானார். அபுல்காசிம் மரைக்காயரின் பேருதவியாலும் முயற்சியாலும் முறைப்படி சீறாப்புராணம் முஹம்மது பந்தர் எனும் பரங்கிப் பேட்டையில் இயற்றப்பட்ட வரை சீரும் சிறப்புமாக அரங்கேற்றம் செய்யப்பட்டது. உமறுப் புலவர் சீறாப் பாடல்களுக்கிடையே சீதக்காதியையும் அபுல் காசிம் மரைக்காயரையும் புகழ்ந்து பாடியுள்ளார். இதன்மூலம் வள்ளல் இருவரும் இறவா நிலையில் இலக்கியத்தில் வாழ்கின்றனர்.

**அபுல் வஃபா புஸ்ஜானி:** அறிவியல் துறைக்கு ஆரம்ப காலங்களில் இஸ்லாம் அளித்த விஞ்ஞான மேதைகளுள் ஒருவர். இவர் கி.பி. 940இல் புஸ்ஜான் எனுமிடத்தில் வாழ்ந்த பாரசீகக் குடும்பமொன்றில் பிறந்தார்.

இவருக்கு இளம் வயதிலேயே அறிவியலில் குறிப்பாக வானவியலிலும், கணிதத்திலும் பேரார்வம் ஏற்பட்டது. கணிதத்தில் சிறந்து விளங்கிய இவருடைய சிறிய தந்தையாரே இவருக்குக் கணித ஆசிரியராக இருந்து கணிதத்தைத் திறம்படக் கற்பித்தார்.

தம் பத்தொன்பதாவது வயதில் வானவியலிலும், கணிதவியலிலும் மேலும்

சிறப்பறிவு பெற பக்தாது சென்றார். அங்கே இத்துறைகளில் சிறந்து விளங்கிய இப்னு குர்னாப், மாவர்தீ ஆகியோரிடம் முறைப்படி உயர்கல்வி கற்றார். அரசர்களின் ஆதரவைப் பெறும் அளவுக்கு இத்துறைகளில் மிகச் சிறந்த மேதை ஆனார்.

வானவியல் பற்றியும், கணிதவியல் குறித்தும் பல நூல்களை மூலமாகவே எழுதி வெளியிட்டார். கிரேக்க மொழியில் தாலமி எழுதிய நூல்களை அரபி மொழியில் திறம்படப் பெயர்த்தார். அவற்றுள் 'கிதாபுல் காமில்' என்பது குறிப்பிடத்தக்க சிறந்த மொழி பெயர்ப்பாகும்.

சிறந்த விஞ்ஞான மேதையாக அக்காலத்தில் வாழ்ந்த இவர், அறிஞர்களிடையிலும் ஆய்வாளர்கள் மத்தியிலும் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தார். இவர் 999ஆம் ஆண்டில் பக்தாதில் காலமானார். இவர் நூல்கள் இன்னும் அங்கே இருப்பதைக் காணலாம்.

**அபூஸுஃப்யான்:** பெரும் இஸ்லாமிய எதிர்ப்பாளராக விளங்கியவர். அண்ணல் நபி (ஸல்) அவர்கட்குப் பெருந் துன்பம் செய்தவர்களில் குறிப்பிடத் தக்கவர். இவர் நபிகள் நாயகத்தை விட வயது மூத்தவர்.

பெரும் வணிகராகத் திகழ்ந்த அபூஸுஃப்யான் அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்களின் எதிர் அணியில் இறுதிவரையில் இருந்தார். அண்ணலாருக்கு எதிரான பல நடவடிக்கைகளில் ஈடுபட்டுத் தோல்வியடைந்தார். பத்ருப் போருக்குப் பின் பல போர்களுக்குத் தலைமைதாங்கிப் போரிட்டார். அனைத்திலும் தோல்வியே அடைந்தார்.

பெருமானாரின் செல்வாக்கையும் உயர்வையும் பெருமையையும் ஓரளவு தெரிந்திருந்தவர். ஆயினும் தம் மனைவி ஹிந்தாவின் பிடிவாதத்தாலும் அபூஜஹ்லின் முரட்டுத்தனத்தாலும் தொடர்ந்து பெருமானாருக்கு எதிராகப் போராட முனைந்தவர்.

மக்காப் படையெடுப்பின்போது குன்றின் உச்சியில் வரிசை வரிசையாக அடுப்பெரிவது கண்டு, துப்பறிய வந்த அபூஸுஃப்யான் பெருமானாரின் முன்பாக இஸ்லாத்தைத் தழுவினார். அங்கிருந்து மக்கா திரும்பி அண்ணலாரோடு இணைந்து போவதே நம் அனைவருக்கும் நன்மை தரும் எனக் கூறினார், ஆனால் அவரது பேச்சை இவர் மனைவி ஹிந்தா முதலாக அனைவரும் ஏற்காது கேலி பேசினர். ஆயினும் இறுதியில் அவர்கள் அதை ஏற்றுக் கொண்டனர். பெருமானார் அபூஸுஃப்யானை உயர்வாகவே நடத்தினார்.

முதுமையின் எல்லைக் கோட்டில் படுத்த படுக்கையில் இருந்தபோது 'நான் இறுதியாக இஸ்லாத்தில் இணைந்தேன். முஸ்லிமாக ஆன பின்பு நான் தவறேதும் செய்யவில்லை. எனவே, இறைவன் அருள் தமக்குப் பூரணமாகக் கிடைக்கும்' எனக் கூறிய வாறே தம் 88ஆம் வயதில் மதீனாவில் காலமானார்.

உமைய்யா கலீஃபாக்கள் இவர் வழி வந்தவர்களாவர்.

**அபூதாலிப்:** இவரது இயற்பெயர் அப்து மனாஃப் என்பதாகும். இவர் அப்துல் முத்தலிபின் ஐந்தாம் மகனாவார். இவர் மகன் பெயர் தாலிப் என்பதாகும். தாலிபின் தந்தை என்பதைக் குறிக்கும் அபூதாலிப் எனும் பெயரே இவரது பெயராக நிலைத்துவிட்டது.

அபூதாலிபின் தாயார் பெயர் பாத்திமா என்பதாகும். பெருமானாரின் தந்தை அப்துல்லாஹ், அபூதாலிபின் சகோதரர் ஆவார்.

அப்துல் முத்தலிபுக்குப் பின்பு அண்ணலாரை வளர்த்து ஆளாக்கிய பெருமை இவரையே சாரும். தாம் பெற்ற பிள்ளைகளைவிட அதிகப் பாசத்தைப் பெருமானார் மீது பொழிந்தார். எப்போதும் அண்ணலாரைத் தம்முடனே வைத்துக் கொண்டிருப்பார். பொருள் வசதி குறைந்தவராயினும், பெருமானார் மீது வறுமையின் நிழல் படாதவாறு கவனித்துக் கொண்டார்.

ஒருமுறை அண்ணலார் அபூதாலிபுடன் வணிகத்தின் பொருட்டு சிரியா சென்று வந்தார். வணிக நுட்பங்களை அறிந்துகொண்டார். அண்ணலார் அபூதாலிபின் துணையுடன் வணிகச் சீமாட்டியாக விளங்கிய கதீஜா (ரலி) அவர்களிடம் வேலைக்கு அமர்ந்தார். வணிகத்தில் பெருமானாரின் திறமையையும் நேர்மையையும் கண்டுணர்ந்த கதீஜா (ரலி), பெருமானாரைத் திருமணம் செய்துகொண்டார்.

பின்னர் ஒரு சமயம் அபூதாலிப் கடுமையான பஞ்சத்தால் வறுமைக்காளானார். அப்போது பெருமானார் (ஸல்) அவர்கள் அபூதாலிபின் மகன் அலீ (ரலி) அவர்களை வளர்த்துப் பராமரிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார்கள். தம் ஒன்றுவிட்ட சகோதரர் அலீ (ரலி) மீது பெருமானார் (ஸல்) பேரன்பு கொண்டிருந்தார். பெருமானார் (ஸல்) நபித்துவம் பெற்ற பின்பு, இளைஞர் அலீ (ரலி) இஸ்லாத்தில் இணைந்து பெருமானாருக்குப் பெருந்துணையாயிருந்தார்.

ஆயினும் இஸ்லாமிய மார்க்கத்தில் அபூதாலிப் இணையவில்லை. குறைஷிகள் பெருமானாருக்குத் துன்பம் செய்ய முனைந்த போதெல்லாம் அதைத் தடுத்து நிறுத்தினார். எதிரிகளிடமிருந்து கண்ணிமை காப்பது போல் பெருமானார் (ஸல்) அவர்களைக் காத்து வந்தார்.

ஒரு சமயம் குறைஷிகளின் எதிர்ப்பு வலுத்து நின்றது. இதைக் கண்டு வேதனையுற்றார் அபூதாலிப். பெருமானார் (ஸல்) அவர்களிடம் சென்று 'இஸ்லாமியப் பிரச்சாரத்தைக் கைவிடக் கூடாதா?' என வினவினார். அதற்கு மறுமொழி தந்த அண்ணல் (ஸல்) அவர்கள் 'என் இரு கைகளில் சந்திர சூரியனைக் கொடுத்த போதிலும் என் இஸ்லாமியப் பிரச்சாரத்தை நிறுத்த மாட்டேன்' எனப் பதில் கூறினார்கள். இப் பதில் அபூதாலிபுக்குப் புதிய எழுச்சியையும் உத்வேகத்தையும் தந்தது, எப்பாடுபட்டாவது தம் தம்பி மகனாகிய பெருமானாரைக் காத்து நிற்க உறுதி கொண்டார்.

முதுமையின் காரணமாக உடல் நலிவுற்று நோய்வாய்ப்பட்டார். தமக்கு மரணம் நெருங்கிவிட்டதை உணர்ந்தார். பெருமானாருக்குத் துணையாய் இருந்து அவரைப் பாதுகாக்குமாறு தம் குடும்பத்தார்களுக்குப் பணித்தார். அவர் இறக்கும் தருவாயிலேனும் இஸ்லாத்தில் இணையுமாறு வேண்டினார் அண்ணலார் (ஸல்) அவர்கள். ஆயினும் அபூஜஹ்லும், உமையாவும் அவ்வாறு முஸ்லிமாக விடாமல் தடுத்து விட்டனர். முஸ்லிம் ஆகாமலே அபூதாலிபின் உயிர் பிரிந்தது.

**அபூபக்ர் (ரலி):** அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அணுக்கத் தோழர் இவர். அண்ணலாருக்குப் பின் முதல் கலீஃபாவாகத் தேர்ந்தெடுக்கப் பட்டவர். இவரது தொடக்கக் கால இயற்பெயர் அப்துல் கஃபா என்பதா

கும். இவர் இஸ்லாத்தில் இணைந்த பின் இவர் பெயரை பெருமானார் 'அப்துல்லாஹ்' என்று மாற்றி அழைக்கலானார். இவர் தம் மகள் ஆயிசாவை பெருமானாருக்கு மணம் முடித்துத் தந்த பின்னர் 'கன்னியின் தந்தை' எனப் பொருள்படும்படி 'அபூபக்ர்' என்று அழைக்கப்பட்டார். இப்பெயரே இவருக்கு நிலைத்து நின்றுவிட்டது.

இளமை முதலே பெருமானாரின் தோழராக இருந்த அபூபக்ர் செல்வராகவும் இருந்தார். இஸ்லாத்தில் இணைந்த வயதுவந்த ஆடவர்களில் முதலாமவர் இவரே. அண்ணலாரோடு பல்வேறுதுன்பங்களை அனுபவித்தார். இஸ்லாமிய மார்க்கத்திற்காகவும், பெருமானாருக்காகவும் தம் திரண்ட செல்வங்களைச் செலவழித்தவர்.

பெருமானார் மக்காவிலிருந்து மதினா ஹிஜ்ரத் சென்றபோது உடன் அபூபக்ரையே அழைத்துச் சென்றார். பெருமானாரோடு தௌர் குகையில் ஒளிந்திருந்து பின் மதீனா சென்றார்.

பெருமானார் பங்கேற்ற அனைத்துப் போர்களிலும் அபூபக்ர் (ரலி) பங்கு கொண்டுள்ளார். போர்க்களத்தில் தீரமுடன் போரிட்டதோடு பெருமானாருக்குப் போர் ஆலோசனை வழங்குபவராகவும் இருந்தார்.

ஹஜ்ஜுக்குச் செல்பவர்களுக்குத் தலைமை தாங்கிச் செல்லும் பொறுப்புமிக்க 'அமீருல் ஹஜ்' எனும் பதவியை முதன் முதலாகப் பெருமானார் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கே வழங்கினார்.

பெருமானார் மறைவுக்குப் பின்னர் இஸ்லாத்தில் முதல் கலீஃபாவாக நாயகத் தோழர்களும், பொதுமக்களும் இவரையே தேர்ந்தெடுத்தனர். பதவிப் பொறுப்பேற்ற இவர் பெருமானார் வழக்கமாக அமரும் மேடையின் மேற்பகுதியில் அமராது, அதன் கீழ்படியிலேயே அமர்ந்தார்.

இவர்கள் முதல் கலீஃபாகவாகப் பொறுப்பேற்ற பின்னர் பல புதிய போர்களில் ஈடுபடவேண்டியதாயிற்று. இவர் காலத்திற்குள் அரேபியாவெங்கும் இஸ்லாம் பரவிநிலைபெற்றது. இவரின் முயற்சியால் இறைவன் அருளிய திருமறை 'திருக்குர்ஆன்' வசனங்கள் முறையாகத் தொகுக்கப்படலாயின.

இவர் கலீஃபா பதவிக்காலத்தில் சம்பளமாகப் பெற்ற அறுபதினாயிரம் திரஹம்களுக்குப் பதிலாகத் தம் சொந்த நிலத்தை விற்று அரசுக் கருவூலத்தில் செலுத்திவிடப் பணித்தார். இவர் தமது 63வது வயதில் மறைவெய்தினார். இவர் உடல் அண்ணலாருக்கு அருகிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டது.

**அபூஜஹ்ல்:** இஸ்லாத்தின் பரம வைரியாக விளங்கியவன். பெருமானார் (ஸல்) அவர்கட்குச் சொல்லொணாத் துன்பங்களைத் தந்தவன். இவன் சிறு வயது முதலே அறிவுநுட்பமும் செயல் திறனும் மிக்கவனாகத் திகழ்ந்தான். இதனால் இவனை 'அபுல் ஹிகம்' என அடைமொழி தந்து அழைத்துவந்தனர். இதற்கு 'அறிவின் தந்தை' என்பது பொருளாகும்.

அபூஜஹ்ல் அண்ணல் (ஸல்) அவர்களுக்கு ஒத்த வயதினனாக இருந்தான். எதிலும் தலைமை பெற வேண்டும் எனும் வேட்கை மிக்கவன். இதனால் தன் வயது ஒத்த பெருமானாரை இளம் வயதில் பலரும் மதிப்பதையும், 'அல் அமீன்' (நம்பிக்கைக்குரியர்) என்று அழைத்ததையும் கண்டு மிகவும் பொறாமைப்பட்டான். இதனால்

அண்ணலாரை வெறுப்போடு பார்த்தான். அவர் மீது எதிர்ப்புணர்ச்சியை எப்போதும் காட்டி வரலானான்.

இஸ்லாம் பரவத் தொடங்கிய காலத்தில், அதை வளரவிடாமல் தடுக்கக் கங்கணம் கட்டிக்கொண்டு எதிர்க்கலானான். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முஸ்லிம்களிடம் எத்தகைய இஸ்லாமியக் கருத்துக்களை எடுத்துச் சொல்லுகிறார் என்பதை அறியஅறவே விரும்பாதவனாகக் கண்மூடித்தனமாக எதிர்க்கலானான். இதனால் முஸ்லிம்கள் இவனை 'அபூஜஹ்ல்' அதாவது 'அறியாமையின் தந்தை' எனப் பொருள்படும் பெயரால் அழைக்கலாயினர்.

பத்ருப் போரில் இவன் கொல்லப்பட்டான். சாவதற்கு முன் இவன் தலையை வெட்ட முனைந்த அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்(ரலி) அவர்களிடம், வெட்டும்போது தன் தலையைக் கழுத்தோடு சேர்த்து வெட்டும்படியும் அப்போதுதான் வெட்டப்பட்டு வரிசையாக வைக்கப்படும் தலைகளிடையே தன் தலை உயரமாக இருக்கமுடியும் என்று கூறினானாம். இதிலிருந்து இவன் எவ்வாறெல்லாம் தலைமை நிலைபெற வெறிபிடித்து அலைந்தான் என்பதை அறிய முடிகிறது.

இவன் சகோதரர் ஹாரிதும் இவன் மகன் இக்ரிமாவும் இஸ்லாத்திற்காகப் பெருந்தொண்டும் தியாகமும் செய்துள்ளார்கள்.

**அபூஹனீஃபா, இமாம்:** இஸ்லாமிய மார்க்க ஞானச் செல்வராக விளங்கியவர். இமாம் அபூஹனீஃபா (ரஹ்) ஹிஜ்ரி 80இல் கூஃபாவில் வாழ்ந்த பாரசீகக் குடும்பமொன்றில் பிறந்தார். இவருடைய முன்னோர்கள் அலீ(ரலி) அவர்களோடு தொடர்பு கொண்டிருந்தவர்கள், அவர்களால் வாழ்த்தப் பெற்றவர்கள்.

அபூஹனீஃபா (ரஹ்) அவர்களின் தந்தை பட்டுவணிகம் செய்துவந்தவர். தந்தைக்குத் துணையாக மகனும் அதே தொழிலில் ஈடுபட்டு உதவி வந்தார். இவரைச் சந்தித்த இஸ்லாமியப் பெரியார் ஒருவரின் அறிவுரைக்கிணங்க, தம் பதினாறாவது வயதில் பள்ளியில் சேர்ந்தார். அடிப்படைக் கல்வியைக் கற்ற பின்னர், இவர் நாட்டம் இஸ்லாமியச் சட்ட திட்டங்களைப் பற்றி நுட்பமாக அறிய விழைந்தது. கூஃபாவின் இமாமாகவும் இஸ்லாமியச் சட்ட மேதையாகவும் விளங்கிய ஹம்மாது என்பாரிடம் பிக்ஹு எனும் இஸ்லாமியச் சட்டங்களைக் கற்றுத் தேர்ந்தார்.

அதன் பின், பிக்ஹு சட்டங்களில் மேலும் தெளிவு பெற ஹதீதுக் கலையையும் நுணுக்கமாகக் கற்றறிந்தார். பின்னர், அக்காலத்தில் பிக்ஹு சட்டக் கலையில் தேர்ந்த பலரிடமும் பாடம் கேட்டார். அக்கலையில் விற்பன்னரானார். இஸ்லாமியச் சட்டதிட்டங்களில் எழும் ஐயப்பாடுகளை இவரிடம் கூறித் தெளிவு பெறலாயினர். பிக்ஹு சட்ட அறிவில் இவரை விஞ்சியவர் எவரும் இலர் என்ற பெருமையை விரைவிலேயே பெற்றார். நாடெங்கிலுமிருந்து இவரிடம் பாடங்கேட்க, தெளிவு பெற மாணவர்களும் மார்க்க மேதைகளும் வந்து குழுமினர்.

இவரது பெருமை நாடெங்கும் பரவியது. உமைய்யா கலீஃபா மர்வான் இப்னு முஹம்மது இவரை காஜியாக நியமிக்க விரும்பினார். ஆனால், பட்டம் பதவிகளை அறவே விரும்பாத அபூஹனீஃபா (ரஹ்) காஜி பதவியை ஏற்க மறுத்துவிட்டார். இதனால் பல கொடுமைகளை அனுபவித்தார்.

அப்பாஸியக் கலீஃபா அல் மன்சூர் பெருமானாரின் வழித் தோன்றல்கள் சிலரைக் கொடுமை செய்து அழித்து வந்தார். இதை அபூஹனீஃபா (ரஹ்) கடுமையாக எதிர்த்தார்கள். இவரது எதிர்ப்பைக் கண்டு அஞ்சிய கலீஃபா அல் மன்சூர் இவரை அரவணைத்து அடக்க முற்பட்டார். இதற்காக நாட்டின் மிக உயரிய தலைமை நீதிபதி பதவி தருவதாகக் கூறினார். பக்தாது வந்து பதவி ஏற்குமாறு பணித்தார். ஆனால் இமாம் அவர்கள் நீதிபதி பதவி ஏற்க அடியோடு மறுத்துவிட்டார். இதனால் சினமுற்ற கலீஃபா இவரைச் சிறையில் தள்ளினார். இமாம் அவர்களுக்கு வழங்கப்பட்ட உணவில் நஞ்சு கலந்து கொடுக்கச் செய்தார். இதனால் ஹிஜ்ரி 150 ஷஃபான் பிறை 2 அன்று இமாம் அபூஹனீஃபா (ரஹ்) காலமானார். இவரது ஜனாஸாத் தொழுகையில் பல்லாயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்டனர். இவர் உடல் பக்தாதில் நல்லடக்கம் செய்யப் பட்டுள்ளது.

**அபூஹுரைரா** (ரலி): இவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் அணுக்கத் தோழர்களில் குறிப்பிடத்தக்கவராவார். இஸ்லாத்தில் இணைவதற்கு முன்னால் இவரது இயற்பெயர் அப்து ஷம்ஸு (சூரியனின் அடிமை) என்பதாகும். இஸ்லாத்தில் சேர்ந்தபின்னர் இவர் பெயர் 'அப்துல்லாஹ்' என ஆகியது. இதற்கு 'அல்லாஹ்வின் அடிமை' என்பது பொருளாகும். தாம் வளர்த்து வந்த பூனைமீது இவர் மிக்க அன்பும் பரிவும் பாசமும் காட்டி வந்ததால் இப் பெயர் ஏற்பட்டது. இப்பெயரே நிலையாகவும் அமைந்துவிட்டது.

இவர் பெருமானாரின் இறுதி நான்காண்டுகள் நிழல்போல் இருந்து வந்தார். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வழங்கிய அறிவுரைகள், அறச் செய்திகள்; சம்பவங்கள் அனைத்தையும் எழுத்திலும் மனத்திலும் பதிவு செய்து வந்தார். நினைவாற்றல் மிக்கவர். பெருமானாரின் மறைவுக்குப் பின் அவற்றை உலகுக்கு வழங்கியவர். இவர் 5374 நபி மொழிகளை உலகுக்கு அறிவித்திருப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது.

இவர் புகழ்பெற்ற சூஃபித்துவ மெய்ஞ்ஞானியும் ஆவார். மிக அதிகமாக இறைவணக்கம் புரிவதை வழக்கமாகக் கொண்டிருந்தவர். எளிமைக்கே எடுத்துக்காட்டாக ஒற்றை உடையுடன் குடிசையில் வாழ்ந்து வந்த ஞானச் செல்வர்.

கைபர் போரின்போது பெருமானார் (ஸல்) அவர்களோடு தொடர்புகொண்டார். அதற்குப்பின் நடைபெற்ற போர்கள் அனைத்திலும் பங்குகொண்டார்.

உமர் (ரலி) கலீஃபாவாக இருந்தபோது இவர் பஹ்ரைனின் ஆளுநராகச் சிலகாலம் பணியாற்றினார்.

பின்னர், முஆவியா (ரலி) அவர்களின் கிலாஃபத்துச் சமயத்தில் சில நாட்கள் மதீனாவின் ஆளுநராகவும் பணிபுரிந்துள்ளார்.

இவர் தமது 78வது வயதில் மதீனாவில் காலமானார். நபித்தோழர்களின் நல்லடக்கத்தலமான ஜன்னத்துல் பகீயில் அடக்கம் செய்யப்பட்டார்.

**அமானி ஹல்ரத்** (ஷைகுல் மில்லத்): தமிழகத்தின் இஸ்லாமிய மார்க்க ஞானச் செல்வர்களில் குறிப்பிடத்தக்கவர் அமானி ஹல்ரத் அவர்கள். இவர் பள்ளிகொண்டா எனும் ஊரில் 1893-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 23ஆம்

தேதி (ஹிஜ்ரி 1311 முஹர்ரம் 7ஆம் நாள்) பிறந்தவர். இவர் தந்தையார் பெயர் ஹாஜி மௌலானா அப்துர் ரஹீம் என்பதாகும். அமானீ ஹஸ்ரத் அவர்களின் இயற்பெயர் ஸியாவுத்தீன் அஹமத் என்பதாகும். ஆனால் ஹஸரத் அவர்கள் 'அமானீ' என்ற பெயரில் எழுதி வந்தமையால், இப்புனை பெயரே இயற்பெயரினும் வலுவுடையதாக வழங்கலாயிற்று.

இவரது தந்தை, பாட்டனார் ஆகிய அனைவரும் மார்க்க ஞானமும், வணிகத் திறமையும் மிக்கவர்களாக விளங்கியவர்கள். அவர்களைப் போன்றே அமானீ ஹஸ்ரத் அவர்களும் மார்க்க ஞானத்தோடு அரபி, பார்ஸீ, உருது ஆகிய மொழிகளில் மிகப்பெரும் புலமை மிக்கவர்களாகவும் திகழ்ந்தார்கள்.

தொழில் செய்து பொருளீட்டுவதில் ஆர்வம் இருந்தாலும், மார்க்கப் பணியாற்றுவதிலேயே அவரது சிந்தனை முனைந்து நின்றது. அதன் விளைவாக தாம் மார்க்கக் கல்வி பெற்ற வேலூர் பாகியாத்துஸ்ஸாலிஹாத்தில் மேலும் உயர் கல்வி பெறச் சேர்ந்தார். அதே சமயத்தில் அங்கே பயிலும் இளம் மாணவர்களுக்கு ஆசிரியராகவும் அமர்ந்து பணியாற்றினார். இவ்வாறு ஒரே சமயத்தில் மாணவராகவும் ஆசிரியராகவும் பணியாற்றினார். 'மௌலவி ஃபாஸில்' எனும் சிறப்புமிகு சனதும் பெற்றார்.

அதன் பிறகு பொதுக்குடி மதரசாவில் ஈராண்டுகள் பணியாற்றினார். பின் இலங்கை சென்று இஸ்லாமியப் பிரச்சாரம் செய்தார். 1945ஆம் ஆண்டு முதல் லால்பேட்டை மதரஸாவின் முதல்வர் பணியை ஏற்றார். இப்பணி அவர்தம் இறுதி நாள்வரை தொடர்ந்தது.

இவர்கள் மார்க்க ஞானத்தோடு தமிழ், அரபி, பார்ஸீ, உருது மொழிகளில் மிகுந்த பாண்டியத்துவமுடையவராக இருந்தார். மேலும், மொழி இலக்கணம், தத்துவம் 'தர்க்கம்' விண்ணியல் போன்ற பல்வேறு துறைகளிலும் அறிஞராக விளங்கினார். பார்ஸியிலும் உருதுவிலும் மிகச் சிறந்த கவிஞராக விளங்கினார். இவரது 'தீவானெ அமானீ' எனும் பாரஸீக மொழிக் கவிதைத் தொகுப்பும், 'குல்ஷனெ ஸீரத்' எனும் உருது மொழிக் கவிதை நூலும் குறிப்பிடத்தக்க நூல்களாகும். பள்ளிவாசல்களில் கிப்லா அமைப்பதில் வல்லவராக விளங்கினார். மார்க்க சம்பந்தமாக எழும் எத்தகைய பிரச்சினைகளுக்கும் தெளிவாகத் தீர்ப்பு வழங்குவதில் மாபெரும் மேதையாகத் திகழ்ந்தார். இவர் 1966ஆம் ஆண்டு காலமானார். இவர் எழுதிய மொத்த நூல்கள் 23 ஆகும்.

**அமீர் குஸ்ரு :** இவர் புகழ்பெற்ற பாரஸீக மொழிக் கவிஞராவார். இவரின் முன்னோர்கள் துருக்கி நாட்டைச் சேர்ந்தவர்கள். அமீர் குஸ்ரு இந்தியாவில் பிறந்தவர். இவரது இயற்பெயர் அபுல் ஹஸன் என்பதாகும்.

அமீர் குஸ்ரு இளமையிலேயே கல்வியில் சிறந்து விளங்கினார். கலைகள் பல கற்றுத் தேறினார். எல்லாவற்றையும் விட கவிதை இயற்றுவதிலே இவர் பேரார்வம் மிக்கவராக விளங்கினார். எட்டு வயதிலேயே கவிதை புனைந்து பாடினார் எனக் கூறப்படுகிறது. அன்று முதல் தம் கவிதைகளை 'சுல்தானி' எனும் புனைபெயரில் எழுதி வரலானார்.

இவருக்கு ஒன்பது வயது நடக்கும் போது இவர் தந்தை இறந்தார். அதன் பின் இவரை வளர்க்கும் பெரும்

பொறுப்பு இவர் பாட்டனாருக்கு ஏற்பட்டது. அதன் பின் அவர் பள்ளிக் குச் செல்லவில்லை. வீட்டிலேயே இவருக்குக் கல்வி கற்பிக்கப்பட்டது. இவ்வாறு இவர் வீட்டுக்கல்வியாகவே பார்ஸீ, அரபி, துருக்கி, ஹிந்தி, சமஸ் கிருதம் ஆகிய மொழிகளைக் கற்றுத் தேறினார்.

இவர் வில்லியை ஆண்ட சுல்தான் முகம்மதுகானின் அவைப்புலவராக இருந்தார். முகம்மதுகான் போரில் இறக்கவே அவர் தம்பி அரசுரிமை ஏற் றார். அவரது அவையிலும் அரசவைப் புலவராக குஸ்ரு அமர்ந்தார். அவருக் குப் பின் அரியணை ஏறிய ஜலாலுத் தீன் அவையிலும் அரசவைப் புலவர் ஆனார்.

ஜலாலுத்தீனுக்குப்பின், அரசு பத விக்கு வந்த அலாவுத்தீன் கில்ஜியின் அரசவைப் புலவரானார். இவருக்குப் பின் அரசப் பதவியேற்ற மாலிக்காபூர் ஆட்சியிலும், அவருக்குப் பின்னர் பத விக்கு வந்த குத்புத்தீன் அரசவையிலும் கூட இவரே அரசவைப் புலவரானார். இவ்வாறு ஏழு சுல்தான்களின் ஆட்சி யிலும் தொடர்ந்து அரசவைப் புலவ ராக விளங்கிய பெருமை இவருக்கு உண்டு. இதற்குள் இவரும் 60 வயதை எட்டிவிடவே அரசவைப் புலவர் எனும் பதவியினின்றும் ஓய்வு பெறலானார்.

அமீர் குஸ்ரு அக்காலத்தில் மாபெரும் ஞானச்செல்வராக விளங்கிய ஹஸ்ரத் நிஜாமுத்தீன் அவ்லியாவோடு பெரும் ஈடுபாடு கொண்டிருந்தார். அவரது பேரன்பைப் பெறும் பேறு பெற்றார். அவரிடம் தீட்சையும் பெற்றார். நிஜா முத்தீன் அவ்லியா அவர்கள் மீது பல புகழ்ப்பாக்களை இயற்றி அன்னா ருக்கே காணிக்கையாக்கினார். கவிதை இயற்றுவதோடு அமீர் குஸ்ரு இனிமை யாகவும் பாடுவார். இவரின் அருமை யான பாடல்களை இனிமையான குர லில் குஸ்ரு பாடுவதை நிஜாமுத்தீன் அவ்லியா விரும்பிக் கேட்பது வழக்க மாகும். இவ்வாறு குஸ்ரு மீது ஞானச் செல்வர் நிஜாமுத்தீன் அவ்லியா அளப் பரிய அன்பு காட்டினார்.

குஸ்ரு ஊரில் இல்லாதபோது நிஜா முத்தீன் அவ்லியா காலமானார். இதை அறிந்து ஊர் திரும்பிய குஸ்ரு அதே வருத்தத்தில் ஆழ்ந்தார். மூன்று மாதங் களுக்குப் பின் அவ்லியா நினை வோடவே இறந்தார். இவரது உடல் நிஜாமுத்தீன் அவ்லியாவின் கால்மாட் டிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டது. இவரது அடக்கவிடத்தில் ஆண்டுதோ றும் உர்ஸ் நடைபெறுவது வழக்கம். அப்போது இவர் பாடல்கள் இசை வாணர்களால் இசைக்கப்படும்.

இவரின் முன்னோர்கள் துருக்கியைச் சார்ந்தவர்களாக இருந்தபோதிலும், இவர் இந்தியாவில் பிறந்து வாழ்ந்த தால் இந்தியாவை மிகவும் நேசித்தார். இவர் இந்தியாவின் பெருமையை, சிறப்பைப் பெரிதும் போற்றி எண் ணற்ற கவிதைகளை எழுதினார்,

இவர் கவிதைகள் தொகுக்கப்பட்டு ஐந்து தொகுதிகளாக வெளியிடப்பட் டுள்ளன. இவர் ஐந்து காவியங்களை யும் இயற்றியுள்ளார். இவர் படைப்பு களாக 92 நூல்கள் வெளிவந்துள்ள தாகக் கூறப்படுகிறது. இவர் தம் வாழ் நாளில் எழுதிய கவிதைகளின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு தெரியுமா? ஒரு இலட்சத்து இருபதினாயிரம் கவி தைகள் ஆகும். இவருக்கு ஐந்து மொழி தெரிந்தாலும் ஹிந்தியிலும் பார்ஸீயி லுமே இவர் கவிதை இயற்றுவது வழக் கம். அதிலும் அதிகமான கவிதைகளை ஹிந்தியிலேயே இயற்றியுள்ளார்.

கவிதை இயற்றுவதோடு இசைக்கருவிகள் சிலவற்றையும் இவர் கண்டுபிடித்து அமைத்ததாகக் கூறப்படுகிறது. மிருதங்கத்திலும் சற்று வேறுபட்டதாக தபலா வாத்தியத்தையும், சிதார் எனும் இசைக் கருவியையும் இவரே உருவாக்கியதாகக் கூறப்படுகிறது. இவர் சில புதிய ராகங்களையும் கண்டறிந்ததாகச் சொல்லப்படுகிறது.

**அல் அமீன் :** இச்சொல்லுக்கு 'நம்பிக்கையாளர்' என்பது பொருளாகும். இளமையில் பெருமானார் தம் வாக்காலும் நடத்தையாலும் மற்ற குறைஷியர்களின் நம்பிக்கைக்கு உரியவராகத் திகழ்ந்தார். இதனால் அவரை குறைஷிகள் 'அல் அமீன்' (நம்பிக்கையாளர்) என்றே அழைத்து வந்தனர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சிறுவராக இருந்தபோது கடைவீதிக்குச் செல்வார். அப்போது தெருவிலுள்ள கதவுகளைத் தட்டி 'தான் கடைவீதிக்குச் செல்வதாகவும் யாருக்காவது ஏதாவது பொருள் வாங்கி வரவேண்டுமா?' என வினவுவார். பொருள் வாங்கி வர வேண்டப்பட்டால், அவ்வாறே வாங்கி வந்து தருவது அவரது பழக்கம். அவ்வாறு பொருள் வாங்கி வருவதில் மிகுந்த நாணயம் உள்ளவராகவும், நம்பிக்கைக்கு உரியவராகவும் விளங்கினார்.

நாளடைவில் தங்கள் பொருட்களை நம்பிக்கையாகப் பெருமானாரிடம் அடைக்கலமாகக் கொடுத்துவைக்கலாயினர். வேண்டும்போது அவற்றைப் பெருமானாரிடமிருந்து பெற்றுக் கொண்டனர்.

அண்ணல் நபி(ஸல்) அவர்கள் மக்காக் குறைஷியர்களின் கொடுமையினால் மதீனா புறப்பட்டுச் செல்லலானார். இவ்வாறு 'ஹிஜ்ரத்' செல்ல ஆயத்தமானபோது, பிறர் அடைக்கலமாகத் தங்களிடம் தந்திருந்த பொருள்களை அலீ (ரலி) அவர்களிடம் ஒப்படைத்தார். அப்பொருளுக்கு உரியவர்களிடம் சேர்ப்பிக்குமாறு பணித்தார். அண்ணலார் நபிகள் நாயகம் (ஸல்) ஹிஜ்ரத் சென்ற பின்னர் அலீ(ரலீ) அவர்களும் அவ்வாறே அடைக்கலப் பொருட்களை அவரவர்களிடம் சேர்ப்பித்துவிட்டார்.

இவ்வாறு பிறர் நம்பிக்கைக்கு உரியவராக இளமை முதலே வாழ்ந்து வந்த நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் 'அல் அமீன்' எனும் சொல்லுக்கு ஏற்ற இலக்கணமாக வாழ்ந்தார்கள்.

**அரஃபாத் :** ஹாஜிகள் அரஃபாத் பெருவெளியில் ஹஜ்ஜின் போது தங்கி தங்கள் ஹஜ் புனிதப் பயணத்தை நிறைவு செய்கிறார்கள். மக்கா நகருக்குக் கிழக்கே பன்னிரண்டு கல் தொலைவில் அரஃபாத் பெருவெளி அமைந்துள்ளது. அரஃபாத் என்ற சொல்லுக்கு ஒருவரையொருவர் இனங் கண்டுகொள்ளுதல் என்பது பொருள் விளக்கமாகும்.

இறைவனின் கோபத்திற்கு ஆளான ஆதம் (அலை) அவர்களும், ஹவ்வா நாச்சியாரும் விண்ணிலிருந்து மண்ணில் நெடுந்தொலைவுக்கு இடையே தூக்கி எறியப்பட்டனர். அவர்களின் நீண்ட கால மன்றாட்டுக்குப் பின், இறையருளால் ஒன்று சேர்ந்தனர். அவ்வாறு இணைந்த இடமே அரஃபாத், இந்த சந்திப்பு துல்ஹஜ் 9 ஆம் நாள் நடைபெற்றது.

அரஃபாத் பெருவெளி எட்டு மைல் நீளமும், நான்கு மைல் அகலமும் உள்ளதாகும். இங்குள்ள மலை 'ஜபலு ரஹ்மத்' என்று அழைக்கப்படுகிறது. இதற்கு 'அருள்மலை' என்பது பொருளாகும். இம்மலை சுமார் 200 அடி

உயரம் உள்ளதாகும். இம்மலை உச்சிக்குச்செல்லப் படிகள் உண்டு. நாயகம் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜின்போது இங்கு தங்கி துல்ஹஜ் 9ஆம் நாள் அன்று குத்பாப்பேருரை நிகழ்த்தினார்கள்.

ஹஜ் செய்வோர் நண்பகல் முதல் பொழுது சாயும்வரை இப்பெரு வெளியில் தங்குவது கட்டாயமாகும். இங்கு தங்கியிருக்கும்போது கேட்கும் துஆ அனைத்தையும் வல்ல அல்லாஹ் ஏற்றுக் கொள்கிறான். எனவே, ஹாஜிகள் இங்கு மனமுருகித் துஆ கேட்பர். அரஃபாத் பெருவெளியில் தங்குவதன் மூலமே ஹஜ் முழுமையடைகிறது. இங்கு சிறிது நேரம் கூட தங்காதோரின் ஹஜ் நிறைவேறுவதில்லை. இங்குத் தங்கும் ஹாஜிகள் இருள் படரு முன் இப்பெருவெளியைவிட்டு வெளியேறி முஜ்தலிபா எனுமிடம் சென்று விடவேண்டும்.

இவ்வாறு ஹாஜிகள் மீது இறையருள் பொழியும் பெருவெளியாக அமைந்துள்ளது அரஃபாத் மைதானம்.

**அரபி:** உலகிலுள்ள இனிமையான மொழிகளில் அரபிமுக்கியமானதாகும். இது உலகில் பத்துக்கோடி மக்களால் பேசப்படுகிறது. உலகில் ஆங்கிலம், ஸ்பானிஷ் ஆகிய மொழிகளுக்கு அடுத்தபடியாக, அதிகமானோர் பேசும் மூன்றாவது மொழியாகும். அரபி மொழி சவூதி அரேபியா இராக், சிரியா, எகிப்து, பாலஸ்தீனம், சூடானின் ஒரு பகுதி, அல்ஜீரியா, மொரோக்கோ, துனீசியா, மேற்கு ஸஹாரா, நைஜீரியா, லிபியா, லெபனான் போன்ற நாடுகளில் பேசும் மொழியாக மட்டுமல்லாது, அரசு நிர்வாக மொழியாகவும் உள்ளது. இந் நாடுகளில் அரபி மொழி இலக்கியங்கள் கள் செழித்து வளர்ந்துள்ளன. இஸ்லாமிய மார்க்கம் எங்கெல்லாம் பரவியுள்ளதோ அங்கெல்லாம் அரபி மொழியும் வேத மொழியாக வழங்கி வருகிறது. உலகப்பேரமைப்பான ஐக்கிய நாடுகள் சபையின் மொழிகளில் அரபியும் ஒன்றாகும்.

முதல் மனிதரும் முதல் நபியுமான ஆதம் (அலை) பேசிய மொழி அரபி என்றும் கூறப்படுகிறது. உலகிலுள்ள மிகப்பழைமையான மொழிகளில் அரபி மொழி முதன்மையானது என்பது மொழியியலார் கருத்து. அரபா என்ற சொல்லிலிருந்து அரபி எனும் சொல் உருவாகியிருக்கலாம். இதற்குத் 'தெளிவாகப் பேசுதல்' என்பதுபொருளாகும். அரபி மொழியில் எந்தக் கருத்தையும் நுட்பமாகச் சொல்ல முடியும். அதற்கு ஏற்ற மொழி என்பதை உணர்த்தும் வகையில் இப்பெயர் அமைந்திருக்கலாம். அரபிமொழி பேசிய மக்கள் அரபிகள் என அழைக்கப்பட்டனர்.

இஸ்லாமியத் திருவேதமான திருக்குர்ஆன் அரபி மொழியிலேயே அமைந்து உள்ளது. பெருமானார் வாழ்வையும் வாக்கையும் விளக்கும் ஹதீஸ்களும் அரபி மொழி மூலத்திலேயே அமைந்துள்ளன.

அரபி ஓசை இனிமையும், சொல் வளமும் உடைய மொழி. ஒரே சொல் பல பொருட்களைக் குறிப்பதாக அமைந்திருப்பது இம்மொழிச் சிறப்புகளுள் ஒன்றாகும். அதே போன்று ஒரே பொருளைக் குறிக்க பல சொற்கள் அரபி மொழியில் வழங்குகிறது. ஓர் எழுத்து ஒரு பொருளைக் குறிப்பதாகவும் அமைந்துள்ளது.

அரபியில் மொத்தம் 28 எழுத்துக்கள் உள்ளன. இவ்வெழுத்துக்கள் இடவலமாக எழுதப்படுகின்றன. இஸ்லாமிய மறை மொழியாக அரபி அமைந்திருப்பதால், இஸ்லாம் நிலை பெற்றுள்ள

இந்தியா போன்ற நாடுகளில் அரபி மொழி வல்லுநர்களாக முஸ்லிம் பெரியார் பலர் விளங்கியுள்ளார்கள். அவர்களில் மிக முக்கியமானவர் கீழக்கரையில் வாழ்ந்த ஷைகு ஸதக்கத்துல்லாஹ் அப்பா அவர்கள் ஆவர்: உலகெங்கும் உள்ள முஸ்லிம்கள் அரபி மொழியை இளமையிலேயே கற்கின்றனர்.

**அரபுத் தமிழ்:** அரபு நாட்டவர்கள் வணிகம் தொடர்பாகத் தமிழ் நாட்டோடு நீண்டகாலமாக உறவு கொண்டிருந்தார்கள். பெருமானார் (ஸல்) அவர்கள் காலத்திலும் பின்னரும் அரபு நாட்டு முஸ்லிம்கள் பெருமளவில் மேலைக் கடற்கரை வழியாகத் தமிழ் நாடு வந்தனர், அவர்களில் பலர் தமிழகத்தில் நிலையாகக் குடியமர்ந்தனர். அவர்கள் தமிழ் மக்களோடு மொழி வழியாக உறவு கொள்ள முற்பட்டனர். அதற்கு வசதியாக அரபி எழுத்துக்களில் தமிழை எழுதலாயினர். மொழி தமிழாகவும், எழுத்து அரபியாகவும் அமைந்தது. இதுவே 'அரபுத் தமிழ்' என அழைக்கப்படுகிறது. அரபி மொழி எழுத்து ஒலிகளைக் கொண்ட எல்லா எழுத்துக்களும் தமிழில் இல்லை. இதே போன்று தமிழ் எழுத்து ஒலிகளுக்கான அரபு எழுத்துக்களும் ஒலிகளும் அரபியில் இல்லை. சான்றாக, தமிழில்காணப் படும் ள, ழ, ண, ட போன்ற எழுத்துக்களின் மேலும் கீழும் அதிகப்படியான புள்ளிகளை அமைப்பதன் மூலம், இவ்வெழுத்து ஒலிகளைப் பெற முடிந்தது. தமிழில் 247 ஒலிகளை எழுத 131 வரி வடிவ எழுத்துக்கள் உண்டு. அரபி மொழியில் 28 எழுத்துக்கள் மட்டுமே உள்ளன. அவற்றுடன் 8 புதிய வரிவடிவ எழுத்துக்கள் சேர்க்கப்பட்டு அரபுத் தமிழ் எழுதப்படுகிறது.

தமிழை வேற்று மொழிகளில் எழுதுவது சங்க காலம் முதற்கொண்டே உண்டு. பிராமித் தமிழ், பாலித் தமிழ், பிராகிருதத் தமிழ் என இருந்துள்ளன.

அதேபோன்று அரபிமொழி எழுத்துக்களைக் கொண்டு வங்க மொழி எழுதப்பட்டு வந்தது. அதைத் தொடர்ந்து தான் இங்கு அரபி எழுத்துக்களைத் தமிழில் எழுதும் பழக்கம் விரைந்து வளர்ந்தது. மலாய் மொழியும் துருக்கி மொழியும் அரபி எழுத்துக்களால் எழுதப்பட்டு வந்தன என்பது வரலாறு.

அரபுத் தமிழில் பல நூறு இஸ்லாமிய மார்க்க நூல்கள் உள்ளன. இந்நூல்களை இஸ்லாமியத் தமிழ்ப் பெண்கள் வீட்டிலிருந்தவாறே தங்களுக்குத் தெரிந்த அரபி எழுத்துக்கள் மூலம் அதிகமாகப் படித்துப் பயன்பெற்று வரலாயினர். அரபுத் தமிழில் ஒரு காலத்தில் மிகுதியாக எழுதப்பட்டாலும் இன்று அம்முறை வெகுவாகக் குறைந்துவிட்டது.

**அரேபியா:** அரேபிய நாடு ஆசியாவின் தென்மேற்கே அமைந்துள்ளது. இந்நாட்டின் வடபகுதி பாலைவனமாகும். மற்ற மூன்று பகுதிகளும் கடலால் சூழப்பட்டுள்ளது. இதனால் இந்நாடு உலகின் மிகப்பெரிய தீபகற்ப நாடுகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது.

தமிழ் மொழி பேசும் மாநிலம் தமிழ் நாடாக அழைக்கப்படுகிறதல்லவா, இதேபோன்று அரபி மொழி பேசும் நாடு அரேபியா என அழைக்கப்படுகிறது.

அரேபியா நாடு 2,200 கி.மீ. நீளமும் 1,200 கி.மீ. அகலமும் உடையது. இங்கு மக்கள் தொகை சுமார் இரண்டு கோடி. நாட்டின் பெரும் பகுதி பாலைவனமாக உள்ளது. இந்நாட்டின் புகழ் பெற்றதுறைமுகம் ஜித்தா ஆகும். அரேபியாவில் மலைகள் நிறைய உள்ளன.

நகரங்களில் மட்டுமே மக்கள் தொகை மிகுந்துள்ளது. மக்காவும், மதீனாவும் இஸ்லாமியப் புனித நகரங்களாகும். மக்கா நகரின் மத்தியில் கஃபா இறையில்லமும், மதீனாவில் அண்ணலாரின் அடக்கத்தலமும் உள்ளன. ரியாத் அரேபியாவின் தலைநகரமாகும்.

இந்நாட்டில் மழை அதிகம் பெய்வதில்லை. இதனால் இந்நாடு வறட்சி மிக்கதாகவும் பாலைவனப் பகுதியாகவும் காட்சியளிக்கின்றது. இந்நாட்டின் சில பகுதிகள் வளமுள்ளதாக உள்ளன. இங்கு பகலில் வெயில் கடுமையாக இருக்கும். அதே போன்று இரவில் குளிரும் உண்டு. அரேபியாவில் பெட்ரோல் எண்ணெய் மிகுதியாகக் கிடைக்கிறது. இதனால் இந்நாடு செல்வ வளமிக்கதாக விளங்குகிறது.

**அல்லாஹ் :** அளவற்ற அன்புடையோனும் நிகரற்ற அருளுடையோனுமாகிய வல்ல இறைவனின் திருப்பெயரே 'அல்லாஹ்' என்பது.

இச்சொல் எம்மொழிச் சொல்லிலிருந்தும் உருவானதல்ல, இறைவன் தன்னைக் குறிக்க வழங்கிய அழகுத் திருப்பெயராகும். இச்சொல் இனிமையும் ஓசை நயமுமிக்க சொல்லாகும். அகிலம் தோன்றிய காலம் முதல் இறைவனைக் குறிக்க இறையடியார்கள் பயன்படுத்திவந்த சொல் என்பது ஆய்வாளர்கள் முடிவு. பெருமானார் (ஸல்) அவர்களால் இஸ்லாம் நிலை நிறுத்தப்பட்டபிறகு இச்சொல் முஸ்லிம் மக்கள் அனைவரின் தாரக மந்திரமாகியது.

பெருமானார் அவர்கள் தோன்றுவதற்கு முன்பு அரேபியர்கள் உருவ வணக்கம் செய்து வந்தார்கள் என்பது உங்களுக்குத் தெரியும். அவர்கள் அனைத்துத் தெய்வங்களுக்கும் பெயரிட்டிருந்தார்கள். எந்தத் தெய்வத்தையும் 'அல்லாஹ்' எனப் பெயரிட்டு அழைக்கவில்லை. எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான உருவிலா அருவமான இறைச் சக்தியையே 'அல்லாஹ்' என்ற பெயரால் அழைத்து வந்தார்கள்.

வணங்குதற்குரியோன் அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு யாரும் இல்லை என்பதை நாயகம் (ஸல்) வலியுறுத்தி பல தெய்வ உருவ வழிபாட்டை ஒழித்தார். 'அல்லாஹ்' யாருக்கும் இணை இல்லாதவன். யாருடைய துணையும் இல்லாதவன். அவன் யாரையும் பெறவும் இல்லை, அவன் யாராலும் பெறப்படவும் இல்லை. அவன் ஆணும் இல்லை. பெண்ணும் இல்லை. அலியும் இல்லை. அல்லாஹ் மனிதனின் பிடரி நரம்பைவிடவும் அருகில் உள்ளான். நன்மை தீமைகளுக்கேற்பப் பலன் அளிப்பவன். அவன் அருளை, அன்பைவேண்டி நிற்போருக்கு அவன் இல்லை என்று சொல்லுவதே இல்லை. உலகைப் படைத்துக் காத்து வருபவன். அவன் இன்றி ஓர் அணுவும் அசையாது. அல்லாஹ் எனும் பெயரும் அல்லாஹ்வின் சிறப்பைக்கூறும் சொற்கள் திருக்குர்ஆனில் 2584 இடங்களில் வருகின்றன. 'அல்லாஹ்' எனும் சொல்லை எந்த உலக மொழியிலும் முழுப் பொருளோடு மொழிபெயர்க்க முடியாது. 'அல்லாஹ்' எனும் இறைவனின் திருப்பெயரை இடையறாது உச்சரிக்கும் ஒருவர் மீது இறைவனின் அன்பும் அருளும் மழை எனப் பொழியும் என்பது ஆன்றோர் வாக்கு.

அல்லாஹ் எனும் பெயரோடு இறைவனுக்கு மேலும் 99 அழகுத் திருப்பெயர்கள் உண்டு.

**அலாவுத்தீன் கில்ஜி:** துருக்கியின் கில்ஜிப் பரம்பரையைச் சேர்ந்த இந்திய சுல்தான்களில் புகழ்பெற்று விளங்

கியவர் அலாவுத்தீன் கில்ஜி. இவர் சுல்தான் ஜலாலுத்தீனுக்குப்பின் டில்லி ஆட்சி பீடமேறியவர்.

இவர் அரசரான சிறிது காலத்துக்குள் மங்கோலியர் படையெடுத்தனர். தீரமுடன் வீரப்போரிட்டு அப்படையெடுப்பை முறியடித்தார். ஐந்தாண்டுகளுக்குப்பின் மீண்டும் மங்கோலியர் படையெடுத்தனர். அதனையும் முறியடித்தார். அதைத் தொடர்ந்து அலாவுத்தீன் கில்ஜி குஜராத் மீது படையெடுத்து அதை வென்று கைப்பற்றினார். மேற்குத் தக்காணப் பகுதியும் அவர் வசமாயிற்று.

இப்போர்களின் போது அவர் ஒரு மாவீரனைக் கண்டறிந்தார். அவர் பெயர் மாலிக் காபூர் என்பதாகும். நீக்ரோ இனத்தைச் சார்ந்த அவர் புத்திசாலித்தனமும், ராஜதந்திரமும், வீரமும் நிறைந்தவர். அலாவுத்தீன் கில்ஜி விரைவிலேயே அவருக்குப் பதவி உயர்வு தந்து, படைத் தளபதி ஆக்கினார்.

அலாவுத்தீன் கில்ஜி வட மாநிலங்களில் இருந்த சிற்றரசுகள் பலவற்றையும் படிப்படியாகக் கைப்பற்றித் தம் வசமாக்கிக் கொண்டார். இவர் சித்தூர் மீது படையெடுத்துச்சென்று அதைக் கைப்பற்றினார். இதைத் தொடர்ந்து ஒரு சம்பவம் கூறப்படுகிறது. சித்தூர் ராணி பத்மினி மீது அலாவுத்தீன் கில்ஜி ஆசை கொண்டிருந்ததாகவும், அதன் காரணமாக சித்தூர் மீது படையெடுத்து அதனைக் கைப்பற்றினார் என்றும், அப்போது ராணி பத்மினி தீக்குளித்து இறந்ததாகவும் கூறப்படுகிறது. இதற்கு வரலாற்று அடிப்படையில் ஆதாரம் ஏதும் இல்லை. இவரது ஆட்சியின் கீழ் வட இந்தியா முழுமையும் வந்தது.

பின்னர், தம் தளபதி மாலிக் காபூரைத் தக்காணத்தின் மீது படையெடுக்கப் பணித்தார். அவரும் தக்காணத்தின் பெரும்பகுதியைக் கைப்பற்றி ராமேஸ்வரம்வரை சென்று திரும்பினார். இதன்மூலம் அவர் இந்தியா முழுமையும் ஆளும் மாமன்னரானார். இவர் அதிகார வெறியும் மமதையும் கொண்டவராகவும் மதுக்குடியராகவும் இருந்தார். மதுபோதையில் தம் ஆருயிர் நண்பர் ஒருவரைக் கொல்லப் பணித்தார். போதை தெளிந்தவுடன் தம் தவறை உணர்ந்து மது அருந்துவதை நிறுத்தினார். அதன்பின் தம் ஆட்சிப் பகுதியில் மது விலக்கை அமல்படுத்தினார்.

ஆட்சித் திறமிக்க அலாவுத்தீன் கில்ஜி அதிகாரம் செலுத்துவதில் மிகவும் கண்டிப்புடன் நடந்து கொண்டார். மக்கள் நலனில் மிகுந்த அக்கரை காட்டினார், விளைபொருட்களுக்கு விலை நிர்ணயம் செய்தார், அரசு அதிகாரிகள் நேர்மையுடன் நடக்கச் செய்தார். தவறான வழிமுறைகளில் செல்லும் அதிகாரிகளைக் கடுமையாகத் தண்டித்தார்.

பிற சமய மக்களுக்குத் தங்கள் சமயத்தை விரும்பிய வண்ணம் பேணி நடக்க முழுச் சுதந்திரம் அளித்தார். குடிமக்கள் எல்லோரையும் சமமாக நடத்தினார்.

**அலீகர்:** இது உத்திரப் பிரதேசத்திலுள்ள நகராகும். இங்குதான் புகழ் பெற்ற இஸ்லாமியப் பல்கலைக் கழகமான 'அலீகர்' 'பல்கலைக் கழகம்' அமைந்துள்ளது. சுமார் ஒன்றரை இலட்சம் மக்களைக்கொண்ட இந்நகரில் பாதிக்கு மேற்பட்டவர்கள் முஸ்லிம்களாவர்.

முஸ்லிம்களுக்கென தனிக் கல்வி நிலையம் அமைய வேண்டியதன் அவசி

யத்தை இந்திய இஸ்லாமியப் பெரியோர்கள் உணர்ந்தனர். அதனால் முஸ்லிம்கள் நிறைந்த அலிகர் நகரில் ஒரு கல்விச்சாலையை நிறுவ சர். ஸையித் அஹமத் கான் என்பார் பெரு முயற்சி மேற்கொண்டார். இதற்கெனப் பொதுமக்களிடம் நிதி வசூலித்து 1875ஆம் ஆண்டில் ஆண்கள் உயர்நிலைப் பள்ளி ஒன்றைத் தொடங்கினார். அதை மூன்றாண்டுகளில் கல்லூரியாக மாற்றினார். 1920 ஆம் ஆண்டில் இக்கல்லூரி பல்கலைக் கழகமாக உருவெடுத்தது. இன்று மிகப் பெரும் முஸ்லிம் பல்கலைக் கழகமாக வளர்ந்து, பெரும் பயன் அளித்து வருகிறது.

**அலிஃப்:** உலகிலுள்ள எழுத்துக்கள் அனைத்தும் அகரத்தை முதலாகக் கொண்டே அமைந்துள்ளன. தமிழில் முதல் எழுத்து 'அ' அமைந்திருப்பது போன்றே, அரபு மொழியில் 'அலிஃப்' எழுத்து முதல் எழுத்தாக அமைந்துள்ளது.

**அலீ** (ரலி): அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மருமகனும், பெருமானாரின் பெரிய தந்தையார் அபூதாலிபின் மகனுமாவார். இவர் தாயார் பெயர் ஃபாத்திமா என்பதாகும். அபூதாலிப்-ஃபாத்திமா தம்பதியரின் நான்காம் மகனாவார். இவர் கி. பி, 600ஆம் ஆண்டில் மக்காவில் பிறந்தார்.

அலீ (ரலி) அவர்கள் தமது ஐந்தாம் வயது முதலே அண்ணலார் அவர்களின் நிழலாக வாழ்ந்து வந்தவராவார். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நபித்துவம் பெற்றபின்னர் இஸ்லாத்தை ஏற்றுப் பின்பற்றிய முதல் இளைஞர் அலீ (ரலி) அவர்களே ஆவார். அப்போது அவருக்கு வயது பத்தேயாகும்.

பெருமானாரின் நபித்துவத்தையும், இஸ்லாமிய இறைநெறியையும் ஏற்காத குறைஷிகள் அண்ணலாரைக் கொல்லத் திட்டம் தீட்டினர். குறிப்பிட்ட இரவில் குறைஷிகள் கொல்ல வருமுன், இளைஞர் அலீ (ரலி) அண்ணலாரின் படுக்கையில் அவரது போர்வையைப் போர்த்தித் தீரமுடன் தூங்க, அண்ணலார் மதீனா நோக்கி ஹிஜ்ரத் செய்தார். கொலையாளிக்கும் அஞ்சாத தீரம் அலீ (ரலி) அவர்களுடையது என்பதை இச்சம்பவம் மூலம் நன்குணரலாம். வாள்வீச்சிலும் மற்போரிலும் தன்னிகரற்று விளங்கினார். இவரது வாள் இரு முனைகொண்ட இரட்டை வாள் ஆகும்.

பெருமானார் (ஸல்) அவர்கட்கும் மக்காக் குறைஷிகளுக்கும் இடையே நடைபெற்ற பத்ருப்போரில் அலீ (ரலி) அவர்களின் மாவீரத்தைப் பாராட்டும் வகையில் தம் அன்பு மகள் ஃபாத்திமாவை நிக்காஹ் செய்து தந்தார். அலீ (ரலி)-பாத்திமா தம்பதியரின் அருமந்தப் புதல்வர்களே ஹஸன் (ரலி) ஹுஸைன் (ரலி). பெருமானாரின் பேரப்பிள்ளைகளான இவர்களே பின்னாளில் இறைநெறியை நிலைநாட்ட இன்னுயிர் நீத்த ஏந்தல்கள்.

மக்கா நகரை வெற்றி கொண்ட பின்னர், பெருமானார் அவர்கள் அலீ (ரலி) அவர்கள் தோள் மீதேறி நின்று கஃபாவின் தலைமைத் தெய்வ விக்கிரகம் ஹுபலை உடைக்க முனைந்தார். அண்ணல் (ஸல்) அவர்களை அலீ (ரலி) அவர்களால் தூக்க இயலவில்லை. தாங்க முடியாத கனத்தால் அலீ (ரலி) தடுமாறினார். அப்போது பெருமானார் அவர்கள் அலீ (ரலி) அவர்களை நோக்கி 'நபித்துவத்தைத் தூக்க உங்களால் இயலாது. எனவே, என் தோளில் ஏறி நின்று சிலையை உடையுங்கள்'

எனப் பணித்தார். அலீ (ரலி) அவர்களும் அவ்வாறே செய்தார்.

அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நிழலாக இருந்த அலீ (ரலி) அவர்கள் பெருமானாரின் இறுதிப் பேருரையை உரத்த குரலில் திரும்ப உரைத்த பெருமையைப் பெற்றவராவார்.

உமர் (ரலி) கலீஃபாவாக இருந்தபோது இஸ்லாமிய ஆண்டு ஒன்றை உருவாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அப்போது அலீ (ரலி) ஆலோசனைக்கேற்ப பெருமானார் (ஸல்) மக்காவினின்றும் மதீனா ஹிஜ்ரத் சென்றதை அடிப்படையாகக் கொண்டே ஹிஜ்ரி ஆண்டு உருவாக்கப்பட்டது.

உதுமான் (ரலி) அவர்கள் கலீஃபாவாக இருந்தபோது கொல்லப்பட்டார். அவருக்குப் பின் நான்காம் கலீஃபாவாக அலீ (ரலி) பதவிப் பொறுப்பேற்றார். இவர் கலீஃபா பொறுப்பேற்ற பின்னர் ஏற்பட்ட போர்களில் பெரும் வீரம் காட்டினார். இவர் கலீஃபாவாக இருந்தபோது ஏற்பட்ட உள்நாட்டுக் குழப்பங்களையும், கலகங்களையும் தீரமுடன் போராடி அடக்கினார்.

இவருக்கு 63 வயது நடக்கும்போது பள்ளிவாசலில் தொழுது கொண்டிருந்தபோது கொல்லப்பட்டார்.

**அன்சாரி, டாக்டர், எம்.ஏ.,:** இவர் தலைசிறந்த விடுதலைப் போராட்ட வீரரும் புகழ்பெற்ற காங்கிரஸ் பேரியக்கத் தலைவர்களில் ஒருவருமாவார். உத்திரப் பிரதேச மாநிலத்திலுள்ள யூசுப்பூர் எனுமிடத்தில் 1880ஆம் ஆண்டில் பிறந்தார். இந்தியாவில் கல்லூரிப் பட்டப்படிப்பை முடித்த இவர் இங்கிலாந்து சென்று மருத்துவக் கல்வியில் டாக்டர் பட்டம் பெற்றார். சிறிது காலம் இங்கிலாந்தில் மருத்துவராகப் பணியாற்றினார். பின்னர், இந்தியா திரும்பித் தம் மருத்துவத் தொழிலைத் தொடர்ந்தார்.

அப்போது இந்திய விடுதலைப் போராட்ட நிகழ்ச்சிகள் இவரை ஈர்த்தன. இவரும் விடுதலைப் போராட்ட வீரர்களில் ஒருவரானார். விரைவிலேயே அதன் தலைவர்களில் ஒருவரானார். 1924ஆம் ஆண்டு காந்திஜி 21 நாட்கள் உண்ணாவிரதம் இருந்தபோது, அவரை தினந்தோறும் பரிசோதித்துப் பாதுகாத்தவர் டாக்டர் அன்சாரி. பாரத நாடெங்கும் பயணம் செய்து மக்களின் விடுதலை வேட்கையைத் தூண்டினார். 1927ஆம் ஆண்டில் சென்னையில் நடைபெற்ற காங்கிரஸ் கட்சியின் மாநாட்டிற்குத் தலைமை தாங்கினார்.

விடுதலைப் போராட்டங்களில் முனைப்புடன் ஈடுபட்ட இவர் பல ஆண்டுகள் சிறைவாழ்வு நடத்தியுள்ளார். 1936ஆம் ஆண்டில் ரயில் பயணத்தின்போது மாரடைப்பால் மரணமடைந்தார்.

கிலாஃபத் இயக்கத்திலும் நாட்டு விடுதலைப் போரட்டத்திலும் பெரும் பங்கு கொண்ட டாக்டர் எம். ஏ. அன்சாரி வரலாற்றுப் புகழ் பெற்றவராவார்.

**அஜ்மீர்:** இது ராஜஸ்தானில் அமைந்துள்ள இரண்டாவது பெரிய நகரமாகும். இங்கு அடக்கமாகியுள்ள இறைஞானச் செல்வர் காஜா முயீனுத்தீன் ஷிஸ்தி (ரஹ்) அவர்களின் தர்கா புகழ்பெற்ற புனிதத் தலமாக விளங்குகிறது.

தர்காவின் உள்ளும் புறமும் அமைந்துள்ள வரலாற்றுப் புகழ்பெற்ற பள்ளி

களும் பூங்காவும் அலங்கார மண்டபமும் கண்ணைக் கவருவனவாகும். இங்குள்ள பள்ளிகளில் அக்பரும் ஷாஜஹானும் கட்டிய பள்ளிகள் குறிப்பிடத் தக்கனவாகும். ஜஹாங்கீர் உருவாக்கிய பூங்காவும் மண்டபமும் இங்குள்ளன.

இத் தர்காவில் ஆண்டிற்கொருமுறை விமரிசையாக நடைபெறும் உர்ஸைக் காண இந்தியாவெங்கணுமிருந்தும், பாகிஸ்தானிலிருந்தும் முஸ்லிம்கள் வருகின்றனர்.

**அஸர்:** ஐந்து வக்த் தொழுகை நேரங்களில் அஸர் நேரமும் ஒன்று. இது லுஹருக்கும் மக்ரிபுக்கும் இடைப்பட்ட தொழுகை நேரமாகும்.

'அஸர்' என்ற சொல் 'மனிதன் வாழும் காலம்' எனப் பொருள்படும். திருக்குர்ஆனின் 103வது அத்தியாயம் 'ஸூரத்துல் அஸர்' எனும் பெயரில் அமைந்துள்ளது. இது அஸர் நேரத்தின் சிறப்புக்குச் சான்றாகும். பகற் பொழுதின் இறுதிப் பகுதியாக அஸர் நேரம் அமைந்திருப்பதால், அது வாழ்க்கையின் இறுதிப்பகுதியைச் சுட்டிக்காட்டுவதாகவும் உள்ளது. வாழ்க்கை முழுவதும் இறைச் சிந்தனையில் கருத்தூன்றாது, மறுமைப் பேரின்பத்துக்குத் தம்மைத் தயார் படுத்திக் கொள்ளத் தவறியவர்கள் இந்த இறுதிப்பகுதியிலேனும் விழித்துக் கொள்ள தூண்டுவது அஸர் ஆகும்.

**அஸனா லெப்பைப் புலவர்:** இவர் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த இஸ்லாமியப் புலவராவார். இலங்கையில் இஸ்லாமியத் தமிழ் வளர்ச்சிக்கு முனைப்பாகத் தொண்டாற்றிய புலவர். இவர் 1878 வாக்கில் யாழ்ப்பாணத்தில் பிறந்தார். அங்குள்ள மெத்தாடிஸ்ட் கிருத்துவக் கல்லூரியில் பயின்றார்.

இவர் தம் தந்தையார் செய்து வந்த வணிகத் தொழிலை மேற்கொள்ளாது தமிழ் இலக்கியத்தின்பால் பேரார்வம் கொண்டார். தமிழ் இலக்கியங்களையும் இலக்கண நூல்களையும் கற்றுப் புலமை பெற்றார்.

இவருக்கு அக்காலத்தில் புகழ் பெற்று விளங்கிய நாகூர் குலாம் காதிறு நாவலரோடு நல்ல நட்பிருந்தது. நாவலர் அவர்களை யாழ்ப்பாணம் வரவழைத்து அவரது இஸ்லாமிய இலக்கியப் படைப்பான 'ஆரிபு நாயகப் புராணம்' என்ற நூலை அரங்கேற்றச் செய்தார்.

இவர் தமது தமிழ் புலமையையும், இஸ்லாமிய ஞானத்தையும் அடிப்படையாகக்கொண்டு பல நூல்களை இயற்றியுள்ளார். அவற்றுள் 'புகழ்ப் பாவணி', 'நவரத்தினத் திருப்புகழ்' போன்றவை முக்கிய இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் படைப்புகளாகும்.

அரபி மொழியிலும் மிகுந்த புலமை பெற்ற இவர் அரபியிலும் 'பைத்துகள்' யாத்துள்ளார். முஹ்யித்தீன் ஆண்டகையின் மெய்ஞ்ஞான வழியில் வாழ்ந்தவராவார். 1918ஆம் ஆண்டில் இவர் மறைந்தார்.

**ஆக்ரா:** உத்திரப் பிரதேச மாநிலத்தில் உள்ள புகழ்பெற்ற நகர் ஆக்ரா. இது யமுனை நதிக்கரையில் அமைந்துள்ளது. இயற்கை எழில் கொஞ்சும் சுற்றுச் சூழலையுடையது. இந்நகரை சிக்கந்தர் லோடி என்பவர் 1504ஆம் ஆண்டில் உருவாக்கித் தம் நகராக ஆக்கிக் கொண்டார்.

அக்பர் ஆட்சியின்போது இந்நகரின் பெயர் அக்பராபாத் என மாற்றப்பட்டது. இந்நகரைப்பெரிதும்விரும்பியஅக்பர் தம் இறுதிக் காலத்தில் இங்குதான்

வாழ்ந்தார். அவரது அடக்கத்தலம் இந்நகருக்கு வடமேற்கே ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள சிக்கந்தரா எனுமிடத்தில் உள்ளது.

ஆக்ரா கோட்டை புகழ்மிக்க ஒன்றாகும். இதை அக்பர் 1564-75 ஆண்டுகளில் கட்டினார். இதனுள் ஷாஜஹான் கட்டிய மசூதியும் ஜஹாங்கீர் கட்டிய அழகிய மஹலும் உள்ளன. இக்கோட்டையை அடுத்து அமைந்துள்ள தாஜ்மஹல் இஸ்லாமியக் கட்டடக் கலைக்கு இணையற்ற சான்றாக அமைந்துள்ளது. இதனைக் காண உலகெங்கும் இருந்து சுற்றுலாப் பயணிகள் வந்து செல்கின்றனர். நிலவு ஒளியில் இக்கட்டடம் காண மிக அழகாக இருக்கும்.

இங்கு ஒரு பல்கலைக் கழகமும் சில கல்லூரிகளும் உள்ளன. இந்நகர் ஆக்ரா மாவட்டத் தலைநகராகவும் அமைந்துள்ளது.

**ஆகாகான்:** இவர் ஷியா வகுப்புப் பிரிவினரான இஸ்மாயீலிகளின் இமாமாக இருந்தவர். பாத்திமா (ரலி) அவர்களின் வழித்தோன்றலாவார். இவர் முன்னோர்கள் ஈரானைச் சேர்ந்தவர்களாக இருந்தபோதிலும் ஆகாகான் பிறந்தது கராச்சியிலாகும். 1877 ஆம் ஆண்டு நவம்பர் இரண்டாம் நாள் பிறந்த இவர் தம் இளமைக் காலத்தை பம்பாயிலும் பூனேயிலுமாகக் கழித்தார்.

இவர் இளமையிலேயே ஆங்கிலம், அரபி, பார்ஸீ, ஃபிரெஞ்சு ஆகியமொழிகளில் நல்ல புலமை பெற்றார். புத்தகம் படிப்பதில் பேரார்வம் கொண்டவர்.

இவர் ஏட்டாவது வயதிலேயே தம் பிரிவான இஸ்மாயீலிகளின் இமாம் ஆனார். உலகெங்கும் வாழும் இஸ்மாயீலிப் பிரிவினர் இவரைத் தங்கள் இமாமாகப் போற்றிப் பின்பற்றினர்.

இவர் உலகெங்கும் சுற்றுப்பயணம் செய்வதிலேயே தம் வாழ்வின் பெரும் பகுதியைச் செலவிட்டார். இவரை மத்திய சட்டசபை உறுப்பினராகச் சில காலம் இந்திய வைஸ்ராய் நியமித்திருந்தார்.

இவர் முஸ்லிம்களுக்கெனத் தனித் தொகுதி வேண்டும் என ஆங்கில அரசுக்கு வேண்டுகோள் விடுத்தார். 1906-ஆம் ஆண்டு ஆங்கில அரசு முஸ்லிம்களுக்கென தனித் தொகுதி முறையை அறிமுகப்படுத்தியது. அதைத் தொடர்ந்து முஸ்லிம்களின் அரசியல், பொருளாதார, சமூக நலன்களைக் காக்கப் பேரமைப்பு ஒன்றை உருவாக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினார். அதன் விளைவாக நாடு தழுவிய முஸ்லிம் மாநாடு ஒன்று அதே ஆண்டில் டாக்காவில் நடைபெற்றது. அங்குதான் முஸ்லிம் லீக் பேரமைப்பு உருவாக்கப்பட்டது. அதன் முதல் தலைவராக ஆகாகானே தேர்ந்தெடுக்கப்பட்டார்.

முஸ்லிம்கள் கல்வித்துறையில் விரைந்து முன்னேற வேண்டும் என விரும்பினார். அதற்காக டெல்லியில் முஸ்லிம் கல்வி மாநாடு ஒன்று நடத்தப்பட்டது. அங்கு முஸ்லிம் இளைஞர்கள் உயர்கல்வி பெற முஸ்லிம்களுக்கெனத் தனிப் பல்கலைக்கழகம் அமைய வேண்டியதன் அவசியத்தைவலியுறுத்தினார். அதன் பயனாக அலீகர் கல்லூரி பல்கலைக் கழகமாக மாற்றப்பட்டது. அதன் வளர்ச்சியில் பேரார்வம் காட்டிய இவர் ஒரு இலட்சம் ரூபாய்களை நன்கொடையாக அளித்தார். முப்பது இலட்சம் ரூபாய்களை நன்கொடையாக வசூலித்தும் அளித்தார்.

ஆங்கில அரசு இவர் மீது மிகுந்த மதிப்பும் மரியாதையும் காட்டி வந்தது. அதற்கு அடையாளமாக இவருக்கு 'இளவரசர்' பட்டமும், அதற்குரிய, மரியாதைகளும் சிறப்புகளும் வழங்கப் பட்டன.

1937 ஆம் ஆண்டு கூடிய சர்வதேசச் சங்கத்திற்கு இவர் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். உலகெங்கும் நன்கு அறிமுகமானவராக விளங்கினார்.

இவர் 60 ஆண்டுகள் இமாமாகப் பணியாற்றியதைப் பாராட்டும் வகை யில் 1945ஆம் ஆண்டு இஸ்மாயீலிகள் இவரது எடைக்கு எடை வைரக்கற் களை வழங்கினர். அதன் அப்போ தைய மதிப்பு ஏழரைக்கோடி ரூபாய் களாகும். 1957ஆம் ஆண்டில் பிளாட் டினம் விழா நடைபெற்றது.

ஆங்கிலேயர்களால் அண்ணல் காந்தி யடிகள் சிறைவைக்கப்பட்டிருந்த புனே யிலுள்ள இவரது மாளிகையை நினை வுச் சின்னமாக அரசுக்கு விழங்கினார். உலகப் பெரும் பணக்காரர்களில் ஒருவ ரான இவர் 1957ஆம் ஆண்டு ஜூலை 12ஆம் நாள் காலமானர்.இவரது உடல் எகிப்தில் உள்ள அஸ்வான் எனுமிடத் தின் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது.

இவருக்குப்பின் இவர் பேரன் இமா மாக நியமிக்கப்பட்டார்.

**ஆதம் (அலை):** வல்ல அல்லாஹ்வி னால் படைக்கப்பட்ட முதல் மனிதர் ஆதம் (அலை) அவர்கள். அவரே முதல் நபியும் ஆவார். ஆதம் (அலை) அவர் களை அல்லாஹ் மண்ணைக்கொண்டு உருவாக்கினான். அதனுள் தன் ஆன் மாவைச் செலுத்தினான். அதன் மூலம் முதல் மனிதர் ஆதம் (அலை) உயிர் பெற்று எழுந்தார். இது நிகழ்ந்தது முஹர்ரம் பத்தாம் நாளிலாகும்.

தனியாக இருந்த ஆதம் (அலை) தன்னையொத்த வேறொரு மனித ரோடு உறவாடி மகிழ வழி இல்லையே என வருந்தினார். ஆதம் (அலை) உறங் கும்போது, அவர் அறியாமல் அவரது விலா எலும்பு ஒன்றை எடுத்து, அவர் களைப்போல் மனித உருவில் ஹவ்வா நாச்சியாரைப் படைத்தான். ஆணுரு வில் இருந்த ஆதம் (அலை) அவர்கட் கும் பெண்ணுருவில் இருந்த ஹவ்வா நாச்சியாருக்கும் இறைவனே திருமண மும் செய்வித்தான். அவர்களைச் சுவ னத்தில் இன்பமாக வாழச் செய்தான். அங்குள்ள தோட்டத்துக் கனிகளில் குறிப்பிட்ட ஒரு மரக்கனியைத் தவிர்த்து மற்ற மரக்கனிகளை உண்ண அனுமதித்தான். அவர்களும் அவ்வாறே செய்தனர்.

இறைவனுக்கு மாறு செய்ய விரும்பி னான் இப்லீஸ் எனும் சைத்தான். ஆண் டவன் விலக்கிய கனியைப்பறித்து உண் ணுமாறு இருவரையும் சாதுரியமாகத் தூண்டினான். அவன் வார்த்தைகளில் மயங்கிய இருவரும் விலக்கப்பட்ட மரத் தின் கனிகளை உண்டனர். அதுவரை அவர்களுக்கில்லாத நாண உணர்ச்சி அப்போது ஏற்பட்டது. விலக்கப்பட் டதை உண்டதினால் அல்லாஹ்வின் கோபத்திற்கு இருவரும் ஆளாயினர்.

இதனால் ஆதம் (அலை) விண்ணிலி ருந்து மண்ணுலகில் உள்ள சரந்தீவில் தூக்கி எறியப்பட்டனர். ஹவ்வா நாச் சியார் மண்ணுலகில் ஜித்தா எனுமிடத் தில் தூக்கி எறியப்பட்டார். இருவரும் வெவ்வேறு இடங்களில் இருந்தபடியே இறைவனிடம் தாங்கள் செய்த தவ றுக்கு மன்னிப்புக் கேட்டனர். பல நூறு ஆண்டுகளாகப் பாவமன்னிப்புக் கேட்டு மன்றாடி வந்தனர்.

அவர்களின் மன்றாட்டுக்கு இரங்கி அல்லாஹ் பன்னூறு ஆண்டுகட்குப்பின்

னர் அவர்கள் இருவரையும் அரஃபாத் பெருவெளியில் இணையச் செய்தான். அவர்கட்குப் பிள்ளைப்பேற்றை நல்கினான். அவர்களும் அவர் தம் சந்ததியும் தன்னை வணங்க ஜீப்ரீல் (அலை) அவர்களைக் கொண்டு மக்காவில் கஃபத்துல்லா இறையில்லத்தை அல்லாஹ் கட்டச் செய்தான்.

ஆதி பிதா ஆதம்(அலை) அவர்களும் ஆதித்தாய் ஹவ்வா நாச்சியாரும் ஆயிரம் ஆண்டுகள் இவ்வுலகில் கணவன் மனைவியராய் வாழ்ந்து நாற்பதாயிரம் பேர்களைச் சந்ததியினராகப் பெற்றனர். இச்சந்ததியினருக்கு இறை நெறியாகிய இஸ்லாமிய நெறியைப் புகட்ட முதல் நபியாக ஆதம்(அலை) அவர்களை வல்ல அல்லாஹ் நியமித்தான்.

**ஆதம் மலை :** இது ஸ்ரீலங்காவிலுள்ள உயரமான மலையாகும். இறைவனின் கட்டளைகட்கு மாறாக சைத்தானின் தூண்டுதலால் விலக்கப்பட்ட கனியைப் புசித்த ஆதம்(அலை) அவர்களை அல்லாஹ் சுவனத்தை விட்டும் வெளியேற்றினான். அதன் விளைவாக ஆதம் (அலை) மண்ணுலகில் சரந்தீப் எனும் இடத்திற்கு வந்து சேர்ந்ததாகக் கூறப்படுகிறது. அது ஸ்ரீலங்காவிலுள்ள மலைச்சிகரப் பகுதியாகும். அம்மலையே இன்று ஆதம் மலை என அழைக்கப்படுகிறது.

ஆதம் மண்ணுலகம் வந்த போது காலூன்றிய காற்சுவடு இன்றும் இம் மலையின் உச்சியில் காணப்படுகிறது. இக்காற்சுவட்டைக் காண பெருமானார் காலத்திற்கும் முன்பிருந்தே அரபியர்களும் பிறரும் இவ்விடத்திற்கு வந்து செல்வது வழக்கம்.

ஆனால் இக்காற் சுவட்டை 'ஸ்ரீபாதா' என்ற பெயரில் பௌத்தர்கள் அழைக்கிறார்கள். இச்சுவடு புத்தருடையது என்பது அவர்தம் நம்பிக்கை. இந்துக்கள் இதை 'சிவனடி பாதம்' எனக் கூறுகிறார்கள். கிருஸ்தவர்கள் கீழை நாடுகளுக்கு வந்த செயிண்ட் தாமஸின் திருப் பாதச் சுவடு எனக் கருதி வழிபடுகிறார்கள். ஆதம் மலையின் முகட்டில் அமைந்துள்ள சமவெளிப் பரப்பில் ஒரு பாறைமீது இச்சுவடு காணப்படுகிறது. இங்கு பௌத்த சமயத்தவர் சிறு கட்டிடம் ஒன்றைக்கட்டியுள்ளனர். உலகப் பயணிகளான மார்க்கோபோலோவும் இப்னு பதூதாவும் இவ்விடத்தைக் கண்டு அதைப்பற்றி தங்கள் நூல்களில் குறித்துள்ளனர்.

**ஆபிதீன் புலவர் :** இஸ்லாமியத் தமிழ் இசைப்பாடல்கள் இயற்றுவதில் வல்லவரான இவர் நாகூரைச் சேர்ந்தவராவார்.

இளமையிலே இசையோடு பாடுவதிலும் இசைக்கேற்பப் பாடல் இயற்றுவதிலும் பேரார்வமுடையவராக இருந்தார். பின்னர், பாடல் இயற்றுவதற்கு முறையான இலக்கண அறிவும் இலக்கியப் பயிற்சியும் அவசியம் என உணர்ந்தார். தமிழ் இலக்கணங்களை முறையாகக் கற்றுத் தேறினார். தாம் முயன்று போதிய இலக்கியப் பயிற்சியும் பெற்றார். அதன்பின் கற்றவர்களால் 'புலவர்' எனச் சிறப்போடு அழைக்கப்பட்டார்.

இவர் இசைப்பாடல் இயற்றினாலும் கூடப் பத்திரிகைப் பணியிலும் ஆர்வமுடையவராக இருந்தார். சிங்கப்பூரில் இருந்தபோது 'மலேயா நண்பன்' இதழில் பணியாற்றினார். இலங்கையில் இருந்தபோது அங்குள்ள பத்திரிகையிலும் பணியாற்றினார். இவர் நாடகத் துறையிலும் ஆர்வமுடையவராக இருந்தார்.

புலவர் ஆபிதீன் நல்ல இசைஞான முடையவராகவும் திகழ்ந்தார். இத னால் எளிதாகவும் விரைவாகவும் இஸ் லாமிய இசைப்பாடல்களை இவரால் இயற்ற முடிந்தது.

இவர் சுமார் நாலாயிரம் இஸ்லாமிய இசைப்பாடல்களை இயற்றியுள்ளார். வேறு சில தனிக் கவிதைகளும் எழுதி யுள்ளார்.

இவர் பாடல்கள் இஸ்லாமிய மார்க் கச் சிறப்புகளையும் நெறியின் உயர்வு களையும் விரித்துரைப்பனவாகும். பெருமானாரின் வாழ்வும் வாக்கும் இவர் இஸ்லாமியப் பாடல்களில் உயிர் மூச்சாக அமைந்துள்ளது. இவர் இயற் றிய இந்திய விடுதலை எழுச்சிப்பாடல் கள் என்றும் நினைவு கூரத்தக்கவை யாகும்.

இவர் இஸ்லாமிய இசைப்பாடல் களை இசைமுரசு நாகூர் ஹனீபா அவர் களும், இசைமணி யூசுப் அவர்களும் வேறு சில இஸ்லாமிய இசைவாணர் களும் நாடெங்கும் பாடி வருகின்றனர். பல இசைப்பாடல்கள் இசைத்தட்டு களாகவும் வெளிவந்துள்ளன.

இஸ்லாமியத் தமிழிசைக்குப் புலவர் ஆபிதீனின் பங்களிப்பு வரலாற்றுச் சிறப்புடையதாகும்.

**ஆம்பூர்:** முஸ்லிம்கள் பெரும்பான்மை யாக வாழும் ஊர்களில் ஆம்பூரும் ஒன் றாகும். இது வடார்க்காடு மாவட்டத் திலுள்ள நகரமாகும். இந்நகரின் மககள் தொகை அறுபத்தையாயிரம் ஆகும்.

ஆம்பூர் என்னும் பெயர் வந்ததற்குப் பல்வேறு காரணங்கள் கூறப்படுகின் றன. சிலர் சங்க இலக்கியத்தில் கூறப் படுகின்ற ஆமூர் என்பதே ஆம்பூர் என ஆகியது என்கின்றனர், வேறு சிலர் 'ஆண்டையூர்' என்பதே ஆம்பூராக மருவி வழங்குகிறது என்கின்றனர். பண்டைய சாசனங்களில் இது ஆண்மை யூர் எனவும் குறிக்கப்பட்டுள்ளது. உருது மொழியில் மாம்பழத்தைக் குறிக்கும் 'ஆம்' எனும் பெயரே நாளடைவில் ஆம்பூராக மாறியது எனவும் கூறுகின்ற னர். ஏனெனில் மாம்பழமும் மிகுதியும் விளையும் ஊர்களில் ஆம்பூரும் ஒன்றா கும்.

ஆம்பூர் மைசூருக்கு அருகே இருப்ப தாலும், பாலாற்றங்கரையில் அமைந் துள்ளதாலும்காலங்காலமாக ராணுவ முக்கியத்துவமுடைய நகராக இந்நகர் இருந்து வருகிறது. இந்நகரில் பல போர் கள் நடந்துள்ளதாக வரலாறு கூறுகி றது. திப்புசுல்தானும் ஆங்கிலேயர் களும் இங்குப்போரிட்டுள்ளனர்.

இந்நகருக்கு அண்ணல் காந்தியடிகள் மூன்று முறை வந்துள்ளாராம். அலீ சகோதரர்களும் இந்நகருக்கு வந்து சென்றுள்ளனர். நகரின் முக்கியப்பகுதி அலீ சகோதரர் பெயரால் அழைக்கப் படுகிறது.

இந்நகர் தோல் தொழிலுக்குப் பெயர் பெற்றதாகும்.

**ஆமினா:** அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை ஈன்றெடுக்கும் பேறு பெற்றவர். யத்ரிப் நகரைச் சேர்ந்த இவர் அப்துல்லாஹ் அவர்களை மணந் தார்.

அண்ணல் திருமேனி அவர்கள் இவர் தம் வயிற்றில் கருவுற்றிருக்கும்போதே தந்தை அப்துல்லாஹ் மறைவுற்றார்,

அண்ணலார் அவர்கள் பிறந்து ஆறு வயதாகும்போது அன்னை ஆமினா, குழந்தையை யத்ரிபுக்கு அழைத்துச் சென்று தந்தை அப்துல்லாஹ்வின்

அடக்கவிடத்தைக் காட்டினார். தம் உற்றார் உறவினர்களை யெல்லாம் தம் மகனுக்கு அறிமுகப்படுத்தி மகிழ்ந்தார்.

மீண்டும் தம் செல்வன் அண்ணலாரோடு மக்கா திரும்பும் வழியில் அன்னை ஆமினா திடீரென ஏற்பட்ட நோயின் கடுமை தாங்காது காலமானார்.

**ஆமீன்:** 'துஆ' எனும் இறைவேட்டலின்போது இறையருளை இறைஞ்சிக் கேட்கும் சொல் ஆகும். இதற்கு 'அவ்வாறே ஆகுக' என்பது பொருளாகும்.

இமாம் 'அல்ஹம்து ஸூராவை' ஓதும்போதும் இறைவனிடம் மனமுருகி துஆ கேட்கும்போதும் உடனிருப்பவர்கள் 'இறைவனே இவ்விறைஞ்சுதலை ஏற்பாயாக' எனும் வகையில் 'ஆமீன்' கூறுவர்.

''தொழும்போது இதை இமாம் ஓதி, ஆமின் கூறும்போது, நீங்களும் சேர்ந்து 'ஆமீன்' கூறுங்கள். ஏனெனில், அப்போது உறுதியாக வானவர்களும் 'ஆமீன்' கூறுகிறார்கள். அப்போது யாருடைய ஆமீன் குரல் வானவர்கள் கூறும் ஆமீன் குரலுடன் கலக்கிறதோ அவருடைய முந்திய பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன'' என அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

இமாம் ஸூரத்துல் ஃபாத்திஹா ஓதியதும் ஷாஃபி மத்ஹபைச் சார்ந்தவர்கள் சற்று உரத்த குரலிலும் ஹனபி மத்ஹபைச் சேர்ந்தவர்கள் வாயளவில் மெதுவாகவும் கூறுவது மரபாக இருந்து வருகிறது.

**ஆலிப் புலவர்:** இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களில் குறிப்பிடத்தக்கவர் ஆலிப் புலவர் ஆவார். இவர் முன்னோர்கள் அரபு நாட்டைச் சேர்ந்தவர்கள். அவர்கள் தொடக்கத்தில் கேரளாவில் வாழ்ந்து, பின் தமிழகம் வந்தனர்.

ஆலிப் புலவரின் இயற்பெயர் ஷைகு அலீ என்பதாகும். இதுவே நாளடைவில் மருவி ஆலி என்பதாயிற்று. இவருக்கு மலையாள மொழியும் தெரியும்.

ஆலிப் புலவரின் சொந்த ஊர் மங்கை நகர் என்று கூறப்படுகிறது. இதுவே திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள இன்றைய மேலச் செவ்வல் நகர் என்று சொல்லப்படுகிறது.

இவர் தம் ஊருக்கு அருகில் உள்ள நேசமாணிக்கத்தில் வாழ்ந்த மடாதிபதி ஒருவரிடம் முறையாகத் தமிழ்க் கல்வி கற்றதாகக் கூறப்படுகிறது.

மற்ற சமயத்தவர்களுக்கு உள்ளது போல் இஸ்லாமியத் தமிழர்களுக்கென தமிழில் இஸ்லாமிய இலக்கியப் படைப்புகள் ஏதுமில்லையே என ஏங்கினார். இலக்கியம் படிக்க வேண்டும் என்றால் பிற சமய இலக்கியங்களையே கற்க வேண்டியிருக்கிறதே என வருந்தினார். இந்நிலை மாறவேண்டும், மாற்றப்படவேண்டும் என உறுதி கொண்டார். இஸ்லாமியப் புத்திலக்கியம் ஒன்றைப் படைக்க முனைந்தார். அதற்கான கருவாகப் பெருமானாரின் விண்ணேற்றத்தைத் தேர்ந்தெடுத்துத் தமிழில் பாடல் இயற்றத் தொடங்கினார். பன்னிரண்டு படலங்களில் 743 செய்யுட்களை இயற்றி, அந்நூலுக்கு 'மிஃராஜ்மாலை' எனப் பெயரிட்டார்.

காப்பியத்தை எழுதிமுடித்த ஆலிப் புலவர் அதனை முறையாக அரங்கேற்ற விரும்பினார். இதற்காக கோட்டாறு சென்று தம் மாணவர் சிவலிங்கச் செட்டியார் வீட்டில் தங்கினார். இஸ்லாமியப் பெருமக்களைச் சந்தித்துத் தம் நோக்கத்தை விளக்கினார். இவரது விருப்பத்துக்குச் சரிவர யாரும் செவி சாய்க்கவில்லை. தம் ஆசிரியரின் மன வருத்தத்தைப் போக்க விரும்பினார் மாணவர் சிவலிங்கம் செட்டியார்.

அதன் விளைவாக அந்நகரின் பெருஞ் செல்வராக விளங்கிய பாவாடைச் செட்டியார் எனும் அந்தகரின் ஆதரவோடு நூலை அரங்கேற்ற ஏற்பாடு செய்தார். காவியத்தைக் கேட்ட புலவர்களும், பொதுமக்களும் பெருமகிழ்வடைந்தனர். ஆலிப் புலவருக்குச் செய்ய வேண்டிய மரியாதைகளைச் செய்து கௌரவித்தனர். அரங்கேற்ற நிகழ்ச்சியின் போது பெருமானார் தோற்றம் தர, அதைப் பார்த்த பாவாடைச்செட்டியாருக்கும்பார்வை மீண்டதாகக் கூறப்படுகிறது.

**ஆஸாத் அபுல்கலாம்:** இந்திய தேசியத் தலைவர்களில் மிக முக்கியமானவர் அபுல்கலாம் ஆஸாத் அவர்கள். இவர் முன்னோர்கள் இஸ்லாமிய அறிவும் மெய்ஞ்ஞான உணர்வும் மிகுந்தவர்களாக விளங்கியவர்கள். இறைநெறிக்கும் இஸ்லாமியப் பண்புக்கும் மாறாக யார் நடந்தாலும், அவர்களைத் தட்டிக்கேட்டுத் திருத்தும் மன இயல்புள்ளவர்கள். இவர் முன்னோருள் ஒருவரான ஷைகு ஜமாலுத்தீன் தெஹ்லவி என்பவர் அக்பரின் 'தீன் இலாஹி' எனும் புதிய சமயக் கொள்கையை எதிர்த்து நின்றவர். மற்றொரு மூதாதையரான ஷைகு முஹம்மத் என்பவர் ஜஹாங்கீர் முன்னிலையில் அவரை வணங்கும் வகையில் முதுகை வளைத்து குனிந்து வணக்கம் செய்ய மறுத்துச் சிறைத் தண்டனை பெற்றவர். ஆஸாத் அவர்களின் முன்னோர்களில் பலர் நீதிபதிகளாகவும் அமைச்சர்களாகவும் பணியாற்றிச் சிறப்புப் பெற்றவர்கள்.

அபுல்கலாம் ஆஸாத் அவர்களின் தந்தையார் பெயர் கைருத்தீன் என்பதாகும். இவர் இஸ்லாமிய அறிவு நிரம்பப் பெற்றவர்; மெய்ஞ்ஞானத்துறையில் பயிற்சி மிக்கவர். இவருக்கு இந்தியாவெங்கும் சீடர்கள் இருந்தனர்.

இந்தியாவில் முதல் விடுதலைப்போர் 1857இல் ஆரம்பித்தது. அந்தச் சூழ்நிலையில் இந்தியாவில் வாழ விரும்பாது அரேபியா நோக்கிச் சென்றார்.

மக்காவில் தங்கியிருந்தபோது மார்க்க ஞானச் செல்வர் ஒருவரின் மகளை மணமுடித்துகொண்டார். அத்தம்பதியர்க்குத் திருமகனாக 1888 ஆம் ஆண்டு நவம்பர் பதினொராம் நாள் ஆஸாத் பிறந்தார். பிறந்தபோது அவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் முஹிய்யுத்தீன் அஹ்மது என்பதாகும்.

ஷைகு கைருத்தீன் இந்தியாவிற்கு வந்து செல்வதுண்டு. இறுதியாக 1898 ஆம் ஆண்டு கல்கத்தா வந்து நிலையாகத் தங்கத் தொடங்கினார்; 1907இல் காலமானார்.

'கருவிலே திரு' என்ற பழமொழிக்கேற்ப குழந்தைப் பருவத்திலேயே புதிய புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்வதில் நாட்டமும் துடுப்பும்மிகுந்தவராக ஆஸாத் விளங்கினார். பத்து வயது நிறைவதற்கு முன்பாகவே திருமறை முழுமையும் மனப்பாடம் செய்தார். அரபி மொழிப்பயிற்சியும் இலக்கணப் புலமையும் ஏற்பட்டன. எழுத வேண்டும் என்ற வேட்கையும் சின்னஞ்சிறு பிஞ்சுப் பருவத்திலேயே உண்டாகிவிட்டது. இமாம் கஸ்ஸாலி (ரஹ்) வரலாற்றை பன்னிரண்டாவது வயதிலேயே எழுத முனைந்தார். பதினான்கு வயதாகும்போது அரபிக் கவிதைகள் இயற்றலானார். 21 வயது முடிவதற்குள் கெய்ரோவிலுள்ள அல் அஸ்ஹர் பல்கலைக் கழகத்தில் படித்துப்பட்டம் பெற்றார்.

எழுதுவதில் இருந்த ஆர்வம் இவரை பத்திரிகையாளராக மாற்றியது. இவர் பத்திரிகைகள் சிலவற்றைத் தொடங்கி நடத்தினார். அவை தொடர்ந்து வெளி

வரவில்லை. ஆயினும் 1912ஆம் ஆண்டில் இவர் தொடங்கிய 'அல் ஹிலால்' எனும் ஏட்டில் இவருக்குச் சரி எனப் பட்ட அரசியல், சமுதாயக் கருத்துக் களைத் துணிவுடன் வெளியிட்டார். பெரும் தலைவர்களாயினும் அவர்தம் தவறான வழி முறைகளை விமர்சனம் செய்யத் தயங்கவில்லை. ஆங்கிலேய ஆட்சியைக் கடுமையாக விமர்சனம் செய்யும் அதே நேரத்தில் ஸர் ஸையித் அஹ்மத்கான் போன்ற முஸ்லிம் தலைவர்களின் ஆங்கில ஆதரவுப் போக்கினைக் கடுமையாகச் சாடினார். இவரது காங்கிரஸ் ஆதரவுப் பிரச்சாரம் மக்களிடையே ஆதரவையும் ஆங்கிலேயர்களிடையே வெறுப்பையும் ஏற்படுத்தின. விரைவிலேயே பத்திரிகை வெளிவராமல் தடுத்ததோடு இவருக்குச் சிறை தண்டனையும் அளித்தனர்.

சிறைவாச காலத்தை நூல் படிப்பதிலும், திருக்குர்ஆனுக்கு விரிவுரை எழுதுவதிலும் செலவிட்டார். எதிர்பாரா வண்ணம் திருக்குர்ஆன் விரிவுரை எரிந்து போய்விட்டது. ஆயினும், விடுதலை அடைந்த பின்னர் அதை மீண்டும் எழுதி முடித்தார்.

காந்தியடிகள் தொடங்கிய ஒத்துழையாமை இயக்கத்தில் தீவிரப் பங்கு கொண்டார். ஆனால் ஆங்கில ஆட்சியினர் ஓராண்டுச் சிறை வாழ்வு தந்தனர். காங்கிரஸ் பேரியக்கத்தில் கருத்து வேறுபாட்டின் காரணமாகத் தலைவர்கள் பிளவுபட்டு நின்றபோது இவர் எந்த அணியையும் சேராது இரு பகுதியினருக்கும் இடையே இணைப்புப் பாலமாகத் திகழ்ந்தார். காங்கிரஸ் இயக்கத்திலிருந்து அலீ சகோதரர்களைத் தொடர்ந்து முஸ்லிம் தலைவர்கள் பலரும் காங்கிரசிலிருந்து வெளியேறினர். ஆனால் ஆஸாத் மட்டும் காங்கிரசிலேயே இருந்து பணியாற்றினார்.

1923ஆம் ஆண்டில் இவர் காங்கிரஸ் பேரியக்கத்தின் தலைவரானார். அப்போது இவருக்கு வயது 35 மட்டுமே. 1940லும் இவரே தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிவதை மிகக் கடுமையாக எதிர்த்தார். பாகிஸ்தான் பிரிந்த பின்னரும் மனம் வருத்தம் உடையவராகவே இருந்தார்.

விடுதலை பெற்ற இந்தியாவின் முதல் கல்வியமைச்சராகப் பணியாற்றினார். புதிய கல்வித்துறை வளர்ச்சிக்கானத் திட்டங்கள் பலவற்றைத் தீட்டிச்செயல் படுத்தினார்.

இவர் எழுவதிலும் பேசுவதிலும் நாட்டமுடையவராக விளங்கியது போன்றே நூல்களைப் படிப்பதிலும் பெரும் நாட்டமுடையவராக இருந்தார். வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் புதிய புதிய நூல்களைப் பெற்றுப் படிக்கத் தவறமாட்டார். ஆங்கில மொழியைத் தாமாகவேகற்றுப்புலமை பெற்றார். புகழ்பெற்ற ஆங்கில ஆசிரியர்களின் நூல்களைத் தேடிப் படிக்கத் தவறுவதே இல்லை. இவரது எழுத்திலும் பேச்சிலும் தாம் பெற்ற நூலறிவுத் திறனைத்திறம்பட வெளிப்படுத்துவார்.

இவர் தமது அரசியல் வாழ்வின் அடிப்படையில் பெற்ற பட்டறிவைக் கொண்டு 'இந்தியா சுதந்திரம் பெறுகிறது' என்ற தலைப்பில் ஒரு நூலை எழுதி வெளியிட்டார். அது விடுதலைப் போராட்டக் கால சூழ்நிலைகளையும் தலைவர்களின் போக்குகளையும் நடுவு நிலைமையில் ஆராயும் அரிய நூலாக விளங்குகிறது.

இந்தியச் சுதந்திர வானில் மின்னும் தாரகையாக விளங்கிய மாமேதை அபுல்கலாம் ஆஸாத் அவர்கள் 1958

ஆம் ஆண்டு பிப்ரவரி 23 ஆம் நாள் டில்லியில் காலமானார்.

**ஆஸூரா:** முஹர்ரம் மாதம் பத்தாம் நாள் ஆஸூரா நாளாக அனுசரிக்கப்படுகிறது.

அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மதீனா நகர் வருவதற்கு முன்பிருந்தே யூத சமயத்தினர் ஆஸூரா நாளை சிறப்புடைய நாளாகக் கருதி நோன்பிருந்து வந்தனர். பெருமானார் மதீனா நகர் வந்த பின்னர் யூதர்களின் ஆஸூரா நோன்பு பற்றி அறிந்தார். அந்நாளின் சிறப்பு பற்றி யூதர்களிடம் கேட்டார். அவர்கள் மூஸா (அலை) அவர்கள் பிர்அவ்ன் கொடுமையிலிருந்து விடுபட செங்கடல் பிளந்து வெளியேறியபோது அவர்களைத் துரத்திவந்த பிர்அவ்னும் அவன் படையினரும் செங்கடலுள் மூழ்கி மாண்டொழிந்தனர். இவ்வாறு இறைவன் தங்களைக் காத்தமைக்காக இறைவனுக்கு நன்றி கூறி மூஸா (அலை) அவர்கள் நோன்பிருந்தார். அதைப் பின்பற்றி அவர் வழியினராகிய யூதர்கள் நோன்பு நோற்றுவருவதாகக் கூறினர்.

இதைக் கேட்ட நாயகம் (ஸல்) அவர்கள் மூஸா (அலை) அவர்கட்கு மிக நெருக்கமானவர்களாக முஸ்லிம்கள் இருப்பதால் தாங்களும் ஆஸூரா நாளின்போது நோன்பு இருக்க வேண்டுமெனப் பணித்து நோன்பு நோற்றார். அதுவும் முஹர்ரம் ஒன்பதாம் நாளிலும் பத்தாம் நாளிலும் நோன்பு நோற்க வேண்டும் எனப் பணித்தார். ரமளான் நோன்புக்கு அடுத்தபடியாகச் சிறப்புமிகு நோன்பாக ஆஸூரா நோன்பு கருதப்படுகிறது. பத்தாம் நாள் எனப் பொருள்படும் வகையில் 'யவ்முல் ஆஸூரா' என அழைக்கப்படுகிறது. எனினும் முஹர்ரம் பத்தாம் நாளன்றே இறைவனின் திருவுளப்படி பத்து நிகழ்வுகள் நடைபெற்றதால் 'ஆஸூரா நாள்' என்றே அழைக்கப்படலாயிற்று என்பர்.

ஆஸூரா நோன்பின்போது ஏழை எளியவர்க்கு இயன்ற உதவிகள் அனைத்தும் செய்யவேண்டும். தரும சிந்தனையாளர்களாக மாறவேண்டும். அநாதைகளை அரவணைத்து வாழ்வுதர வேண்டும். தம் குடும்பநலனுக்காகத் தாராளமாகச் செலவு செய்யவேண்டும்.

'ஒருவர் ஆஸூரா அன்று தமக்கும் தம் குடும்பத்துக்கும் தாராளமாகச் செலவு செய்வாரேயாகில், அல்லாஹ் அவருக்கு அவ்வாண்டு முழுமையும் தாராளமாக வாரி வழங்குவான்' என்பது அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வாக்கமுதாகும்.

**இஃதிகாப்:** இச்சொல்லுக்குத் 'தங்கியிருத்தல்' என்பது பொருளாகும். இறையுணர்வோடு ஒருவர் பள்ளிவாசலில் தங்கியிருப்பதே 'இஃதிகாப்' என அழைக்கப்படுகிறது.

பள்ளியில் இஃதிகாப் இருக்க விரும்புவர் 'அல்லாஹ்வுக்காக இப்பள்ளியில் தங்கியிருக்க நாட்டங் கொண்டுள்ளேன்' என்ற நிய்யத்துடன் தங்குவதே இஃதிகாப் ஆகும். நஃபிலான இஃதிகாப் ஒருநாள் அல்லது ஒரு மணிநேரம் இருத்தலே போதும் என்றாலும், ரமளான் மாதத்தில் இறுதிப் பத்துநாட்கள் இருப்பது சிறப்பாகும். இஃது அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் வழிமுறையுமாகும்.

பள்ளியில் இஃதிகாப் இருக்கும்போது இல்லம் செல்லக்கூடாது. யாரோடும் உலகப்பேச்சுப் பேசக்கூடாது. தவிர்க்க முடியாக் கடமைகளைச் செய்ய (மலஜலம் கழிப்பது, ஒளுச் செய்வது போன்

றவை) பள்ளிக்கு வெளியே வர நேரிடி னும் விரைந்து பள்ளியினுள் சென்று விட வேண்டும். இல்லையெனில் இஃதி காப் முறிந்து விடும்.

இஃதிகாப் இருப்பவர் வாயை மூடிக் கொண்டு ஊமைபோல் இருத்தல் கூடாது. அவர் திருக்குர்ஆனை வாய் விட்டு ஓத வேண்டும். இறைவனிடம் துஆக் கேட்க வேண்டும். பாவ மன்னிப் புக் கேட்டு மன்றாட வேண்டும். இஸ் லாத்தின் மேன்மையை மற்றவர்க்கு எடுத்து கூறி விளக்கலாம். ஜும்ஆப் பள்ளியில் இஃதிகாப் இருப்பது சிறப்பு ஜும்ஆ தொழுகை இல்லாத பள்ளியில் இஃதிகாப் இருப்பவர், ஜும்ஆத்தொழு கைக்கு வெளியில் சென்று விரைவில் மீண்டும் திரும்பி விடவேண்டும்.

**இக்பால்** அல்லாமா முஹம்மது:- இந் தியத் துணைக் கண்டத்தின் மிகப் பெரும் கவிஞரும் மெய்ஞானியுமா வார் அல்லமா முஹம்மது இக்பால் அவர்கள். இவர் முன்னோர்கள் கஷ்மீ ரத்தைச் சேர்ந்த பிராமண வகுப்பினர் ஆவர்.

இவர் பஞ்சாப் மாநிலத்திலுள்ள ஸியால்கோட் எனும் ஊரில் 1877 ஆம் ஆண்டு நவம்பர் 11ஆம் தேதி பிறந் தார். இவர் தந்தையார் பெயர் ஷைகு நூர் முஹம்மது என்பதாகும். தாயார் பெயர் இமாம் பீ என்பதாகும்.

இக்பால் என்பதற்கு 'புகழுக்குரிய வர்' என்பது பொருளாகும். பெயருக் கேற்ப சின்னஞ்சிறு வயதிலேயே தம் அறிவு நுட்பத்தால் பலரும் பாராட்டும் படி நடந்து கொண்டார். வகுப்பில் இவரே எப்போதும் முதன்மையாக இருப்பார்.

இவா தம் பன்னிரண்டாவது வயதி லேயே கவிதை எழுதத் துவங்கினார். இவரிடம் இயல்பாகவே கவித்துவ உணர்வு பொங்கி நின்றது. இவர் தொடக்கத்தில் பஞ்சாப் மொழியி லேயே கவிதை எழுதலானார். ஆனால் இவரது கவிதையாற்றலைக் கண்ட இவ ருடைய உருது ஆசிரியர், இவர் உருது வில் கவிதை புனைய ஊக்கினார். அதற் கேற்ப இக்பாலும் உருது மொழியி லேயே கவிதைகளை எழுதலானார்.

இவர் தனிப்பட்ட முறையில் தம் கவி தைகளை எழுதி நண்பர்களிடம் படித் துக்காட்டி மகிழ்ந்து வந்தார். இவரது உருதுக் கவிதைகளின் யாப்பு நயத்தி லும், கருத்துச் செறிவிலும், உணர்ச்சி யோட்டத்திலும் உள்ளத்தைப் பறி கொடுத்தார் இவருடைய உயிர் நண் பர் ஸர் அப்துல் காதிர் என்பார். இவரை எப்படியும் உருதுக் கவியரங்கு களில் ஏற்றி இவரது கவிதையாற்றலை உலகறியச் செய்ய முயன்றார். மேடைக்கூச்சம் மிகுந்த இக்பால் முதல் முதலில் இதற்கு உடன்படவில்லை.என் றாலும் பிறகு தம் நண்பரின் பேரா வலை நிறைவேற்ற கவியரங்குகளில் பங்கேற்கலானார். இவரது கவிதைச் சிறப்பும் கவித்துவத் திறமையும் உலக றிய வெளிப்படலாயிற்று. கற்றறிந்த பலரும் பாராட்டி ஊக்குவித்தனர்.

இவர் உயர் கல்வி பெற லண்டன் சென்றார். அங்கே பல்வேறு உயர்தர நூல்களைக் கற்று, தம் அறிவை வெகு வாகப் பெருக்கிக் கொண்டார். இவர் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் பார் அட்-லா பட்டம் பெற்றார். அதன் பின் னர் ஜெர்மனியில் உள்ள மியூனிக் பல் கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றார். சிறிது காலம் லண்டன் பல் கலைக் கழகத்தில் அரபிப் பேராசிரிய ராகவும் பணியாற்றினார்.

சிறிது காலத்திற்குப்பின் லாகூர் திரும்பி வழக்கறிஞர் தொழிலை மேற் கொண்டார். இத்தொழிலில் பெரும் பொருள் திரட்ட இயலும் என்றாலும்,

குறைந்த வருவாயைப் பெற்று எளிய வாழ்வையே மேற்கொண்டு வாழ்ந்தார். வழக்கறிஞர் தொழிலை நேர்மையோடு செய்து வந்தார்.

வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டிருந்தாலும், கவிதைகள் புனைவதிலேயே அதிக நாட்டமுடையவராக இருந்தார். இவரது கவிதை மக்களால் மட்டுமல்லாது பல்வேறு நாட்டுத் தலைவர்களாலும் போற்றப்பட்டது.

இக்பால் தம் கவிதையை வெறும் இலக்கிய ரசனைக்காக எழுதவில்லை. மக்களிடையே உணர்ச்சியைத் தூண்டி, அறிவை வளர்ப்பதை நோக்கமாகக் கொண்டிருந்தது. தம் கவிதைகள் மக்களை விடுதலை வேட்கை மிக்கவர்களாக மாற்ற ஆற்றல்மிகு சாதனமாக இவர் கவிதைத் துறையைக் கையாண்டார். இவரது ''ஸாரே ஜஹா(ன்) ஸே அச்சா ஹிந்துஸ்தான் ஹமாரா'' என்ற பாடல் இந்தியாவெங்கும் உள்ள சுதந்திரப் போராட்ட வீரர்களால் பாடி முழக்கப்பட்டது. இப்பாடலின் தமிழ் வடிவமே பாரதியாரின் ''பாருக்குள்ளே நல்ல நாடு, எங்கள் பாரத நாடு'' என்ற பாடல்.

இக்பால் தம் கவிதை யாற்றலால் இந்திய மக்களிடையே அரசியல் விழிப்புணர்வை ஊட்டினாலும்இவர்அரசியல் போராட்டங்களில் தீவிரப் பங்கேற்கவில்லை. ஆயினும் 1921ஆம் ஆண்டு லண்டனில் நடந்த வட்ட மேஜை மாநாட்டிற்கு இவரும் அழைக்கப்பட்டார்.

எந்தச் சூழ்நிலையிலும் தம்மை ஓர் உயர்ந்த முஸ்லிமாகக் காட்டிக் கொள்ளவே விழைந்தார். தாம் ஒரு முஸ்லிமாகப் பிறந்ததற்காக மிகவும் பெருமைப்பட்டார்.

இவரும் தம் முன்னோர்களைப்போல் மெய்ஞ்ஞான வழியில் முனைப்புடன் வாழலானார். மெய்ஞ்ஞானச் செல்வர்கள் காஜா நிஜாமுத்தீன், கவிஞர்கள் அமீர் குஸ்ரு, மிர்ஸா காலிப் போன்றவர்களின் மீது நீங்காப் பற்றுக் கொண்டார்.

இவர் இஸ்லாமிய உணர்வோடு கவிதைகளைப் புனைந்தாலும், அவை மனித குலம் முழுமைக்குமான வாழ்வியல் உண்மைகளை உணர்த்துவனவாகவே இருந்தன. இவர் எண்ணத்தாலும் செயலாலும் ஓர் உண்மை முஸ்லிமாகவே வாழ்ந்தார். பாகிஸ்தான் பிரிவினையை ஆதரித்தாலும், இந்து முஸ்லிம் ஒற்றுமைக்குப் பெரிதும் உழைத்தார். இவர் கவிதைகள் தமிழ் உட்பட இந்திய மொழிகள் பலவற்றிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. அதுபோன்றே ஆங்கிலம், அரபி,ஃபிரெஞ்சு, ரஷ்யன் போன்ற மேனாட்டு மொழிகள் பலவற்றிலும் பெயர்க்கப்பட்டுள்ளன.

இவர் 1938ஆம் ஆண்டில் காலமானார். இவரை மாபெரும் உலக மகாகவியாக உலகம் போற்றிக்கொண்டுள்ளது.

**இத்தா:** கணவரை இழந்த பெண்களும் மணவிலக்குச் செய்யப்பட்ட பெண்களும் குறிப்பிட்ட காலம்வரை தனிமையில் இருப்பதற்கு 'இத்தா' என்று பெயர். இச்சொல்லுக்கு 'எண்ணிக்கை' என்பது பொருளாகும். இத்தா பற்றி திருமறையில் கூறப்பட்டுள்ளது.

இத்தாவின்போது கணவனை இழந்த மனைவி நான்கு மாதம் 10 நாட்கள் இத்தா இருக்க வேண்டும். மணவிலக்குப்பெற்ற பெண் மூன்று மாதங்கள் இத்தா இருக்கவேண்டும்.

இத்தா இருக்கும் பெண்கள் தங்களை அலங்காரம் செய்து கொள்ளக் கூடாது. உழைத்து உணவு தேடி உண்ணும் நிலையில் உள்ள பெண் இத்தா காலத்தில் வேலைக்குச்சென்று, இருட்டு முன் இல்லம் திரும்பி விடவேண்டும் என்பது நியதி.

**இந்தியா:** இந்தியா இன்று ஆசியாவின் தென் பகுதியில் அமைந்துள்ள நாடாயினும் நூஹ் (அலை) அவர்களின் பிரளய காலத்திற்கு முன்பு 'லெமூரியா' எனும் பெருங்கண்டமாக விளங்கியது. அதில் ஆஸ்திரேலியா, இலங்கைத் தீவுப் பகுதிகளெல்லாம் ஒன்றாக இணைந்திருந்தன.

இறைவன் படைத்த முதல்மனிதரான ஆதம் (அலை) சொர்க்கத்திலிருந்து இவ்வுலகுக்கு அனுப்பப்பட்டபோது இக்கண்டத்தின் நடுநாயகமாக இருந்த இலங்கைத் தீவின் ஆதம் மலையின் உச்சியிலேயே இறங்கியதாகக் கூறப்படுகிறது. ஆதம் (அலை) ஹவ்வா நாச்சியாரும் இல்லற வாழ்வு வாழ்ந்தது இந்தியப் பகுதியில்தான் என்பது மரபு வழிச் செய்தியாகும். இன்றும் கூட ராமேஸ்வரத்தில் ஆதம் (அலை) அவர்களின் புதல்வர்களான ஹாபீல், காபீல் ஆகியோரின் அடக்கவிடங்கள் உள்ளன. ஆதம் (அலை) அவர்களின் மற்றொரு மகனின் பெயரான ஷீத்(அலை) அவர்களின் பெயரிலிருந்தே சேது நாட்டிற்குப் பெயர் உண்டாயிற்று என்பர்.

நூஹ் (அலை) அவர்கள் காலத்தில் ஏற்பட்ட பிரளயத்திற்குப்பின்பு பெருங் கடற்கோள் ஏற்பட்டது. அப்போது நாடுகள் நீரேற்றத்தால் தனித்தனியாக ஆயின. அவ்வாறு ஏற்பட்டதே இந்திய நாட்டின் இன்றைய நிலப் பகுதி.

இந்தியாவுக்கு நீண்ட நெடுங்காலமாகவே வணிக நிமித்தம் அரபு நாட்டவர் வந்து செல்வது வழக்கம். அவர்கள் வணிகத்தின் பொருட்டு மேலைக் கடற்கரைப் பகுதிகளில் வந்திறங்குவது உண்டு. அப்பகுதிக்கு மலபார்' என்ற பெயர் அவர்களாலேயே ஏற்பட்டது. 'பர்' என்ற அரபுச் சொல்லுக்கு நாடு, கரை என்பது பொருளாகும். 'மலை நாடு' என்ற பொருளிலேயே 'மலபார்' என்ற பெயர் அமையலாயிற்று. ஒரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் ''இந்தியாவிலிருந்து வீசும் தௌஹீதின் நறுமணத்தை நான் நுகர்கிறேன்'' என்று கூறினார்கள்.

அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தோழரான தமீம் அன்சாரி (ரலி) அவர்கள் சென்னைக்கு அருகேயுள்ள கோவளத்தில் அடக்கமாகியுள்ளார். மற்றொரு தோழரான உக்காசா (ரலி) மஹ்மூது பந்தர் எனும் பரங்கிப் பேட்டையில் அடங்கியுள்ளாராம்.

வணிகத்தின் பொருட்டு அரபு முஸ்லிம்கள் மலபார் வழி வந்தது போன்று, அரசியல் பொருட்டு ஆட்சி பெற இந்தியாவின் வடமேற்குப்பகுதிகள் மூலம் முஸ்லிம்கள் ஆதிக்கம் பெற முனைந்தனர். இஃது 1000ஆம் ஆண்டு துவங்கி 1026ஆம் ஆண்டு வரை கஜினி மஹ்மூது கஜ்னவீ பதினேழு முறை இந்தியா மீது படையெடுத்துத் தம் ஆட்சியை டில்லிவரை நீட்டித்தார்.

அதன்பின் பல்வேறு பரம்பரைகளை சேர்ந்த முஸ்லிம் மன்னர்கள் இந்தியப் பகுதிகளை ஆண்டனர். அவுரங்கஸீப் ஆலம்கீர் இந்தியாவின் பெரும்பகுதியை ஆட்சி செய்தார். இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சி 800 ஆண்டுகட்குமேல் நடைபெற்றதாகக் கூறப்படுகிறது.

டில்லி மாநகரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிசெய்த இறுதி முகலாய மன்னர் பஹதூர்ஷா ஆவார். இவரிடமிருந்து 1857இல் ஆங்கிலேயர் ஆட்சி

யைக் கைப்பற்றினார். அத்துடன் முகலாயப் பேரரசு இந்தியாவில் முடிவடைந்தது.

வணிகத்திற்காக நீண்ட நெடுங் காலத்திற்கு முன்பிருந்தே அரபிகள் மேலைக் கடல் வழியாக இந்தியாவோடு, குறிப்பாகத் தென்னகத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர் என்பது நாம் அறிந்ததே. பெருமானார் காலம் முதலே இஸ்லாமியச் செய்திகளைப் பரப்பும் பொருட்டு முஸ்லிம்கள் வந்தனர்.

இந்தியாவிலேயே முதன் முதலில் கட்டப்பட்ட பள்ளிவாசல் கேரள மாநிலத்தில் உள்ள கொடுங்கல்லூர் எனுமிடத்தில் இன்றும் உள்ளது. இது கட்டப்பட்ட ஆண்டு 825 ஆகும். எனினும் இப்பள்ளிவாசல் கட்டப்பட்ட ஆண்டு 642 என்று கூறுவாறும் உண்டு. தென்னகத்தில் சமுதாய வாழ்வில் மட்டுமல்லாது ஆட்சித்துறையிலும் முஸ்லிம்கள் பேரங்கம் வகித்தனர். மொழி, இலக்கிய, கலை வளர்ச்சியிலும் பெரும் பங்கு கொண்டனர். மெய்ஞ்ஞான வளர்ச்சிக்கும் பெருந்துணை புரிந்துள்ளனர். துண்டுபட்டுக் கிடந்த இந்தியப் பகுதிகளை ஒருங்கிணைத்த பெருமை முஸ்லிம் ஆட்சியாளரையே சேரும்.

உலகில் அதிக எண்ணிக்கையில் முஸ்லிம்கள் வாழும் நாடுகளில் இந்தியா இரண்டாவது ஆகும். முதலாவது நாடு இந்தோனேசியாவாகும்

1947ஆம் ஆண்டு இந்தியா ஆங்கிலேயே ஆட்சியினரிடமிருந்து விடுதலை பெற்றபோது அதிக எண்ணிக்கையில் முஸ்லிம் வாழ்ந்த பகுதிகள் பாகிஸ்தான் எனும் தனி நாடாகப் பிரிந்தது. இன்றைய இந்தியாவின் 84 கோடி மக்களில் சுமார் 15 கோடிப்பேர் முஸ்லிம்கள். இந்துக்களுக்கு அடுத்தபடி அதிக எண்ணிக்கையினர் முஸ்லிம்கள் ஆவர்.

ஆசியாவின் தென்பகுதியில் அமைந்துள்ள தீபகற்ப நாடான இந்தியா உலகிலேயே மக்கள் தொகை மிகுந்துள்ள இரண்டாவது பெரிய நாடாகும். உலகின் ஏழாவது பெரிய நாடாகும். இந்தியாவின் வடக்கே இமயமலைத் தொடரும், தெற்கே இந்தியப் பெருங் கடலும், கிழக்கே வங்காள விரிகுடாவும், மேற்கே அரபிக்கடலும் எல்லைகளாக அமைந்துள்ளன.

வடக்குத் தெற்காக இந்தியாவின் நீளம் 3,214 கி.மீ. கிழக்கு மேற்காக 2,933 கி.மீ. இந்தியாவின் மொத்தப் பரப்பளவு 32,87,590 ச.கி.மீ. ஆகும். வங்காள விரிகுடாவில் அமைந்துள்ள அந்தமான், நிக்கோபார் தீவுகளும் அரபிக்கடலில் உள்ள இலட்சத்தீவுகளும் இந்தியாவின் பகுதிகளாகும்.

முகலாயர்கள் காலத்தில் கட்டப்பட்ட தாஜ்மஹல், ஆக்ரா கோட்டை, பத்ஹேப்பூர் சிக்ரியில் உள்ள அக்பர் அரண்மனை போன்றவை இந்தியக் கட்டிடக் கலைச் சிறப்புக்கு ஏற்ற சான்றுகளாகும்.

**இந்தோனேசியா:** உலகில் ஒரு சில நாடுகள் தீவுத் தொகுதிகளைக் கொண்டவை; அவற்றுள் ஒன்றுஇந்தோனேசியா இந்நாடு 13,677 தீவுகளைக் கொண்டுள்ளது. இதில் பல தீவுகளில் மனித நடமாட்டமே இல்லை. சில தீவுகளுக்குப் பெயர்கூட இல்லை. இந்நாடு ஆஸ்திரேலியாவுக்கு, இந்தியாவுக்குமிடையே கிழக்கு மேற்காக அமைந்துள்ளது.

இத்தீவுகளில் மலைகள் பல அமைந்துள்ளன. அவற்றுள் ஒரு சில எரிமலைகளாகும். சில அணைந்த எரிமலைகளாகும். காடுகளும், மலைகளும் நிறைந்த பகுதியாக இருப்பதால் இங்கு நிறைய மழை பெய்கிறது.

இந்நாட்டில் வாழும் மக்களில் பெரும்பான்மையினர் முஸ்லிம்கள் ஆவர். இங்குள்ள மக்கள் மலாய் மொழிச் சாயலில் உள்ள 'இந்தோனேசிய மொழி' பேசுகின்றனர். ஒரு காலத்தில் இங்கு இந்துமதம் பரவியிருந்தது. அவர்களின் கலைகளிலும் பழக்க வழக்கங்களிலும், அதன் சாயலை இன்றும் காண முடிகிறது. பௌத்த சமயமும் இங்குப் பரவியிருந்தது.

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு முதலே இங்கு இஸ்லாம் பரவலாயிற்று. இஸ்லாமிய மார்க்க ஞானச் செல்வர்களும் இறைஞானமிக்க மெய்ஞ்ஞானிகளும் அரேபியாவிலிருந்தும், இந்தியாவிலிருந்தும் இங்கு வந்து இஸ்லாமியப் பிரச்சாரம் செய்துள்ளனர்.

முதல் இஸ்லாமிய அரசு இந்நாட்டிலுள்ள சுமித்திரா தீவில் தொடங்கியது. பின் நாளடைவில் இந்தோனேசியா நாடு முழுவதும் முஸ்லிம்களின் ஆளுகையின் கீழ் வந்தது.

புகழ்பெற்ற இஸ்லாமிய உலகப்பயணியான இப்னு பதூதாவும் கடற்பயணியான மார்க்கோ போலோவும் இத்தீவுகளுக்கு வந்து சென்றுள்ளனர்.

இத்தீவுகளில் வாசனைப் பொருட்கள் பெருமளவில் விளைகின்றன. இவற்றை நாடி ஸ்பானியர்களும் ஆங்கிலேயர்களும் வந்தனர். இங்கு வந்த டச்சுக்காரர்கள் நாளடைவில் நாட்டையே அடிமைப் படுத்தினர். பதினாறாம் நூற்றாண்டிலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை ஆட்சி செய்த டச்சுக்காரர்களிடமிருந்து விடுதலை பெற, மக்கள் இருபதாம் நூற்றாண்டில் போராடினர். டாக்டர் சுகர்ணோ தலைமையில் நடைபெற்ற விடுதலைப் போராட்டம் இறுதி வெற்றி பெற்றது. இந்தோனேசியா 1945ஆம் ஆண்டு ஆகஸ்ட் 17ஆம் நாள் சுதந்திரக் குடியரசாகப் பிரகடனப் படுத்தப்பட்டது. ஆயினும் டச்சுக்காரர்கள் அதிகாரத்தை மக்களிடம் ஒப்படைக்க விரும்பாது, விடுதலைப் போராட்டத் தலைவர்களோடு மோதினர். 1949ஆம் ஆண்டில் தி ஹேகில் நடந்த வட்டமேசை மாநாட்டின் விளைவாக அதிகாரம் முழுவதையும் இந்தோனேசிய மக்களிடம் ஒப்படைக்க ஒப்பினர். 1955இல் முதல் தேர்தல் நடைபெற்றது.

**இப்ராஹீம் (அலை):** மிக முக்கிய நபிமார்களில் ஒருவராவார். இவருடைய பெயர் திருக்குர்ஆனில் 70 முறை குறிப்பிடப்படுவதிலிருந்து இவருடைய முக்கியத்துவம் புலனாகிறது. 'இப்ராஹீம்' எனும் பெயருக்கு 'அன்புள்ள தந்தை' என்பது பொருளாகும். நபிமார்களில் பெரும்பாலோர் இவர்வழித்தோன்றல்களே யாவர்.

இவர் தந்தை பெயர் ஆஸர். தாயார் பெயர் உஷா என்பதாகும். இவரது தந்தை சிலை செய்து விற்கும் பூசாரியும் ஆவார்.

தந்தை உருவாக்கும் சிலைகளை மைந்தர் இப்ராஹீம் விற்கச் செல்வதுண்டு. அப்போது அவர் தெருவில் 'எந்தவிதச் சக்தியும் ஆற்றலும் இல்லாத இச் சிலைகள் வேண்டுவார் உண்டா?' எனக் கூறிச் செல்வது வழக்கம்.

'ஒரே இறைவன்; உருவமில்லாதவன்' எனும் ஓரிறைக் கொள்கையில் மிகுந்த நம்பிக்கையுள்ளவர். இதனால் கடவுள் சிலைகள் பயனற்றவை என்பதை மக்களுக்கு விளக்கிச் சொல்லும் பெரும் பணியைச் செய்து வந்தார்.

ஒரு சமயம் ஊரிலுள்ள மக்களில் பெரும்பாலோர் விழாவொன்றில்

கலந்து கொள்ள நகருக்கு வெளியே சென்றிருந்தனர். அச்சமயத்தில் இப்ராஹீம் (அலை) கோயிலுக்குள் நுழைந்து அங்கிருந்த எழுபது சிலைகளை உடைத்து நொறுக்கினார். சிலை உடைக்கப் பயன்பட்ட சம்மட்டியை தங்கத்தால் உருவாக்கப்பட்டிருந்த சிலையின் தோளில் மாட்டிவிட்டு வெளியேறினார்.

ஊர்திரும்பிய மக்கள் கோயிலில் கடவுட் சிலைகள் சிதைக்கப்பட்டிருப்பதைக் கண்டு வெகுண்டனர். இதை இப்ராஹீமே செய்திருக்க முடியும் எனக் கருதி அவரிடம் கேட்டனர். உண்மையை அக்கடவுள் சிலைகளிடமே கேட்டுத் தெரிந்து கொள்ளும்படி கூறி விட்டார். இதனால் மக்கள் இவர் மீது சினமும், வெறுப்பும் கொண்டனர்.

தன்னையே கடவுளாக மக்கள் வணங்கிப் போற்ற வேண்டும் எனக் கட்டளை இட்டிருந்த மன்னன் நம்ரூதுக்கு இப்ராஹீம் (அலை) அவர்களின் செயல் மேலும் கோபத்தைத் தூண்டியது. அதன் விளைவாக இவரைக் கொன்றுவிட முடிவு செய்தான். அதற்காக இவரை நெருப்புக்குண்டத்தில் தூக்கிப் போட உத்திரவிட்டான். அவ்வாறே தண்டனையும் நிறைவேற்றப்பட்டது. ஆனால் நெருப்புக்குண்டம் இறையருளால் பூக்குவியலாக மாறியது. எவ்விதத் தீங்கும் இன்றி இப்ராஹீம் (அலை) அதனின்றும் வெளிப்பட்டார். ஆயினும், ஓரிறைக் கொள்கையை ஏற்றுக் கொள்ளாத மன்னன் இவரை நாடு கடத்தினான். இவர்களும் துணைவியார் ஸாராவுடன் மிஸ்ர் நாடு சென்றார். அங்கும் இவர் ஓரிறைக் கொள்கையைப் பிரச்சாரம் செய்தார். இதை ஏற்காத அந்நாட்டு மன்னர் ஸாரான் இவர்களை நாட்டைவிட்டு வெளியேறுமாறு ஆணையிட்டான்.. இவர் பலஸ்தீனம் வந்து தங்கினார். இவர்கட்குப் பிள்ளைப் பேறு இல்லாததால் ஸாரா அம்மையாரே ஹாஜரா என்னும் பெண்ணைத் தம் கணவருக்கு மணமுடித்து வைத்தார். ஜபரூன் எனுமிடத்தில் செல்வ வளத்தோடு இறைவேட்கை மிக்கவராக வாழ்ந்தார். தமக்குப் பிள்ளை இல்லையே என ஏங்கிய இப்ராஹீம் (அலை) இறைவனிடம் ஒரு மைந்தனை நல்குமாறு மன்றாடினார். இறையின் கருணையால் அன்னை ஹாஜராவுக்கு ஆண்மகவு பிறந்தது. இறைக்கட்டளைக்கிணங்க தாயையும், குழந்தையும் பள்ளத்தாக்கில் விட்டுவிட்டு சிரியா சென்றார். பின் ஆண்டுக்கொரு முறைவந்துதம் மைந்தரையும் மனைவியையும் கண்டுசெல்வதுவழக்கம். இறை ஆணைக்கேற்ப அங்கே சிதிலமடைந்திருந்த கஃபா இறையில்லத்தையும் தந்தை இப்ராஹீம் (அலை)மும் மகன் இஸ்மாயீல் (அலை)மும் இணைந்து கட்டி முடித்தனர். அதன்பின் 'ஹஜ்' கடமையை எவ்வாறு நிறைவேற்றுவது என்பதைக் கற்பித்துச் சென்றார்.

ஒரு நாள் இரவு தம் அன்பு மகன் இஸ்மாயீலை அறுத்து இறைவனுக்குப் பலியிடுவது போன்று கனவு கண்டார். இதே கனவு மூன்று நாளும் தொடர்ந்தது. இக்கனவை இறைக்கட்டளையாகவே ஏற்று, மைந்தனின் சம்மதத்தோடு கழுத்தை அறுக்க முனைந்தார். எவ்வளவு முயன்றும் கழுத்து அறுபடவில்லை. ஆத்திரத்தோடு கத்தியைப் பாறையொன்றின் மீது வீசியடித்தார். அப்போது ஜிப்ரீல்(அலை) ஓர் ஆட்டை நிறுத்தி அதை அறுத்துப் பலியிடுமாறு பணித்தார். அவரும் அவ்வாறே செய்தார். இந்த இறைத் தியாகத்தை நினைவுகூரும் பொருட்டே இன்றும் பக்ரீத் அன்று ஆடு, மாடு, ஒட்டகம் அறுத்துக் குர்பானி தரப்படுகிறது. ஆண்டுதோறும் ஹஜ் கடமையை இனிதே நிறைவேற்றி வந்த இவர்கள்

கும் 265ஆம் வயதில் வபாத்தானார்.

**இப்ராஹீம் லோடி:** டில்லியை ஆண்ட லோடிப் பரம்பரையைச் சேர்ந்தவர் இப்ராஹீம் லோடி. லோடி மன்னர்களிலேயே மிகவும் புகழ்பெற்ற மாமன்னர். இவர் சிக்கந்தர் லோடியின் மகனாவார்.

இப்ராஹீம் லோடி அரியணை ஏறிய போது, நாடு மிகுந்த செழிப்புடன் விளங்கியது. மக்கள் பொருளாதார வளத்தோடு வாழ்ந்தார்கள்.

இப்ராஹீம் லோடி இயல்பிலேயே கர்வம் மிக்கவராக இருந்தார். இதனால் தம் அதிகாரத்திற்கு உட்பட்ட சிற்றரசர்கள் தமக்கு அளவுக்கதிகமான மதிப்பு அளிக்க வேண்டுமெனக் கட்டாயப்படுத்தினார். தம் முன்னே கைகட்டி வாய்பொத்தி நிற்க வேண்டுமெனப் பணித்தார். இதனை ஏற்காதவர்களை அழித்தார். இதனால் வெறுப்புற்ற சிற்றரசர்களும், இவருடைய சிறிய தந்தை ஆலம்கானும் இவரை ஆட்சிப்பீடத்திலிருந்து அகற்ற முயன்றனர். அதன் ஒரு பகுதி முயற்சியாக பாபரைப் படையெடுத்து வருமாறு தூண்டினர். அவ்வாறே பாபரும் டில்லி மீது படையெடுத்து வந்தார். பானிபட் எனுமிடத்தில், பாபர் படைக்கும் இப்ராஹீம் லோடியின் படைக்குமிடையே கடும் போர் நடைபெற்றது. அப்போரில் இப்ராஹீம் லோடி கொல்லப்பட்டார். பாபர் டில்லி அரியணையைக் கைப்பற்றினார்.

மாபெரும் ஆட்சி மாற்றத்திற்கு இப்ராஹீம் லோடியின் அகம்பாவமும் கர்வமுமே காரணங்களாய் அமைந்தன.

**இப்னு பதூதா:** இவர் வரலாற்றுப் புகழ்பெற்ற மாபெரும் உலகப் பயணியாவார். 1304 ஆம் ஆண்டு பிப்ரவரி 24 ஆம் நாள் வட ஆப்பிரிக்காவில் உள்ள தான்ஜியர் எனும் ஊரில் பிறந்தார். இவரது இயற்பெயர் முஹம்மது இப்னு அப்துல்லாஹ் என்பதாகும்.

உலகப் புகழ்பெற்ற கப்பற் பயணி மார்கோ போலோவின் சமகாலத்தவர் ஆவார். அவர் மறைவுற்ற அடுத்த ஆண்டு இப்னு பதூதா அவரைப் பின்பற்றித் தம் உலகச் சுற்றுப்பயணத்தைத் தொடங்கினார். தம் பிறந்த ஊரான தான்ஜியரிலிருந்து 1325ஆம் ஆண்டு ஜூன் 14 ஆம் தேதி தம் பயணத்தை ஆரம்பித்தார். இவர் கடல் வழியாகவும், தரை மார்க்கமாகவும் சுமார் 75,000 மைல்கள் பயணம் செய்துள்ளார். இந்நெடுந் தொலைவுப் பயணம் இவருக்குமுன் பயணம் செய்தவர்களின் பயண தூரத்தையெல்லாம் விஞ்சுவதாகும்.

இவர் 60-க்கு மேற்பட்ட அரசர்களை நேரில் சந்தித்து அளவளாவி இருக்கிறார். நூற்றுக்கணக்கான முக்கிய மனிதர்களைக் கண்டு பேசி இருக்கிறார். இந்நெடும் பயணத்தில் தாம் கண்டவற்றையும், கேள்விப்பட்டவற்றையும் பற்றி நிறையக் குறிப்புகளை எழுதி வைத்துள்ளார். அக்குறிப்புகளில் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட மனிதர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இவர் நூல்கள் அரிய தகவல் களஞ்சியம் நூல்களாக அமைந்துள்ளன.

இவர் தம் நீண்ட பயணத்தின்போது இந்தியாவிற்கும் வந்துள்ளார். வட இந்தியாவில் வழக்கிலிருந்த சதி எனும் உடன் கட்டை ஏறும் நிகழ்ச்சியை நேரில் கண்டு, மேனாடுகளுக்கு முதன் முதல் தெரிவித்தவர் இவரேயாவார்.

இவர் இந்தியப் பயணம் மேற்கொண்டபோது டில்லியை முஹம்மது பின் துக்ளக் ஆட்சி செய்து வந்தார். இப்னு பதூதாவின் அறிவுத் திறனைக் கண்டு

மகிழ்ந்த முஹம்மது பின் துக்ளக் இவரைத் தம் அமைச்சராக ஆக்கிக் கொண்டார். சில ஆண்டுகள் காஜியாகவும் பணியாற்றி உள்ளார்.

இவர் தமிழகம் வந்து விரிவாகப் பயணம் செய்துள்ளார். இவர் தமிழகம் வந்தபோது மதுரை மண்டலத்தைச் சுல்தான் கியாஸுத்தீன் என்பவர் ஆண்டு வந்தார். அவர் விருந்தாளியாகவும் சில நாட்கள் இருந்துள்ளார். மதுரை, கீழக்கரை, நாகூர் போன்ற முக்கிய இடங்களில் தங்கி, தாம் கண்டவை கேட்டவையெல்லாம் நிரல்படத் தம் நூலில் விவரித்துள்ளார். அவை இன்று அரிய வரலாற்றுச் சான்றுகளாக விளங்குகின்றன.

தாம் உலகப் பயணம் தொடங்கி 24 ஆண்டுகட்குப்பின், 1349ஆம் ஆண்டு நவம்பர் 8இல் மொராக்கோ தலைநகரான பெஸ் நகரம் சென்றடைந்தார். மூன்றாண்டுகள் இடைவெளிக்குப்பின் மீண்டும் மேற்கு நோக்கித் தம் பயணத்தைத் தொடர்ந்தார். சஹாரா மற்றும் ஸ்பெயின் முதலான ஐரோப்பிய நாடுகளில் சுற்றிவிட்டு 1354ஆம் ஆண்டு மீண்டும் தம் தாயகம் திரும்பினார்.

இவர் தாம் எழுதி வைத்திருந்த குறிப்புகள் அனைத்தையும் தம் அரசரிடம் ஒப்படைத்து, அவற்றை நூல் வடிவில் வெளியிடுமாறு வேண்டினார். அவ்வாறு வெளிவந்த அந்தக் குறிப்புகள் பல்வேறு மொழிகளில் பெயர்க்கப்பட்டன.

தம் எஞ்சிய காலத்தை இஸ்லாமிய மார்க்கத் திருப்பணியில் கழிக்கலானார். நீண்டகாலம் காஜியாகப் பணியாற்றி 1377 ஆம் ஆண்டில் மொரோக்காவில் காலமானார்.

ஒரு குறிப்பிட்ட காலத்தின் ஒட்டு மொத்த உலகச் செய்திகளை இவருடைய உலகப் பயணக் குறிப்புகளே தந்து வருகின்றன என்றால் அது மிகையல்ல.

**இப்னு ஸீனா**: 'அவிசென்னா' என இன்றும் உலகம் போற்றிவரும் இப்னு ஸீனா ஆயிரம் ஆண்டு கட்கு முன்பு வாழ்ந்த மாபெரும் உலக மேதையாவார். இவர் அறிவியல் அறிஞரும் மருத்துவ மேதையும், தத்துவ வித்தகருமாவார்.

இப்னு ஸீனாவின் இயற் பெயர் ஹுஸைன் என்பதாகும். இவருக்கு இப்னு ஸீனா எனும் பெயர் எவ்வாறு ஏற்பட்டது எனத் தெரியவில்லை. இப்பெயரே இன்று மருவி 'அவிசென்னா' என ஆகியுள்ளது.

இப்னு ஸீனா 980ஆம் ஆண்டில் பல்க் பகுதியில் உள்ள அஃப்ஷனா எனும் ஊரில் பிறந்தார். இவர் தந்தை மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்தார். சின்னஞ்சிறு வயதிலேயே அறிவுக் கூர்மை மிக்கவராக இருந்தார். பத்து வயதை எட்டுவதற்கு முன்னரே திருக்குர்ஆன் முழுமையும் இவருக்கு மனப்பாடம். பதினைந்து வயதை முடிக்கும் போது அரபிமொழிஇலக்கியம், இசை, தத்துவம், இஸ்லாமியச் சட்டதிட்டங்கள் எல்லாவற்றிலும் தக்க புலமைபெற்றார். கணிதம், வானவியல், மருத்துவம் முதலான அறிவியல் துறைகளிலும் தேர்ச்சி மிக்கவரானார்.

மருத்துவத் துறையில் தனி ஈடுபாடுள்ளவராகத் திகழ்ந்தார். பதினெட்டு வயதிற்குள்ளாகவே மருத்துவப் பணியை மேற்கொள்ளலானார். நோயாளிகளின் நோய்களைக் கண்டறிவதிலும், தக்க மருந்துகள் மூலம் அவற்றைப் போக்குவதிலும் திறமை மிக்கவராக விளங்கினார். இயன்றவரை இலவசமாக சிகிச்சை அளிப்பதிலேயே மகிழ்ச்சி கொண்டார்.

நோயைக் குணப்படுத்துவதில் இவருக்கு இருந்த பேராற்றலைக் கண்டு வியந்த வயது முதிர்ந்த மருத்துவர்கள் கூட இவரிடம் மருத்துவம் பற்றிய ஐயப்பாடுகளைக் கேட்டுத் தெரிந்து கொள்வதில் ஆர்வம் காட்டினர். இப்னு ஸீனா மருத்துவம் பற்றி அவர்களிடையே நுட்பமாக விளக்கும்போது பேராசிரியர் ஒருவரிடம் பாடங்கேட்கும் மாணவர்களைப் போன்று அவர்கள் கேட்டுக் கொண்டிருப்பார்கள்.

இளமையிலேயே அறிவு வேட்கை மிக்கவராக விளங்கினார். பேரறிஞர்களின் தத்துவ மேதைளின் - அறிவியல் வல்லுநர்களின் நூல்களைத் தேடிப் பிடித்துப் படிப்பது இவர் வழக்கம். தாம் படிக்கும் நூல்களின் அடிப்படையில் தீவிரமாகச் சிந்திப்பதைத் தம் வழக்கமாகக் கொண்டிருந்தார். கணிதத் தந்தை யூக்ளிட், தத்துவமேதை அரிஸ்டாட்டில், தனிப் பெரும் சிந்தனையாளர் பிளேட்டோ போன்றவர்களின் நூற்களைத் திரும்பப் படிப்பதில் இவருக்கு ஆர்வம் அதிகமிருந்தது.

ஒரு சமயம் புகாரா மன்னர் நோய் வாய்ப்பட்டார். அரண்மனை மருத்துவர்கள் எவ்வளவோ முயன்றும் நோயைத் தீர்க்க முடியவில்லை. இறுதியில் இப்னு ஸீனா அழைத்து வரப்பட்டார். இப்னு ஸீனாவும் முனைப்புடன் சிகிச்சை அளித்தார். விரைவிலேயே மன்னரின் நோயும் தீர்ந்தது. இதன்மூலம் இவரது மருத்துவ ஆற்றல் நாடெங்கும் பரவியது. இவரால் நோயினின்றும் பிழைத்தெழுந்த மன்னர் இவரை அரண்மனையிலேயே இருக்க வைத்தார். அரசரின் அரிய நூலகத்தைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதியும் வழங்கினார். அந்நூலகத்தில் இருந்த மருத்துவ அறிவியல் நூல்கள் உட்பட அனைத்துத்துறை நூல்களையும் முனைப்புடன் கற்றுத் தேறினார். விரைவிலேயே புகாரா மன்னர் இவரைத் தம் நாட்டின் அமைச்சராகவும் ஆக்கிக் கொண்டார்.

இவரது மருத்துவப் புலமையையும் அறிவுத் தெளிவையும் அறிந்த மன்னர்கள் பலரும் இவரைத் தம் அவையில் வைத்துக் கொள்ள விரும்பினர். அவ்வகையில் இவர் குவாரிஸம் நாட்டு மன்னர் அல்மாமூன் அரசவையில் இடம் பெற்றார். அங்கு மற்றுமொரு இஸ்லாமிய மாமேதையான அல்பிரூனியும் இடம் பெற்றிருந்தார். அங்கு இவரைத் தம் அரசவையில் இருக்குமாறு செய்ய மஹ்மூது கஸ்னவி என்னும் மன்னர் மிகவும் விரும்பினார். ஆனால் சுதந்திர வேட்கை மிக்க இப்னு ஸீனா மன்னர்களின் கூண்டுக்கிளியாக இருக்க விரும்பாமல் சுதந்திரமாக வாழ விரும்பினார். அதற்கேற்பத் தம் வாழ்விடத்தை இவர் மாற்றிக் கொண்டே இருந்தார். இக்காலகட்டத்தில் இவர் மருத்துவ நூல்களை எழுதலானார். நாள்தோறும் ஐம்பது பக்கம் வீதம் எழுதினார். அந்த நூலே புகழ் பெற்ற 'ஷிஃபா' என்ற நூல்.

இவர் இஸ்பஹானில் இருந்தபோது அடிக்கடி அரசவையில் சொற்பொழிவு ஆற்றுவார். அவற்றின் அடிப்படையில் பிற்காலத்தில் உருவானதே அறிவியல் கலைக்களஞ்சியம்எனும்தொகுப்புநூல்.

தமது இறுதிக்காலத்தில் இஸ்பஹான் மன்னர் அலாவுத் தௌலாவின் அன்பான அரவணைப்பில் அமைதியாகவும் மகிழ்ச்சியாகவும் வாழ்ந்தார். இவர்தம் மன்னருடன் ஹமதான் செல்லும்போது நோய்வாய்ப்பட்டார். இவர் உதவியாளர்கள் இவர் கூறிய முறைப்படி இவருக்கு மருந்து தரத் தவறியதால் இவர் 1037 ஆம் ஆண்டில் காலமானார். இன்றும் ரஷ்யாவிலுள்ள அவரது அடக்கவிடமான ஹமதானுக்கு மக்கள்சென்று வருகின்றனர்.

அறிவியல் துறைவளர்ச்சிக்கு இவரது பங்களிப்பு அளவிடற்கரியதாகும். நவீன மருத்துவத்துறையின் தந்தையாக இக்கால மக்களால் பெரிதும் போற்றப்படுகிறார்.

இவர் பல புதிய கண்டுபிடிப்புகளை உலகுக்கு வழங்கிச் சென்றுள்ளார். அக்கண்டு பிடிப்புகளே இன்றையஅறிவியல் வளர்ச்சியின் அடித்தளமாகும்.

திரவப் பொருட்களைக் காய்ச்சி, ஆவியாக்கித் தூய்மைப்படுத்தும் முறையை முதன் முதலாகக் கண்டறிந்து கூறியவர் இவரே. கந்தகத் திராவகம், அல்கஹால் போன்றவற்றைத் தயாரிக்கும் முறையைக் கண்டறிந்தவரும் இவரே. தங்கம், வெள்ளியை மென்மைப் பொருளாக்கி மருந்துடன் கலந்து தந்து நோய் தீர்க்கும் வழிமுறையை அறிந்து கூறியவரும் இவரே. ஊசிமூலம் உடலில் மருந்தைச் செலுத்தி இரத்தத்துடன் கலக்கச் செய்து நோய் போக்கும் 'இன்ஜெக்ஷன்' முறையை முதன் முதலில் கண்டறிந்து கூறியவரும் இவரே. உடல் உறுப்பு மாற்றுச் சிகிச்சை முறைக்கு அன்றே அடித்தளம் அமைத்தவர் இப்னு ஸீனாவே ஆவார்.

மருந்து மூலம் அல்லாது மனோதத்துவ முறையிலும் நோயைப் போக்கமுடியும் என்பதை எழுதியதோடு மட்டுமல்லாது, செயல் பூர்வமாகவும் உலகுக்கு எண்பித்துக் காட்டியவரும் இவரே.

இவர் நூல்கள் பலவும் உலக மொழிகளில் பெயர்க்கப் பட்டுள்ளன.

இவரது ஆயிரமாவது ஆண்டு நிறைவை யுனெஸ்கோ போன்ற உலக நிறுவனங்கள் சிறப்பாகக் கொண்டாடின.

**இல்மு :** 'இல்மு' எனும் அரபிச் சொல்லுக்கு 'ஞானம்'என்பது பொருளாகும். இங்கு ஞானம் என்று குறிப்பிடப்படுவது இறை ஞான அறிவேயாகும். இத்தகைய அறிவை ஒருவன் எப்பாடுபட்டேனும் பெற முயலவேண்டும். 'சீனாவுக்குச் சென்றேனும் சீர் கல்வி பெறுக!'' என்பது நாயகத் திருவாக்காகும்.

இறைஞான அறிவைப்பெறுவது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் அந்த அறிவை வாழ்வில் நடைமுறைப் படுத்தி இறையருள் பெறுவதாகும். அதுவே 'இல்மு' ஆகும். ஒரு முஸ்லிமின் இருகண்கள் போன்றவை 'அமல்' எனும் இறைஞான அறிவு பெறுவதும், அதை 'அமல்' எனும் நடைமுறைப் படுத்துவதும் ஆகும்.

**இலட்சத் தீவுகள்:** இத்தீவுகள் கேரள மாநிலத்திற்கு மேற்கே அரபிக்கடலில் 200 முதல் 400 கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்துள்ளன. இவை இருபது தீவுகளின் தொகுப்பாகும். இத்தீவுகளில் சிலவற்றில் மட்டுமே மக்கள் வாழ்கின்றனர். இங்குள்ள மக்கள்அனைவரும் முஸ்லிம்களாவர். இலட்சத்தீவுகள் இந்திய அரசின் நேரடி நிர்வாகத்தில் உள்ளன.

இலட்சத்தீவுகளின் மொத்தப் பரப்பளவு 24 சதுரக் கிலோ மீட்டருக்கும் குறைவாகும். இங்குள்ள மக்கள் தொகை 25,000-க்கும் குறைவாகும்.

தொடக்கக் காலத்தில் இத்தீவில் இந்துக்களே வாழ்ந்து வந்தனர். அரபு நாட்டிலிருந்து இங்கு வந்த உபைதுல்லாஹ் எனும் மார்க்க ஞானச்செல்வரின் போதனையால் மக்கள் இஸ்லாத்தைத் தழுவினர்.

கேரள மன்னர்களின் ஆட்சியின் கீழ் நீண்ட காலம் இருந்த இத்தீவுகளின் ஒரு பகுதியை போர்ச்சுக்கீசியர் தம் ஆளுகையின் கீழ்க் கொண்டு வந்தனர். 1784 இல் அமீன் தீவுத் தொகுதிகள்

திப்பு சுல்தான் ஆட்சியின் கீழ் வந்தன. 1799 வாக்கில் இத்தீவுகள் கிழக்கிந்தியக் கம்பெனியால் கைப்பற்றப்பட்டன. இந்திய விடுதலைக்குப்பின் அவை இந்தியப் பகுதியாயின. 1956ஆம் ஆண்டு முதல் அவை இந்திய அரசின் நேரடி நிர்வாகத்தின் கீழ் வரலாயின.

இங்குள்ள மக்களில் பெரும்பான்மையினர் மலையாள மொழி பேசுகின்றனர். தென்கோடித் தீவுப் பகுதியில் வாழ்வோர் சிங்களமொழிச் சாயல் உள்ள 'மஹல்' மொழி பேசுகின்றனர்.

இங்கு நாற்புறமும் கடற்பகுதி சூழ்ந்துள்ளது. தீவுப்பகுதிகள் தென்னந்தோப்புகளால் நிறைந்துள்ளன. எனவே, இங்கு மீன்பிடி தொழிலும், தென்னைத் தொடர்பான தொழில்களும் நடைபெறுகின்றன.

இங்குள்ளோர் அரிசியையே முக்கிய உணவாகக் கொண்டுள்ளனர். கேரளாவிலிருந்து அரிசி வரவழைக்கப்படுகிறது. இங்கு சிறிய அளவில் நெல் பயிரிடப்படுகிறது.

இங்கு பள்ளிகள் பல உள்ளன. இங்கு மின்வசதி ஏற்பட்டிருந்தும், பெருந்தொழில்கள் ஏதும் உருவாகவில்லை. கேரளக் கடற்கரையிலிருந்து கப்பல் போக்குவரத்து நடைபெறுகிறது.

**இன்ஜீல்:** அல்லாஹ்வினால் இறைதூதர் ஈஸா (அலை) அவர்கட்கு வழங்கப்பட்ட வேதம் 'இன்ஜீல்' என்பதாகும். 'இன்ஜீல்' என்பதற்கு 'நற்செய்தி', 'நன்மாராயம்' என்றெல்லாம்பொருள் கூறப்படுகிறது. அதுவே, கிருஸ்தவர்களால் போற்றப்படும் 'பைபிள்' வேதமாகும். 'இன்ஜீல்' எனும் பெயரே ஆங்கிலத்தில் 'எவாஞ்சல்' என்று கூறப்படுகிறது, 'காஸ்பல்' என்ற வேறொரு பெயரும் இதற்கு உண்டு. இது பைபிளின் புதிய ஏற்பாட்டைக் குறிப்பதாகும்.

'இன்ஜீல்' எனும் சொல் திருக்குர்ஆனில் பன்னிரண்டு இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வேதம் தாவூது (அலை) அவர்கட்கு இறைவன் அருளிய 'ஸபூர்' வேதத்திற்கு 1200 ஆண்டுகளுக்குப் பின் இறைவனால் ஈஸா (அலை) அவர்கட்கு அருளப்பட்டது. ஆனால் இன்ஜீல் வேதத்திற்கும் இன்றைய பைபிளுக்கும் அதிகம் தொடர்பில்லை. இன்றைய பைபிள் நால்வரால் கூறப்பட்ட செய்திகளின் தொகுப்பு ஆகும். இதில் ஈஸா (அலை) அவர்களின் சீடர்களில் ஒருவரான பார்னபாஸ் எழுதிய சுவிசேஷம் ஒன்று உள்ளது. அது ஓரளவுக்கு இன்ஜீல் வேதத்தினை அடியொற்றி எழுதப்பட்டதாக உள்ளது. இதில் அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. ஆயினும் முழுமையான இன்ஜீல் வேதம் இன்று இல்லை என்ற கருத்தே அழுத்தமாக உள்ளது.

**இன்ஷா அல்லாஹ்:** இச்சொல்லுக்கு 'அல்லாஹ் நாடினால்' என்பது பொருளாகும். ஒருவர் மற்றவர்க்கு வாக்குறுதி தருமுன்'இன்ஷா அல்லாஹ்'என்று கூறி வாக்குறுதி அளித்தல் வேண்டும்.

உலகில் அனைத்துச் செயல்களும், இயக்கங்களும் இறைவன் நாட்டப்படியே நிகழ்கின்றன. மனித வாழ்வின் அனைத்துப் போக்குகளும் இறைக்கட்டளைப்படியே நடந்தேறுகின்றன. எனவே, இறைவன் நாடினால் மட்டுமே எதுவும் நிகழ்வுற முடியும். இந்த உணர்வை முழுமையாகப் பிரதிபலிப்பதே 'இன்ஷா அல்லாஹ்' என்ற சொற்றொடர்,

ஒருவர் மற்றவருக்கு வாக்குறுதி தரு முன் 'இன்ஷா அல்லாஹ்' எனக் குறிப்பிடுவதால் மனிதனின் பொறுப்பினும் இறைப்பொறுப்பு மிகுதியாகின்றது. இறையருளின் துணையோடு அவ் வாக்குறுதியை முனைந்து நிறைவேற்ற வேண்டிய கடப்பாடும் மனிதனுக்கு ஏற்பட்டு விடுகிறது.

'இன்ஷா அல்லாஹ்' என்று கூறுவதன் மூலம், ஒவ்வொரு முஸ்லிமும் அல்லாஹ் மீது தான் கொண்டுள்ள நம்பிக்கையை மேன்மேலும் உறுதிப்படுத்திக் கொள்ள வாய்ப்பேற்படுகிறது.

**இஜ்திமா :** 'இச்சொல்லுக்கு ஒன்றிணைதல்' அல்லது 'கூடுதல்' என்பது பொருளாகும். இஸ்லாமிய மார்க்கம் தொடர்பாக நடைபெறும் விளக்கவுரைக் கூட்டங்கள் இப்பெயரால் அழைக்கப்படுகின்றன. இஸ்லாமிய மார்க்க நெறிகளை நினைவூட்டி இஸ்லாத்தின்பால் அழைக்கும் அழைப்புப் பணியாளர்களாகிய 'தப்லீக்' இயக்கத்தினரின் கூட்டங்கள் இப்பெயராலேயே அழைக்கப் படுகின்றன.

**இஸ்மாயீல் (அலை) :** நபிமார்களுள் ஒருவரான இவர் நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் திருமகனாவார். இவர் தாயார் பெயர் ஹாஜரா என்பதாகும்.

இப்ராஹீம்(அலை) அவர்கட்கு 86 வயதானபோது இஸ்மாயீல்(அலை) அவர்கள் பிறந்தார். இவர் குழந்தையாக இருந்தபோது 'அஷ்முயீல்' எனப் பெயரிடப்பட்டார். இச்சிரியா மொழிப் பெயருக்கு 'இறைவேட்டலை ஏற்றவர்' என்பது பொருளாகும். இப்பெயரே 'இஸ்மாயீல்' என்பதாக வழங்கலாயிற்று.

இவர் ஒரு வயதை எட்டியபோது இவரையும் இவர் தாயாரையும் கஃபத்துல்லாஹ் அருகில் விட்டு விடுமாறு இறை ஆணை பிறந்தது. தந்தை இப்ராஹீம்(அலை) அவர்கள் அவ்வாணைக் கொப்ப குழந்தையையும், மனைவி ஹாஜராவையும் அங்கே அழைத்துச் சென்றுவிட்டு தாம் மட்டும் தனியே சிரியா திரும்பினார்.

தனிமையில் விடப்பட்ட அன்னையும் மகனும் கையிலிருந்த உணவை மூன்று நாட்கள் உண்டு கழித்தனர். கைவசம் இருந்த நீரும் தீர்ந்து விட்டது. குழந்தை இஸ்மாயீல் தாகத்தால் துடிப்பதைக் கண்டு அன்னை மனம் பதைபதைத்தது. நீர் தேடி ஸஃபா, மர்வா எனும் இரு குன்றுகளிடையே ஏழுமுறை நடந்தும் தொங்கோட்டமாக ஓடியும் நீர் தேடினார். தாக மிகுதியால் துடித்த குழந்தை தன் காலை தரை மீது அடித்து உதைத்தது. அப்போது உதைத்த இடத்திலிருந்து நீர் பீரிட்டு வெளி வந்தது. குழந்தையின் தாகமும் தீர்ந்தது. அதுவே ஜம்ஜம் நீரூற்று.

நீரூற்றின் காரணமாக ஹாஜரா அம்மையார் தம் அருமைக் குழந்தையுடன் அங்கேயே தங்கினார். விரைவிலேயே யமன் நாட்டிலிருந்த உறவினர்களும் அங்கு வந்து அவர்களுடன் சேர்ந்து வாழலாயினர்.

ஆண்டுக்கு ஒரு முறை தந்தை இப்ராஹீம் (அலை) அங்கு வந்து தம் மகனையும் மனைவியையும் கண்டு செல்வது வழக்கம். அவ்வாறு ஒருமுறை வந்த போது அருகில் கஃபா இறையில்லத்தைச் செப்பனிட இறையாணை பிறந்தது. இதை நிறைவேற்ற முனைந்த தந்தையும், தனயனும் கடுமையாக உழைத்தனர். சிதிலமடைந்திருந்த கஃபாவைச் செப்பனிட்டு முடித்தனர். அப்போது உலக மக்களை ஹஜ் செய்ய வருமாறு அழைக்கும்படி இப்

ராஹீம் (அலை) அவர்களுக்கு இறைவன் கட்டளையிட்டான். அதன் பின்னர்தான் 'ஹஜ்' தொடங்கிற்று.

அடுத்த ஆண்டு அங்கு வந்திருந்த இப்ராஹீம் (அலை) இறைவனுக்குத் தம் மகனைத் தம் கையால் அறுத்துப் பலியிடுவதுபோல் கனவு கண்டார். மூன்றுமுறை இதேபோல் கனவு கண்டதால், இது இறை ஆணை எனக் கொண்டு தன் மகனை அறுத்துப் பலியிட முனைந்தார். பலியிட மினா பள்ளத்தாக்குக்கு அழைத்துச்செல்லும் போது தம் மகனிடத்தில் இதைக் கூறினார். உடனே மகன் வருத்தம் சிறிதுமின்றி இறை ஆணையை நிறைவேற்றுமாறு வேண்டினார். அத்துடன் தம்மை அறுக்கும்போது தம் தந்தை மனம் கலங்காமலிருக்க, தம்மைக் குப்புறப் படுக்க வைத்து அறுக்குமாறு வேண்டினார். அத்துடன் விரைந்து அறுக்க வசதியாக, கத்தியால் அழுத்தி அறுக்குமாறும் கூறினார். தந்தையும் அவ்வாறே செய்தார். ஆனால் கத்தியின் கூர் மழுங்கியதே தவிர, அறுக்க இயலவில்லை. இறைவனின் கட்டளையை நிறைவேற்ற முடியவில்லையே என வருந்திக் கத்தியை வீசியெறிந்தார். அச்சமயத்தில் ஆட்டுடன் அங்கு வந்த ஜிப்ரீல் (அலை) ஆட்டை அறுத்துப் பலியிடுமாறு பணித்தார். அவ்வாறே இப்ராஹீம் (அலை) செய்தார். இறைக் கட்டளைக்காகத் தம் மகனையே பலியிடத் துணிந்த இப்ராஹீம் (அலை) அவர்களின் தியாகத்தை 'குர்பானி' தந்து இன்றும் உலகம் நினைவுகூர்கிறது.

மக்காவிலுள்ள கஃபா இறையில்லத்தை இப்ராஹீம் (அலை) அவர்களின் பிரதிநிதியாக இருந்து இஸ்மாயீல் (அலை) கவனித்துக் கொண்டார். வேட்டைக்கான கருவிகளைச் செய்து வாழ்ந்து வந்தார். வேட்டையாடுவதிலும், குதிரைச் சவாரி செய்வதிலும் வல்லவராக இருந்தார். இவருக்குப் பதினைந்து வயது ஆனபோது ஹாஜரா தாயார் காலமானார்.

இஸ்மாயீல் (அலை) முதலில் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார். அப்பெண் குடும்பப் பாங்கிற்கு ஏற்றவளாக இல்லை. தந்தையின் ஆலோசனைப்படி அவளை மணவிலக்கு செய்து, ஸையிதா எனும் வேறொரு பெண்ணை மணம் செய்து கொண்டார்.

இஸ்மாயீல் (அலை) அவர்களும் இறைத்தூதராக, இறை ஆணைப்படி இறை நெறிக்கு மாறாக நடந்த எகிப்து, யமன் நாட்டு மக்களைத் திருத்தச் சென்றார். அதில் அவர் முழு வெற்றி பெற முடியவில்லை. தம் தந்தையாரின் மறைவுக்குப் பின் நாற்பத்தேழு ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்து 'ஓர் இறை' தத்துவத்தை மக்களிடையே போதித்து வந்தார். இவர் தம்முடைய 137ஆம் வயதில் காலமானார். இவரது உடல் இவர் தாயாரின் கப்ருக்கு அருகிலேயே அடக்கம் செய்யப்பட்டது.

இவருடைய பன்னிரண்டு பிள்ளைகளில் கிதார் என்பவர் மக்காவிலேயே தங்கி கஃபா இறையில்லப் பணியை மேற்கொண்டு வந்தார். நபிகள் பெருமானார் இஸ்மாயீல் (அலை) அவர்களின் வழித்தோன்றல் ஆவார்கள்.

**இஸ்ராஃபீல் (அலை):** நாற்பெரும் வானவர்களில் இவரும் ஒருவர். இயக்கப் பணிகளுக்குப் பொறுப்பான நான்கு வானவர்களில் இவரும் ஒருவர். இவர் காற்றுக்கு அதிபதி யாவார். இவர் ஸூர் ஊதிய பின்பே உலகம்

அழியும். இறுதித் தீர்ப்பு நாளின்போது இவர் ஸூர் ஊதிய பின்பே மரித்தோர் உயிர் பெற்று எழுவர். இறை விசாரணைக்கு உட்படுவர். தாம் செய்த நன்மை தீமைகளுக்கேற்ப தண்டனை பெறுவர் என்பது நியதி.

**இஸ்ராயீல் (அலை) :** நான்கு முக்கிய வானவர்களில் இஸ்ராயீல் (அலை) ஒருவர் ஆவர். இவரது பணி இறைக் கட்டளைப்படி மனிதனின் உயிரைக் கைப்பற்றுவதாகும்.

இறைவன் ஆதம் (அலை) அவர்களைப் படைப்பதற்கு மண் எடுத்து வருமாறு முதலில் ஜிப்ரீல் (அலை)அவர்களையும், அடுத்து மீக்காயில் (அலை) அவர்களையும் பணித்தான். அவர்களும் அவ்வாறே மண் அள்ளச் சென்றனர். ஆனால் மண் 'இறைவன்மீது ஆணை மண் அள்ள வேண்டாம்' என அலறித் துடித்தது. மனமிரங்கிய அவர்கள் மண் அள்ளாமலே சென்றனர். பின் மண் அள்ளி வர இறைவன் இஸ்ராயீல் (அலை) அவர்களைப் பணித்தான். மண் முன்பு போலவே தன்னை அள்ளும்போது அலறித் துடித்தது. அள்ள வேண்டாம் என மன்றாடி வேண்டியது. ஆனால் மண்ணின் வேதனைக்குச் செவி சாய்ப்பதைவிட, இறைக்கட்டளைக்கு அடிபணிந்து நிறைவேற்றுவதே சிறந்தது எனக் கருதி மண் அள்ளிச் சென்றார். மண்ணிமீது ஈவு, இரக்கம் காட்டாது செயல்பட்ட இஸ்ராயீல் (அலை) மனப் போக்கின் படி அல்லாஹ் ஆதம் (அலை) அவர்களின் சந்ததிகளின் உயிரைப் பறித்துச்செல்லும் பணியை இவரிடம் ஒப்படைத்தான்.

**இஸ்ரேல் :** இது 1948ஆம் ஆண்டு ஐக்கிய நாடுகள் சபையினால் உருவாக்கப்பட்டயூத நாடாகும். இந்நாடு பலஸ்தீனில் அமைந்துள்ளது. இதன் வடக்கே லெபனானும் சிரியாவும் கிழக்கில் ஜோர்டானும் தெற்கில் எகிப்தும் மேற்கில் மத்தியத்தரைக் கடலும் எல்லைகளாக அமைந்துள்ளன. 1967 ஆம் ஆண்டில் ஜெரூசலத்தின் சிலப் பகுதிகளைக் கைப்பற்றிக் கொண்டுள்ளது. இந்நாட்டின் மக்கள் தொகை மூன்றரை இலட்சமாகும். மக்கள்தொகையில் 85 சதவிகிதத்தினர் யூதர்கள், 11 சதவிகிதத்தினர் முஸ்லிம்கள், 3 சதவிகிதத்தினர் கிறிஸ்தவர்கள், ஒரு சதவிகிதத்தினர் துருஸ்கள்.

இரண்டாம் உலகப் போரின் போது ஹிட்லரால் பெருங் கொடுமைக்கு யூதர்கள் ஆளாயினர். போருக்குப் பின் தங்களுக்கென தனி நாடு அமைக்க விரும்பினர். அதனால் ஐரோப்பிய நாடுகளில் வாழ்ந்த யூதர்களும் மத்தியத் தரைக் கடல் நாடுகளில் வாழ்ந்த யூதர்களும் பலஸ்தீன மக்களுக்குச் சொந்தமான பகுதியை ஆக்கிரமித்து, இஸ்ரேல் நாட்டை ஏற்படுத்திக் கொண்டார்கள். பாதிக்கப்பட்ட பலஸ்தீன மக்கள் யூதர்களிடமிருந்து தங்கள் பகுதிகளை மீட்க யாஸர் அரஃபாத் என்பாரின் தலைமையில் போராடி வருகின்றனர்.

இந்நாட்டில் பொட்டாஷ், ஜிப்சம், பாஸ்பேட், செம்பு போன்ற உலோக வகைகள் கிடைக்கின்றன. இங்கு சாக் கடல் எனும் பகுதியிலுள்ள நீரிலிருந்து மெக்னீசியம் தயாரிக்கப்படுகிறது. நெக்கோ எனுமிடத்தில் பெட்ரோல் கிடைக்கிறது. இயற்கை வாய்வும் கிடைக்கிறது. நவீன முறை விவசாயமும் இங்குச் செழிப்பாக நடைபெறுகிறது. எலுமிச்சை பெரும் அளவில் பயிரிடப்படுகிறது.

இந்நாடு பாலவனப் பகுதியாக அமைந்திருப்பதால் மழை குறைவு, எனவே, விஞ்ஞான முறையில் செயற்கை மழை பெய்விக்கப் படுகிறது.

கடல் நீரைச் சுத்தப்படுத்தி குடிநீராகப் பயன்படுத்துகிறார்கள். ஜோர்டான் நதி நீரும் விவசாயத்திற்குப் பயன்படுகிறது.

தொழில் துறை வளர்ச்சியில் இந்நாடு விரைந்து முன்னேறி வருகிறது. ஆயுத உற்பத்தி பெருமளவில் செய்யப்படுகிறது. வைரத் தொழிலில் இந்நாடு முன்னணி வகிக்கிறது.

இந்நாடு கல்வித்துறையில் முன்னேற்றமடைந்துள்ளது. அனைவருக்கும் கட்டாயக் கல்வி கற்பிக்கப்படுகிறது, ஹீப்ரு மொழியே அரசு மொழியாகவும் பயிற்சி மொழியாகவும் அமைந்துள்ளது. அரபி மொழியும் அரசு மொழியாக அங்கீகரிக்கப் பட்டுள்ளது. இது ஒரு ஜன நாயகக் குடியரசாகும். ஜெரூசலம் இந்நாட்டின் தலைநகராகும்.

**இஸ்லாம் :** இறைநெறியில் மனிதர்கள் வாழ இறைவன் வகுத்தளித்த மார்க்கம் இஸ்லாம் ஆகும். இஸ்லாம் என்ற அரபுச் சொல்லுக்கு 'அடிபணிதல்', 'சாந்தி' 'ஈடேற்றம் பெறச் செய்வது' எனப் பல பொருள்கள் உண்டு. இறைவனுக்கு முழுமையாக அடிபணிந்து, அமைதியாக வாழ்ந்து, இம்மை மறுமைகளில் ஈடேற்றம் பெற மனிதனுக்கு வழிகாட்டும் இறைநெறியே இஸ்லாம்.

இஸ்லாமிய நெறி நபிகள் நாயகம் (ஸல்) அவர்களால் உருவாக்கப்பட்ட மார்க்கம் அன்று. முதல் மனிதரும், முதல் நபியுமான ஆதமுக்கு இறைவன் நல்கிய நன்மார்க்கமே இஸ்லாம். இஸ்லாமிய நெறியினின்றும் மக்கள் வழி தவறும் போதெல்லாம் இறைவன் தன் நபிமார்கள் மூலம் இஸ்லாமிய நெறியைப் போதித்து நல் வழிப்படுத்துவான். இறுதிநபியாகிய முகம்மது நபி (ஸல்) அவர்களால் இஸ்லாமிய நெறி முழுமைப் படுத்தப் பட்டது.

இஸ்லாமிய நெறி ஐம்பெரும் அடிப்படைகளைக் கொண்டதாகும். முதலாவதாக அமைந்திருப்பது ஈமான் எனும் கலிமா. 'லா இலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்' 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை; முஹம்மது நபி அல்லாஹ்வின் திருத் தூதர் ஆவார்' என்பதாகும்.

அல்லாஹ்வை ஒரு நாளைக்கு ஐந்து முறை தொழுது வணங்க வேண்டும். வைகறையிலிருந்து இரவு படுக்கைக்குச் செல்லும் வரை ஐந்து வேளை தொழுகை நடத்த வேண்டும். ரமளான் மாதம் முழுவதும் 30 நாட்கள் நோன்பு இருக்க வேண்டும். பகல் முழுவதும் உண்ணாமலும் பருகாமலும் நோன்பு நோற்க வேண்டும். ஒரு முஸ்லிம் தன் சொத்திலிருந்து நாற்பதில் ஒரு பங்கை ஏழை எளியவர்களுக்குத் தானமாகத் தரவேண்டும். இதுவே 'ஜகாத்' எனப்படுவது, ஐந்தாவதாக அமைந்திருப்பது 'ஹஜ்' கடமையாகும். வசதி படைத்த ஒவ்வொரு முஸ்லிமும் தன் வாழ்நாளில் ஒரு முறையேனும் மக்காவிலுள்ள கஃபா இறையில்லம் சென்று ஹஜ் செய்ய வேண்டும்.

இஸ்லாமிய நெறிகளை இறைமறையாகிய திருக்குர்ஆனும், ஹதீஸும் எடுத்துக் கூறுகின்றன.

**இஸ்ஹாக் (அலை) :** இவர் இப்ராஹீம்(அலை) அவர்களின் இரண்டாம் மகன் ஆவார். தாயார் ஸாரா அம்மையார். இவர் உருவில் தம் தந்தையாரைப் போலவே இருந்தார்.

இவர் முதன் முறையாகத் தம் தந்தையாரோடு மக்காவிலுள்ள கஃபா இறையில்லம் நோக்கி ஹஜ் சென்றார்.

அப்போதுதான் தம் சகோதரர் இஸ் மாயீல் (அலை) அவர்களை முதன் முறையாகக் கண்டார். அதன்பின் ஆண்டுதோறும் ஹஜ் சென்று வந்தார்

இவர் தம் தந்தையாரின் ஆணைக் கிணங்க கன்ஆன் எனும் நாடு சென்று ஓர் இறைக் கொள்கையைப் பிரச்சாரம் செய்தார். அங்கேயே திருமணமும் செய்துகொண்டார். யாகூஃப் (அலை) இவரது திருக்குமாரர் ஆவர். இஸ்ஹாக் (அலை) தம் 180 வது வயதில் காலமானார்.

**இஹ்ராம் :** ஹஜ் அல்லது உம்ரா செய்யுமுன் அணியும் உடை இஹ்ராம் உடை எனப்படும். இது தைக்கப்படா இரு தூய துகில்களாகும். ஒரு துண்டை இடுப்பில் அணிவர். மற்றொரு துண்டை மேல் பகுதியில் போர்த்திக் கொள்வர். இஹ்ராம் உடையை கஃபாவிற்குக் குறிப்பிட்ட தூரத்திற்கு அப்பாலிருந்து அணிய வேண்டும்.

இஹ்ராம் உடை அணியும்போது கிப் லாவை நோக்கி இரண்டு ரக்அத் தொழ வேண்டும். பின் ஹஜ்ஜுக்கு என்றோ அல்லது உம்ராவுக்கு என்றோ ஹஜ் ஜுக்கும் உம்ராவுக்கும் என்றோ நிய்யத்துச்செய்து கொண்டு உம்ரா உடையை அணிய வேண்டும். அப் போது, தாம் மேற்கொண்டுள்ள புனிதப் பயணத்தை எளிதாக்குமாறு அல்லாஹ்விடம் துஆச் செய்ய வேண் டும். அதன்பின் தல்பியா ஓதி பெரு மானார் (ஸல்) மீது ஸலவாத்துச் சொல்ல வேண்டும். பெண்கள் தங்கள் தலையை மூடி, தங்கள் உடைகளுக்கு மேலாகவே இஹ்ராம் உடையை அணிந்து கொள்ள வேண்டும். ஆண் களைப் போன்றே தொழுகையும் நிய் யத்தும் செய்து கொள்ள வேண்டும்.

சிறுவர்களுக்கும் குழந்தைகளுக்கும் தைக்கப்படா இரு துண்டுத் துணிகளை இஹ்ராம் உடையாக அணிவிக்க வேண் டும். குழந்தைகளைத் தோளில் தூக்கி வைத்துக்கொண்டு ஹஜ் அல்லது உம் ராவுக்கான கடமைகளை நிறைவேற்ற லாம்.

**ஈத் :** இஸ்லாமியப் பெருநாட் களைக் குறிக்கும் அரபிச் சொல் ஆகும். இதற்கு 'திரும்பத் திரும்ப வருதல்' என்பது பொருளாகும். இப்பண்டிகைப் பெருநாட்கள் ஆண்டுதோறும்திரும்பத் திரும்ப வருவதால் இப்பெயர் பெற் றது என்பர். இஸ்லாமியப் பெருநாட் களில் ஈதுல் பித்ர், ஈதுல் அள்ஹா ஆகிய இரு பண்டிகை நாட்களும் குறிப் பிடத்தக்கவையாகும். இப்பெருநாட் களில் புத்தாடை உடுத்தி உறவினர்கள் நண்பர்கள் புடைசூழ 'ஈத்கா' எனும் திறந்த வெளிகளுக்குச் சென்று தொழுகை நடத்துவது வழக்கம்.

'ஈதுல் பித்ர்' பெருநாள் ரமளான் மாதம் முழுமையும் நோன்பிருந்து அடுத்து வரும் ஷவ்வால் மாதப் பிறை கண்டு கொண்டாடி மகிழும் பெரு நாளாகும்.

'ஈதுல் அள்ஹா' பெருநாள் பக்ரீத் திருநாளாகக் கொண்டாடப்படுகிறது. இப்ராஹீம்(அலை) அவர்கள் இறைவன் ஆணைப்படி தம் மகன் இஸ்மாயீல் (அலை) அவர்களை பலியிட முன்வந்த நிகழ்ச்சியை நினைவுகூரும் வகையில் கொண்டாடப்படுகிறது. அன்று தொழுகை முடிந்துத் திரும்பிய பின்னர் ஆடு அல்லது மாடு அல்லது ஒட்டகை யை அறுத்து 'குர்பானி' கொடுப்பர். 'குர்பானி' கொடுக்கப்பட்ட பிராணி யின் இறைச்சியை மூன்றில் ஒரு பங்கை குர்பானி கொடுத்தவர் வைத்துக் கொள்வார். பாக்கி இரு பங்குகளை

உறவினர், அண்டை வீட்டார், நண்பர்கள், ஏழை எளியவர்களுக்குக் கொடுத்துவிடுவர். அதன் தோலை மதரஸாக்களுக்கோ அநாதை இல்லங்களுக்கோ இனாமாக வழங்குவர்.

**ஈமான் :** இது இறை நம்பிக்கையைக் குறிக்கும் அரபுச் சொல்லாகும். 'வல்ல இறைவனாகிய அல்லாஹ் ஒருவனே; அவனைத் தவிர்த்து வணங்குதற்குரியவன் வேறு யாருமில்லை' என மனத்தால், நாவால், செயலால், உறுதிப்படுத்துவதே இறை நம்பிக்கையாகும். 'லா இலாஹ இல்லல்லாஹு'(வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருமில்லை) என்பதே ஈமானின் மூலமாகும்.

ஈமான் கொண்டவர்கள் 'மூஃமின்கள்'(இறை நம்பிக்கையாளர்கள்)என்று அழைக்கப்படுவார்கள். மூஃமீன்கள் வணங்குதற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் ஆவார்'என்பதில் அழுத்தமான நம்பிக்கையும் செயல்பாடும் உள்ளவர்களாவர்.

**ஈராக் :** முற்காலத்தில் மெசபடோமியா என அழைக்கப்பட்ட நாடே இன்று 'ஈராக்' என அழைக்கப்படுகிறது. இந்நாடு தென்மேற்கு ஆசியாவில் உள்ளது. வடக்கே துருக்கியையும், கிழக்கே ஈரானையும், தெற்கே வளைகுடாவையும், தென்மேற்கே சவூதி அரேபியா, ஜோர்டான் ஆகிய நாடுகளையும் வடமேற்கே சிரியா நாட்டையும் எல்லைகளாகக் கொண்டுள்ளது. இந்நாட்டின் பரப்பளவு 4,34,924 ச. கி. மீட்டர் ஆகும். இந்நாட்டின் மக்கள் தொகை சுமார் ஒன்றரைக் கோடியாகும். இவர்களில் 95 சதவிகிதத்தினர் முஸ்லிம்களாவர். இந்நாட்டின் தலைநகர் பக்தாது ஆகும். இந்நகர் புனித நகர்களில் ஒன்றாகப் போற்றப்படுகிறது. முற்காலத்தில் இந்நகரும், அதன் வடக்குக் கிழக்குப் பகுதிகளும் இணைந்த பரப்பு அஸ்ஸிரியா என்ற பெயரால் வழங்கப்பட்டது.

ஈராக் நாட்டில் கோடையில் கடும் வெப்பம் நிலவும், குளிர்காலத்தில் குளிர் அதிகமாக இருக்கும். இந்நாட்டில் மழை பெய்வது மிகவும் குறைவாகும். விவசாயம் பெரும்பாலும் ஆற்றுநீர்ப் பாசனத்தின் மூலமே நடைபெறுகிறது. இங்கு இரு பெரும் ஆறுகள் ஓடுகின்றன. ஒன்று திஜ்லா (*Tigris*) என்னும் ஆறு. மற்றொன்று புராத் (*Euphrates*) எனும் நதியாகும். திஜ்லா ஆறு துருக்கி நாட்டில் உற்பத்தியாகி, ஈராக் நாட்டில் பாய்ந்து வளமூட்டுகிறது. இது சுமார் 1850 கி. மீ. தூரம் ஓடுகிறது. புராத் நதி துருக்கியில் உற்பத்தியாகி சிரியா வழியாக ஈராக் நாட்டில் பாய்ந்தோடி நீர்வளம் தருகிறது. இதன் நீளம் சுமார் 2860 கி.மீ. ஆகும்.

இந்நாட்டின் முதன்மைத் தொழிலாக விளங்குவது விவசாயம் ஆகும். இங்கு பருத்தி, கோதுமை, பார்லி முதலிய விளைபொருள்களும் பேரிச்சம் பழமும் அதிக அளவில் விளைவிக்கப்படுகின்றன. உலகில் கிடைக்கும் பேரிச்சம் பழங்களில் 80 சதவிகிதம் ஈராக்கில்தான் கிடைக்கின்றன. இங்கு ஆடு, மாடு, ஒட்டகம் மிகுதியாக வளர்க்கப்படுகின்றன. கம்பளி நெசவுத்தொழிலும் சிறப்பாக நடைபெறுகின்றன.

இந்நாட்டில் நடைபெறும் மற்றொரு பெருந்தொழில் பெட்ரோலியத் தொழிலாகும். இங்குக் கிடைக்கும் பெட்ரோலிய எண்ணெய் பெரும் குழாய்கள் மூலம் மத்தியதரைக்கடல் பகுதிக்குக் கொண்டு செல்லப்பட்டு உலகின் பல பகுதிகளுக்கு அனுப்பப்படுகின்றது. இந்நாட்டின் தலைநகரான பக்தாதில்தான் மெய்ஞ்ஞான மேதை

முஹிய்யுத்தீன் அப்துல் காதர் ஜீலானி (ரஹ்) அவர்களின் அடக்கத்தலம் உள்ளது. இந்நாட்டின் தேசிய மொழி அரபியாகும்.

இஸ்லாமிய வரலாற்றோடு நீண்ட காலத் தொடர்புள்ளது ஈராக் நாடு. கி. பி. 656இல் கலீபாவாக இருந்த அலீ (ரலி) அவர்கள் ஈராக்கிலுள்ள கூஃபாவைத் தம் தலைநகராக ஆக்கிக் கொண்டார். உமைய்யாக்கள் காலத்தில் இந்நாட்டிலுள்ள திமிஷ்கு தலைநகராகியது. அப்பாஸிய கலீபாக்களின் காலத்தில் பக்தாது தலைநகராக உருவாக்கப்பட்டது. ஹாரூனுர் ரஷீத், மாமூன் ஆகியோர் இங்கிருந்து ஆட்சி செய்த புகழ் பெற்ற ஆட்சியாளர்கள் ஆவர். 1968 முதல் இந்நாடு புரட்சிக் கௌன்சில் மூலமாக குடியரசாகியுள்ளது. இந்நாட்டின் ஆற்றல்மிகு தலைவராக சத்தாம்ஹுசைன் என்பவர் விளங்கி வருகிறார்.

**ஈரான் :** தென்மேற்கு ஆசியாவில் உள்ள முக்கிய நாடாகும் ஈரான். இந்நாடு அண்மைக்காலம்வரை பாரசீகம் என அழைக்கப்பட்டது. கிழக்கே பாகிஸ்தானையும், அப்கானிஸ்தானையும் வடக்கே சோவியத் ரஷ்யாவையும் மேற்கே ஈராக்கையும் துருக்கியையும், தெற்கே பாரசீக வளைகுடாவையும் எல்லைகளாகக் கொண்டு அமைந்துள்ளது. இது ஒரு இஸ்லாமியக் குடியரசாகும். இந்நாடு 16,48,000 ச. கி. மீட்டர் பரப்பளவு உள்ளது. நாட்டின் மொத்த மக்கள் தொகை சுமார் நாலேகால் கோடியாகும். இவர்களில் 98 சதவிகிதத்தினர் முஸ்லிம்களாவர். இந்நாட்டின் தலைநகர் தெஹ்ரான்.

இந்நாடு மலைகளால் சூழப்பட்டுள்ளது. புகழ்பெற்ற மலைத்தொடர் 'சக்தாஸ்' என்பதாகும். இதிலுள்ள 'தமாவந்த்' மிக உயரமான எரிமலைச் சிகரமாகும். நாட்டின் பெரும்பகுதி பாலைவனமாகும். பாலைவனப்பகுதிகளில் மக்கள் அதிகம் வாழ்வதில்லை. இந்நாட்டின் தென்பகுதி செழிப்பாக உள்ளது. அதேபோன்று வடக்கிலுள்ள காஸ்பியன் கடற்பகுதி தாழ்நிலமாக அமைந்துள்ளதால் வளமாக உள்ளது. காஸ்பியன் கடற்பகுதி உலகின் மிகப் பெரிய ஏரி போன்று அமைந்துள்ளது. இந்நாடு கோடைகாலத்தில் வெப்பம் மிகுந்து காணப்படும். குளிர்காலத்தில் குளிர் அதிகமாக இருக்கும்.

இந்நாட்டின் மிக முக்கியத் தொழிலாகப் பெட்ரோல் தொழில் அமைந்துள்ளது. பாரசீக வளைகுடாப் பகுதியில் உள்ள குலிஸ்தான் சமவெளியில் மிகுந்த அளவில் பெட்ரோல் எடுக்கப் படுகிறது.

இந்நாட்டின் மற்றொரு முக்கியத் தொழில் வேளாண்மையாகும். கோதுமை, பார்லி, சர்க்கரை, பீட், பேரீச்சம் பழம், பருத்தி, தேயிலை, புகையிலை முதலியன விளைவிக்கப் படுகின்றன.

ஈரானிய மக்களில் 48 சதவிகிதத்தினர் மட்டுமே வீடுகளில் நகரங்களில் வாழ்கின்றனர். மற்றையோர் அடிக்கடி இடம்பெயரும் நாடோடிகளாய் வாழ்கின்றனர். ஆடு, மாடு, குதிரை, மேய்ப்பது இவர்களது முக்கிய வேலை. இடம் பெயரும்போது பாரம் சுமக்கக் கழுதை, குதிரைகளைப் பயன்படுத்துகின்றனர்.

இந்நாட்டின் மற்றொரு தொழில் கம்பள நெசவாகும். அன்று முதல் இன்று வரை பாரசீகக் கம்பளங்கள் புகழ் பெற்றவையாகும். பெட்ரோலியம், கம்பளங்கள், தோல், பேரீச்சம்

பழம், உலர்த்தப்பட்ட வேறு வகைப் பழங்கள் ஆகியவை பெருமளவில் ஏற்று மதி செய்யப்படுகின்றன.

1980ஆம் ஆண்டில் மன்னராட்சி அகற்றப்பட்டு, குடியரசு ஆட்சி அமைக் கப்பட்டது. நாட்டின் தேசியமொழி பாரசீகம் ஆகும்.

**ஈஸா (அலை);** அல்லாஹ்வின் திருத்தூதர்களில் ஒருவர். இறுதித் தூதர் அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்கட்கு முன்னதாக வாழ்ந்த இறைத் தூதர். இவர் திருப்பெயர் திரு மறையில் 'ஈஸா இப்னு மர்யம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதற்கு 'மர்ய மின் மகன் ஈஸா' என்பது பொருள் ஆகும்.

ஈஸா (அலை) அவர்கள் பிறப்பதற்கு முன் அவர் தாய் மர்யம் தனிமையில் இருந்தார். அப்போது ஜிப்ரீல் (அலை) அவர்முன் தோன்றினார். அல்லாஹ் மர்யத்திற்கு மகவை அருளவிருக்கும் இறைச் செய்தியைக் கூறி மர்யம் உட லில் ஊதினார். இவ்வாறு இறைவனின் நல்லாவியை ஊதியதின் மூலம் ஈஸா பிறந்ததால் ஈஸா (அலை) பின்னர் 'ரூஹுல்லாஹ்' என அழைக்கப் பட்டார்.

இறை ஆணைப்படி கருத்தரித்த மர்யம் பைத்துல் முகத்திஸை விட்டு வெளியேறினார். பைத்துல் லஹ்ம் (பெத்லேகம்) எனும் இடத்தில் ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தார். கவலை மிகக் கொண்ட அன்னை மர்யத்தை நோக்கிக் குழந்தை ஈஸா 'நான் இறைவனின் தூதராவேன்' என நன்மாராயம் கூறியது. இதைக்கேட்டு, அன்னை வியப்பும்,மகிழ்ச்சியும் அடைந் தார். தம் ஒன்றுவிட்ட சகோதரர் யூஸுப்னு மாத்தானுடன் மீண்டும் பைத்துல் முகத்திஸ் வந்தார்.

கன்னி மர்யம் குழந்தை பெற்றெடுத் ததை அறிந்த அப்பகுதி மக்கள் பல வாறு அவதூறு பேசினர். சிலர் மர்யத் தையும் குழந்தையையும் கொன்றுவிட எண்ணி அணுகினர். அப்போது குழந்தை ஈஸா (அலை) அவர்களை நோக்கித் தம் தாய் மர்யம் களங்கமற் றவர் என்றும் அல்லாஹ்வின் ஆவியால் உருவான தாம் இறைவனின் தூதர் என்பதையும் வாய்திறந்து கூறியது. பச்சிளம் குழந்தை வாய் திறந்து பேசி யதைக் கேட்டவர்கள் வியந்து, தங்கள் தீய எண்ணத்தைக் கைவிட்டுச் சென்ற னர்.

ஆனால், அங்கு ஆட்சி செய்து வந்த ஐரதூஸ் எனும் மன்னன் மர்யத்தையும் குழந்தையையும் கொல்ல முனைந் தான். இதனை அறிந்த மர்யம் குழந் தையுடனும் யூஸுப்னு மாத்தான் துணையுடனும் எகிப்து சென்றார். அங்கு நூல் நூற்றுத் தம் வாழ்க்கையை நடத்தி வந்தார்.

சில காலத்திற்குப் பின் ஐரதூஸ் மன் னன் இறந்தான். இதைக் கேள்விப் பட்ட மர்யம் மீண்டும் தம் குழந்தை யுடன் பைத்துல் முகத்தஸ் திரும்பலா னார். வழியில் நாஸரேத் எனுமிடத் தில் சிறிது காலம் தங்கி வாழ்ந்தார்.

இறைவனால் ஈஸா (அலை) அவர் கட்கு இன்ஜீல் வேதம் அருளப்பெற்றது. இறைச்செய்தி பெற்றவராய் ஈஸா (அலை) அவர்கள் பைத்துல் முகத்தஸ் நகருக்கு வந்தார். தாம் இறையருள் பெற்ற தூதர் என்பதை எண்பிக்கும் வகையில் அற்புதங்கள் பல செய்து காட்டினார். பிறவிக் குருடனின் கண் களைத் தடவியபோது, அவன் கண் ணொளி பெற்றான். நோயாளியைத் தொட்டபோது, அவன் நோய் தீர்ந்து சுகமானான். எனினும் இவரது மகத்து

வத்தை உணரா பனூ இஸ்ராயீல்கள் இவரை இறை தூதராக ஏற்றுக் கொள்ளாததோடு, இவரை சூனியக்காரர், மந்திரவாதி என்றெல்லாம் தூற்றினர், என்றாலும் தொடர்ந்து ஈஸா (அலை) உருவமற்ற ஒரே இறைவனையே வணங்க வேண்டுமென்று மக்களிடையே உபதேசம் செய்து வந்தார்.

பனூ இஸ்ராயீல்களுக்குத் தாம் இறைதூதர் என்பதை வலுவாக உணர்த்தும் பொருட்டு இறந்தவர்களை உயிர்ப்பித்துக் காட்டினார். இதையெல்லாம் நேரடியாகக் கண்டும் கூட இவரை தீர்க்கதரிசியாக ஏற்க மறுத்துவிட்டனர்.

இவரது தூதுத்வத்தை நம்பி, இவரை இறை தூதராகப் பன்னிரண்டு பேர் ஏற்றுக் கொண்டார்கள். அவர்கள் இவருடைய நெருங்கிய சீடர்களாயினர். ஈஸா (அலை) அவர்களின் உபதேசங்களை ஏற்று அதன்படி வாழ்வாராயினர். இச்சீடர்களோடு பல்வேறு இடங்களுக்கும் சென்று, மக்களுக்கு இறைநெறியை உபதேசிக்கலானார். ஒரு சமயம் இவர்களின் இறை வேட்டலை ஏற்றுக்கொண்ட இறைவன், உணவுத் தட்டுகளை விண்ணிலிருந்து அனுப்பினான். ஈஸா (அலை) அவர்கள் தம்மை நோக்கி வந்த ஏழை எளியோர்க்கெல்லாம் அத் தட்டிலிருந்து உணவு கொடுத்தார். அள்ள அள்ளக் குறையாமல் அத்தட்டில் உணவு வளர்ந்து கொண்டே இருந்தது. இவ்வாறு ஆயிரத்து முன்னூறு பேர் உணவு உண்டு மகிழ்ந்தனர். உணவு உட்கொண்டவர்களின் நோய் நொடிகள் எல்லாம் அகன்றன. இந்த அற்புதத்தைக் கண்டுங்கூட பனூ இஸ்ராயீல்கள் இவரை இறைதூதராக ஏற்றுக்கொள்ள முன் வரவில்லை.

எனினும் ஈஸா (அலை) அவர்கள் சிறிதும் மனம் தளராது 'ஒரே இறைவனை' வணங்கி உய்வடையுமாறு மக்களிடையே தொடர்ந்து முனைப்போடு உபதேசித்தார். இதைக் காணப் பொறுக்காத பனூ இஸ்ராயீல்கள் இவரைக் கொன்றுவிடத் திட்டம் தீட்டினர்.

இறைவன் கட்டளைக்கிணங்க ஈஸா (அலை) தம் சீடர்களைப் பல்வேறு இடங்களுக்குப் பிரிந்து சென்று தொடர்ந்து பிரச்சாரம் செய்யுமாறு பணித்தார். அவர்களும் அவ்வாறே செய்யலாயினர்.

யூதாஸ் என்பவன் முப்பது வெள்ளிக் காசுகளுக்காக ஈஸா (அலை) அவர்களைக் காட்டிக் கொடுத்தான். எதிரிகளாகிய பனூ இஸ்ராயீல்கள் இவரைப் பிடித்து, இவரது தலையில் முட்கிரீடத்தை வைத்து வதைத்தனர். இறைவன் தன் கருணையினால் யூதாஸுக்கு ஈஸா (அலை) அவர்களின் உருவை அளித்தான். ஈஸா (அலை) அவர்களை விண்ணிற்கு அழைத்துக் கொண்டான். ஈஸா வடிவிலிருந்த யூதாஸ் தான் ஈஸா அல்ல என எவ்வளவோ கூறி மன்றாடியும் எதிரிகள் கேட்கவில்லை. ஈஸா (அலை) உருவில் இருந்த யூதாஸை இவ்வாறு சிலுவையில் அறைந்து கொன்றனர். இந்நிகழ்ச்சி ரமளான் இரவொன்றில் நடைபெற்றது. அப்போது ஈஸா (அலை) அவர்கட்கு வயது முப்பத்து மூன்று ஆகும்.

இறுதி நாளின்போது ஈஸா (அலை) மீண்டும் வருவார் என அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்

**உதுமான் (ரலி):** இஸ்லாத்தின் மூன்றாம் கலீபாவாக விளங்கியவர் உதுமான் (ரலி) ஆவார். இவர் குறைஷி குலத்தைச் சேர்ந்த உமையாக் கிளையினர். இவர் தந்தையார் பெயர்

அஃப்பான் என்பதாகும். தாயார் பெயர் உர்வா ஆகும். சிறந்த படிப்பாளரான இவர், மிகுந்த செல்வந்தரும் கூட.

பெருமானார் (ஸல்) அவர்களின் நல்லுரைகளைக் கேட்டு இஸ்லாத்தில் இணைந்தவர். இதற்காகத் தம் மாமா ஹகம் என்பவரால் துன்புறுத்தப்பட்டவர். இசையா மன உறுதியுடன் இஸ்லாமிய மார்க்கப்பணியில் இறுதிவரை தம்மை நிலை நிறுத்திக்கொண்டவர்.

மணவிலக்குச் செய்யப்பட்ட பெருமானார் (ஸல்) அவர்களின் திருமகள் ருகையாவை மறுமணம் செய்து கொண்டார். அபிசீனியாவுக்கு அடைக்கலம் தேடிச் சென்ற குழுவில் இவரும், இவர் துணைவியார் ருகையாவும் இடம் பெற்றிருந்தனர்.

சில காலம் கழித்துத் தம் துணைவியாருடன் மதீனா திரும்பினார். அங்கு தம் செல்வத்தின் பெரும் பகுதியை முஸ்லிம்களின் நலனுக்கெனச் செலவிட்டார். ஒரு சமயம் மதீனாவில் இருந்த குடிநீர்க் கிணற்றிலிருந்து அதிகத் தொகையை கொடுத்து மக்கள் நீர் பெற வேண்டியிருந்தது. இதை அறிந்த உதுமான் (ரலி) பெருந்தொகை கொடுத்து அக்குடிநீர்க் கிணற்றை விலைக்கு வாங்கி, முஸ்லிம்களுக்காக 'வக்ஃபு' செய்துவிட்டார். ''பிஃரு உதுமான்'' எனும் அக்கிணறு இன்றும் அவர்களது நினைவுச் சின்னமாகத் திகழ்ந்து வருகிறது.

பத்ருப் போரின்போது தம் துணைவியார் ருகையா கடுமையாக நோய் வாய்ப்பட்டிருந்தார். அதனால் அப்போரில் இவரால் பங்கேற்க இயலவில்லை. அதன்பின் நடைபெற்ற அனைத்துப் போர்களிலும் இஸ்லாத்திற்காகப் போரிட்டுள்ளார்.

ஹுதைபிய்யா உடன்படிக்கை உருவாகும் முன், மக்கா சென்று குறைஷிகளுடன் பேச்சு நடத்த உமர்(ரலி) பணிக்கப்பட்ட போது, ''உதுமானின் உறவினர்கள் பலர் மக்காவில் உள்ளனர். எனவே அவர் சென்றால் ஆபத்து இராது,'' என்று கூறினார். அதன்படியே மக்கா சென்று குறைஷிகளுடன் பேச்சு வார்த்தை நடத்தினார்.

அபூபக்ர் (ரலி) அவர்களும், உமர் (ரலி) அவர்களும் கலீஃபாக்களாக இருந்து ஆட்சி செய்த காலத்தில் உதுமான் (ரலி) அவர்களின் பங்கும் பணியும் மிகப் பெரிதாக இருந்தது. உமர் (ரலி) அவர்கட்குப்பின் உதுமான் (ரலி) அவர்கள் கலீஃபாவானார்.

உதுமான் (ரலி) ஆட்சிக் காலத்தில் தான் துருக்கி, பல்க், குராஸான், சைப்ரஸ் ஆகிய பகுதிகள் வெற்றி கொள்ளப் பட்டன. இஸ்லாமிய ஆட்சி கருங்கடல்வரை விரிந்தது. இவரது ஆட்சியின்போதுதான் கடற்போர் செய்யும் முறை உருவாக்கப்பட்டது. திருக்குர்ஆன் முறைப்படுத்தப்பட்டதும் இவர் காலத்தில்தான். இவர் தம் ஆட்சி சுமார் பன்னிரண்டு ஆண்டுகள் நீடித்தன. இவரது ஆட்சிக்காலத்தின் பிற்பகுதியில் இவர்மீது சிறுசிறு குறைகள் கூறப்பட்டன. இவரது ஆட்சியின் மீது அதிப்தி கொண்ட கலகக்காரர்கள் இவர் வீட்டை முற்றுகையிட்டு இவரைக் குத்திக் கொன்றனர். அப்போது இவருக்கு வயது 82 ஆகும்.

**உம்ரா :** இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளுள் ஹஜ் என்பது ஐந்தாவது கடமை ஆகும். ஹஜ் ஒரு குறிப்பிட நாளில் குறிப்பிட்ட நேரத்தில் நிறைவேற்றப்படும் இறைக் கடமையாகும். அந்தக் குறிப்பிட்ட நாளும் நேரமும் அல்லாத பிற சமயங்களில் செய்யப்படு

வது உம்ரா ஆகும். எனவே, இதை ஒரு 'சிறிய ஹஜ்' என்றும் கூறுவர்.

ஹஜ் கடமையை மேற்கொள்வதற்குண்டான அத்தனை நியதிகளும் உம்ராவுக்கும் உண்டு. ஹஜ்ஜின் சமயமாகிய துல்ஹஜ் மாதம் 8ஆம் நாள் முதல் 13ஆம் நாள் முடியவுள்ள காலத்தில் உம்ரா செய்வது தவிர்க்கப்பட வேண்டும். இக்காலத்தில் உம்ரா செய்வது மக்ரூஹ் ஆகும்.

இஹ்ராம் உடை அணிந்து 'இஹ்ராமினுடைய தொழுகையை நிறைவு செய்கிறேன்' என்று நிய்யத்துச் செய்து செய்துகொண்டு, இரண்டு 'ரகஅத்' தொழ வேண்டும். பிறகு உம்ராவுக்காக நிய்யத் செய்துவிட்டு 'தல்பியா' ஓதியவண்ணம் மக்கா வந்து உம்ரா செய்யவேண்டும். மக்கா வந்ததும் குளிக்கவேண்டும். குளிக்க வசதியில்லாவிட்டால் 'உலூ' செய்ய வேண்டும். பாபுஸ்ஸலாம் வாயில் வழியாக கஃபா இறையில்லத்தை அடைந்து தவாபு சுற்ற வேண்டும். தவாபு சுற்றும்போது தல்பியா ஓதுவதை நிறுத்திக் கொள்ள வேண்டும்.

தவாபு சுற்றி முடித்தவுடன் வாஜிபான இரண்டு ரகஅத் தொழுகை தொழ வேண்டும். பின்னர் ஜம்ஜம் கிணற்று நீரைப் பருக வேண்டும். அதன்பிறகு ஸபா, மர்வா ஆகிய இரு குன்றுகளுக்கிடையே தொங்கோட்டம் ஓட வேண்டும். அதற்குப் பிறகு தலையை முண்டிதம் செய்து கொள்ள வேண்டும். இல்லையென்றால் கத்தறியால் சிறிதளவு மயிரை நீக்க வேண்டும். அதன்பின் இஹ்ராம் உடையைக் களைந்து தங்கள் வழக்கமான ஆடைகளை உடுத்திக்கொள்ளலாம். உம்ரா செய்யும் பெண்கள் தங்கள் தலைக் கூந்தலை அவிழ்த்துவிட்டு, நுனிப்பகுதியில் ஓரங்குலம் கத்திரித்தால் போதுமானதாகும்.

ஹஜ், உம்ரா இரண்டிற்காகவும் இஹ்ராம் அணிந்தவர்கள் ஹஜ் கடமை நிறைவேறும்வரை இஹ்ராம் உடையைக் கழற்றக்கூடாது. அவ்வாறே அவர்கள் தங்கள் தலை முடியையும் நீக்கவோ, கத்தரிக்கவோ கூடாது.

மக்காவில் வாழ்வோர் ரமளான் மாதம் முடிந்ததிலிருந்து ஹஜ் காலம் முடியும்வரை எழுபது நாட்களுக்கு உம்ரா செய்யக்கூடாது. அதேபோன்று வெளியூர்களிலிருந்து மக்கத்துக்குள் நுழைபவர்கள் இஹ்ராம் கட்டி வருவதால் அவர்கள் உம்ரா நிய்யத்துடன் வருதல் வேண்டும். இவர்கள் உம்ரா செய்யலாம்.

**உமர் (ரலி) :** இஸ்லாத்தின் இரண்டாம் கலீஃபா உமர்(ரலி) ஆவார். தந்தையார் பெயர் கத்தாப் என்பதாகும். தாயார் பெயர் ஹந்தமாஹ் என்பதாகும். இவரது குடும்பம் குறைஷிக் குலத்தின் அதீ கிளையைச் சேர்ந்தது.

அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்)அவர்களைக் காட்டிலும் பதின்மூன்று வயது இளையவர்; சிறந்த உடற்கட்டுடையவர்; மற்போரில் சிறந்து விளங்கிய உமர் (ரலி) குறைஷிகளுடன் சேர்ந்து ஆரம்ப நாட்களில் பெருமானார்(ஸல்) அவர்களையும் அவரது சாந்தி மார்க்கத்தையும் மூர்க்கத்தனமாக எதிர்த்து வந்தவர்.

பெருமானாரைக் கொல்ல வாளெடுத்துச் சென்றவர், தம் சகோதரி இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட செய்தி கேட்டு ஆத்திரமடைந்தார். மிகுந்த கோபத்துடன் தம் சகோதரி வீட்டை அடைந்தபோது, வீட்டில் தம் சகோதரி குர்ஆன் ஓதுவதைக்கேட்டார். குர்ஆன் வாசகங்களில் தம் மனதைப் பறிகொடுத்தார். இறைவசனங்களில் அவர் உள்ளம் மெழுகுபோல் உருகியது. உள்ளம் மாறியவராய் பெருமானாரிடம்

சென்று, நம்மை இறைமார்க்கமான இஸ்லாத்தோடு இணைத்துக் கொண்டார். அன்றுமுதல் தம் வாழ்வின் இறுதிக்காலம்வரை இஸ்லாத்துக்காக இடையறாது உழைத்தார்.

உமர்(ரலி) இஸ்லாத்தில் இணையும் வரையில், தொழுகையும் இறைமறை ஓதுவதையும் முஸ்லிம்கள் மறைவாகவே செய்து வந்தனர். இவர் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட பிறகு, இதனை வெளிப்படையாகச் செய்யலாயினர். அன்றுமுதல் உமர் (ரலி) அவர்களை பெருமானார்(ஸல்) அவர்கள் 'பாரூக்' (உண்மையையும் பொய்யையும் பிரித்தவர்) என அழைக்க அப்பெயர் நிலைபெற்றது.

பெருமானார்(ஸல்) அவர்கள் மதீனாவில் குடியேறி, முதன் முதலாகத் தொழுகைப் பள்ளியை உருவாக்கினார்கள். அப்போது மக்களைத் தொழுகைக்கு அழைக்க எம்முறையைப் பின்பற்றுவது என்ற பிரச்சினை எழுந்தது. அப்போது உமர்(ரலி) தம் கனவில் கண்ட 'அதான்' முறையில் ஒருவரைப் பாங்கு சொல்லச் செய்வதன் மூலம் தொழுகைக்கு அழைக்கலாம் என்றார். அந்த யோசனையைப் பெருமானார் (ஸல்) அவர்களும் பிறரும் ஏற்றனர். சில விஷயங்களில் இவர் கூறும் யோசனைகளே பின்னர் வஹியாகவும் பெருமானார் (ஸல்) அவர்கட்கு வந்துள்ளது. இது இவரது பெருமைக்குச் சான்றாகும். மக்கத்துக் குறைஷிகளுடன் நடைபெற்ற அனைத்துப் போர்களிலும் பெருமானாருடன் இணைந்து நின்று போரிட்டார். போருக்கெனத் தம் சொத்தில் சரிபாதியைப் போர் நிதியாகப் பெருமானாரிடம் அளித்தார்.

பெருமானார் மறைவுக்குப் பின் யாரைக் கலீஃபாவாக ஆக்குவது என்ற பிரச்சினை எழுந்தது, முடிவு காண இயலாத நிலை ஏற்பட்டது. அப்போது அபூபக்ர் (ரலி) அவர்களை கையுடன் அழைத்துச் சென்று அவர்களை முதல் கலீஃபாவாக அறிவித்தார். அபூபக்ர் (ரலி) அவர்கள் முதல் கலீஃபாவாக அமர்ந்து ஆட்சி செய்தபோது, உமர் (ரலி) அவர்கள் மிக முக்கியமானவராக விளங்கினார். கலீஃபாவுக்கு அடுத்த இடத்தைப் பெற்றிருந்தார்.

அபூபக்ர் (ரலி) அவர்கட்குப் பின்னர் உமர் (ரலி) அவர்கள் இரண்டாவது கலீஃபாவானார்கள்.

மிகச் சிறந்த போர்வீரராக விளங்கிய உமர் (ரலி) தம் ஆட்சிப் பொறுப்பேற்றவுடன் பாரசீக ரோமப் பேரரசுகளின் ஆதிக்கத்தை முறியடித்தார்கள். ஜெரூசலத்தைக் கைப்பற்றினார். எகிப்து, திரிப்போலி நாடுகளை வென்றார். பிற்காலத்தில் புகழ்பெற்ற நகரங்களாக விளங்கிய கூஃபா, பஸ்ரா நகரங்கள் இவர் காலத்தில்தான் உருவாக்கப்பட்டன.

நீதி, நேர்மை ஆகியவற்றிற்குச் சிறந்த இலக்கணமாகத் திகழ்ந்தவர். சந்தர்ப்பவசத்தால் யாருக்காவது பிழை செய்துவிட்டதாக உணர்ந்தால், அதற்கான சவுக்கடி தண்டனையைத் தமக்குத்தாமே வழங்கிக் கொள்வார். இவர் இறந்தபின் இவர் உடலைக் குளிப்பாட்டும்போது, இவர் உடலில் காணப்பட்ட சவுக்கடித் தழும்புகள் இவ்வுண்மையை உணர்த்தின.

உமர் (ரலி) பெரும் செல்வந்தராக இருந்தபோதிலும், மிக எளிமையான வாழ்வே வாழ்ந்தார். இஸ்லாத்தின் இணையற்ற இரண்டாம் கலீஃபாவாக வாழ்ந்த இவரது சட்டையில் பதினெட்டு ஒட்டுகள் இருந்தனவாம். என்னே இவரது எளிமை!

ஒரு நாள் இவர் பஜ்ர் தொழுகை தொழுது கொண்டிருந்தபோது அபூ

லூலு என்பவனால் குத்தப்பட்டார். கத்திக் குத்துப்பட்ட உமர்(ரலி) அவர்களோ தொழுகையைத் தொடர்ந்து நடத்தும்படி அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபைக் கேட்டுக்கொண்டார். அவரும் அவ்வாறே செய்தார். தாம் குற்றுயிராய்க் கிடந்தபோது கூட இறை வணக்கம் தடையின்றி நடக்கச் செய்த செயலானது இஸ்லாமிய இறை நியதிகளைக் கண்டிப்பாகக் கடைப்பிடிப்பதில் அவர் காட்டிய உறுதிக்கு இன்றும் சான்றாக விளங்கி வருகிறது.

இவர் கத்திக் குத்துப்பட்ட நான்கு நாட்களுக்குப்பின் காலமானார். இவரது உடல் முதல் கலீஃபாவான அபூபக்ர் (ரலி) அவர்களின் அடக்கவிடத்திற்கு அருகிலேயே அடக்கப்பட்டது.

இஸ்லாம் விரைந்து பரவவும் அழுத்தமாக நிலைபெறவும் பெருங் காரணமாய் அமைந்தவர் உமர் (ரலி) என்று கூறலாம்.

காங்கிரஸ் முதன் முதலில் பல்வேறு மாகாணங்களில் 1937ஆம் ஆண்டு ஆட்சிப் பொறுப்பேற்றபோது, அவ்வாட்சி உமர் (ரலி) அவர்களின் ஆட்சிபோலவே அமைய வேண்டும் என்று தம் ஆசையை காந்திஜீ வெளிப்படுத்தியிருந்தார்.

**உமர் கய்யாம்:** மாபெரும் பாரசீக மொழிக் கவிஞராக விளங்கியவர் உமர் கய்யாம். இவரது இயற்பெயர் கியாஸுத்தின் அபுல் பத்ஹ் உமர் என்பதாகும். கய்யாம் என்பது குடும்பப் பெயராகும். அக்காலத்தில் கூடாரம் செய்வோர் இப்பெயரால் அழைக்கப்பட்டனர். இவரது குடும்பத்தவர் இத்தொழிலைச் செய்து வந்ததால், இது இவரது குடும்பப் பெயராகவும் அமைந்து விட்டது.

உமர் கய்யாமின் பிறந்த ஊரும் தேதியும் சரியாகத் தெரியவில்லை. இவரது அடக்கவிடம் நிஷாப்பூர் எனுமிடத்தில் உள்ளதாகக் கூறப்படுகிறது. பிறந்த மண்ணிலேயே அடக்கம் செய்வது அக்கால வழக்கமாதலால், இவர் பிறந்த ஊரும் நிஷாப்பூராகவே இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

இவர் தந்தை இப்ராஹீம் பெரும் செல்வந்தராக விளங்கியவர். உமர் கய்யாமுக்கு மிகச் சிறந்த கல்வி அளித்தார். இறைஞானச் சிந்தனை மிகுந்த உமர் கய்யாம், கணித மேதையாக விளங்கினார். விண்ணியல் பற்றிய இவரது அறிவு பலரையும் வியக்க வைத்தது. இத்துறைகளில் இவர் மிகச் சிறந்த திறமையாளராக விளங்கியதால் சுல்தான் மாலிக்ஷா இவரைப் பெரிதும் ஆதரித்துப் போற்றினார். அவர் வேண்டுகோளுக்கிணங்க இவர் சந்திர, சூரிய இயக்கங்களின் அடிப்படையில் ஜலாலி பஞ்சாங்கத்தைஉருவாக்கினார். இது கிரிகோரியன் பஞ்சாங்கத்தைவிட உயர்ந்ததாகக் கருதப்படுகிறது.

இவர் வானியல் விற்பன்னராக விளங்கியதால் சோதிடத்துறையிலும் வல்லவராக இருந்தார். இவரது விண்ணியல் திறமையை இமாம் கஸ்ஸாலி (ரஹ்) பெரிதும் பாராட்டியுள்ளார். விண்ணியல் பற்றி இவர் எழுதிய நூல்கள் இன்றும் இஸ்தம்புல் நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன,

அதேபோன்று கணக்கியலிலும் இவர் பெரும் புலமையாளராகத்திகழ்ந்தார். இவர் 'அல்ஜிப்ரா' கணிதம் பற்றி எழுதிய நூல்கள் இத்துறை கணித வளர்ச்சிக்கு அடிப்படையாய் அமைந்துள்ளன. இவர் பௌதிகம் எனக் கூறப்படும் 'இயற்பியல்' அறிவியல் துறையிலும் மிகச் சிறந்த விற்பன்னராகத் திகழ்ந்தார்.

அறிவியல் துறைகளில் ஆற்றல் மிக்கவராக விளங்கிய உமர் கய்யாம் பிற்காலத்தில் மிகச் சிறந்த மெய்ஞ்ஞானியாக விளங்கினார். இவரது ஞான இலக்கிய நூலான ருபாயியாத்தை பிட்ஜெரால்டு (Fitzgerald) என்பவர் 1859ஆம் ஆண்டில் மொழிபெயர்த்தார். பாரசீக மொழியிலிருந்து ஆங்கில மொழிக்கு உருமாறிய இந்நூலே உமர் கய்யாமின் பெயரை உலகளாவிய முறையில் பரவச் செய்தது. ஆயினும் மொழி பெயர்ப்பில் இவர் செய்த தவறு உமர் கய்யாமுக்கு அநியாயமாகக் களங்கத்தையும் ஏற்படுத்திவிட்டது.

உமர் கய்யாம் ருபாயியாத்தில் மறைபொருளாகக் குறிப்பிட்ட ஞானச் சொற்களுக்குத் தவறாகப் பொருள் கொண்டார் பிட்ஜெரால்டு. 'மஸ்த்' எனும் பாரசீகச் சொல்லுக்கு 'இறை மயக்கம்' என்பது பொருளாகும். அதைவெறும் மயக்கம், போதை எனப் பொருள் கொண்டார். மயக்கம் மதுவாலும், கவிதையாலும் மாதினாலும் உண்டாகும் என்ற கருத்தில் பெயர்ப்பைச் செய்துவிட்டார். இதனால் ஒழுக்கத்தில் சிறந்த உமர் கய்யாமை குடியராக, பெண்பித்தராகக் கருத நேர்ந்துவிட்டது. மரபு தெரியாமல் ஞான இலக்கியங்களை மொழி பெயர்த்தால் எத்தகைய தீங்கு விளையும் என்பதற்கு இம்மொழிபெயர்ப்பு சான்றாகும்.

இவர் இஸ்லாமிய அறிவியல் பேரறிஞராக விளங்கிய இப்னு ஸீனாவைத் தம் மானசீக குருவாகக் கொண்டிருந்தார். அவரது நூலொன்றையும்பார்ஸீ மொழியில் பெயர்த்துள்ளார்.

இவர் தம் தொழுகை இடத்திலேயே ஹிஜ்ரி 517ஆம் ஆண்டில் காலமானார். இவரது விருப்பப்படி அங்கிருந்த பூங்கா ஒன்றில் இவரது உடல் நல்லடக்கம் செய்யப்பட்டது.

**உமறுப்புலவர்:** மிகச் சிறந்த இஸ்லாமியத் தமிழ்க் காப்பியமான சீறாப் புராணத்தை இயற்றியவர் உமறுப் புலவர். இவர் தந்தையார் ஷைகு முகம்மது அலியார். நறுமணப் பொருள்களை விற்கும் வணிகராக வாழ்ந்தார். இவர் எட்டையபுரத்திலும், நாகலாபுரத்திலுமாக வாழ்ந்தார். இவர் புதல்வராக ஹிஜ்ரி 1052 ஷஃபான் 9 ஆம் நாள் (1642 அக்டோபர் 23ஆம் நாள்) உமறு பிறந்தார்.

சிறு வயது முதலே உமறு தமிழ் கற்கத் தொடங்கினார். இவர் தம் தந்தையாரோடு எட்டையபுர அரசவைக்கு அவ்வப்போது சென்று வருவதுண்டு. எட்டையபுர அரசவைக் கவிஞர் கடிகை முத்துப் புலவர் சிறுவர் உமறுவின் தமிழ்ப் புலமைகண்டு வியந்தார். அவருக்குத் தாமே ஆசானாக இருந்து தமிழ் கற்பிக்கலானார்.

ஒரு சமயம் எட்டையபுர அரசவையில் தம் குருவுக்குப் பதிலாகத் தாமே சொற்பொழிவு செய்தார் இளைஞர் உமறு. இவரது புலமைத் திறனைக் கண்டு மகிழ்ந்த எட்டையபுர மன்னர் சேதுபதி, உமறுப்புலவரையேஎட்டையபுர அரசவைப் புலவராக்கிவிட்டார்.

எட்டையபுர அரசவைக்கு வள்ளல் சீதக்காதி அவ்வப்போது வந்து செல்வது வழக்கம். அப்போதெல்லாம் உமறுப்புலவர் புலமையைக் கண்டு வியப்பார். பெருமானாரின் பெருவாழ்வு காப்பியமாகத் தமிழில் பாடப்படவேண்டும் என்ற வேட்கை சீதக்காதிக்கு நீண்ட நாட்களாகவே இருந்துவந்தது. அந்த ஆசையை ஒரு முறை உமறுப்புலவரிடம் வெளியிட்டார், தொடர்ந்து பெருமானாரின்

பெருவாழ்வை அக்காலத்தில் மிகச் சிறந்த இஸ்லாமிய ஞானச் செல்வராக விளங்கிய சதக்கத்துல்லா அப்பா அவர்களிடம் கேட்டுத் தெரிந்து காப்பியம் படைக்குமாறு வேண்டினார்.

வள்ளல் சீதக்காதியின் விருப்பத்தை நிறைவேற்ற விரும்பிய உமறுப்புலவர் சதக்கத்துல்லா அப்பாவை அணுகி அண்ணல் (ஸல்) அவர்களின் வாழ்க்கையைக் கூறுமாறு கேட்டார். பிற சமயத்தவரைப் போல் உடையும் தோற்றமும் கொண்ட உமறுவுக்கு பெருமானார் வாழ்வைச் சொல்ல அப்பா மறுத்ததில் வியப்பில்லை. எனவே, அவரைத் திருப்பி அனுப்பி விட்டார். இதனால் உமறுப்புலவர் மிகவும் வருந்தினார். அன்றைய இரவில் இருவர் கனவிலும் பெருமானார் தோற்றமளித்துத் தம் வாழ்க்கை விபரம் வழங்குமாறும், காப்பியம் படைக்குமாறும் முறையே கூறி மறைந்தார். அதற்கிணங்க சதக்கத்துல்லா அப்பா பெருமானார் பெருவாழ்வை விவரிக்க உமறுப்புலவர் சீறாக் காப்பியமாக உருவாக்கினார்.

சீறாக் காப்பியம் உருவாகும்போது அவருக்கு வேண்டிய பொருளுதவிகளைச் செய்து வந்தார் வள்ளல் சீதக்காதி. சிறிது காலத்திற்குள் சீதக்காதி மறையவே பரங்கிப் பேட்டையில் வாழ்ந்த வள்ளல் அபுல்காசிம் மரைக்காயரின் உதவியோடு காப்பியத்தைத் தொடர்ந்து எழுதினார். இந்நன்றியை மறவாது அபுல் காசிமைத் தம் காப்பியத்தில் பல இடங்களில் பாராட்டியுள்ளார் உமறுப்புலவர்.

உமறுப்புலவர் தம் சீறாக் காப்பியத்தை முழுமையாக எழுதிமுடிக்கும் முன், தம் 63ஆம் வயதில் எட்டையபுரத்தில் காலமானார். இவரது உடல் இவரது தந்தையாரின் அடக்கவிடத்திற்கு அருகிலேயே அடக்கம் செய்யப்பட்டுள்ளது. அங்கு ஒரு நினைவிடமும் கட்டப்பட்டுள்ளது. அங்கு ஆண்டுதோறும் கந்தூரியும் நடைபெற்று வருகிறது.

**உருது:** முகலாயர்களின் ஆட்சிக் காலத்தில் இந்தியாவில் உருவான மொழி உருது மொழியாகும். இம்மொழியின் தோற்றத்திற்கு முஸ்லிம்கள் காரணம் என்றாலும், இந்துக்களுக்கும் இதில் பெரும் பங்கு உண்டு. உருது எனும் சொல் துருக்கி மொழிச் சொல்லாகும். இதற்குப் 'படை முகாம்' என்பது பொருளாகும்.

முகலாய மன்னர்களின் படைகளில் இடம்பெற்றிருந்த படைவீரர்கள் தத்தம் தாய்மொழிச் சாயலோடு அரசு மொழியான பாரசீக மொழியைப் பேசினர். இக்கலப்பு மொழியே நாளடைவில் தனி மொழியாக உருவெடுத்தது. எனவேதான், படை முகாம்களில் 'படை வீரர்கள் மொழி' எனும் பொருளில் இது 'உர்து' எனும் பெயரினைப் பெற்றது. உருது மொழியில் பாரசீக மொழிச் சொற்கள், அரபி மொழிச் சொற்கள், சமஸ்கிருதச் சொற்கள் பெரும்பான்மையும் மற்ற இந்திய மொழிகளின் சொற்கள் சிறுபான்மையும் கலந்துள்ளன.

பேச்சு மொழியாகத் தொடங்கிய உருதுமொழி, தக்காண சுல்தான்களின் ஆட்சியின்போது ஒரு தனி மொழியாக வளமடைந்தது. அதே சமயம் உருது மொழி வடநாட்டில் ''பிரிஜ் பாஷா'' என அழைக்கப்பட்டது. பதினான்காம் நூற்றாண்டில் உருது மொழியில் முதல் வசன நூல் உருவாக்கப்பட்டது. அதை எழுதியவர் ஸையித் முஹம்மது ஹுஸைனி **கேஸுதராஸ்** என்பவராவார். இதே காலத்தில் வடநாட்டில்

பிரிஜ் பாஷை வடிவிலான உருதுமொழியில் கவிதைகள் இயற்றப்பட்டன.

ஔரங்கசீப் ஆலம்கீர் தக்காணத்தின் மீது படையெடுத்து வெற்றி கொண்ட பின்னரே, இந்தியா முழுமைக்குமான ஒரே மொழியாக உருது ஆகியது. முஸ்லிம்களின் மொழியாக மட்டுமின்றி அவர்கள் ஆட்சிப் பகுதிகளில் வாழ்ந்த இந்துக்களின் மொழியாகவும் ஆகியது. அதனால்தான் குர்ஆன் மொழி பெயர்ப்பும் இந்துக்களின் முக்கிய சமய நூல்களும் கூட உருது மொழியில் பெயர்க்கப்பட்டன.

ஆங்கில அரசு உருவாவதற்கு முன்பு வரை உருது மொழியில் பாரசீக மொழிச் செல்வாக்கு மிகுதியாக இருந்தது. ஆங்கிலேயர் காலத்திற்குப் பிறகு இந்திய மொழிகளின் செல்வாக்கோடு உருது கட்டுக்கோப்புள்ள மொழியாக வளர்க்கப்பட்டது. அரபியிலும், பாரசீக மொழியிலுமிருந்த இஸ்லாமியப் படைப்புகள் பலவும் உருதுவில் மொழி மாற்றம் செய்யப்பட்டன. இலக்கியச் செழுமையும் கவிதை வனப்புமுடைய மொழியாக உருது வளர்ந்தது. உருதுக் கவிதைகள் இனிமை மிக்கவையாகும்.

இந்தி மொழிக்கும், உருது மொழிக்குமிடையே அதிக வேறுபாடுகள் இல்லை. உருதுவில் பாரசீக, அரபுச் சொற்கள் அதிகமுண்டு.இந்தியில் பெரும்பான்மை சமஸ்கிருதச் செல்வாக்கு உண்டு. உருது மொழி, அரபி, பாரசீக எழுத்து வடிவில் உருவாகியுள்ளது. இந்தி சமஸ்கிருத எழுத்து வடிவான தேவநாகரி எழுத்துகளால் எழுதப்படுகிறது. இந்தியும் உருதுவும், கலந்த மொழியே இந்துஸ்தானி. இந்திய தேசிய மொழிகளில் ஒன்றாகும். சுமார் மூன்று கோடிப்பேர் உருது மொழி பேசுகின்றனர். பாகிஸ்தானில் உருது மொழி தேசிய மொழியாக உள்ளது.

**உலமா:** இஸ்லாமிய மார்க்க அறிஞர்கள் 'உலமா' என்ற சொல்லால் அழைக்கப்படுகின்றனர். 'ஆலிம்' என்ற சொல்லுக்குப் பன்மை 'உலமா.'

உலமாப் பெருமக்கள் பெருமானார் (ஸல்) அவர்களின் பிரதிநிதிகளாகக் கருதப்படுகின்றனர். 'உலமா' நபிமார்களின் வாரிசுகள் என்றும் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். இஸ்லாமிய மார்க்கச் சட்டதிட்டங்களில் யாருக்கேனும் ஐயம் ஏற்பட்டால் அதனைத் தீர்த்து வைக்கும் கடப்பாடு உலமாப் பெருமக்களுக்கு உண்டு. இவர்கள் அரபிமொழியில் மார்க்க அறிவை நன்கு கற்றுத் தேர்ந்தவர்களாவர்.

**உவைஸுல் கரனீ:** இறை நேசச் செல்வர்களில் தனிச் சிறப்புடையவராகக் கருதப்படுபவர் உவைஸுல் கரனீ ஆவார். இவரது இயற்பெயர் உவைஸ் என்பதாகும். இவர் யமன் நாட்டிலுள்ள 'கரன்' எனும் ஊரில் பிறந்ததனால் இவர் 'கரன்' எனும் பெயருடன் அழைக்கப்பட்டார்.

உவைஸுல் கரனீ நாயகத் திருமேனி (ஸல்) அவர்களின் சமகாலத்தவராக வாழ்ந்தபோதிலும், ஒருமுறை கூட பெருமானாரை நேரில் சந்தித்ததில்லை. ஆனால் அண்ணலார் அவர்கள் மீது அளப்பரிய அன்பும் மதிப்பும் கொண்டிருந்தவர். வயதான தம் தாயாருக்கு உடனிருந்து பணிவிடை செய்ததனால் பெருமானாரை நேரில் காண இயலவில்லை. ஆயினும் இவரைப்போலவே அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உவைஸுல் கரனீயை நன்கு அறிந்திருந்ததோடு, அவர்மீது மிகுந்த அன்பும் கொண்டிருந்தார். பெருமானார் மீது கொண்டிருந்த அளவிலா அன்பின் காரணமாக உஹதுப் போரில் ஒரு பல் விழுந்துவிட்ட செய்தியறிந்த உவைஸுல் கரனீ (ரலி)

பெருமானாரின் விழுந்த பல் எது எனத் தெரியாததால், தம் பற்கள் அனைத்தையுமே அகற்றிவிட்டார். இதையறிந்த பெருமானார் அவர்கள் தம் மீது கொண்ட அன்பு கண்டு பேருவகை அடைந்தார். அவரை மானசீகமாக நன்கு அறிந்திருந்த நாயகத் திருமேனி (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களிடமும், அலீ (ரலி) அவர்களிடமும் உவைஸுல் கரனீயின் அங்க அடையாளங்களைக் கூறினார். அவரைக் காண நேரிட்டால் அவருக்குத் தம் ஸலாம் கூறுமாறு பணித்தார். அவர் மீது போர்த்துவதற்கென தம் மேலங்கி ஒன்றையும் இவர்களிடம் பெருமானார் அவர்கள் தந்தார்.

ஆயினும் பெருமானார் காலத்திலோ அவருக்குப் பின்னர் கலீஃபாவாக இருந்த அபூபக்ர் (ரலி) காலத்திலோ, உவைஸுல் கரனீ கண்டறியப் படவில்லை, உமர் (ரலி) கலீஃபாவாக இருந்தபோதுதான். ஹஜ் செய்ய வந்த ஒருவர் மூலம் உவைஸுல் கரனீ இருக்குமிடம் தெரியவந்தது. உடனே உமர் (ரலி) அவர்களும் அலீ (ரலி) அவர்களும் அவரைக் காணப் புறப்பட்டனர். அவர்களுடன் பெருமானார் (ஸல்) அவர்கள் தந்திருந்த போர்வையையும் கொண்டு சென்றனர்.

உவைஸுல் கரனீ (ரஹ்) அவர்கள் இருக்குமிடத்தை இவர்கள் இருவரும் நெருங்கியபோது, அவர் தொழுது கொண்டிருந்தார். பெருமானார் கூறிய படியே அவர் அங்க அடையாளங்கள் இருப்பதைக் கண்டு மகிழ்ந்தனர். தொழுது முடித்த உவைஸுல் கரனீ (ரஹ்) அவர்கட்குப் பெருமானாரின் ஸலாம் கூறி, அண்ணலார் தந்திருந்த அவர்தம் போர்வையைப் போர்த்தினர். உம்மத்துகளுக்காக இறைவனிடம் 'துஆ'ச் செய்யுமாறு பெருமானார் விடுத்திருந்த வேண்டுகோளையும் கூறினர். பெருமகிழ்வடைந்த உவைஸுல் கரனீ (ரலி) அவர்களும் அவ்வாறே இறைவனிடம் துஆ கேட்டு மன்றாடினர்.

சிலகாலம் இறைப்பித்தராக வாழ்ந்த உவைஸுல் கரனீ (ரலி), அலீ (ரலி) அவர்கட்கும் முஆவியாவுக்கும் இடையே நடந்த ஸிஃப்ஃபீன் போரில் ஈடுபட்டு உயிரிழந்தார்.

**எகிப்து:** இஸ்லாமிய வரலாற்றிலும் மனித குல நாகரிக வரலாற்றிலும் சிறப்பிடம் பெற்று விளங்குவது எகிப்து நாடு. இன்று எகிப்து ஒரு குடியரசு நாடாக விளங்குகிறது. ஆப்பிரிக்காக் கண்டத்தின் வடகிழக்குக் கோடியில் இந்நாடு அமைந்து உள்ளது. லிபியாவும் செங்கடலும் மத்திய தரைக்கடலும் சூடானும் இதன் எல்லைகளாக அமைந்துள்ளன. இந்நாட்டின் மொத்தப் பரப்பளவு 10,01,449 ச.கி.மீ. ஆகும். மக்கள் தொகை சுமார் நாலரைக் கோடி ஆகும்.

உலகின் மிக நீளமான நைல்நதி இந்நாட்டின் வழியாகத்தான் ஓடுகிறது. நைல் ஆறு பாயும் பகுதிகள் வளமிகுந்ததாக உள்ளது. மற்றையப் பகுதிகள் வறண்ட பாலைவனப் பகுதியாகும். நைல் நதியின் வண்டல் படிவதால் வேளாண்மைத் தொழில் செழிப்பாக நடைபெற்று வருகிறது. இதனால்தான் எகிப்து The gift of the Nile நீல நதியின் அன்பளிப்பு எனப்படுகிறது. இங்கு விளையும் பருத்திக்கு நல்ல கிராக்கி உண்டு. அது பெரும்பாலும் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

மத்திய தரைக்கடலுக்கும் செங்கடலுக்கும் இடையே சூயஸ் கால்வாய் வெட்டப் பட்டுள்ளது. இக்கால்வாயால் ஐரோப்பிய, ஆசிய நாடுகளுக்

கிடையேயான கடல் வழி மிகவும் குறுகி விட்டது. இக்கால்வாய் எகிப்து நாட்டில் அமைந்துள்ளதால் இதன் வழி செல்லும் கப்பல்கள் செலுத்தும் வருமானம் இந்நாட்டில் மிகப் பெரும் வருமானமாக உள்ளது.

நைல் ஆற்றின் குறுக்காக அஸ்வான் எனுமிடத்தில் மிகப் பெரிய அணை ஒன்று கட்டப்பட்டுள்ளது. இதன் மூலம் சுமார் 25 இலட்சம் ஏக்கர் நிலம் பாசனவசதி பெற்று வருகிறது.

எகிப்து நாட்டு மக்களில் பெரும்பாலோர் முஸ்லிம்களாவர். எகிப்தின் தலைநகர் கெய்ரோவாகும். ஆப்பிரிக்காக் கண்டத்திலேயே இது தான் பெரிய நகரம். போர்ட் ஸயீத், அலெக்சாண்டிரியா, சூயஸ் ஆகியவை முக்கிய துறைமுக நகரங்களாகும்.

தலைநகர் கெய்ரோவுக்கு அருகில் உலகப்புகழ்பெற்ற பிரமிடுகள் உள்ளன. இவை பண்டைய மன்னர்களின் உடல்களைப் பாதுகாக்க 4,500 ஆண்டுகட்கு முன்பு கட்டப்பட்டவையாகும். இவற்றின் உட்புறச் சுவர்களில் ஒருவகை சித்திர எழுத்துக்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவற்றின் மூலம் அக்கால மன்னர்களைப்பற்றிய தகவல்களைத் தெரிந்துகொள்ள முடிகிறது. இங்குள்ள பழங்காலச் சின்னங்களில் எழில்மிகு வண்ண ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. பிரமிடுக்கருகில் ஸ்பிங்ஸ் (Sphinx) என்ற மனித முகச்சிங்கச் சிலை ஒற்றைக் கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. இவற்றை உருவாக்கியவன் சியாப்ஸ் எனும் மன்னன் ஆவான்.

சியாப்ஸ் மன்னனுக்கு நெடுங்காலத்திற்குப்பின் வலுவான ஆட்சியை அமைத்தவன் பிர்அவ்ன் என்று அழைக்கப்படும் இரண்டாம் ரமேசஸ் மன்னனாவான். இவன் தன்னையே கடவுளாக மக்கள் வணங்க வேண்டும் எனப் பணித்தவன். இதற்கு மாறாக மனிதனை வணங்காது, ஒரே இறைவனையே வணங்கவேண்டுமெனப் போதித்த மூஸா (அலை) அவர்களை எதிர்த்து நின்றவன். அல்லாஹ்வினால் கடலில் மூழ்கடிக்கப்பட்டு இறந்தான்.

அலெக்சாண்டரும் எகிப்தைக் கைப்பற்றி ஆண்டார்; அலெக்சாண்டிரியா என்னும் நகரையும் உருவாக்கினார். உமர் (ரலி) கலீஃபாவாக இருந்த காலத்தில் அம்ரு இப்னு ஆஸ் (ரலி) என்பவரின் தலைமையில் சென்ற படை எகிப்தை வென்றது. அன்றுமுதல் முஸ்லிம்களின் ஆட்சியே நடைபெற்று வருகிறது. 1952ஆம் ஆண்டு முதல் மன்னராட்சி ஒழிந்து மக்களாட்சி அமைக்கப்பட்டது.

உலகப் புகழ்பெற்ற இஸ்லாமியப் பல்கலைக்கழகமான அல்அஸ்ஹர் கெய்ரோவில்தான் உள்ளது.

**ஏர்வாடி:** பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டத்தில் அமைந்துள்ள சிற்றூர். இது இராமநாதபுரத்திற்கு அருகில் உள்ளது. இங்கு இறைநேசச் செல்வர் சையிது இப்ராஹீம் ஷஹீது வலியுல்லாஹ் அடக்கமாகியுள்ளார். இத் தர்காவிற்கு முஸ்லிம்கள் ஜியாரத் செய்வதற்குச் சென்று வருகின்றனர். இங்கு ஆண்டுதோறும் துல்கஃதா மாதம் பிறை 23 அன்று உர்ஸ் நடைபெறும். இதில் முஸ்லிம்களும் இந்துக்களும் பெரும் எண்ணிக்கையில் கலந்து கொள்கின்றனர். சேதுபதி மன்னர்களும் ஆர்க்காடு மன்னரும் நிலங்களையும் பொருட்களையும் வழங்கியுள்ளனர்.

**ஐக்கிய அரபிய எமிரேட்ஸ்:** அரபு அமீர்களின் ஆட்சியின் கீழ் உள்ள ஏழு சிறிய நாடுகளின் கூட்டமைப்பு ஐக்கிய

அரபு எமிரேட்ஸ் ஆகும். அவை அபுதாபி (அபூலபீ), துபாய், ஷார்ஜா, உம்முல் கைவன், ராஸுல் கைமா, ஃபுஜைரா, அஜ்மான் ஆகிய ஆட்சிப் பகுதிகளாகும். இவற்றுள் மிகப்பெரியது அபுதாபி. மிகச் சிறியது அஜ்மான். இந்த அரபுச் சிற்றரசுகள் ஆசியாவின் தென்மேற்கே வளைகுடாப் பகுதியில் அடுத்தடுத்து அமைந்துள்ளன. எமிரேட்சின் மொத்தப் பரப்பளவு 83,600 ச. கி. மீ. ஆகும். மக்கள் தொகை சுமார் 80 இலட்சமாகும்.

ஐக்கிய அரபு எமிரேட்சைச் சேர்ந்த குடிமக்கள் அனைவரும் முஸ்லிம்களே யாவர். பணி நிமித்தமாக இந்நாடுகளில் ஈரானியர், பாகிஸ்தானியர், வங்காள தேசத்தவர், இந்தியர், இலங்கையர் வாழ்கின்றனர். இவர்கள் அனைவரும் தங்கிச் செல்வோரே தவிர குடியுரிமை பெற்று வாழ்வோர் அல்லர்.

அபுதாபியிலும் துபாயிலும் அதிக அளவில் பெட்ரோல் கிடைக்கிறது. இந்நாடுகளின் செல்வ வளத்துக்கு அதுவே ஆதாரமாகவும் அமைந்துள்ளது. சுங்கவரி இல்லாத நாடுகளாதலால் மிகப்பெரிய சர்வதேசச் சந்தையாகவும் எமிரேட்ஸ் விளங்குகிறது.

இங்கு கோடைகாலத்தில் வெயில் கடுமையாக இருக்கும். குளிர்காலத்தில் குளிர் மிதமாக இருக்கும்.

**ஐதுரூஸ் நயினார்ப் புலவர்:** இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்களுள் குறிப்பிடத்தக்கவர் ஐதுரூஸ் நயினார்ப் புலவர். இவர் திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்தில் உள்ள காலங்குடியிருப்பு எனும் ஊரில் பிறந்தவராவார். இவரது தந்தையார் மீரா நயினார்ப் புலவர் ஆவார்.

இவரைப் போன்றே இவர் முன்னோர்கள் பலரும் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களாகவே வாழ்ந்துள்ளனர். ஐதுரூஸ் நயினார்ப் புலவர் சிறு வயதில் புலவர் நாயகம் சேகனாப் புலவரிடம் தமிழ் கற்றவர். கவிபாடுவதில் வல்லமை பெற்றவர்.

இவர் இயற்றிய காவியம் ‘நவமணி மாலை’ என்பதாகும். இது முஹிய்யுத்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களின் வாழ்க்கை வரலாற்றைப் பாடல்களாக விரித்துரைப்பதாகும். இது 35 படலங்களால் ஆனது. 2335 விருத்தப் பாக்களைக்கொண்டது. இந்நூல் இவர் காலத்திற்குப் பின்னரே அச்சாகி வெளிவந்தது.

இவர் வேறு பல பாடல்களையும் இயற்றியுள்ளார். அவை அனைத்தும் ‘ஐதுரூஸ் நயினார்ப் புலவர் பாடல் திரட்டு’ என்ற பெயரில் நூலாக வெளிவந்துள்ளது.

இவர் புலவராக மட்டுமின்றி மெஞ்ஞானச் செல்வராகவும் வாழ்ந்தவர். அலவிய்யா தரீக்காவின் கலீஃபாவாகவும் விளங்கினார். இவர் பெயரில் இன்றளவும் ‘புலவர் வரி’ வசூலிக்கப்பட்டு, இவர் வாரிசுதாரரிடம் அளிக்கப்பட்டு வருவதாகக் கூறப்படுகிறது.

**ஐயூப் (அலை):** அல்லாஹ் தன் திருமறையான திருக்குர்ஆனில் குறிப்பிட்டுள்ள நபிமார்களில் ஒருவர் ஐயூப் (அலை) அவர்கள். இவர் இஸ்ஹாக் (அலை) வழி வந்தவராகக் கருதப்படுகிறார்.

இவர் செல்வ வளம் படைத்தவராக இருந்தும் இபுலீசின் ஏவலால் வறிய நிலையை அடைந்தவர். வறுமையோடு கொடிய நோயும் இவர்களைப் பீடித்தது. எந்த நிலையிலும் இடையறா இறைவணக்க நெறியினின்றும் சிறிதும் வழுவாது வாழ்ந்தவர். இவரது துணைவியார் ரஹீமா நாச்சியார் துன்

பங்களைப் பகிர்ந்தவராக, தோன்றாத் துணையாக இருந்து வந்தார். நோய் முற்றிய நிலையில், இவரது நாவும் இதயமும் இயங்கா நிலை எய்தின. இதனால் இறைவனின் திருப்பெயரை எந்நேரமும் நினைந்து போற்றித் துதித்து வணங்க இயலாமற் போகுதே எனக் கவலைப்பட்டார்.

அச்சமயத்தில் இறை தூதர் ஜிப்ரீல் (அலை) இவர் முன் தோன்றி, எழுந்து நின்ற நிலையில் காலால் தரையை அடிக்குமாறு பணித்தார். ஐயூப் (அலை) அவர்களும் அவ்வாறே செய்தார். காலால் அடித்த இடத்திலிருந்து பொங்கியெழுந்த நீர், ஊற்றாக வெளிப்பட்டது. அந்நீரில் குளித்து நோய்த்தொல்லை நீங்குமாறு பணித்தார். அவரும் அவ்வாறே செய்ய நோய் நீங்கி, நலம் பெற்றார்.

கொடிய நோயினின்றும் விடுதலை பெற்ற ஐயூப் (அலை) பல ஆண்டுகள் உலகில் வாழ்ந்து இறைமார்க்கப் பிரச்சாரம் செய்து வந்தார். நீண்ட காலம் உலகில் வாழ்ந்து இறைவனின் பெருமையை உலகில் நிலை நாட்டினார். இறைமார்க்கச் சிறப்பை மக்களிடையே பரப்பினார்.

கொடிய நோயால் நரகவேதனையை அடைய நேரிட்டபோதிலும் இறை வணக்க நெறியினின்றும் கடுகளவும் தவறா இவர்தம் மன உறுதியும், இறை நம்பிக்கையும், பக்தியும் உலகுக்கு ஒரு உதாரணம் ஆகும்.

**ஔரங்கசீப்:** முகலாய மன்னர்களில் இந்தியா முழுமையையும் வெற்றி கொண்ட மாமன்னராக வாழ்ந்தவர் ஔரங்கசீப் ஆலம்கீர் ஆவார். இவர் ஷாஜஹானின் மூன்றாம் மகனாவார்.

இவர் சிறுவராக இருந்த காலத்தில் இவருக்குக் கல்வி கற்பிக்க மிகச் சிறந்த மார்க்க அறிஞர்கள் ஆசிரியர்களாக நியமிக்கப்பட்டனர். அவர்கள் இவருக்குக் குர்ஆன், ஹதீஸ், ஃபிக்ஹு சட்டங்களைத் திறம்படப் போதித்தனர். இயல்பாகவே மார்க்கப்பற்று மிகுந்த ஔரங்கசீப் இறைநெறிவழுவா இறைநேசச் செல்வராக வளரலானார். மார்க்கக் கல்வியோடு அரபி, பார்ஸீ, துருக்கி, உருது, ஹிந்தி ஆகிய மொழிகளிலும் நல்ல பாண்டித்தியம் பெற்றார்.

இளமை தொட்டே இவர் உள்ளத்தில் மெஞ்ஞான உணர்வாகிய சூஃபித் தத்துவங்கள் அழுத்தமாக நிலைபெறத் தொடங்கின. அதன் விளைவாக இவர் சூஃபி மனநிலை பெற்றவராக இருந்தார். ஆடம்பர வாழ்வை வெறுத்து எளிய வாழ்வு வாழவே விரும்பினார். அவ்வாறே வாழவும் தொடங்கினார். அதனால் இவரை 'ஃபக்கீர் இளவரசர்' என மற்றவர்கள் கூறுவது வழக்கமாகி விட்டது.

இறைப்பற்று மிக்கவராக இருந்தது போன்றே வீரம் மிக்கவராகவும் இருந்தார். இளம் வயதிலேயே முறையான போர்ப்பயிற்சிகளைப் பெற்றார். மன உறுதியும் வீர உணர்வும் மிக்கவராக ஔரங்கசீப் வளர்ந்தார்.

பதினாறாவது வயதில் ஒரு பிரிவின் படைத் தளபதியாக நியமிக்கப்பட்டார். பதினெட்டாவது வயதில் தக்காணப் பகுதிக்கு ஆளுநராக ஆக்கப்பட்டார். இவர் இளம் வயதிலேயே போர்க்களங்கள் பல கண்டார். அங்கு தீரத்துடன் போரிட்டுத் தம் வீரத்தை நிலைநாட்டினார்.

அவர் தந்தை ஷாஜஹான் கடுமையான நோயால் பாதிக்கப்பட்டார். அவர் பிழைப்பது அரிது எனக் கருதிய அவர் குமாரர்கள் அரியணையைக் கைப்பற்ற முனைந்தனர். தம் சகோத

ரர்களில் அரியணை ஏறும் தகுதி யாருக்கும் இல்லை என்பதை உணர்ந் தார். இஸ்லாமிய நெறி பிறழா ஆட்சி அமைப்பதில் கண்ணுங் கருத்துமாக இருந்தார். இவ்வாறு அமைவது தம் சகோதரர்களால் இயலாது என்ற முடிவுக்கு வந்தார். எனவே, மூத்த சகோதரர்கள் இருந்த போதி லும், அவர்களைப் புறக்கணித்துவிட்டு தம்மையே முகலாயப் பேரரசராக அறிவிப்புச் செய்து அரியணை ஏறி னார். அத்துடன் ‘ஆலம்கீர்’ எனும் பட்டத்தையும் சூடிக்கொண்டார். இதற்கு ‘அகிலமனைத்தும் ஆள்பவர்’ என்பது பொருளாகும்.

தம் மூத்த சகோதரர்களைப் புறக் கணித்து ஔரங்கசீப் அரசு கட்டில் ஏறியது அவர் தந்தை ஷாஜஹானுக் குப் பிடிக்கவில்லை. இதனால் ஔரங்கசீப் தம் தந்தையை எல்லா வசதிகளோடும் வீட்டுக்காவலில் வைத் தார்.

இந்தியாவின் பெரும் பகுதிக்கு ஔரங்கசீப் சக்கரவர்த்தியாக இருந்த போதிலும் எளிய வாழ்வே வாழ்ந்தார். இஸ்லாமியக் கடமைகளையும் நியமங் களையும் கண்டிப்புடன் கடைப்பிடித் தார். அரசு ஆடம்பரங்களை ஒழித் தார். அரசு அதிகாரிகளையும் எளிமை வாழ்வு வாழப் பணித்தார். மன்னர் களை கவிதையால் புகழும் போக்கை நிறுத்தினார். வீணான அரசுச் செலவு களை நிறுத்தினார். அரசுப் பணம் மக்கள் நலனுக்கு மட்டுமே செலவிடப் படவேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார். மக்களின் குறைகளை அறி வதிலும் அவற்றைத் தீர்ப்பதிலும் பெருங்கவனம் செலுத்தினார்.

தம் சொந்தச் செலவுகளுக்கு ஒரு காசு கூட அரசாங்கக் கருவூலத்தி லிருந்து எடுக்க இவர் விரும்பவில்லை. திருக்குர்ஆனுக்குப் படி எடுத்தும், தொப்பி தைத்தும் அவற்றை விற்று அதிலிருந்து வரும் வருமானத்தைக் கொண்டே தம் செலவுகளைச் செய்து கொள்வது அவரது வழக்கம்.

இஸ்லாமிய மெய்ஞ்ஞானச் செல்வ ராக விளங்கிய ஔரங்கசீப் மார்க்க மேதைகளைப் பெரிதும் மதித்தார். அக்காலத்தில் புகழ்பெற்று விளங்கிய மெய்ஞ்ஞான மேதை ஷைகு ஸைஃபுத் தீன் ஸர்ஹிந்தி அவர்களின் சீடராக இருந்தார். தமிழ்நாட்டின் தலை சிறந்த மார்க்க மேதை சதக்கத்துல்லா அப்பா அவர்களிடம் அளவிலா அன்பும் நட்பும் கொண்டிருந்தார். அப்பா அவர்களைத் தம் சார்பில் வங்காளத் தின் ஆளுநராக இருக்க வேண்டினார். அப்பா இதை மறுத்துத் தம் சீடரான புரவலர் சீதக்காதியைப் பரிந்துரை செய்தார். வள்ளல் சீதக்காதியும் சில காலம் வங்காளத்தின் ‘கவர்னராக’ இருந்தார்.

ஆங்கிலேயர்களின் தூண்டுதலால் தம்மை எதிர்த்த சிவாஜியை இவர் அடக்க முற்பட்டார். ஆனால் சிவாஜி யின் வாரிசுகள் மீது அன்பும் ஆதரவும் காட்டினார். இவர் நீதி செலுத்து வதில் இன, மத பேதங்கடந்து நேர்மை யுடன் செயல்பட்டார். இறந்த கண வனுடன் மனைவி தீயில் உடன்கட்டை ஏறும் ‘சதி’ வழக்கத்தை நிறுத்தினார். இஸ்லாமியப் புனித இடங்களுக்கு மட்டுமல்லாது அனைத்து மதக் கோயில்களுக்கும் அதிக மானியங்களை வழங்கினார். எனினும் சரித்திர நூல் களில் அவரைப் பற்றிய புனைந்துரை களும்,பொய்யுமே மிகுதியாகக் காணப் படுகின்றன.

இறைஞானம் மிக்கவராக மார்க்க வழி வாழ்ந்து தம் 89ஆம் வயதில் மறைவுற்றார். இவரது விருப்பப்படி

இவர் உடல் தௌலதாபாநிற்கருகில் ஷைகு புர்ஹானுத்தீன் கான் எனும் இறைநேசச் செல்வரின் அடக்கவிடத்திற்குப் பக்கத்தில் நல்லடக்கம் செய்யப் பட்டுள்ளது.

**ஔலியா :** இச்சொல் இறைநேசச் செல்வர்களைக் குறிக்கும் சொல்லாகும், இறைநேசச் செல்வர்களான வலிமார்களைக் குறிக்கும் பன்மைச் சொல்லே 'ஔலியா' என்பது.

தன்னை உணர்ந்து, தன் தலைவனாகிய அல்லாஹ்வையும் நன்கு அறிந்து உணர்ந்துள்ள மகான்களே ஔலியாக்கள். இறைநேசர்களாகிய இவர்கள் இன்பத்தையும், துன்பத்தையும் சமமாகவே பாவிப்பர். இவர்கட்கு இறைவனைத் தவிர்த்து வேறு யாரிடத்தும் அச்சமேற்படுவதில்லை. இவர்களின் தன்மை பற்றி அல்லாஹ் "(ஔலியாக்களுக்கு) நிச்சயமாக யாதொரு பயமுமில்லை. அவர்கள் துக்கிக்கவும் மாட்டார்கள் என்பதை நீங்கள் (உறுதியாக) அறிந்து கொள்ளுங்கள்" (10.62) எனத் திருமறையில் கூறியுள்ளான்.

**கஃபா:** இறைவணக்கத்திற்கென்று இவ்வுலகில் ஏற்பட்ட முதல் இறையில்லம் கஃபா ஆகும். இது அரேபியாவில் மக்காவில் அமைந்துள்ளது. கஃபத்துல்லாஹ்' என்பதன் சுருக்கமே 'கஃபா' ஆகும். கஃபா என்பதற்குச் 'சதுரம்' என்பது பொருளாகும். இது சதுரவடிவில் அமைந்துள்ளதால் இப்பெயர் பெற்றது.

கஃபா இறையில்லம் கருங்கறகளால் கட்டப்பட்டுள்ள வெற்றுக் கட்டிடமாகும். இதன் நீளம் 14மீட்டர், அகலம் 8½ மீட்டர், உயரம் 17 மீட்டர். இவ்விறை இல்லத்தின் ஒரு பகுதியில் 'அல் அஸ்வத்' எனும் வழவழப்பான கருமை நிறக் கல் பதிக்கப்பட்டுள்ளது. இது விண்ணிலிருந்து மண்ணுக்கு வந்ததாகக் கூறப்படுகிறது.

கஃபாவைச் சுற்றி வருதல் 'தவாப்' ஆகும். இவ்வாறு சுற்றி வரும்போது 'அல் அஸ்வதை' முத்தமிடுவது வழக்கம். கஃபா கட்டிடம் முழுமையும் பட்டுக் கம்பளத்தால் மூடப்பட்டுள்ளது. அதில் தங்க ஜரிகைகளால் திருக்குர்ஆன் வசனங்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமையான 'ஹஜ்' கடமையை நிறைவேற்ற உலகெங்கிலுமிருந்து முஸ்லிம்கள் இங்கே குழுமி இறைவணக்கம் புரிகின்றனர். உலகெங்கும் வாழும் முஸ்லிம்கள் கஃபா இறையில்லத்தை நோக்கியே இறைவணக்கம் புரிகின்றனர். கஃபா இறையில்லத்தின் உட்பகுதியில் மூன்று சந்தன மரத்தூண்கள் உள்ளன. அவற்றில் திருக்குர்ஆன் வசனங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

இவ்வுட்பகுதி ஸுஊதி மன்னரால் சுத்தம் செய்யப்படுகிறது.

**கண்ணகுமது மகுதூம் முஹம்மதுப் புலவர்:** இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்களில் பதிப்பாசிரியராகவும் விளங்கியவர் கண்ணகுமது மகுதூம் முஹம்மதுப் புலவர். இவர் காயல்பட்டினத்தில் பிறந்தவர். இவர் தந்தையார் பெயர் கண்ணகுமது என்பதாகும். அராபிய முறையில் தம் பெயரோடு தம் தந்தை யாரின் பெயரையும் இணைத்து, கண்ணகுமது மகுதூம் முஹம்மது என அமைத்துக் கொண்டார்.

இவர் சிறந்த இஸ்லாமியத் தமிழ்ப் புலவராய் விளங்கியவர். கீர்த்தனங்கள் சிலவற்றையும் கவிதைகள் சிலவற்றையும் இயற்றியுள்ளார். தம் படைப்புகளைக் காட்டிலும் பிறர் படைப்புகளைப் பதிப்பித்து வெளியிட்ட பெருமை இவருக்கு உண்டு.

இவர் சென்னையில் வாழ்ந்த காலத்தில் 'முஹம்மதியர் மார்க்க வித்யா

சாலை'ச் செயலாளராகப் பணியாற்றினார். அதே சமயத்தில் பல்வேறு பதிப்பகங்களோடு தொடர்புகொண்டு, இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்களைப் பதிப்பிப்பவராகவும் பணியாற்றினார். காலப்போக்கில் மக்களால் மறக்கப்பட்டிருந்த பல பெரிய முஸ்லிம் தமிழ்ப் புலவர்களின் படைப்புகளை மீண்டும் முறையாகப் பதிப்பித்து வெளிப்படுத்தினார். இவ்வாறு அச்சேற்றிப் பதிப்பித்த இஸ்லாமியத் தமிழ் நூல்கள் சுமார் அறுபது ஆகும். இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களின் வாழ்க்கை வரலாற்றை முறையாகத் தொகுக்கத் தொடங்கினார். அப்பணி நிறைவேறும் முன் இறப்பெய்தினார். இவர் சென்னையிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டார்.

**கதீப்:** இச்சொல்லுக்குச் 'சொற்பொழிவாளர்' என்பது பொருளாகும். வெள்ளிக்கிழமை தோறும் பள்ளியில் 'குத்பா' பேருரை நிகழ்த்துபவர் கதீப் ஆவார். இவர் வெள்ளுடை அணிந்து, கையில் தடி ஏந்தி மின்பரில் நின்று குத்பா உரை ஆற்றுவார்.

இஸ்லாத்தின் முதல் கதீப் அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஆவர். பெருமானார் அவர்கள் மின்பரில் நின்று முஸ்லிம்களுக்கு அறிவுரை வழங்குவது வழக்கம். பெருமானாரைப் பின்பற்றி அடுத்து கலீஃபாக்களாக இருந்த நால்வரும் கதீப்களாக விளங்கினர். நீண்டகாலம் வரை கதீப்களே இமாமாகவும் இருந்து தொழுகை நடத்தினர். ஆனால், ஹாரூனுர் ரஷீது காலத்தின் கதீப்கள் தனியே அமர்த்தப்பட்டனர். பின்னர் இவர்களே கலீஃபாவின் பிரதிநிதிகளான கதீப்களாவும் இமாமாகவும் அமைந்து தொழுகை நடத்தினர். இம்முறையே இன்று வரை எங்கும் கடைப்பிடிக்கப்படுகிறது.

**கதீஜா (ரலி):** அண்ணல் நபி (ஸல்) அவர்களின் முதல் மனைவி என்னும் சிறப்புக்கு உரியவர். இவருக்கு முன்பே இருமுறை திருமணம் ஆனபோதிலும் விதவை நிலை பெற்றவராக இருந்தார். பெரும் செல்வச் சீமாட்டியாக வணிகம் செய்து வந்தார். தம் வணிக நிறுவனத்தில் பணிசெய்து வந்த அண்ணலாரின் நல்லியல்புகளை அறிந்து, வறியவரான பெருமானாரை மணமுடிக்க விரும்பினர். அதற்குப் பெருமானாரும் இசையவே, எளிய முறையில் இருவருக்கும் திருமணம் நடைபெற்றது. அப்போது கதீஜா (ரலி) அவர்கட்கு வயது நாற்பது. பெருமானார் (ஸல்) அவர்கட்கு வயது இருபத்தியாறு. அவர்கட்கு இரு ஆண் மக்களும், பாத்திமா முதலாக மூன்று பெண் மக்களும் பிறந்தனர். ஆண் பிள்ளைகள் இருவரும் இளமையிலேயே இறந்துவிட்டனர்.

ஹிரா குகையில் ஜிப்ரீல் (அலை) மூலம் வஹீயைப் பெருமானார் பெற்றார். இச்செய்தியை முதலில் கேட்டு, பெருமானார் சொல்லில் நம்பிக்கை கொண்டு, அண்ணலாரை இறைத்தூதராக ஏற்று ஈமான் கொண்டார். குறைஷிகளிடம் பெருமானார் பெருந்துன்பம் அடைந்தபோதெல்லாம், ஆறுதலாக இருந்தவர் அன்னை கதீஜா (ரலி) அவர்கள்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடன் இருபத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்து தம் 64வது வயதில் நோய்வாய்ப்பட்டு காலமானார். இவரது அடக்கத்தலம் மக்காவில் உள்ளது.

**கந்தூரி:** மறைந்த இஸ்லாமிய இறைநேசச் செல்வர்களின் நினைவாக நடைபெறும் விருந்துக்குக் கந்தூரி என்று பெயர். இது பாரசீகச் சொல். இதற்

குத் தோல், அல்லது துணி மேசை விரிப்பு' எனப் பொருள் கூறப்படுகிறது.

இன்று விருந்து என்ற பொருளிலும் இச்சொல் பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஆனால், இஸ்லாமிய மார்க்கத் தொடர்புடைய விஷேசங்களுக்கு மட்டுமே இச்சொல் பயன்படுத்தப்பட வேண்டும் என மார்க்க அறிஞர்கள் கூறுகின்றனர்.

தர்காக்களில் அடக்கமாகியுள்ள இறைநேசச் செல்வர்களின் நினைவு நாளாகவும் கந்தூரி அமைந்துள்ளது. இத்தகைய கந்தூரிகளில் விருந்தேதும் அளிக்கப்படுவதில்லை.

**கமால் அத்தா துர்க்:** துருக்கி நாட்டின் மறுமலர்ச்சிக்குக் காரணமானவர், முஸ்தபா கமால் அத்தா துர்க். இவருக்குப் பெற்றோர் இட்டபெயர் முஸ்தபா என்பதாகும். இவர் பள்ளியில் பயிலும் போது இவர் ஆசிரியர் பெயரும் முஸ்தபாவாக இருந்தது. இருவர் பெயரும் முஸ்தபாவாக இருப்பதால் வேறுபாடு தெரிய இவரை 'முஸ்தபா கமால்' என்று அழைக்கலானார். அதுவே இவரது இயற்பெயர்போன்று அமைந்துவிட்டது.

இவர் சிறுவராக இருந்தபோது துருக்கி நாடு மிகவும் பிற்பட்ட நாடாக மோசமான நிலையில் இருந்தது. இதனால் துருக்கியை 'ஐரோப்பாவின் நோயாளி' என்று அழைக்கும் நிலை ஏற்பட்டது. சிறுவராக இருந்தபோதே இந்நிலை அவருக்கு உறுத்தலாக இருந்தது.

சிறுவராக இருந்தபோது ஆளுமைத் தன்மை உடையவராக விளங்கினார். பள்ளியில் இவரே சட்டாம்பிள்ளை. தன்னை அடித்த அரபி ஆசிரியரை இவர் திரும்ப அடித்துவிட்ட காரணத்துக்காக, பள்ளியிலிருந்து வெளியேற்றப்பட்டார். மீண்டும் கல்வியைத் தொடர விரும்பாத இவர் போர்ப் படையில் சேர்ந்தார். தம் திறமையான பயிற்சியினால் விரைவிலேயே 'காப்டன்' எனும் தகுதியைப் பெற்றார்.

இவர் விரைவிலேயே புரட்சி மனப்பான்மை கொண்ட இராணுவ வீரர்களைத் திரட்டி ஓர் அமைப்பை உருவாக்கினார். அதன் உறுப்பினர்களுக்கென இதழ் ஒன்றை இரகசியமாகத் தொடங்கினார். அதில் புரட்சிகரமான கருத்துகளை வெளிப்படுத்தினார். இதனால் இவர் சிறிது காலம் சிறை செல்ல நேர்ந்தது.

விரைவிலேயே கலிப்போலி எனுமிடத்தில் பிரிட்டிஷ் படையுடன் நடைபெற்ற போரொன்றில் இவர் தலைமை தாங்கிப் போரிட்டார். ஆங்கிலப் படையை புற முதுகிட்டோடச் செய்தார். இதன்மூலம் இவரது ஆற்றல் முழுமையாக வெளிப்பட்டது. இவரது புகழ் நாடெங்கும் பரவியது.

விரைவிலேயே கிரேக்கப்படை துருக்கியின் ஒரு சிறு பகுதியை வெற்றி கொண்டது. அவர்களின் ஆக்கிரமிப்பை சுல்தானும் அங்கீகரித்தார். இதனை அறவே விரும்பாத முஸ்தபா கமால், மக்களின் ஆதரவோடும் இராணுவத்தின் உதவியோடும் புதிய தேசிய அரசு ஒன்றை அமைத்தார். அதன் தலைவராகத் தம்மைப் பிரகடனப்படுத்திக் கொண்டார்.

அச்சமயம் கிரேக்கப்படை மேலும் படை நடத்தி துருக்கிப் பகுதிகளை ஆக்கிரமிக்கத் தொடங்கியது. முஸ்தபா கமால் தாமே படைநடத்தி, கிரேக்கப்படையைத் தோற்கடித்தார். ஆக்கிரமிப்புப் பகுதியை மீட்டார். கிரேக்கப் படைகளை விரட்டி அடித்

தார். இதன்பின் அரசு அதிகாரம் அனைத்தையும் தாமே மேற்கொண்டார். திறமையற்ற சுல்தானைப் பதவி விலக்கம் செய்தார். சுல்தான் துருக்கியை விட்டு வெளியேறினார். அதன்பின் கலீஃபாவான அப்துல் மஜீத் என்பவர் மற்றவர்களின் துணையோடு குழப்பம் செய்ய முயன்றார். அவரையும் நாடு கடத்தினார். அத்துடன் கலீஃபா பதவியையும் இல்லாமல் ஆக்கினார்.

நாட்டின் முழு அதிகாரத்தையும் பெற்ற முஸ்தபா கமால் ஐரோப்பிய நாடுகளுக்கு இணையாக துருக்கியையும் ஆக்க முனைந்தார். அதற்காகப் பல சீர்திருத்தங்களைச் செய்தார். அதுவரை முஸ்லிம்கள் அணிந்து வந்த குஞ்சம் வைத்த துருக்கிக் குல்லாய்களுக்குப் பதிலாக ஆங்கிலேயர் அணியும் தொப்பிகளை அணிய வேண்டும் எனக் கட்டளையிட்டார். மீறியவர்களைக் கடுமையாகத் தண்டித்தார். பெண்கள் பர்தா அணிவதைத் தடை செய்தார். மார்க்க அமைப்புகளையெல்லாம் கலைத்து, அவற்றின் சொத்துகளையெல்லாம் அரசுடைமையாக்கினார். ஐரோப்பிய நாடுகளில் உள்ளதுபோல் துருக்கி நாட்டின் சட்டங்களை மாற்றியமைத்தார். தம் நாட்டை முழுக்க முழுக்க ஐரோப்பிய நாடுகளின் அடிப்படையில் உருவாக்கினார். அதற்கு முதற்படியாக துருக்கி மொழியை ஆங்கில வரிவடிவமான ரோமன் லிபியில் எழுதுமாறு கட்டாயப்படுத்தினார்.

இவர் ஏற்படுத்திய பல்வேறு சீர்திருத்தங்களால் துருக்கி நாடு வெகு விரைவிலேயே பலமான, நவீன நாடாக உருவெடுத்தது. பொருளாதார வலிமை ஏற்பட்டது. இத்தகைய மாபெரும் மறுமலர்ச்சிக்குக் காரணமான முஸ்தபா கமாலைப் பாராட்டும் வகையில் துருக்கிப் பாராளுமன்றம் இவருக்கு 'அத்தா துர்க்' எனும் விருதினை வழங்கியது. இதற்குத் 'துருக்கியின் தந்தை' என்பது பொருளாகும்.

இவர் 1938ஆம் ஆண்டு நவம்பர் 10 ஆம் நாள் இஸ்தம்புலில் காலமானார். இவரது உடல் அங்காராவில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது.

**கருத்த ராவுத்தர் (ஹாஜி):** முஸ்லிம் கல்வி வளர்ச்சிக்கு பாடுபட்டவர்களில் குறிப்பிடத்தக்கவர் ஹாஜி கருத்த ராவுத்தர். உத்தம பாளையத்தில் 1888இல் பிறந்த இவரது இயற்பெயர் முஹம்மது மீரான் ராவுத்தர் என்பதாகும். இவர் தம் தமையனாரைவிடச் சற்றுக் கருப்பு நிறமாக இருந்ததனால் 'கருத்த ராவுத்தர்' என அழைக்கப்பட்டார். நாளடைவில் இப்பெயரே அவருக்கு நிலைத்துவிட்டது.

விவசாயக் குடும்பத்தைச் சார்ந்த இவர், இளமையில் மூன்றாம் வகுப்பு வரையே படித்தார். பின்னர் திண்டுக்கல் சென்று மார்க்கத்துறையில் கல்வி பயின்றார். திறம்பட வேளாண்மைத் தொழில் செய்து பெரும் பொருள் தேடினார். இவர் பெற்ற மார்க்க ஞானம், கல்வி வளர்ச்சிக்கு உதவத் தூண்டியது. அதன் விளைவாக உத்தம பாளையத்தில் 1912இல் ஆரம்பப் பாடசாலை ஒன்றைத் துவங்கி, இளம் சிறார்கள் முறையான கல்வி பெற வழி வகுத்தார்.

இரண்டாண்டுகள் கழித்து உத்தம பாளையத்தில் பள்ளியொன்றையும் அதனை ஒட்டி மதரசா ஒன்றையும் நிறுவினார். இதன் மூலம் இஸ்லாமியச் சிறுவர்கள் மார்க்கக் கல்விபெற வாய்ப் பேற்பட்டது. அவ்வூரில் தாய் சேய் நல விடுதி ஒன்றையும் உருவாக்கித் தந்தார். அக்காலத்தில் முஸ்லிம்களால் உருவாக்கப்பட்ட ஜமால் முஹம்மது

கல்லூரி, புதுக்கல்லூரி மற்றும் பல கல்லூரிகளுக்கும் மதரஸாக்களுக்கும் வேண்டிய அளவு நிதியுதவி செய்தார். பள்ளிவாசல்கள் கட்டுவதற்கும் இல்லையெனாது வாரி வழங்கினார்.

பின்னர், இவர் உத்தமபாளையத்தில் புதிய கல்லூரி ஒன்றை உருவாக்கினார். காதர் முஹிய்யுத்தீன் ஆண்டகை மீது அளவற்ற அன்பும் பக்தியும் கொண்டவராதலால் அக்கல்லூரிக்கு 'கருத்த ராவுத்தர் கௌதிய்யா கல்லூரி' எனப் பெயரிட்டார். அஃதே போன்று மதரஸாவுக்கும் 'கௌதிய்யா மதரஸா' என்றே பெயரிட்டார்.

தொண்டுள்ளமும் வள்ளல் தன்மையும் வாய்க்கப்பெற்ற ஹாஜி கருத்த ராவுத்தர் மார்க்க வழிமுறைகளைக் கண்டிப்பாகக் கடைப்பிடித்து ஒழுகியவர். இஷாஅத்துல் இஸ்லாம் அமைப்பின் தலைவராக இருந்து மனந்திருந்தி இஸ்லாத்தில் இணையவரும் பிற சமயத்தவர்களை இறுக அணைத்து இஸ்லாத்தைத் தழுவத்துணைசெய்தார்.

மார்க்கப் பற்றாளராகவும் ஈகைக் குணம் மிக்கவராகவும் எளிய வாழ்வு வாழ்ந்துவந்த கருத்த ராவுத்தர் 1958-ஆம் ஆண்டு பெரியகுளத்தில் நடைபெற்ற விழாவொன்றில் கலந்து கொண்டபோது மேடையிலேயே இறப்பெய்தினார். இவரது உடல் உத்தமபாளையத்தில் நயினார் பள்ளியில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

**கலிமா,** இஸ்லாத்தின் மூலவாசகம் 'கலிமா' ஆகும். கலிமா என்ற சொல்லுக்கு 'வாசகம்,' 'சொல்' என்ற பொருள்கள் உண்டு. இறைமொழி அனைத்துமே கலிமாவாகும் என்பர்.

இஸ்லாத்தின் மூல வாசகம் ''லா இலாஹ இல்லல்லாஹு, முஹம்மதுர் ரஸூலுல்லாஹி''என்பதாகும். இதுவே முதல் கலிமாவும் ஆகும். இதன் பொருள் 'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருமில்லை. முஹம்மது (ஸல்) அவர்கள்அவனுடைய திருத்தூதர் ஆவார்' என்பதாகும். இவ்வாசகத்தை முழுமையாக ஏற்று, நெஞ்சில் நிறுத்தி, செயலில் காட்டுவதே முதல் கடமையாகும். இக்கலிமாவை ஏற்றுக்கொண்டதன் அடையாளமாக, ஒருமுறையாவது இதனை உச்சரிக்க வேண்டும். இம்முதற் கலிமாவே இஸ்லாத்தின் நுழைவாயில்.

இரண்டாவது கலிமா 'கலிமா ஷஹாதத்' எனக் கூறப்படும். அதன் வாசகம் வருமாறு.

''அஷ்ஹது அன்லாஇலாஹ இல்லல் லாஹு வஹ்தஹு லாஷரீகலஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸூலுஹு''
இதன் பொருள்:

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு எவருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை யாருமில்லை என்று நான் சாட்சி கூறுகிறேன். மேலும், உறுதியாக முஹம்மது (ஸல்) அல்லாஹ்வின் அடியாராகவும் திருத்தூதராகவும் உள்ளார் எனச் சாட்சி கூறுகிறேன்' என்பதாகும்.

மூன்றாவது கலிமா 'கலிமா தம்ஜீது' எனப்படும். அதன் வாசகம் வருமாறு:

''ஸுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி வலா இலாஹ இல்லல் லாஹு வல்லாஹு அக்பர்; வலா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில் லாஹில் அலிய்யில் அளீம்'' என்பதாகும்.

இதன் பொருள்.

'அல்லாஹ் தூய்மையானவன், அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே. மேலும் வணக்கத்துக்குரியவன் அல்லா

ஹுவைத் தவிர வேறு யாருமில்லை. அல்லாஹ் மிகப் பெரியவன். மேலும் மகத்துவமும் உயர்வுமுள்ள அல்லாஹ் வின் துணையில்லாது பாவத்திலிருந்து மீளவோ நன்மை செய்யவோ யாருக் குமே ஆற்றல் இல்லை' என்பதாகும்.

நான்காவது கலிமா 'கலிமா தௌ ஹீது' என்று அழைக்கப்படும். அதன் வாசகம் வருமாறு:

''லா இலாஹ இல்லல்லாஹு வஹ் தஹு லாஷரீக்க லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து 'யுஹ்யீ வயுமீது பியதிஹில் கைரு, வஹுவ அலாகுல்லி ஷைஇன் கதீர்'' என்பதாகும்.

தமிழில் இதற்கான பொருள் வரு மாறு:

''வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் வைத் தவிர வேறு யாருமில்லை. அவ னுக்கே அரசுரிமை உள்ளது. அனைத் துப் புகழும் அவனுக்கே. அவனே வாழச் செய்கிறான். இறக்கச் செய்கிறான். அனைத்து நன்மைகளும் அவன் வசமே உள்ளன.'அனைத்தின் மீதும் அவனுக்கே அதிகாரம்'' என்பதாகும்.

ஐந்தாவது கலிமா 'கலிமா ரத்துல் குப்ர்' என்பதாகும். அதன் வாசகம் பின்வருமாறு:

'அல்லாஹும்மா இன்னீ அஊது பிக மின்அன் உஷ்ரிக பிக ஷைஅன் வ அனா அஃலமு வஅஸ்தஃபிருக லிமாலா அஃலமு இன்னக்க அந்த அல்லாமுல் குயூப் துப்து அன்ஹு வதபர்ரஃது அன்குல்லி தீனின் ஸிவாதீனில் இஸ்லாம் வஅஸ்லம்து வ ஆமன்து வஆகூலு லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரஸூ லுல்லாஹி' என்பதாகும்.

இதன் பொருள் வருமாறு:

இறைவனே உன்னோடு எதனையும் இணை வைப்பதைவிட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். இன்னும் அறிந்து செய்த, அறியாமற் செய்த பாவங்களை விட்டு உன்னிடம் மன்னிப் புத் தேடுகிறேன். உறுதியாக, மறை வானவை அனைத்தையும் நீ அறிவாய். அவற்றிலிருந்து நான் மீண்டுவிட்டேன். தீனுல் இஸ்லாத்தைத் தவிர பிற மார்க் கங்கள் அனைத்தையும் விட்டு நீங்கி விட்டேன். மேலும் நான் முஸ்லிமாகி வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத் தூதர் ஆவார் என்று கூறுகிறேன்' என்பதாகும்.

இக்கலிமா இறைவனால் அருளப்பட் டது. முதல் மனிதரும், நபியுமான ஆதம் (அலை) அவர்களைப் படைப்ப தற்கும் முன்பே அர்ஷில் எழுதப்பட்ட வாசகங்கள் ஆகும். ஆதம் (அலை) முதன்முறையாக உயிர் பெற்றெழுந்த போது அவர் கண்களில் பட்டது இக் கலிமாக்களே ஆகும். ஆதம் (அலை) முதல் நபிகள்நாயகம் (ஸல்) அவர்கள் ஈறாக வந்த நபிமார்கள் அனைவருக் குமே இக் கலிமா வஹி மூலம் இறைவ னால் 'அருளப்பட்டுள்ளது. நபிமார் களையும் வேதங்களையும் இக்கலிமா விற்காகவே அல்லாஹ் அனுப்பியுள் ளான். அனைத்து மறைகளின் அடிப் படை இக் கலிமாக்களே யாகும்.

**கலீஃபா:** இச்சொல்லுக்குப் 'பிரதிநிதி' என்பது பொருளாகும். அல்லாஹ் ஆதம் (அலை) அவர்களைத் தன் பிரதி நிதியாகப் படைத்தான். அதன்பின் மக்களுக்கு வழிகாட்ட வந்த நபிமார் கள் இறைவனின் பிரதிநிதிகளாக தூது வர்களாக மக்களுக்கு இறை மார்க் கத்தை புகட்டினார்கள். இறுதி நபி யோடு தூதுத்துவம் முழுமையடைந்து விட்டது.

அண்ணல் (ஸல்) அவர்கள் மறைவுக் குப் பின், அவர்களால் நிலைநாட்டப்

பட்ட தீனைத் தொடர்ந்து பாதுகாக்க ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்குமாறு அபூபக்ர் (ரலி) கூறினார். பெருமானாரின் பிரதிநிதியாக, கலீஃபாவாக, அபூபக்ர் (ரலி) அவர்களையே தேர்ந்தெடுத்தனர். அவருக்குப்பின் உமர் (ரலி), உதுமான் (ரலி), அலீ (ரலி) ஆகியோர் கலீஃபாக்களாக அமர்ந்து தீன் தொண்டாற்றினர். அதன் பின்னர் இஸ்லாமிய மார்க்கத் தலைமை 'கலீஃபா' எனவே அழைக்கப்பட்டது.

1543ஆம் ஆண்டுவரை குறைஷிகுலத்தைச் சார்ந்தவர்களே கலீஃபாவாக இருந்து வந்தனர். அதன் பிறகு துருக்கி நாட்டுச் சுல்தான்கள் அரசியல் காரணமாக கலீஃபா ஆனார்கள். 1922இல் துருக்கி நாடு குடியரசாகியது. இதன் மூலம் சுல்தான் அரசுரிமை இழந்தாலும் கலீஃபாவாக இருந்தார். 1924ஆம்ஆண்டிற்குப் பின் கலீஃபாப்பதவியும் நீக்கப்பட்டது. அதன்பிறகு சவூதியிலும் எகிப்திலும் கலீஃபாப்-பதவியும் உயிர்ப்பிக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டாலும் வெற்றி பெறவில்லை.

தற்போது காதிரிய்யா தரீக்காவைச் சேர்ந்த ஷைகுவின் பிரதிநிதி 'கலீஃபா' எனும் பெயரால் அழைக்கப்படுகிறார். இவர் ஷைகுவின் பிரதிநிதியாகப் பிறருக்குத் தீட்சை வழங்கும் அதிகாரம் பெற்றவராவார்.

**கவாலி:** 'கவாலி' என்பது உருதுச் சொல்லாகும். இதற்கு இசையோடு கூடிய 'பக்திப் பாட்டு' என்பது பொருளாகும். இறைவனையும், மார்க்க ஞானச் செல்வர்களையும், இஸ்லாமியப் பெரியார்களையும் புகழும் வண்ணம் பாடல்கள் அமைந்திருக்கும். பெரும்பாலான கவாலிகள் வினா விடை வடிவிலேயே அமைந்திருக்கும். ஒருவர் இசையோடு வினாத் தொடுப்பார். அதற்கு மற்றவர் இசையுடன் விடை தருவார், எனவே கவாலி என்பது பெரும்பாலும் போட்டிப் பாட்டுகளாகவே அமையும். பெரும்பான்மை கவிதைகளாகவும், சிறுபான்மை உரை நடை வடிவிலும் கவாலி அமையும்.

கவாலி பக்திப் பாடல்கள் பாட மார்க்க ஞானமும், இஸ்லாமியப் பெரியார்களைப் பற்றியச் செய்திக் குறிப்புகளும் நிறையத் தெரிந்திருக்க வேண்டும். இவ்வகை நூல்கள் உருது மொழியில் ஏராளமாக உண்டு. போட்டியில் வெற்றி பெறுவோரைப் பரிசளித்துப் பாராட்டுவர். இக்கவாலிப் போட்டியில் பெண்களும் பங்கேற்பர். வினா விடை வடிவில் கவாலிப் பாடல்கள் அமைவதால் பார்வையாளர் பேரார்வத்துடன் கேட்டு மகிழ்வர்.

**கனக கவிராயர்:** இவரது இயற்பெயர் செய்கு நெயினார் கான் என்பதாகும். இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள ராஜகெம்பீரம் எனும் சிற்றூரில் பிறந்தவர். தமிழ்ப்புலமை மிக்கவராகத் திகழ்ந்தார். மதுரையைச் சேர்ந்த கொந்தாலகான் என்பவரின் விருப்பத்திற்கேற்ப, ஹுஸைன் (ரலி) அவர்களின் வாழ்க்கை வரலாற்றைக் காப்பியமாகப் பாடினார். 'கனகாபிஷேக மாலை'' என்ற பெயரில் அமைந்த அந்தக் காப்பியமே தமிழில் எழுதப்பட்ட முதல் இஸ்லாமியத் தமிழ்க் காப்பியமாகும். இக்காப்பியம் 35 படலங்களைக கொண்டது. 2,792 விருத்தப்பாக்களால் அமைந்தது. இதன்பிறகு இவர் பெயர் 'கனக கவிராயர்' என ஆயிற்று.

இஸ்லாமியத் தமிழ் ஞான இலக்கியத்துக்கு மாபெரும் பங்களிப்பைச் செய்த குணங்குடிமஸ்தான், தொண்டி ஷைகு மஸ்தான் போன்றோர் இவர் வழி வந்த புலவர் பெருமக்களாவர்.

**கஸ்ஸாலி இமாம் (ரஹ்):** இஸ்லாமிய மார்க்க மாமேதைகளில் தலையாயவர் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள். இவரது இயற்பெயர் அபூ ஹாமித் முஹம்மது அல் கஸ்ஸாலி என்பதாகும். கஸ்ஸாலி என்பது குடும்பப் பெயராகும். இவர் தந்தையார் பெயர் முஹம்மது கியாமுத்தீன் என்பதாகும். இவர் நூற்புத் தொழில் செய்து வந்தவர். நூல் நூற்பவர் எனும் பொருள்படும், 'கஸ்ஸாலி' என்ற சொல்லால் இவர் குறிப்பிடப்பட்டு வந்தார். அதுவே குடும்பப் பெயராக நாளடைவில் நிலைத்து விட்டது.

இவர் தந்தை கல்வியறிவு பெறாதவராக இருந்தார். இருப்பினும் தம் மக்கள் நன்கு கற்றுத் தேற வேண்டும் என விரும்பினார். இதற்காகப் பணமும் சேமித்தார். திடீரென தமக்கு இறப்பு நெருங்கிவிட்டதை உணர்ந்தார். தம் நண்பர் ஒருவரை அழைத்து, சேமித்த பணத்தை அவரிடம் தந்து, தம் இறப்புக்குப் பின்னர் தம் மக்களைப் படிக்க வைக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். அவரும் ஒப்பினார். பின், தந்தை இறந்துவிடவே குழந்தைகள் இருவரும் அந்நண்பரின் பொறுப்பில் கற்று வந்தனர். படிப்புக்கென தாம் பெற்ற பணம் தீர்ந்தவுடன், அவர் கல்வி கஸ்ஸாலியையும், அவர் தம்பியையும் மதரஸா ஒன்றில் சேர்த்து விட்டார். அங்கு அவர்கள் இருவரும் நன்கு கல்வி கற்று வந்தனர்.

மதரஸாவில் கல்வி கற்கும்போதே எதையும் மனப்பாடம் செய்யும் வழக்கம் கஸ்ஸாலிக்கு இருந்து வந்தது. மதரஸாக் கல்வியை முடித்தபின், நீஷாப்பூர் எனுமிடத்தில் இருந்த நிலாமிய்யாக் கல்லூரியில் சேர்ந்து பயின்றார். இவரது அறிவாற்றலையும், நினைவுத்திறனையும், வாக்கு வன்மையையும் அறிந்த இவர் ஆசிரியர் இமாமுல் ஹரமைனி (ரஹ்) கஸ்ஸாலியைக் கல்லூரித் துணைப்பேராசிரியராக நியமித்தார். இவரது மார்க்க ஞான அறிவுத்திறன் இவர்கள் எழுத்தின் மூலமும் வெளிப்பட்டது. இவர்கள் புகழ் எங்கும் பரவியது.

இமாமுல் ஹரமைனியின் மறைவுக்குப் பின் இவரே நிலாமிய்யாக் கல்லூரியின் தலைவரானார். அப்போது கஸ்ஸாலி (ரஹ்) அவர்கட்கு வயது 34. இவ்வளவு இளம் வயதில் இவ்வுயர் பதவியைப் பெற்றதன் மூலம் இவர் புகழ் மேலும் உயர்ந்தது.

நாவன்மைமிக்க இவருடைய மார்க்கச் சொற்பொழிவுகள் அக்கால மேதைகள் பலராலும் பாராட்டப்பட்டன, அரசு உயர் அதிகாரிகளும், அமைச்சர்களும் இவரை மிகுந்த மதிப்புடன் நடத்தினர். இவர் ஒரு கலீஃபா போன்றே வாழ்ந்தார். இவரிடம் பாடம் கேட்க அரசு உயர் அதிகாரிகளும், அமைச்சர்களும் ஆவலுற்றனர். அரசுப் பிரச்சினைகளைத் தீர்ப்பதிலும் இவர் பெரும் பங்கு கொண்டார்.

இவரின் மார்க்கச் சொற்பொழிவுகள் தொகுக்கப்பட்டு நூலாக்கப்பட்டன. அவை மக்களிடையே ஒருவிதப் புத்தெழுச்சியை ஏற்படுத்தின.

எனினும், இத்தகைய வாழ்க்கையில் அவருக்கு வெறுப்பு ஏற்பட்டது. உண்மையான மெய்ஞ்ஞான வாழ்வு வாழ விரும்பினார். இதற்காக இவர் துறவு மனப்பான்மையுடையவராய் கம்பளிப் போர்வையுடன், காலில் செருப்புமின்றி பக்தாதைவிட்டு வெளியேறினார். காடு, மலை, வனங்களையெல்லாம் கடந்து திமிஷ்க் போய்ச் சேர்ந்தார். அங்கு இரண்டாண்டு இறை

தியான வாழ்வு வாழ்ந்தார். பின், அங்குள்ள ஜாவியாவில் மாணவர்கட்குப் பாடம் சொல்லி வரலானார்.

பின் அங்கிருந்து பைத்துல் முகத்தஸை அடைந்தார். பின், இப்ராஹீம் (அலை) அவர்களின் அடக்கவிடத்தைத் தரிசித்தார். பின் ஈஸா (அலை) அவர்களின் பிறப்பிடம் சென்றார். பின்னர், ஹஜ் செய்ய மக்கா சென்றார். மதீனா சென்று அண்ணல் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களின் அடக்கவிடத்தைத் தரிசித்தார்.

இவ்வாறு பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்த பின்னர், மீண்டும் பக்தாது சென்றார். அப்போது அங்கு இஸ்லாமிய நெறிக்கு எதிரான போக்குகள் தலைதூக்கியிருந்தன. அவற்றைப் பேச்சாலும் எழுத்தாலும் களைய மனவுறுதி மிக்க மார்க்க மேதை ஒருவர் தேவைப் பட்டார். கஸ்ஸாலி (ரஹ்) வருகையை அறிந்து ஆட்சியினர் அவரையே மீண்டும் நிலாமிய்யாக் கல்லூரித் தலைமைப் பொறுப்பை ஏற்க வேண்டினர். நீண்ட ஆலோசனைக்குப் பின் இப்பணியை ஏற்றுக் கொண்டார். ஆனால், விரைவிலேயே அப்பதவியையும் விட்டுவிட்டு சொந்த ஊரான தூஸ் வந்துசேர்ந்தார். அங்கு ஒரு தவச் சாலையை உருவாக்கி, அங்கு வரும் மாணவர்கட்கு மெய்ஞ்ஞானக் கல்வியைப் போதித்துவந்தார். அப்போது ஹதீதுக் கலையை மேலும் மேலும் கற்று அதில் மேதையானார்.

கஸ்ஸாலி (ரஹ்) ஹிஜ்ரி 505 ஆண்டு (1111) ஜமாதுல் ஆகிர் பிறை 14 அன்று தம் இறுதி நெருங்கிவிட்டதை உணர்ந்தார். தொழுதபின் தம் கபன் துணியை முத்தமிட்டுப் படுத்தார். சிறிது நேரத்தில் உயிர் பிரிந்தது. அவர் பிறந்த ஊரான தூஸிலேயே அவரது உடல் நல்லடக்கம் செய்யப்பட்டது.

இஸ்லாமிய மார்க்க மேதைகளிலேயே மிக அதிகமான நூல்களை எழுதியவர் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களே ஆவார். மொத்தம் 132 நூல்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. இவற்றில் சில இவரால் எழுதப்படாமல், இவரது சொற்பொழிவை பிறர் எழுதி அங்கீகரித்தவையாகும்.

இவர் எழுதிய நூல்களில் இவருக்குப் பெரும் புகழ் தேடித் தந்தது, ''இஹ்யாவு உலூமித்தீன்'' என்பதாகும்.

இவரது பேச்சும் எழுத்தும் மக்களிடையே மார்க்க ஞானம் பெருக வழிகோலியது. அத்துடன் மாபெரும் இஸ்லாமிய மறுமலர்ச்சிஏற்படவும் வழியமைத்தன. இவருடைய நூற்கள் பல்வேறு மொழிகளில் பெயர்க்கப்பட்டன. குழந்தைகள் பற்றிய 'அய்யுஹல் வலது' நூலை ஆங்கிலத்தில் பெயர்த்து 'யுனெஸ்கோ' வெளியிட்டுள்ளது.

**காசிம் புலவர்**: இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களில் இசைத்தமிழ் இலக்கியம் படைத்த பெரும்புலவர் காசிம் புலவர். இவர் கடற்கரைப்பட்டினமான காயல் பட்டினத்தில் பிறந்தவர். இவர் முன்னோர்கள் எகிப்து நாட்டிலுள்ள அல் காஹிரா (கெய்ரோ) நகரைச் சேர்ந்தவர்கள்.

காசிம்புலவர் இளமையிலேயே இஸ்லாமிய மார்க்க ஞானம் மிக்கவராக விளங்கினார். திருவடிக் கவிராயர் என்பாரிடம் தமிழ் கற்றுப் பெரும் புலமை பெற்றார். இசைஞானம் மிகுந்தவராகவும் இருந்தார்.

ஒரு சமயம் இவர் ஆசிரியர் திருவடிக் கவிராயர் அருணகிரியாரின் 'திருப்புகழ்' நூலை பெரிதும் பாராட்டினார். இதற்கு இணையான வேறொரு திருப்புகழைப் பாட இனி எவராலும் இய

லாது எனக் கூறினார். இதைக்கேட்ட காசிம் புலவர் 'என்னால் பாடமுடியும்' என்றார். அவ்வாறாயின் 'பாடிக் காட்டு' எனப் பணித்தார் ஆசிரியர் திருவடிக் கவிராயர்.

ஆசிரியரிடம் கூறியவண்ணம் பாடத் தொடங்கினார். ஆனால், எப்படித் தொடங்குவது எனத் தெரியாமல் விழித்தார். மனக்கவலையுடன் உறங்கச் சென்றார். கனவில் பெருமானார் தோன்றி 'பகரும்' எனச் சீர் எடுத்துக் கொடுத்தார். அச்சீரையே முதலாகக் கொண்டு பாடத் தொடங்கினார்.

இவரும் விரைவிலேயே 141 பாடல்களைப் பாடி நூலை நிறைவு செய்தார். காசிம் புலவர் 'திருப்புகழ்' நூலைப் படித்த ஆசிரியர் திருவடிக் கவிராயர், இவரது தமிழ் அறிவையும் செய்யுள் இயற்றும் திறனையும் இசை ஞானத்தையும் பெரிதும் போற்றினார். இவருக்கு 'வரகவி' எனும் பட்டத்தை அளித்துப் பாராட்டினார்,

இவர் ஹிஜ்ரி 1177 துல்கஃதா பிறை 12 வெள்ளி இரவன்று காலமானார். இவரது உடல் காயல்பட்டினத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது.

இவர் ஆண் மக்கள் இருவரும் இவரை போலவே திறம்பட்ட இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்களாக விளங்கினர்.

**காயல்பட்டினம்:** இது கடற்கரையை ஒட்டியுள்ள ஊராகும். இவ்வூரில் முஸ்லிம் பெருமக்கள் பெருமளவில் வாழ்கின்றனர். இவ்வூரிலிருந்து ஏழு கி.மீ. தூரத்தில் வங்காள விரிகுடாக் கடலும் அதன் கரையில் திருச்செந்தூரும் அமைந்துள்ளன.

'காயல்' என்ற சொல்லுக்கு 'உப்பங்கழி' என்று பொருள். கடல் ஓடையாக அமைந்துள்ள இக்கழிமுகப் பகுதியில் மக்கள் கூட்டமாக வாழ்ந்து வந்தனர். நாளடைவில் மக்கள் தொகை பெருகவே அது கடற்கரைப் பட்டினமாக வளர்ந்தது. அதுவே இன்றைய காயல் பட்டினம்,

எகிப்து நாட்டின் முக்கிய நகரான காஹிரா (கெய்ரோ)விலிருந்து குடும்பம் குடும்பமாக 224 பேர் கப்பலேறி இக்கீழக் கடற்கரைப் பகுதியை வந்தடைந்தனர். தாங்கள் இறங்கிய கடற்கரைப் பகுதியிலேயே தங்கி வாழலாயினர். அப்போது அப்பகுதியை ஆண்டு வந்த பாண்டிய மன்னர் இவர்கட்கு வேண்டிய உதவிகளை வழங்கினார். இவ்வாறு இவர்கள் வாழ்ந்துவந்த பகுதி அடிக்கடி இயற்கையின் சீற்றத்திற்கு ஆளாகியது. எனவே, இங்கு வாழ்ந்த மக்கள் தங்கள் வீடுகளையும் பள்ளிகளையும் விட்டு விட்டு அருகிலுள்ள வேறோர் இடத்திற்குக் குடி பெயர்ந்து சென்று வாழலாயினர். அதுவே இன்றைய காயல்பட்டினம். முந்தைய ஊர் 'பழைய காயல்' என்று இன்று அழைக்கப்படுகிறது.

இவ்வூரில் இறைநேசச் செல்வர் பலரும், மார்க்க ஞான மேதைகளும் தோன்றியுள்ளனர். மாபெரும் மார்க்க மேதையான சதக்கத்துல்லா அப்பா இவ்வூரில் பிறந்தவராவார். இவ்வூரில் தர்காக்கள் பல உள்ளன. தெருதோறும் பள்ளிவாயில்கள் உள்ளன. மொத்தம் 30-க்கு மேல் உள்ளன. பெண்கள் தொழுகைக்கெனத் தனிப் பள்ளி வாசல்கள் உள்ளன. இவ்வூரில் மார்க்க அறிவு புகட்டும் மதரஸாக்கள் பல உள்ளன.

அரபுத் தமிழ் வளர்ச்சிக்கு இவ்வூர் ஆலிம்கள் பெரும் பங்காற்றியுள்ளனர். தமிழ் இலக்கியப் புலமையாளர்களும் ஆர்வலர்களும் இவ்வூரில் தோன்றி புகழ் சேர்த்துள்ளார்கள். அவர்களில் குறிப்பிடத்தக்கவர் புலவர் நாயகம்

சேகனாப்புலவர், வரகவி காசிம்புலவர், 'வேதபுராணம்' பாடிய நூஹ் (வலி), மஹ்மூது தீபி ஆகியோராவர். ஷாமு ஷிகாபுத்தீன் சமுதாய சீர்திருத்தப் பாடல்கள் பலவற்றைப் பாடியுள்ளார். பல இஸ்லாமியத் தமிழ் இலக்கியங் களுக்கு உரை எழுதிப் பதிப்பித்த கண் ணகுமது மகுதூம் முஹம்மதுப் புல வரும் இவ்வூரைச் சேர்ந்தவரே.

வள்ளல் தன்மைக்கே இலக்கணமாக விளங்கிய சீதக்காதி என்னும் செய்கு அப்துல் காதிர் இவ்வூரில் பிறந்தவர். 'பி.ஏ. காக்கா' என்ற பிரபல வள்ள லும் இங்கு பிறந்தவர்களே.

இவ்வூரைச் சேர்ந்த பெரு வணிகர் கள் பலர் உலகெங்கும் இரத்தினக் கற் கள் தொடர்பான தொழிலை இன்றும் திறம்படச் செய்து வருகின்றனர்.

மஹ்லரா, ஜாவியா ஆகியவை காய லின் பிரசித்தி பெற்ற மதரஸாக்கள் ஆகும்.

இங்கு உலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மூன்றாவது மாநாடு நடை பெற்றது.

**காலிப்:** இவர் 'மிர்ஸா' என்ற பெய ரில் புகழ்பெற்ற உருதுக் கவிஞராக விளங்கியவர். இவரது இயற்பெயர் மிர்ஸா அஸதுல்லாகான் என்பதாகும். அரச பரம்பரையைச் சேர்ந்த இவர் தந்தையார் பெயர் மிர்ஸா அப்துல்லா பெய்க் என்பதாகும். இவர் ஆக்ராவில் 1796ஆம் ஆண்டு டிசம்பர் 27ஆம் நாள் பிறந்தார்.

இளம் வயதிலேயே கல்வியில் ஆர்வ முடையவராக இருந்தார். உருது, பார்ஸி மொழிகளை ஆர்வத்துடன் கற் றுப் புலமை பெற்றார். இளம் வயதி லேயே தந்தையை இழந்த காலிப் தம் சிறிய தந்தையாரின் அரவணைப்பிலே யே வளர்ந்தார், சிறிது காலத்தில் அவரும் இறந்துவிட்டார். பின்னர் தம் தாயாரின் பராமரிப்பிலேயே வளரலா னார்.

இவருக்குப் பதின்மூன்றாவது வயதி லேயே திருமணம் நடைபெற்றது. பல பிள்ளைகள் பிறந்து இறந்துவிட்டன.

இயற்கையிலேயே தக்க கவித்துவ உணர்வு வாய்க்கப்பெற்ற இவர், கவிதை புனைவதில் பேரார்வம் காட்டி னார். இவர் உருது மொழியில் கவிதை இயற்றினாலும் அவற்றில் பார்ஸீ மொழிச் சொற்கள் அதிகம் இடம் பெற் றன. இதனால் படிப்போர் இடர்ப்பாடு அடைந்தனர். அதனால் பிற மொழிச் சொற்கள் கலவா வண்ணம் உருது, பார்ஸீ மொழிகளில் தனித்தனியே கவிதை எழுதினார். இவர் கவிதை களை மக்கள் ஆர்வத்துடன் படித் தனர்.

கவிதை இயற்றுவதில் தனித்துவம் பெற்று விளங்கியது போன்றே, அழ கான உரைநடை எழுதுவதிலும் ஆற் றல் மிக்கவராக விளங்கினார்.

இவர் பிற சமயங்களை மதிக்கும் நல் லியல்பு உள்ளவராகத் திகழ்ந்தார். இந்த உணர்வுகளை இவர் தம் கவி தைகளில் வெளிப்படுத்தினார். இந்து சமய, கிருத்துவ சமய நண்பர்கள் பலர் இவருக்கு உற்ற நண்பர்களாக இருந்த னர். சொற்சுவையும் பொருட்சுவை யும் ஒருங்கே கொண்ட இவர் கவிதை கள் இன்றும் மக்களை மகிழ்வித்து வரு கின்றன.

1869ஆம் ஆண்டில் உயிர்நீத்த இவ ரது உடல் நிஜாமுத்தீன் ஔலியா தர் காவின் அருகில் நல்லடக்கம் செய்யப் பட்டுள்ளது.

உருது மொழிக்கு மட்டுமல்லாது பார்ஸீ மொழிக்கும் இலக்கிய வளம் சேர்த்த பெருமை இவருக்குண்டு.

**கான் சாகிப்:** இவர் தமிழ் முஸ்லிம் களில் மாபெரும் வீரராக விளங்கியவர். சாதாரண ஏழைக் குடும்பத்தில் பிறந்து தம் திறமையாலும் சாதுரியத்தாலும் மாபெரும் வீரராக, வீரத் தளபதியாக உயர்ந்தவர். இவரது இயற்பெயர் யூசுஃப்கான் என்பதாகும். இவரின் வீர சாகசங்களைப் பாராட்டி, ஆற் காடு நவாப் வழங்கிய பட்டமே 'கான் சாகிப்' என்பது. இதுவே இவரது இயற்பெயர் போன்று விளங்கலாயிற்று.

மதுரை மாவட்டம் பனையூரில் வாழ்ந்த ஒரு தையற்காரரின் மகனாய் பிறந்தவர். இவர் தந்தை மார்க்க அறிவு நிரம்பப் பெற்ற ஆலிமும் ஆவார்.

கான் சாகிப் இளம் வயதிலேயே மார்க்கக் கல்வியோடு தம் தந்தையின் தையற் தொழிலையும் கற்றுத் தேறி னார். ஆயினும் அவரது ஆர்வம் வீர தீரச் செயல்களில் ஈடுபடுவதிலேயே நாட்டமுடையதாக இருந்தது.

இளம் வயதில் கான் சாகிப் புதுச்சேரி சென்று சிறிது காலம் தையல் தொழில் செய்து வந்தார். அப்போது ஃபிரெஞ் சுப் படைப்பிரிவுத் தலைவர் ஒருவ ரோடு இவருக்குத் தொடர்பு ஏற்பட் டது. இவரது அஞ்சாமையையும், வீர உணர்வையும், துணிவையும் கண்ட அவர், இவருக்கு முறையான போர்ப் பயிற்சி அளிக்கலானார். மூன்றாண்டு கள் முறையான பயிற்சிபெற்ற பின்னர் ஆங்கிலம், ஃபிரெஞ்சு, போர்ச்சுக்கீஸ் மொழிகளையும் கற்கலானார். சிறிது காலம் மராட்டியப் படையில் பணி புரிந்தார். இவரது திறமையையும் அறிவாற்றலையும் அறிந்த ஆற்காடு நவாப் இவரைத் தம் படைத் தளபதி களில் ஒருவராக ஆக்கிக் கொண்டார்.

ஆற்காடு நவாப் பிரெஞ்சுப் படையை எதிர்க்க ஆங்கிலேயர்க்குத் துணையாக கான் சாகிபை ஒருமுறை அனுப்பினார். கான் சாகிப் வீரத்தோடும், ராஜ தந் திரத்தோடும் ஃபிரெஞ்சுக்காரர்களை எதிர்த்து வெற்றி கொண்டதை ஆங்கி லேயர் அறிந்து மகிழ்ந்தனர். கான் சாகிபைத் தங்களிடம் பணிபுரிய அனுப் பும்படி வேண்டினர். ஆற்காடு நவாபும் சம்மதித்து கான் சாகிபை ஆங்கிலப் படையில் பணியாற்ற அனுப்பினார்.

அயல்நாட்டினரான ஆங்கிலேயரும், ஃபிரெஞ்சுக்காரரும் இந்திய மண்ணில் காலூன்ற முயல்வதை கான்சாகிப் அறவே வெறுத்தார். அவர்களை நேரடி யாகத் தாம் எதிர்த்து விரட்ட முடி யாது என்பதையும் உணர்ந்தார். எனவே, ஆங்கிலேயர்களோடு சேர்ந்து ஃபிரெஞ்சுக்காரர்களை முதலில் விரட்ட வேண்டும். பின்னர் ஆங்கிலேயர் களை விரட்ட வேண்டும் என முடிவு செய்தார். அதற்கிணங்க ஆங்கிலேயர் படையில் பணியாற்ற முன் வந்தார்.

அச்சமயம் ஆங்கிலேயர் பாளையக் காரர்களுடன் வரிவசூல் தொடர்பாகப் போரிட்டு வந்தனர். அப்போது இரகசியமாகப் பாளையக்காரர்கள் பலரையும் கான் சாகிப் நண்பர்களாக் கிக் கொண்டார். பாளையக்காரர் களைத் தாக்க ஆங்கிலேயர் அனுப்பும் உத்தரவுகளை உதாசீனப்படுத்தினார். இதன்மூலம் ஆங்கிலேயர் பலத்தைச் சிதைக்கலானார். விரைவிலேயே கான் சாகிபின் உட்கிடக்கையை அறிந்த ஆங்கிலேயர், அவர்மீது நடவடிக்கை எடுக்க முனைந்தனர். இதை அறிந்த கான் சாகிப் ஆங்கிலேயருக்கு எதிராகச் சுதந்திரப் பிரகடனம் செய்தார்.

இதை மதுரை, திருநெல்வேலி மக்கள் ஏற்று இவர் பின் செல்லலாயினர்.

மக்களின் வாழ்வில் புது மலர்ச்சியை உருவாக்க முனைந்தார். ஜாதி மத வேறுபாடுகளைக் களைந்து, நாட்டுரிமையில் நாட்டங்கொள்ளச் செய்தார். மக்களின் வறுமையைப் போக்க நீர்ப் பாசன வசதிகளைப் பெருக்கி, விளைச்சலைப் பெருக்கினார். ஊர்களை இணைத்து, போக்குவரத்தை அதிகரிக்க சாலை வசதிகளைப் பெருமளவில் உருவாக்கினார். மீனாட்சியம்மன் கோயில் போன்ற இந்துக்கோயில்களுக்குப் பெருமளவில் மானியம் வழங்கினார். இதன்மூலம் மத வேறுபாட்டு உணர்ச்சியைப் போக்கி, அனைவரும் சமம் என்ற உணர்வை உண்டாக்கினார்.

மக்களின் பேராதரவோடு சிறப்பாக ஆட்சிசெய்து வரும் கான் சாகிபை ஒழித்துக்கட்ட ஆங்கிலேயர் சூழ்ச்சி பல செய்தனர். இதன் முதல்படியாக சுதேசி மன்னர்களோ மற்றவர்களோ கான் சாகிபுக்கு எவ்வித உதவியும் அளிக்கக்கூடாது எனத் தடை செய்தனர்.

ஆங்கிலேயர் காட்டிய ஆசை வார்த்தைகளுக்குப் பலியான கான் சாகிபின் நண்பர்கள் சிலர் அவருக்குத் துரோகம் செய்ய முன்வந்தனர். இவர்களின் உதவியோடு ஆங்கிலேயர்கள் மதுரையை முற்றுகையிட்டனர். ஆங்கிலேயர்க்குத் துணையாக ஆற்காடு நவாபும் முற்றுகையில் பங்குகொண்டார். முற்றுகை நீடித்தபோதிலும், கான் சாகிபை வெற்றி கொள்ள முடியவில்லை.

கான் சாகிபின் மெய்க்காவலர் இருவரின் துணை கொண்டு கான் சாகிபைக் கைது செய்ய சதித் திட்டம் தீட்டினர். அதன்படி, ரமளான் மாத நோன்பிருந்த கான் சாகிப், நண்பகல் தொழுகை தொழுது கொண்டிருக்கும்போது அவர் மெய்க்காப்பாளர்களே அவரைக் கட்டிப்பிடித்து, நிராயுத பாணியாக்கி ஆங்கிலேயர்களிடம் ஒப்படைத்தனர். இதன்பின் மதுரை நகர் சூறையாடப்பட்டது. இறுதியில் ஆங்கிலேயர் கான் சாகிபைத் தூக்கிலிட்டுக் கொன்றனர். அவரது உடல் மதுரையில் உள்ள சம்மட்டிபுரத்தில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது.

சுதந்திர உணர்வுமிக்க மாவீரராக விளங்கிய கான் சாகிப், மிகச் சிறந்த ராஜதந்திரி; அற்புதமான நிர்வாகி. மக்களின் நலன் ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக் கொண்ட ஆட்சியாளர். அவரது சிறப்பையும் வீரத்தையும் 'கான் சாகிப் சண்டை' என்ற நாடோடிப் பாடல் நூல் விரிவாக விளக்குகிறது.

**கிப்லா:** இறை வணக்கம் புரியும் போது, நாம் நோக்கி நிற்கும் திசை 'கிப்லா' எனப்படும். இச்சொல்லுக்கு 'முன்பாக உள்ள ஒன்று' என்பது பொருளாகும். நாம் தொழும்போது கஃபாவின் திசையை நோக்கி நிற்பதால் அதற்கு 'கிப்லா' எனப் பெயர் வழங்குவதாயிற்று.

தமிழ்நாட்டிலுள்ள நமக்கு மேற்கே கஃபா இருப்பதால் மேற்குத் திசை நமக்குக் கிப்லாவாகும். லண்டனில் இருப்போர்க்கு கஃபா கிழக்கே இருப்பதால் அத் திக்கே அங்குள்ள முஸ்லிம்களுக்குக் கிப்லாவாகும். இவ்வாறு உலகிலுள்ள முஸ்லிம்கள் அனைவருமே

கஃபா இருக்கும் திசையையே 'கிப்லா' வாகக் கொண்டு தொழுகை நடத்துகின்றனர். கஃபத்துல்லாஹ்வில் தொழுவோர்க்குத் திசை இல்லை. அங்கு எப்பக்கம் இருந்தும் தொழலாம்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கட்கு முன்பு வந்த இறை தூதர்களான மூஸா (அலை) அவர்களும், இப்ராஹீம் (அலை) அவர்களும் கஃபாவின் திசையையே கிப்லாவாகக் கொண்டு இறை வணக்கம் புரிந்து வந்தனர்,

அண்ணலார் மதீனா வந்த புதிதில் ஜெரூசலத்திலுள்ள பைத்துல் முகத்தஸை கிப்லாவாகக் கொண்டு தொழுதார். பதினேழு மாதங்களுக்குப் பின்னர் வஹீயின் மூலம் கஃபாவையே கிப்லாவாகக் கொண்டு தொழலானார். அம்முறையே இன்றுவரை பின்பற்றப் பட்டு வருகிறது.

பள்ளிவாசல்களில் கிப்லா திக்கைக் குறிக்கும் வகையில் மிஹ்ராப் எனும் மாடக்குழி அமைக்கப்படுகிறது. நாம் தொழும்போது நமது நெஞ்சும் முகமும் கிப்லாவை நோக்கியே இருக்க வேண்டும். கால் பெருவிரல்களும் கிப்லாவை நோக்கியே இருக்க வேண்டுவது அவசியமாகும்.

மலேசியா போன்ற முஸ்லிம் நாடுகளில் உள்ள தங்கும் விடுதிகளில் கிப்லாவைக் குறிக்கும் அடையாளக் குறிகள் அமைக்கப்பட்டுள்ளன.

வெளியூர் செல்பவர்கள் கிப்லா திசை தெரியாவிடில், மற்றவர்களைக் கேட்டு நன்கு தெரிந்தபின்பே தொழத் தொடங்கவேண்டும். நம்மால் நன்கு தெளிவாக அனுமானிக்க முடியும் என்றால் அவ்வாறு அனுமானிக்கும் திக்கையே கிப்லாவாகக் கொண்டு தொழலாம்.

கிப்லாவின் திசையில் கால் நீட்டக் கூடாது. மலம், சிறுநீர் கழிக்கக்கூடாது. இறந்தவர்களின் முகத்தை கிப்லாவை நோக்கி வைக்க வேண்டும். குர்பானி கொடுக்கப்படும் பிராணிகளின் முகத்தை கிப்லாவை நோக்கி வைத்தே அறுக்க வேண்டும்.

**கிர அத்:** கிர அத் எனும் சொல்லுக்கு 'ஓதுதல்' என்பது பொருளாகும். அதிலும் குறிப்பாக 'குர்ஆன்' ஓதுவதையே இச்சொல் குறிக்கிறது. திருமறையை ஏழு வகைகளில் நிறுத்தக குறி, உச்சரிப்புக்களுக்கேற்ப ஓதலாம். இவ்வாறு கிர அத் ஓதுபவர்கள் 'காரீ' கள் என அழைக்கப்படுவர்.

தொழுகையின்போது ஓதப்படும் கிர அத் தைக் கேட்பது கடமையாகும் (ஃபர்ள்). பிறர் ஓதக் கேட்பது முஸ்தஹப் ஆகும்.

கிரஅத் ஓதுவதற்குக் குரல் வளம் மிக அவசியமாகும். கிர அத் கலையைக் கற்பிக்கும் நூல்கள் பல உள்ளன. கிர அத் கேசட்டுகள் இன்று உலகெங்கும் கிடைக்கின்றன. மலேசியா, இந்தியா, பாகிஸ்தான் போன்ற நாடுகளில் கிர அத் போட்டிகள் உலக அளவில் ஆண்டுதோறும் நடத்தப்படுகின்றன.

**கிஸ்ஸா:** இது ஒரு அரபு மொழிச் சொல்லாகும். இதற்குக் 'கதை கேட்டல்' என்பது பொருள். இச்சொல் 'கஸஸ்' எனும் அரபுச் சொல்லிலிருந்து வந்ததாகும். இச்சொல்லுக்கு 'செய்தி' என்ற மற்றொரு பொருளும் உண்டு.

முற்காலத்தில் படைவீரர்களுக்கு மேலும் வீர உணர்வை ஊட்ட, மறைந்த மாவீரர்களின் வீரவாழ்வை விளக்கும் பாடல்களை உணர்ச்சி பொங்கப் பாடிக்காட்டுவர். இப் பாடல்களில் வீர உணர்வைப் பொங்

கச் செய்யும் வீரதீரச் செயல்கள் மட்டுமே முக்கிய இடம்பெறும்.

காலப்போக்கில் இப்பாடல்களில் உண்மை நிகழ்ச்சிகளோடு, கற்பனையையும் கலக்கலாயினர். இதனால் கவிதை நடை தளர்ந்து, உரைநடைப் போக்கிலான புதுவகை நடை உருவாயிற்று. உண்மைகளைவிட கற்பனையே முதன்மை பெற்றது. எனவே, இஸ்லாமிய மேதைகள் கிஸ்ஸாக்களைச் சொல்வோரை வெறுத்தனர். எனினும், கதைகேட்பது சாதாரண மக்களின் இயல்பாதலால் இத்தகைய கிஸ்ஸாக்கள் உருவாவதைத் தடுக்க முடியவில்லை.

கதைகேட்கும் மக்களிடையே நகைச்சுவையுடன் சிந்தனையைத் தூண்டும் செய்திகளையும் தர எண்ணி தரமான கிஸ்ஸாக்களை எழுதலாயினர்.

இவ்வாறு சுவையாகச் செல்லும் கதையினூடே தீன்நெறி அடிப்படையில் வாழ்வியலை விளக்கும் பல கிஸ்ஸாக்கள் தமிழில் எழுதப்பட்டுள்ளன. தமிழுக்கு புதுவகை இலக்கிய வடிவமாகவும் கிஸ்ஸா அமைந்துள்ளது.

தமிழில் உள்ள கிஸ்ஸா இலக்கியங்களில் சில எளிய செய்யுள் நடையில் உள்ளன. இன்னும் சில செய்யுள் உரை நடையுமாக அமைந்துள்ளன. அவற்றுள் சிறந்த கிஸ்ஸா நூல்களாக 'ஈசுபு நபி கிஸ்ஸா', 'அலி (ரலி) கிஸ்ஸா', 'முகம்மது அனிபு கிஸ்ஸா,' 'சைத்தூன் கிஸ்ஸா' ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

**கீழக்கரை:** வரலாற்றுப் புகழ்பெற்ற இவ்வூர் இராமநாதபுரம் மாவட்டத்தில் இராமநாதபுரம் நகருக்குக் கிழக்கே வங்கக் கடலோரம் அமைந்துள்ளது. இதுவே பழங்காலத்தில் புகழ்பெற்று விளங்கிய கொற்கைத் துறைமுகம் எனக் கூறுவோரும் உண்டு. எவ்வாறாயினும் இவ்வூர் நீண்ட நெடுங்காலமாக அராபிய, ரோம, சீன வணிகக் கப்பல்கள் வந்து செல்லும் துறைமுக நகராக விளங்கி வந்துள்ளது என்பது உறுதியாகிறது. பாண்டிய மன்னர்கள் தங்களுக்கு வேண்டிய அரபு நாட்டுக் குதிரைகளை இத்துறைமுகம் வழியேதான் பெற்று வந்துள்ளனர். புகழ் பெற்ற உலகப் பயணிகளான இப்னு பதூதா மார்க்கோ போலோ போன்றோர் இவ்வூருக்கு வந்துள்ளனர். இவ்வூரைப்பற்றிய பல குறிப்புகளை எழுதியுள்ளனர். இவ்வூர் வகுதை என்ற பெயராலும் அழைக்கப்பட்டது.

இவ்வூர் மக்களில் பெரும்பாலோர் முஸ்லிம்களாவர். நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே வணிக நிமித்தம் அராபியர்கள் இவ்வூரில் குடியேறியதாகக் கூறப்படுகிறது. அவர்கள் சந்ததியினரே இங்கு பல்கிப் பெருகியுள்ளனர். இன்றும் இவ்வூர் மக்களில் பெரும்பாலோர் வணிகர்களாகவே உள்ளனர். உலக நாடுகள் பலவற்றில் தங்கி நவரத்தின வணிகம் செய்து வருகின்றனர். சிறுபான்மைத் தொகையினர் வேளாண்மை, கடல் தொடர்பான சங்கு, மீன் பிடித்தல் போன்ற தொழில்களைச் செய்து வருகின்றனர்.

செத்தும் கொடை கொடுத்தார் 'சீதக்காதி' எனப் போற்றப்படும் வள்ளல் சீதக்காதி இவ்வூரில் வாழ்ந்து வந்தவராவார். இவர் வந்தவர்களுக் கெல்லாம் இல்லை என்று சொல்லாது வாரி வழங்கிய வள்ளலாவார்.

கீழக்கரைக்கும் காயல்பட்டினத்திற்கும் நீண்ட காலமாகவே நெருங்கிய தொடர்பு உண்டு. இவ்வூரில் வாழ்ந்த இஸ்லாமிய மார்க்கமேதை சதக்கத்துல்லா அப்பா காயல்பட்டினத்தில் பிறந்து, கீழக்கரையில் வாழ்ந்து மறைந்

தவராவார். இவரே உமறுப்புலவர் சீறாப்புராணக் காப்பியத்தை இயற்ற பெருமானார்(ஸல்) அவர்களின் வாழ்க்கையை விளக்கிக் கூறியவர். இவ்வூரில் தைக்கா சாகிபு, மாப்பிள்ளை ஆலிம் லெப்பை போன்ற மார்க்க மேதைகளும் ஸூஃபி பெண்கவிஞரான செய்யது ஆசியா உம்மா அவர்களும் இவ்வூரில் வாழ்ந்து மறைந்தவர்களாவர். முஸ்லிம் மகான்கள் பலரின் அடக்கவிடங்கள் இவ்வூரில் உள்ளன.

புலவர்கள் பலரைப் பெற்ற பெருமை இவ்வூருக்குண்டு. அவர்களுள் 'அடைக்கல மாலை' இயற்றிய அப்துல் காதர் ஆலிம் புலவர் என்ற சின்ன மரைக்காயர், 'ஆசாரக்கோவை' பாடிய அப்துல் மஜீதுப் புலவர் போன்றோர் குறிப்பிடத்தக்கவர்களாவர். 'சின்ன சீறா', 'இராஜநாயகம்' போன்ற காப்பியங்கள் தோன்ற இவ்வூர் கொடை நாயகர்கள் காரணமாவர்.

நீண்டகாலத்திற்கு முன் கட்டப்பட்ட பள்ளிவாசல்கள் இவ்வூரில் உண்டு. அவற்றுள் சீதக்காதி கட்டிய பெரிய குத்பா பள்ளி குறிப்பிடத்தக்க ஒன்றாகும். பத்துக்கு மேற்பட்ட பள்ளிகள் இவ்வூரில் உண்டு.

மார்க்க ஞான மேதைகள் பலரை உருவாக்கிய புகழ்பெற்ற மதரஸாக்கள் பல இவ்வூரில் உள்ளன. அவற்றுள் புகழ்பெற்ற ஒன்றாக விளங்குவது அரூஸிய்யா தைக்கா மதரஸாவாகும். இம்மதரஸாவில்தான் குணங்குடி மஸ்தான், புலவர் நாயகம் ஷைகுனாப் புலவர் போன்றவர்கள் மார்க்கக் கல்வி பெற்றனர்.

இன்றைய மார்க்கக் கல்வி வளர்ச்சியிலும் இவ்வூர் முன்னணியிலேயே உள்ளது. இவ்வூரின் மேலத்தெருவில் அமைக்கப்பட்டுள்ள 'உஸ்வத்துன் ஹஸனா முஸ்லிம் சங்கம்' பல கல்வி நிறுவனங்கள் உருவாகக் காரணமாயமைந்து வருகிறது. மேலும் சீதக்காதி டிரஸ்ட் அமைப்பு பள்ளிகளையும் பெண்கள் கல்லூரிகளையும் நடத்திவருகிறது. அவ்வாறே சதக் டிரஸ்ட் என்ற நிறுவனம் பாலிடெக்னிக் கல்லூரியையும் பொறியியல் கல்லூரியையும் மற்றும் பல கல்வி நிறுவனங்களையும் உருவாக்கி நடத்தி வருகிறது. மிக நவீன முறையில் அமைந்த மருத்துவமனை ஒன்றும் இங்கே இயங்கி வருகிறது.

உலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய ஐந்தாவது மாநாடு இவ்வூரில் 1990ஆம் ஆண்டு டிசம்பரில் நடைபெற்றது.

**குஞ்சலி மரைக்காயர்:** மேலைக் கடற்கரையில் காலூன்ற முனைந்த போர்ச்சுக்கீசியர்களை எதிர்த்துப் போரிட்ட சுதந்திர வீரர் குஞ்சலி மரைக்காயர். இவர் முன்னோர்கள் சாமுத்திரி மன்னர்களிடம் தளபதியாகப் பணியாற்றியவர்கள். குஞ்சலி மரைக்காயர் பிறப்பிடம் பொன்னானி ஆகும். இவருடைய இயற்பெயர் முஹம்மது என்பதாகும். ஆனால், மன்னர் இவரை 'குஞ்சு அலீ' என்று அழைக்கலானார். இதுவே இவரது குடும்பப் பெயராக 'குஞ்சலி' என்று அமைவதாயிற்று. கப்பற்படைத் தளபதிகளாக இருந்ததால் 'மரைக்காயர்' என்ற அடைமொழி சேர 'குஞ்சலி மரைக்காயர்' என அழைக்கப்பட்டார்.

போர்ச்சுக்கீசியர் மேலைக் கடற்கரையில் பண்டக சாலைகளை அமைத்து, வணிகம் செய்யத் தொடங்கினர். நாளடைவில் அவர்கள் அரசு அதிகாரங்களையும் பெற முயன்றனர். இதைத் தடுத்து போர்ச்சுக்கீசியர்களை அடக்கும் வல்லமை அப்போதைய சாமுத்திரி மன்னர் மானவிக்ரமருக்கு இல்லை.

இதை அறிந்துணர்ந்த குஞ்சலி மரைக்காயர் தம் சொந்தப் பொருளைக் கொண்டு பொன்னானியில் போர்க் கப்பல்களைக் கட்டினார். வேண்டிய அளவு ஆயுதங்களையும் படைவீரர்களையும் சேகரித்தார். மன்னரின் அனுமதியுடன் போர்ச்சுக்கீசியர்களுக்குப் பெரும் சேதம் ஏற்பட்டபோதிலும் குஞ்சலி மரைக்காயர் தோல்வி அடைந்தார்.

அதன்பின்னர் அல்புகர்க் என்பவனின் தலைமையில் போர்ச்சுக்கீசியப் படை கள்ளிக்கோட்டையைத் தாக்கியது. குஞ்சலி மரைக்காயர் அவனை எதிர்த்து வீரப்போரிட்டார். இறுதியில் காலில் குண்டுக்காயம் பெற்றவனாக அல்புகர்க் புறமுதுகிட்டோடினான். குஞ்சலி மரைக்காயர் கள்ளிக் கோட்டையைக் காத்து வெற்றிவாகை சூடினார்.

அதன்பின் பர்கூர் என்ற இடத்தில் போர்ச்சுக்கீசியக் கடற்படையை எதிர்த்துப் போரிட்டார். பல எதிரிக் கப்பல்களை மூழ்கடித்து வெற்றி பெற்றார். அதன்பின் கொழும்பு, வேதாளை, தூத்துக்குடி போன்ற இடங்களிலும் போர்ச்சுக்கீசியரை எதிர்த்துப் போரிட்டு வெற்றி பெற்றார். கோவாவில் நடந்த போரில் குஞ்சலி மரைக்காயர் தோல்வியுற்றார். அதன்பின் பெரும்படை திரட்டி கொழும்பு சென்று போர்ச்சுக்கீசியரை எதிர்த்துப் போரிட்டார். போரில் மார்பில் குண்டடிக் காயம்பட்டு இறந்தார்.

இவரது இறப்புக்குப் பின்னர், அடுத்தடுத்து இவர் சகோதரர்கள் போர்ச்சுக்கீசியருடன் தீரமுடன் போரிட்டனர்.

குஞ்சலி மரைக்காயரின் வீரத்தைப் போற்றும் வகையில் விடுதலைக்குப்பின் இந்தியக் கடற்படைக் கப்பல் ஒன்றுக்கு 'குஞ்சலி' என அவர் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

**குஞ்சுமூசுப் புலவர்:** இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களில் புதுவகையான 'படைப்போர்' இலக்கியங்களை உருவாக்கிய பெரும்புலவர் குஞ்சுமூசுப் புலவர் ஆவார். இவர் தேங்காய்ப் பட்டினம் எனும் ஊரில் பிறந்தவர். இவர் முப்பாட்டனார் பெயராகிய மூஸா என்பதே இவருக்கும் பெயராக இடப்பட்டது. சின்ன மூஸா எனும் பொருள்பட வட்டார வழக்கையொட்டி 'குஞ்சுமூசு' எனப் பெயர் அமையலாயிற்று.

இவர் இயற்றிய நூல்களுள் 'இறவுசுல்கூல் படைப்போர்', 'சையிதத்துப் படைப்போர்' ஆகியன குறிப்பிடத்தக்கவையாகும். 'இரவுசுல்கூல் படைப்போர்' 45 படலங்களையும் 2383 விருத்தப்பாக்களையும் கொண்டது. 'சையிதத்துப் படைப்போர்' 515 பாடல்களைக் கொண்ட நூலாகும். இவற்றைத் தவிர 'ஸலாத்து மாலை,' 'அஜபுமாலை', 'தூதுரையின் மாலை,' 'மணம்புரி மஸ்அலா' ஆகிய நூல்களையும் படைத்துள்ளார்.

இவர் ஹஜ் சென்றபோது மதீனாவில் காலமானார். அவ்வாறு இறக்க வேண்டும் என்பது அவரது எண்ணமாக இருந்து வந்தது என்பர்.

**குணங்குடி மஸ்தான்:** இஸ்லாமிய மெய்ஞ்ஞானத் தமிழ்க் கவிஞர்களுள் மிகச் சிறந்தவர் குணங்குடி மஸ்தான். இவர் இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள குணங்குடி எனும் ஊரில் பிறந்தவராவார். இவரது இயற்பெயர் சுல்தான் அப்துல் காதிர் என்பதாகும். இவர் ஸூஃபிக் கவிஞராக விளங்கிய

மையால், இவர் குணங்குடி மஸ்தான் என அழைக்கப்பட்டார். அனைத்துச் சமயத்தவர்களும் ஏற்றிப்போற்றும் மெய்ஞ்ஞானக் கவிஞராக விளங்கினார் இவர்.

இவருக்குப் பதினெட்டு வயது நிரம்பியவுடன் திருமணம் செய்விக்க முயன்றனர். அதில் அவருக்கு விருப்பம் இல்லாததால், மார்க்க ஞானம் பெற கீழக்கரை வந்தார். அங்கு தைக்காவாப்பா வலியுல்லாஹ்வின் மதரஸாவில் சேர்ந்து கல்வி கற்கலானார். அங்குதான் இளைஞர் ஷைகுனாப்புலவரும் படித்து வந்தார். இருவரும் இணைபிரியா நண்பர்கள் ஆகினர்.

மார்க்கக் கல்வி பயின்று முடித்தபின், திருச்சி வந்து ஷாம் சாஹிப் எனும் பெரியாரை அணுகி மெய்ஞ்ஞான உணர்வை வளர்த்துக் கொண்டார். பின்னர் மதுரைக் கருகில் உள்ள சிக்கந்தா மலையில் நாற்பது நாட்கள் ஊண் உறக்கமின்றி தவம் செய்தார். பின்னர் சதுரகிரி, யானைமலை, நாகமலை போன்ற மலைப் பகுதிகளில் தியானம் செய்தார். பின்னர் நாகூர், காரைக்கால் எனப் பல இடங்களிலும் சுற்றித் திரிந்தார். இறுதியில் சென்னை ராயபுரம் வந்து சேர்ந்தார். அங்குள்ள முட்புதர் நிரம்பிய பகுதியில் தங்கினார். தொழுவதும் நோன்பு நோற்பதுமாகவே இருந்தார். இவ்வாறு 12 ஆண்டுகள் வாழ்ந்த பின்னர் மறைவெய்தினார். இவரது உடல் ராயபுரத்திலேயே அடக்கம் செய்யப்பட்டது. ஆண்டுதோறும் இவரது மறைவு நாளன்று உர்ஸ் நடைபெறுகிறது.

இவர் மெய்ஞ்ஞானப் பாடல்கள் பலவற்றைப் பாடியிருக்கிறார். அவை வல்ல அல்லாஹ்வையும் ஸூஃபி மேதை முஹிய்யுத்தீன் அப்துல் காதர் ஜீலானி ஆண்டகையையும் போற்றுவனவாக அமைந்துள்ளன. எளிமையும் இனிமையும் இப்பாடல்களில் காணும் சிறப்புத் தன்மையாகும்.

**குத்பா:** 'குத்பா' எனும் அரபுச் சொல்லுக்குச் 'சொற்பொழிவு' என்பது பொருளாகும். வெள்ளிக்கிழமையன்றும், இரண்டு பெருநாட்களின் போதும் மின்பரில் நின்று செய்யும் சொற்பொழிவுகளே 'குத்பா பிரசங்கம்' என அழைக்கப்படுகின்றன. வெள்ளிக்கிழமை தொழுகை தொடங்கும் முன்பும்பெருநாட் தொழுகைபின்பும் குத்பா பேருரை நிகழ்த்தப்படும்.

மற்றும் மழைத் தொழுகையின் போதும் சந்திர, சூரிய கிரகணத்தின் போதும் கூட 'குத்பா'ப் பேருரை நிகழ்த்தப்படுவதுண்டு. நிக்காஹ் எனும் திருமணத்தின்போது நிகழ்த்தப்படும் சொற்பொழிவும் 'குத்பா என்றே அழைக்கப்படுகிறது.

'குத்பா'ச்சொற்பொழிவுகள் சுருக்கமாக இருக்கவேண்டும் என்பது நியதியாகும். ஜும்ஆ 'குத்பா'ப் பேருரையின்போது கேட்பவர்கள் அமைதியாகக் கேட்கவேண்டும். பேசக்கூடாது. பேசினால் ஜும்ஆவின் பலன் கிடைக்காமல் போய்விடும் எனப் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்.

**குத்பு மினார்:** புது தில்லிக்கு அருகில் உள்ள மிக உயரமான ஸ்தூபி 'குத்பு மினார்' ஆகும். செங்குத்தான இந்த ஸ்தூபி முழுமையும் சிவப்புக் கற்களால் கட்டப்பட்டதாகும். இது மினாரா போன்ற அமைப்புடையது.

டில்லியை ஆண்ட குத்புத்தீன் ஐபெக் எனும் முஸ்லிம் மன்னர் இம் மாபெரும் ஸ்தூபியைக் கட்டத் தொடங்கினார், அவர் அடிப்பகுதியான முதல் மாடியை

மட்டுமே கட்டிமுடித்தார். அவருக்குப் பின் வந்த சுல்தான் இல்துத்மிஷ் என்பவர் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது மாடிகளைக் கட்டினார். முன்பு ஒரு சமயம் இடியினால் இந்த ஸ்தூபி பெரும் சேதத்துக்காளாகியது. அப்போது டில்லியை ஆண்டுவந்த ஃபிரோஸ்ஷா இதை முழுமையாகப் பழுதுபார்த்ததோடு, ஐந்தாவது மாடியையும் கட்டி முடித்து முழுமைபபடுத்தினார்.

இதன் உயரம் 73 மீட்டராகும். அதன் அடிப்பகுதியின் அகலம் மட்டும் 17 மீட்டராகும். இதன் மீதிருந்து ஐந்து முறை பாங்கு சொல்லப்படுகிறது. இது ஐந்து அடுக்குகளால் ஆனது. ஒவ்வோர் அடுக்குக்கும் ஒரு வெளிப்பகுதி உண்டு. அதில் திருக்குர்ஆன் வசனங்கள் அழகாகப் பொறிக்கப்பட்டுள்ளன.

சில ஆண்டுகட்டு முன்பு பள்ளிக் குழந்தைகளும் பார்வையாளர்களுமாகப் பெருந்திரளானோர் ஐந்தாவது மாடி நோக்கிச் சென்றனர். அப்போது இருட்டாக இருந்ததால் சிலர் கால் இடர, படியேறிக்கொண்டிருந்த அனைவரும் சரிய நேரிட்டது. இதன் விளைவாகப் பள்ளிக் குழந்தைகள் பலர் இறக்க நேரிட்டது. அதன்பின் இதன் மேல் ஏறிச்சென்று காட்சி காண்பது தடை செய்யப்பட்டுள்ளது.

**குர்ஆன்:** இச்சொல் இஸ்லாமியத் திருமறையைக் குறிப்பதாகும். இதற்கு 'ஓதுதல்' என்பது பொருளாகும். திருக்குர்ஆன் வசனங்கள் அனைத்தும் வல்ல அல்லாஹ்வினால் வானவர் தலைவர் ஜிப்ரீல் (அலை) மூலம் பெருமானார் (ஸல்) அவர்கட்கு வழங்கப்பட்டவை ஆகும்.

திருமறையில் 'இக்ரஉ' எனத் தொடங்கும் ஐந்து இறை வசனங்கள் ஜிப்ரீல் (அலை) அவர்களால் பெருமானார்க்கு முதன் முதலாக அருளப்பட்டன. இந்நிகழ்ச்சி ரமளான் மாதம் 27-ஆம் நாளன்று இரவு ஹிரா குகையில் நடைபெற்றது.

இதன்பின் நாற்பது வயதிலிருந்து பெருமானார் மறைவு வயதான 63ஆம் வயது வரை 23 ஆண்டுகள் சிறிது சிறிதாக வெளிப்பட்டு முழுமையடைந்தது. இதைப்பற்றி இறைவன் தன் திருமறையில் 'மனிதர்களுக்கு நீர் சிறிது சிறிதாக ஓதிக் காண்பிக்கும் பொருட்டு இந்தக் குர்ஆனைப் பல பாகங்களாகப் பிரித்தோம். அதற்காகவே இதனைச் சிறிது சிறிதாக இறக்கி வைத்தோம்' எனக் கூறியுள்ளான்.

இவ்வாறு சிறுகச்சிறுகப் பெறப்பட்ட இறைவசனங்கள் உதுமான் (ரலி) ஆட்சியில் முழுமையாகத் தொகுக்கப்பட்டது. அதுவே இன்றைக்குள்ள திருக்குர்ஆன் திருமறை.

திருக்குர்ஆன் மொத்தம் 114 அத்தியாயங்களைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு அத்தியாயமும் 'ஸூரா' என அழைக்கப்படும். இந்த ஸூராக்கள் அனைத்தும் ஒரே விதமான அளவுகளைக் கொண்டில்லை. சில அளவில் பெரியன. சில சிறியன. இறுதியாக உள்ள 35 ஸூராக்களைத் தவிர மற்ற ஸூராக்கள் ஒவ்வொன்றும் பலப்பல பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இப்பாகங்கள் ''ருகூஃ' என்று அழைக்கப்படுகின்றன. ருகூஃ ஒவ்வொன்றும் தனிப் பொருளை விளக்குவதாகும். ஸூரா ஒவ்வொன்றும் பல வசனங்களைக் கொண்டிருக்கும். ஒவ்வொரு வசனமும் 'ஆயத்து' என அழைக்கப்படுகிறது. மிகப்பெரும் ஸூரா 286 ஆயத்துக்களைக் கொண்டுள்ளது. மிகச்சிறிய ஸூரா மூன்று ஆயத்துக்களை உடையதாகும்.

திருக்குர்ஆன் ஒரே வாரத்தில் ஓதி முடிக்க வசதியாக ஏழு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அப்பகுதிகள் ஒவ்வொன்றுக்கும் 'மன்ஸில்' என்று பெயர். அவ்வாறே, ஒரு மாதத்தில் ஓதி முடிக்க வசதியாக முப்பது பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அப்பகுதி ஒவ்வொன்றுக்கும் 'ஜுஸ்உ' என்று பெயர். நாளைக்கொரு ஜுஸ்உ வீதம் முப்பது நாளில் ஓதி முடிக்கலாம்.

திருக்குர்ஆனில் மொத்தம் 6666 வசனங்கள் உள்ளன. அவை 86,430 சொற்களில், 3,22,671 எழுத்துகளைக் கொண்டவை. திருமறையில் இடம் பெற்றுள்ள மொத்தப் புள்ளிகளின் எண்ணிக்கை 1, 05, 684 ஆகும். 1400 ஆண்டுகளாகியும் திருக்குர்ஆனில் ஒரு புள்ளிகூட மாற்றப்படவோ திருத்தப் படவோ நீக்கப்படவோ இல்லை. இதனால் அன்று முதல் இன்றுவரை திருத்தப்படாத திருமறையாக திருக்குர்ஆன் விளங்கி வருகிறது.

**குர்பான்:** குர்பான் என்ற சொல்லுக்குப் 'பலியிடுதல்' என்பது பொருளாகும். துல்ஹஜ் மாதம் பத்தாம் நாளன்றும் அதைத் தொடர்ந்து வரும் தஷ்ரீக் நாளும் குர்பானி கொடுக்கும் நாட்களாகும். ஆடு, மாடு, ஒட்டகைகள் ஆண்டவனுக்காக அறுத்து பலியிடப்படும்.

இறைவன் தன் திருமறையில் ''குர்பானி'' கொடுப்பதை ஒவ்வொரு வகுப்பினருக்கும் கடமையாக்கி இருக்கிறோம்'' (22:24) என்று கூறியுள்ளான். இதிலிருந்து இறைவனுக்காக பிராணிகளைப் பலியிடும் பழக்கம் நீண்ட நெடுங்காலமாகவே இருந்து வந்துள்ளது என்பது தெளிவாகிறது.

இஸ்லாமிய வரலாற்றில் நபி இப்ராஹீம் (அலை) கனவு கண்டு மகனைப் பலியிடத் துணிந்த நிகழ்ச்சி மிக முக்கியமானதாகும்.

குர்பானியை அல்லாஹ்வின் பெயரால் கொடுக்க வேண்டும் என இறைமறை கட்டளையிடுகிறது. பலியிடப் படும் உயிரின் இறைச்சியோ, இரத்தமோ இறைவனைப்போய்ச் சேருவதில்லை. மக்களின் பக்தியும் இறைவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் தன்மையுமே இறைவனைச் சென்றடைகின்றன.

**குலாம் காதிறு நாவலர்:** மிகச்சிறந்த இஸ்லாமியத் தமிழ்ப் புலவராகத் திகழ்ந்தவர் குலாம் காதிறு நாவலர். இவர் பெரும் புலவராக மட்டுமின்றி, மிகச் சிறந்த நாவன்மை படைத்தவராகவும் விளங்கினார். இவருடைய நாவன்மை மிக்கச் சொற்பொழிவுகள் மக்களைப் பெரிதும் ஈர்த்து மகிழ்வூட்டின.

நாகூரில் 1833ஆம் ஆண்டில் குலாம் காதிறு பிறந்தார். இவர் தந்தை தமிழ்ப் புலமையும், மருத்துவ அறிவும் மிகுந்தவராவார்.

பன்னிரண்டு வயது முடியும் முன்னரே திருக்குர்ஆன் முழுமையும் ஓதினார். தமிழ் நூல்களில் பாண்டித்தியமும் பெற்றார். தந்தையார் இறந்தபின், பெரிய தந்தையாரின் அரவணைப்பில் வாழ்ந்தார். இக்காலகட்டத்தில் தமிழ் நூல்களைத் தாமாகவே கற்கலானார். நாராயணசாமி என்பவர் இவர் தமிழ்க் கல்விபெறப் பெரிதும் துணை நின்றார். அவரும் காலமாகிவிடவே இவர் திருசிரபுரம் சென்று, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையிடம் தொடர்ந்து தமிழ்க்கல்வி பெற்றார். அப்போது இவருக்கு வயது இருபத்தெட்டாகும்.

இஸ்லாமிய ஞானமும் தமிழ்ப்புலமையும் நிரம்பப் பெற்ற பின்னர் படைப்

பிலக்கியங்களை உருவாக்க முனைந்தார். முதலில் சாதாரணக் கவிதைகளைப் புனையலானார். பிறகு கீர்த்தனைகளை இயற்றலானார். அதன் பின்பு இவர் ‘ஆரிபு நாயகம்,’ ‘நாகூர்ப் புராணம்’ போன்ற பேரிலக்கியங்களைப் படைக்கலானார். இவர் ‘கலம்பகம்,’ ‘கோவை’ போன்ற இலக்கிய நூல்கள் பலவற்றைப் படைத்துள்ளார்.

குலாம் காதிறு நாவலரின் பெரும் புலமையைக் கண்டு வியந்த பாண்டித்துரை தேவரும், பாஸ்கர சேதுபதியும் இவரை நாகூர் வந்து நேரில் போற்றிப் பாராட்டினர். இவரின் விருப்பத்திற்கிணங்க நான்காம் தமிழ்ச் சங்கம் மதுரையில் தோற்றுவிக்கப்பட்டது. அதன் முதல் உறுப்பினராகவும் இவரை நியமித்தனர். இவர் ‘தமிழ்ச்சங்க ஆற்றுப்படை’ எனும் அருந்தமிழ் நூல் ஒன்றை யாத்தளித்தார். அந்நூல் புலமையாளர்கள் மத்தியில் பெரிதும் போற்றிப் பாராட்டப்பட்டது. இவரை ‘நான்காம் தமிழ்ச்சங்க நக்கீரர்’ எனக் கொண்டாடி மகிழ்ந்தனர். மறைமலையடிகள் குலாம் காதிறு நாவலரின் மாணவராவார். அவர் நாவலரைத் தமிழ்த் தெய்வம் எனப் போற்றி மகிழ்ந்தார். இவர் தம் 75ஆம் வயதில் நாகூரில் காலமானார்.

இவர் மகனார் முஹம்மது ஆரிஃபு நாவலர் பெரும் புலமையாளராகவும் நாவன்மையாளராகவும் விளங்கினார்.

**குவைத்:** எண்ணெய் வளம் மிகுந்த சின்னஞ்சிறு நாடு குவைத் ஆகும். ‘குவைத்’ என்றால் கோட்டை என்று பொருள். இங்கு பழங்காலக் கோட்டை ஒன்று இருந்ததாகத் தெரிகிறது. அதன் அழிபாடுகள் இன்றும்கூடக் காணக் கிடக்கின்றன. இந்நாடு ஈரானுக்கும் அரேபியாவுக்கும் இடைப்பட்ட வளைகுடா நாடாகும். குவைத்தின் வடக்கு மேற்குப் பகுதியில் இராக் நாடு அமைந்துள்ளது. கிழக்கே அரேபியா வளைகுடாவும், தெற்கு மற்றும் மேற்குத் திக்குகளில் சவூதி அரேபியாவும் எல்லைகளாக அமைந்துள்ளன. இது ஒரு முஸ்லிம் நாடு ஆகும்.

இஸ்லாமிய நாடான குவைத் இரண்டாம் உலகப்போருக்குப் பின் ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. 1961ஆம் ஆண்டில் ஆங்கில ஆதிக்கத்திலிருந்து முழுச் சுதந்திர நாடாகத் தன்னை அறிவித்தது. ஐ.நா. சபையிலும் அங்கம் பெற்றது.

இந்நாட்டின் வளத்துக்கு ஆதாரமாக அமைந்திருப்பது எண்ணெய் வளமாகும். 1934ஆம் ஆண்டு முதலே எண்ணெய் எடுக்கப்பட்டு வருகிறது. அரபு நாடுகளிலேயே அதிக எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடாக குவைத் விளங்கி வருகிறது. இதனால் இங்குள்ள மக்களின் வாழ்க்கைத் தரம் மிக உயர்ந்து காணப்படுகிறது.

குவைத் 17,818 ச.கி.மீ பரப்பளவு உடையது. சுமார் 16 இலட்சம் மக்கள் தொகையைக் கொண்டது. எல்லையோர எண்ணெய்க் கிணறுகள் தகராறு காரணமாக 1990 ஆகஸ்டில் இந்நாட்டின் மீது இராக் படையெடுத்து கைப்பற்றிக் கொண்டது. அத்துடன் குவைத் பகுதி இராக் நாட்டின் ஒரு மாநிலமாகும் என அறிவித்தது. குவைத்திலிருந்து இராக்கை வெளியேறும்படி ஐ.நா. பணித்தது. இதை இராக் ஏற்காததால் அமெரிக்க தலைமையில் 29 நாடுகள் 1991 ஜனவரி 16 அன்று இராக் மீது போர் தொடுத்தன.

இறுதியில் ஈராக் 1991 பிப்ரவரி இறுதியில் குவைத்தைவிட்டு வெளியேறியது.

**குறைஷிகள்:** அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிறந்த குலம் குறைஷிக்குலமாகும். இக் குலத்தவர்கள், சுறுசுறுப்பு மிக்கவர்களாகவும் வீர உணர்ச்சி நிறைந்தவர்களாகவும் மற்றவர்களை ஆளும் ஆளுமை உடையவர்களாகவும் இருந்தனர்.

இவர்களது பூர்வீகம் மெசபடோமியாவாக இருக்கலாம். இவர்கள் இப்ராஹீம் (அலை) வம்சா வழியினராக இருக்கலாம் என்பர். அப்ரஹாவின் படையெடுப்பின்போது அதை முறியடித்து, கஃபாவைக் காத்த பெருமை இவர்களுடையது. இதனால் இவர்கள் தங்களை அல்லாஹ்வின் மக்கள் எனக் கூறிக்கொண்டனர். மற்ற மக்களை விடத் தங்களை உயர்ந்த குலத்தவராக எண்ணிச் செருக்கோடு வாழ்ந்தவர்கள். நபிகள் நாயகம் இக்குலத்தில் பிறந்தபோதிலும் அல்லாஹ்வின் முன்னிலையில் அனைவரும் சமம் என்று கூறி அவர்தம் செருக்கை அடக்கினார்.

'குறைஷி' என்ற பெயரில் ஒரு தனி அத்தியாயம் திருக்குர்ஆனில் உண்டு.

**கூத்தாநல்லூர்:** தஞ்சை மாவட்டத்தில் அமைந்துள்ள வளமான ஊர். இவ்வூரைச் சேர்ந்த முஸ்லிம் மக்களில் உள்ளூரில் இருப்போர் விவசாயம் செய்கின்றனர். வெளியூர்களிலும் வெளிநாடுகளிலும் வாழ்வோர் வியாபாரம் செய்து வருகின்றனர்.

நாகூர் ஆண்டகை ஷாஹுல் ஹமீது நாயகம் இவ்வூருக்கு வந்து தங்கிச் சென்றுள்ள சிறப்பு உண்டு. மதரஸா பைஸுல் பாக்கியாத் மேற்கு அறையில் ஷாஹுல் ஹமீது நாயகம் தங்கியிருந்ததாகக் கூறப்படுகின்றது, அவர்கள் செய்த துஆ பரக்கத்தினாலேயே இவ்வூர் செல்வச் செழிப்புற்றதாக நம்பப்படுகிறது.

இங்குள்ள பெரிய பள்ளி ஷாஹுல் ஹமீது நாயகம் வந்து சென்ற ஆண்டில் கட்டப்பட்டதாகும். சிதிலமடைந்த அப்பள்ளி, வள்ளல் ஹாஜி ஏவிஎம் முஹம்மது இப்ராஹீம் அவர்களால் அழகுறக் கட்டப்பட்டுள்ளது. இவ்வூரில் ஒன்பது பள்ளி வாயில்கள் உள்ளன. இரண்டு மதரஸாக்களும், அநாதைச் சிறுவர் இல்லங்கள் இரண்டும் உள்ளன. சில பொது நிறுவனங்கள் சமுதாய சேவையாற்றி வருகின்றன. அவற்றுள் சன்மார்க்கத் தொண்டர் சபை, ஜஷ்ன மீலாத் சொசைட்டி, மஹ்பூப் சுபுஹானி கமிட்டி, ஹயாத்துத்தீன் ராத்திபத்துல் முஹம்மதியா சபை, முஸ்லிம் லீக் போன்ற அமைப்புகள் குறிப்பிடத்தக்கனவாகும்.

ஆதம் டிரஸ்ட் எனும் அறநிறுவனத்தின் மூலம் பெண்களுக்கான மார்க்கக் கல்வி சிறப்பாக வழங்கப்படுகிறது. அத்துடன் ஹாபிஸ் மௌலானா E. M. அப்துர் ரஹ்மான் நூரிய்யீயின் திருக்குர்ஆன் விரிவுரைகளைக் கொண்ட அன்வாருல் குர்ஆன் பல தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. 1990ஆம் ஆண்டில் அப்பணி நிறைவடைந்தது. சாந்திப் பிரகடன சபை எனும் அமைப்பும் 'திருமறைத் தமிழுரை' எனும் பெயரில் திருக்குர்ஆன் மொழிபெயர்ப்பை வெளியிட்டுள்ளது.

இவ்வூரில் புலவர் பெருமக்கள் பலர் வாழ்ந்துள்ளனர். அவர்களுள் தலையாயவராக விளங்குபவர் சாரண பாஸ்கரன் என அழைக்கப்பட்ட அஹ்மது அவர்களாவர். இவர் இயற்றிய 'யூசுஃப் சுலைகா' காப்பியம் இவருக்கும் இவ்வூருக்கும் பெரும்புகழ் தேடித்தந்த இனிய தமிழ்க் காப்பியப் படைப்பாகும்.

**கெய்ரோ:** இஸ்லாமிய வரலாற்றில் புகழ்பெற்ற பல நகர்களில் இதுவும்

ஒன்றாகும். இது எகிப்து நாட்டின் தலைநகராகும். 'காஹிரா' என்ற பெயரே 'கெய்ரோ' என ஆயிற்று. கி.பி. 973ஆம் ஆண்டு ஃபாத்திமிகள் இதைத் தலைநகராகக் கொண்டனர். ஆயிரம் ஆண்டுப் பழமையுடைய 'அல் அஸ்ஹர்' இஸ்லாமியப் பல்கலைக் கழகம் இங்கு உள்ளது.

இந்நகர் வழியேதான் நைல் (நீல) நதி ஓடுகிறது. அதன் மேற்குக் கரையில் கீஸா எனுமிடத்தில் புகழ்பெற்ற பிரமிடுகள் அமைந்துள்ளன. அதன் அருகேதான் மனித உடலும், சிங்க முகமும் கொண்ட 'ஸ்பிங்ஸ்' எனும் மாபெரும் சிலை அமைந்துள்ளது.

இந்நகருக்கு அருகிலுள்ள முகத்தம் மலைக்குன்றுகளில் மாபெரும் கோட்டைச் சுவர்கள் கட்டப்பட்டுள்ளன. இவற்றின் சிதிலமடைந்த பகுதிகளை இன்றும் காணமுடிகிறது. அதன் அருகேதான் பாழடைந்த பழைய கெய்ரோ நகர் காணப்படுகிறது. அதனை 'இறந்த நகரம்' என்று அழைக்கிறார்கள். அங்குள்ள கோட்டையைக் கட்டியவர் சுல்தான் ஸலாஹுத்தீன் என்று கூறப்படுகிறது.

கெய்ரோ நகர் பள்ளிவாசல்களின் நகரம் என்று சிறப்பித்து அழைக்கப்படுவதுண்டு. இந்நகரில் நானூறுக்கு மேற்பட்ட பள்ளிவாசல்கள் உண்டு. அவற்றுள் பழமைச் சிறப்புடைய அல்அஸ்ஹர் பள்ளி வாசல், சுல்தான் ஹஸன் பள்ளி வாசல், இப்னு தூலூன் பள்ளிவாசல் ஆகியவை பழம்பெரும் பள்ளிவாசல்களாகும். சில புனித உடல்கள் புதைக்கப்பட்ட இடத்திலுள்ள பள்ளிவாசல்களும் இந்நகரில் அமைந்துள்ளன. அவற்றுள் இமாம் ஷாஃபியீ (ரஹ்) அவர்கள் அடக்கம் செய்யப்பட்ட இடத்திலுள்ள பள்ளிவாசலும், இமாம் ஷஃரானி பெயரிலமைந்த பள்ளிவாசலும், பெருமானார் (ஸல்) அவர்களின் பேரர் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களின் பெயரிலுள்ள பள்ளிவாசலும் குறிப்பிடத்தக்கவை. இப்பள்ளியில் பெருமானார் உடை முதலான பொருள்கள் அலீ (ரலி) எழுதிய குர்ஆன் கைப்பிரதியும் கூட பாதுகாக்கப்பட்டு வருகின்றன. நவீன பாணியில் கட்டப்பட்ட பள்ளிவாசல்களும் இங்குள்ளன.

இந்நகரின் புராதனச் சிறப்புகளை விளக்கும் வகையில் பல அருங்காட்சியகங்கள் அமைந்துள்ளன. அவற்றின் எண்ணிக்கை சுமார் பதினைந்து ஆகும். அவற்றுள் மிகப் பெரியது 'எகிப்து அருங்காட்சியகம்' எனும் பெயரில் அமைந்துள்ள பொருட்காட்சி சாலையாகும். இங்கு ஐயாயிரம் ஆண்டுக் கால வரலாற்றையும் நாகரிகத்தையும் விளக்கும் பல அரிய பொருட்கள் வைக்கப்பட்டுள்ளன. இஸ்லாமிய ஆட்சி தொடங்கும் வரையுள்ள ஆவணங்களும் இப்பொருட்காட்சி சாலையில் காணக் கிடக்கின்றன. அவற்றுள் மூஸா (அலை) அவர்களை எதிர்த்து நின்று, இறுதியில் செங்கடலில் மூழ்கிச் செத்த பிர்அவ்னின் (இரண்டாம் ரமேஸஸ்) உடலும் ஒன்றாகும்.

இஸ்லாமிய ஆட்சி தொடங்கிய பின்னர் உள்ள 65,000 வரலாற்றுச் சிறப்புள்ள அரும்பொருட்கள் வைக்கப்பட்டுள்ள இஸ்லாமிய அரும்பொருட்காட்சி சாலையும் இங்குள்ளது.

ஈஸா (அலை) அவர்கள் அன்னை மர்யம் தங்கியிருந்ததாகக் கருதப்படும் இடத்தில் மாதா கோயில் ஒன்று கட்டப்பட்டுள்ளது.

இந்நகரின் மத்தியில் நைல் நதிக்கரையில் வானளாவிய கோபுரம் ஒன்று கட்டப்பட்டுள்ளது. சுழலும் விடுதி

யோடு கூடிய இதன் உயரம் 187 மீட்டர் ஆகும். இதன் உச்சியில் இருந்தபடி 25 கி.மீ. சுற்றளவு உள்ள பகுதிகளைக் கண்டு களிக்கலாம். இதுவே ஆசியாவின் மிக உயரக் கோபுரம் ஆகும்.

**கௌதுல் அஃலம்:** மெய்ஞ்ஞான மேதை அப்துல் காதர் முஹிய்யுத்தீன் ஆண்டகையைக் குறிக்கும் சிறப்புப் பெயராகும். ஒவ்வொரு கால கட்டத்திலும் அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்களின் பிரதிநிதிகளாக முப்பது வலிமார்கள் தோன்றுவார்கள் என்பது ஹதீது செய்தி. அவ் வலிமார்களின் தலைவர் 'கௌதுல் அஃலம்' என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்படுவர் என்பது நியதி. அம்முறையிலேயே முஹிய்யுத்தீன் ஆண்டகை 'கௌதுல் அஃலம்' என அழைக்கப்படலாயினர். எனவே, இப்பட்டம் இறைவனால் வழங்கப்பட்ட சிறப்பு எனக் கருதப் படுகிறது.

**சதக்கத்துல்லா அப்பா:** தமிழகத்தில் தோன்றிய மாபெரும் இஸ்லாமிய மார்க்க ஞான மேதை சதக்கத்துல்லா அப்பா அவர்களாவார். இவர் ஹிஜ்ரி 1042ஆம் ஆண்டில் காயல்பட்டினத்தில் பிறந்தவர். இவர் தந்தையார் பெயர் சுலைமான் (வலி). தாயார் பெயர் பாத்திமா. தாயாரின் பூர்வீகம் பிராமண குலமாகும். சதக்கத்துல்லா அப்பா அவர்களின் உடன் பிறந்த சகோதரர்கள் நால்வர் ஆவர். அவர்கள் அனைவரும் மார்க்கஞானம் நிரம்பப் பெற்றவர்கள். சதக்கத்துல்லா அப்பா அவர்களின் இயற்பெயர் 'சதக்கா' என்பதாகும். இவர் முன்னோர்கள் அபூபக்ர் (ரலி)அவர்களின் வழிவந்தோராவர்.

இளம் வயதில் தம் தந்தையிடமே மார்க்கக் கல்வி பெற்றார். அதன் பின்னர் அதிராம்பட்டினம் சென்று மேலும் மார்க்கக் கல்வி கற்கலானார். அவர் ஆசிரியர் சின்ன நெய்னா லெப்பை ஆலிம் ஆவார்.

அதிராம்பட்டினத்தில் கல்வியை முடித்துக் கொண்டபின் இஸ்லாமிய மார்க்க ஞான நூல்கள் அனைத்தையும் கற்பதிலும் அவற்றைப்பற்றி ஆழச் சிந்திப்பதிலும் செலவிட்டார். இவர் அவ்வப்போது வெளிப்படுத்தும் மார்க்க ஞான உபதேசங்கள் மக்களையும் ஆலிம்களையும் பெரிதும் ஈர்த்தன. பரவசப்படுத்தி வியக்கவைத்தன. ஒரு சமயம் இவர் ஹஜ் சென்றிருந்தபோது இவரது மார்க்க அறிவைப் பாராட்டி இவரை 'சதக்கத்துல்லாஹ்' (அல்லாஹ்வின் அருட்கொடை) என அழைக்க, அப்பெயரே நிலை பெறலாயிற்று.

இவரது இஸ்லாமிய ஞானத்தைக் கேள்விப்பட்ட சக்கரவர்த்தி ஔரங்கசீப் ஆலம்கீர் இவருக்குப் பதவியும், பரிசுகளும் தர முன்வந்தார். இவர் எதையுமே விரும்பாதவராக வாழ்ந்தார். எனினும் உலமாக்கள் இவருக்குப் பல்வேறு உயர் பட்டங்களை வழங்கினர்.

இணையற்ற இறைநேசரான சதக்கத்துல்லா அப்பா அவர்கள் ஆயிரத்துக்கு மேற்பட்டவர்கட்கு மார்க்கக் கல்வி போதித்தார். அவர்களுள் இவர் இளவல் ஷாம் ஷிஹாபுத்தீன் வலியுல்லாவும் ஒருவராவார். ஆயிரக்கணக்கானோர் அப்பா அவர்களை மானசீகக் குருவாகக்கொண்டு மார்க்க ஞானம் பெருக்கி வந்தனர்.

உமறுப்புலவர் அவர்கள் சீறாப் புராணம் எழுத எண்ணியபோது, அவரது வெளித்தோற்றத்தைக் கண்டு பெருமானார் வாழ்க்கையை அவருக்கு விளக்கிக் கூற விரும்பவில்லை. எனவே,

மறுத்து உமறுப்புலவரை அனுப்பிவிட்டார். அன்று இரவு நபிகள் நாயகம் (ஸல்) இவர் கனவில் தோன்றி, உமறுக்கு உரை வழங்கப் பணித்தார். அதன்பின்பு உமறுவின் பெருமையை உணர்ந்து நாயகத்திருமேனி (ஸல்) வாழ்க்கையை விளக்கியுரைத்தார். அதன் விளைவாக உருவானதே 'சீறாப் புராணம்' காப்பியத் தமிழ் நூல்.

சதக்கத்துல்லா அப்பா அவர்கள் 'வித்ரிய்யா' முதலாக பல மார்க்க ஞான நூல்களை இயற்றியுள்ளார். அரபி மொழிப்புலமையும் அம்மொழியில் செய்யுள் இயற்றும் திறனும் மிக்கவராக விளங்கினார். அரபு நாட்டில் புகழ்பெற்று விளங்கிய 'ஸுப்ஹான மௌலூதை நம் நாட்டில் அறிமுகப்படுத்திய பெருமை இவர்களையே சாரும். தம் 75ஆம் வயதில் சதக்கத்துல்லாஹ் (ரஹ்) அவர்கள் கீழக்கரையில் காலமானார்கள்.

**சஹாபா:** அண்ணல் நபி (ஸல்) அவர்களின் தோழர்களைக் குறிக்கும் சொல்லாக 'சஹாபா' என்ற அரபுச் சொல் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இதற்குத் 'தோழர்', 'கூட்டாளி' என்ற பொருள்கள் உண்டு. 'ஸாஹிப்' என்பது இதன் ஒருமை. பெருமானாரின் தோழர்களில் தலைசிறந்தவர்களாகக் கருதப்படுபவர்கள் அபூபக்ர், உமர், உதுமான், அலீ ஆகியோர். நபித் தோழர்களின் சிறப்புக் கருதி அவர்களின் பெயரோடு 'ரலியல்லாஹு' (ரலி) என்ற அடைமொழி சேர்த்தே அழைக்கப்படுவர். இதற்கு 'அல்லாஹ் அவர்களுடன் திருப்திப்படுவானாக' என்பது பொருளாகும்.

**சார்மினார்:** ஐதராபாத் நகரிலுள்ள பழம்பெரும் சின்னம் 'சார்மினார்' ஆகும். இது 12 மீட்டர் அகலமும் 18மீட்டர் நீளமும் கொண்ட சதுர வடிவக் கட்டிடம். இதை 1591ஆம் ஆண்டில் ஐந்தாம் சுல்தான் முஹம்மது குலிகுத்புஷா என்பவர் கட்டினார். இது ஒரு பிரம்மாண்டமான கட்டிடம். நான்கு மினராக்களைக் கொண்டிருப்பதால் 'சார் மினார்' என அழைக்கப்படலாயிற்று. ஒவ்வொரு மினராவும் 54 மீட்டர் உயரமுள்ளதாகும். இதன் மேல் தளத்தில் பள்ளிவாயிலும் கீழ்தளத்தில் பள்ளிக்கூடமும் உள்ளது.

இதன் நான்கு பக்கங்களில் நான்கு வளைவுகள் உள்ளன. ஒவ்வொரு வளைவும் 9 மீட்டர் நீளமும் 7 மீட்டர் உயரமும் கொண்டது; அவை ஒவ்வொரு சாலையையும் நோக்கி அமைந்துள்ளன. வளைவின் அகலமும், சாலையின் அகலமும் ஒன்றேயாகும். இதன் உச்சியில் நின்று பார்த்தால் ஐதராபாத் நகரம் முழுவதையும் காணலாம்.

**சித்தி லெவை:** இலங்கையைச் சேர்ந்த சித்தி லெவை தமிழில் புதினத்துக்கு முன்னோடியான 'அசன்பே சரித்திரம்' எனும் படைப்பிலக்கியத்தை உருவாக்கிய தமிழ் முஸ்லிம் எழுத்தாளரும் கல்வியாளரும் ஆவார். இவர் 1838ஆம் ஆண்டில் இலங்கையில் உள்ள கண்டி நகரில் பிறந்தார். இவரின் இயற்பெயர் முஹம்மது காசிம் என்பதாகும். இவரது தந்தையின் பெயராகிய சித்தி லெவை என்பதே நாளடைவில் இவரின் பெயராகவும் அமைந்து விட்டது.

இவர் மார்க்கக் கல்வியோடு தமிழறிவையும் வளர்த்துக் கொண்டார். தம் தந்தையாரைப்போலவே சட்டக்கல்வி கற்று வழக்கறிஞர் ஆனார். இவரது ஆற்றலைக் கண்ட அரசு இவருக்கு உயர்நீதி மன்ற வழக்கறிஞர் பணியை அளிக்க முன்வந்தது. ஆனால் அப்பதவியை ஏற்க இவர் விரும்பவில்லை.

இலங்கை வாழ் தமிழ் முஸ்லிம்களின் முன்னேற்றத்தில் பெரும் அக்கறை கொண்டவர். அவர்களிடையே விழிப் புணர்ச்சி உண்டாக்க விழைந்தார். இதற்காக 'முஸ்லிம் நேசன்' எனும் இதழைத் தொடங்கினார். அவ்விதழ் மூலமாக முஸ்லிம் மக்களிடையே மறு மலர்ச்சியைத் தோற்றுவிக்க முயன் றார். இவ்வகையில் இவரே முதல் தமிழ் முஸ்லிம் பத்திரிகை ஆசிரியர் ஆவார்.

கல்வி வளர்ச்சிக்கு வழிகோலுவதன் மூலமே, முஸ்லிம்களின் முன்னேற்றத் தை விரிவுபடுத்தவும், விரைவுபடுத்த வும் முடியும் எனக் கருதினார். இதற் காக ஆங்காங்கே மதரஸாக்களையும் பள்ளிக்கூடங்களையும் தோற்றுவித் தார். இவற்றின் மூலமாக மார்க்கக் கல்வியும் நவீனக் கல்வியும் பெற வழி வகுத்தார். பெண் கல்விக்காகப் பெண் பாடசாலைகளையும் உருவாக்கினார். இன்று பிரபலமாக விளங்கும் ஸாஹி ராக் கல்லூரிக்கு அடித்தளம் இட்ட வரும் இவரே.

முஸ்லிம்கள் அரசியலிலும் முன்னேற வேண்டும் எனப் பெரிதும் விரும்பி னார். இவரது பெரும் முயற்சியின் விளைவாக முதன் முறையாக சட்ட சபையில் பிரதிநிதித்துவம் கிடைத்தது. இவர் இரண்டாண்டுகள் 'ஞானதீபம்' எனும் இதழையும் நடத்தினார்.

இவர் பல நூல்களை எழுதியுள்ளார். அரபிப் பாடநூல்களையும், அரபி இலக்கண நூல்கள் பலவற்றையும் எழுதியுள்ளார். வரலாற்று அடிப் படையிலான சில நூல்களையும் படைத்துள்ளார். அவற்றுள் தலை சிறந்த தமிழ் நூலாக விளங்குவது 'அசன்பே சரித்திரம்' என்பதாகும். சரித்திரம் எனப் பெயர் கொண்டிருப் பினும் இது ஒரு சமூகப் புதினமாகும். வரலாற்றுப் புதினமும் மர்மப் புதின மும் தமிழில் உருவாக இப்புதினமே வழிகாட்டி நூலாக அமைந்தது.

1898ஆம் ஆண்டில் இவர் இறப்பெய் தினார். 1977ஆம் ஆண்டு இலங்கை அரசு இவர் நினைவாகத் தபால் தலை வெளியிட்டுள்ளது.

**சிரியா:** சிரியா அரபுக் குடியரசு மத்திய கிழக்கில் உள்ள முஸ்லிம் நாடு ஆகும். ஈராக், லெபனான், மத்திய தரைக்கடல், துருக்கி, ஜோர்டான், இஸ்ரேல் ஆகிய நாடுகளை எல்லை களாகக் கொண்டது. அதன் இன்றை யப் பரப்பளவு 1,85,180 ச.கி.மீ ஆகும். மக்கள் தொகை 69 இலட்சம். சிரியா நாடு முற்காலத்தில் 'ஷாம்' என அழைக்கப்பட்டது. இங்கு வாழும் மக்களில் 88 சதவிகிதம் பேர் முஸ்லிம் களாவர். ஏனையோர் கிருஸ்தவர் களாவர். நாட்டின் தேசிய மொழி அரபு மொழியாகும்.

இந்நாடு எழுநூறு ஆண்டுகளுக்கு மேலாக ரோம, கிரேக்கப் பேரரசு களின் ஆதிக்கத்தில் இருந்தது. இஸ் லாம் பரவத் தொடங்கிய பின்னர் முஸ்லிம்களின் ஆதிக்கத்தின் கீழ் இஸ் லாமிய நாடாகியது. முதல் உலகப் போருக்குப் பின் ஃபிரெஞ்சு ஆட்சியின் கீழ் வந்தது. மக்களின் சுதந்திரப் போராட்டத்தின் விளைவாக 1945 -ஆம் ஆண்டு விடுதலை பெற்றது.

1948இல் எகிப்துடன் இணைந்து ஒரே நாடாக ஐக்கிய அரபுக் குடியரசு ஆகியது. மூன்று ஆண்டுகட்குப்பின் பிரிந்து மீண்டும் தனி நாடு ஆகியது. பின்னர், எகிப்து, ஈராக், சிரியா ஆகிய மூன்றும் இணைந்த கூட்டாட்சி அமைத் தன. ஒரே ஆண்டில் தனியே பிரிந்து ஜனநாயக சோஷலிசக் குடியரசாக உருவாகியது. 1967இல் இந்நாட்டின்

கோலான் மலைகளை இஸ்ரேல் கைப் பற்றியது. அதன் விளைவாக 1973இல் இஸ்ரேலை எதிர்த்து நடந்த போரில் சிரியாவும் பங்கு கொள்ள வேண்டிய தாயிற்று.

**சிலுவைப் போர்:** ஐரோப்பாக் கண் டம்வரை இஸ்லாம் வேகமாகப் பரவி வருவதை விரும்பாத கிருஸ்தவ ஆட்சி யாளர்கள் முஸ்லிம்கள் மீது தொடுத்த போரே 'சிலுவைப் போர்' என அழைக் கப்படுகிறது. இப்போரின்போது கிருஸ் தவர்கள் தங்கள் உடைகளின் மீது சிலு வைச் சின்னத்தைப் பொறித்துக் கொண்டார்கள். இதுவும் இப்பெயருக் குக் காரணம் ஆகும்.

துருக்கிய இனத்தின் ஒரு பிரிவினர் செல்ஜுக்குகள்ஆவர். இவர்கள் பெரும் எண்ணிக்கையில் இஸ்லாத்தைத் தழுவி னர். முஸ்லிம்களாகிவிட்ட பின்னரும் தங்களை ரோமானியர்கள் ஆளுவதை இவர்கள் விரும்பவில்லை. எனவே,ரோ மர்களை எதிர்த்து முஸ்லிம்கள் போரிட லாயினர். ஆசியப் பகுதிகளிலிருந்து ரோமர்களை விரட்டி, அவர்களின் ஆட்சிப்பகுதிகளைக் கைப்பற்றினர்.

இதனைக் கண்ட பேரரசர் அலெக்ஸி யஸ் கமன்னஸ், போப் இரண்டாம் அர்பனின் உதவியை நாடினார். அப் போது கிரேக்க, ரோம மதத் தலைவர் களிடையே பிளவு ஏற்பட்டிருந்தது. முஸ்லிம்கள் மீது படையெடுப்பதன் மூலம் போப் இப்பிளவைப் போக்க எண்ணினார். 1095ஆம் ஆண்டில் ஃபிரான்ஸில் உள்ள கிளர்மாண்ட் என்ற இடத்தில் கிருஸ்தவர்களின் மத உணர் வை வெறித்தனமாகத் தூண்டிப் பேசி னார். போப்பின் பேச்சு ஐரோப்பிய கிருஸ்தவ ஆட்சியாளர்களிடையேயும் பொது மக்களிடையேயும் உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்கியது. 1,50,000 ஃபிரெஞ்சு நார்மன்கள் கான்ஸ்டாண்டி நோபிளில் கூடி முஸ்லிம்களுக்கு எதி ராகப் போர் தொடுக்கலாயினர். சிலு வைப்போர் சிறிதும் பெரிதுமாக ஒன்பது முறை நடைபெற்றதாகக் கணக்கிட்டுள்ளனர்.

தொடக்கத்தில் கிறிஸ்தவர்கள் கை ஓங்கியிருந்தது. அவர்கள் ஜெரூசலம், அண்டியோக் (அன்தாகிய்யா) வரை படை நடத்தி வெற்றி கண்டனர். 1114வரை வெற்றி முகமாக இருந்த கிருஸ்தவர்களை முஸ்லிம்கள் தடுத்து நிறுத்தினர். சிலுவைப் போர் வீரர்கள் கைப்பற்றிய பகுதிகளைப் படிப்படி யாகக் கைப்பற்றலாயினர்.

1187இல் சுல்தான் ஸலாஹுத்தீன் என்பவர் ஜெரூசலத்தைக் கைப்பற்றி னார். அதன்பின் வந்த மம்லூக் மன்னர்கள் கிருஸ்தவர்களை சிரியாவி லிருந்து 1291இல் அடியோடு அகற்றி னர்.

இச்சிலுவைப் போர் சுமார் 200 ஆண்டுக்காலம் நடைபெற்றது. இப் போரின் விளைவாக கிருஸ்தவர்களுக் கும், முஸ்லிம்களுக்குமிடையே பெரும் மனக்கசப்பு நெடுங்காலம் தொடர்ந் தது. சுல்தான் ஸலாஹுத்தீன் கைப் பற்றிய ஜெரூசலத்தை மீண்டும் கைப் பற்றுவதே அவர்களின் வெறியாக இருந்தது. அதன் விளைவாகவே 1917 -இல் பிரிட்டீஸ் தளபதி அல்லன்பீ மீண் டும் ஜெரூசலத்தைக் கைப்பற்றினார். முஸ்லிம்களுக்குச் சொந்தமான மண் ணில், இரண்டாம் உலகப் போருக்குப் பின் யூதர்களுக்கென இஸ்ரேல் நாட் டை உருவாக்க அமெரிக்க, ஐரோப் பிய நாடுகள் உதவியதும் இஸ்ரேல் ஜெரூசலத்தைக் கைப்பற்றியதை ஆத ரித்ததும் சிலுவைப்போரின் தொடர்ச் சியே யாகும்.

**சீதக்காதி:** வள்ளல் தன்மைக்கோர் எடுத்துக்காட்டாய் விளங்கியவர் வள்

ளல் சீதக்காதி. 'செத்தும் கொடை கொடுத்தார் சீதக்காதி' எனும் பழமொழி இவர் கொடைத்திறத்துக்கோர் உதாரணமாகும். இவரது இயற்பெயர் ஷெய்கு அப்துல் காதிர் என்பதாகும். இப்பெயரே நாளடைவில் சுருங்கி 'சீதக்காதி' என்றாயிற்று. இவர் தந்தை பெயர் மௌலா சாகிப் என்பதாகும். தாயார் பெயர் முஹம்மது பாத்திமா. 'சீதக்காதி' தென்காயலில் பிறந்தவராவார். எனினும் இவர் வாழ்ந்ததெல்லாம் கீழக்கரையிலேதான்.

இளம் வயதிலேயே மார்க்க அறிவும் நல்லொழுக்கச் சிந்தனையும் நற்குணங்களும் சிறப்பாக அமையப்பெற்ற சீதக்காதி, இரக்க உணர்வு மிக்கவராகத் திகழ்ந்தார். கொடை கொடுக்கும் தன்மை இவருக்கு இயல்பாக வாய்க்கப் பெற்ற உயர்குணச் சிறப்பாகும்.

கீழக்கரை வந்த மார்க்க மாமேதை சதக்கத்துல்லா அப்பா அவர்களின் அன்பிற்குரியவரானார். அவரின் ஆன்மீக மாணவராகவும் விளங்கினார்.

நவரத்தின வணிகத்தில் சீதக்காதி பெரும் பொருள் ஈட்டினார். இவருடைய வணிகக் கப்பல்கள் உலகின் நாலா பாகங்களுக்கும் சென்று வந்தன. இவரது செல்வ வளமும், கொடைத்திறமும் தமிழகத்தில் மட்டுமல்லாது தமிழகத்திற்கு அப்பாலும் பரவி இருந்தன.

இவரது சிறப்பை சதக்கத்துல்லா அப்பா மூலம் அறிந்த சக்கரவர்த்தி ஔரங்கஸீப் ஆலம்கீர் இவரை வங்காள நாட்டின் ஆளுநராக நியமித்தார். அங்கு சென்ற சீதக்காதி ஓராண்டிற்குள்ளாக அங்குள்ள சூழல் பிடிக்காமல் கீழக்கரை திரும்பினார்.

பின்னர் சிறிது காலம் சேதுபதி மன்னரின் அமைச்சராக அமர்ந்து பணியாற்றினார். அப்போது தான் உமறுப் புலவரின் தொடர்பு இவருக்குக் கிடைத்தது. அவரைச் சீறாப்புராணக் காப்பியம் பாடத் தூண்டினார். அந்நூலிற்காக பெருமானாரின் பெருவாழ்வை சதக்கத்துல்லா அப்பா அவர்களைக் கொண்டு உரைக்கச் செய்தார். நூல் விரைந்து உருவாக வேண்டிய பொருளுதவிகளை உமறுக்கு வழங்கினார்.

மார்க்கத்தின்மீது அளவிலாப் பற்றுக் கொண்டிருந்த சீதக்காதி தமிழ்ப் புலவர்கள் மீது அளவிலா அன்பு கொண்டிருந்தார். தம்மை நாடி வரும் புலவர்களை ஆதரித்துப் போற்றுவதைத் தம் கடமையாகக் கருதினார். ஏழை எளியவர்க்கு இல்லை என்று கூறாது வாரி வழங்கும் வள்ளலாக விளங்கினார். இவர் கீழக்கரையில் காலமானதும் தாயை இழந்த தனயர்களைப் போல புலவர்கள் ஆயினர்.

இவர் இறக்குமுன் தம் அடக்கவிடத்தில் கட்டிடம் ஏதும் கட்ட வேண்டாம் என்றும், தம் கப்ர் மீது முளைக்கும் புல் பூண்டுகளை ஆடு மாடுகள் தின்பதையே தாம் விரும்புவதாகவும் கூறினார். இறந்தும் பிற உயிர்களுக்குப் பயன்பட எண்ணிய அவரது கொடை உணர்வு என்றும் போற்றுதற்கு உரியதாகும்.

**சீறாப்புராணம்:** பெருமானார் (ஸல்) அவர்களின் பெருவாழ்வைத் தீஞ்சுவைப் பாக்களால் கூறும் தீந்தமிழ்க் காப்பியம் சீறாப்புராணம் ஆகும். மார்க்க மேதை சதக்கத்துல்லா அப்பா அவர்கள் உரை வழங்க, உமறுப்புலவரால் இயற்றப்பட்ட தீஞ்சுவைக் காவியமே சீறாப்புராணம். இக்காப்பியத்தைப் பாடத் தூண்டியவரும் கொடை நல்கியவரும் சீதக்காதியாவார்.

உமறுப்புலவர் எழுதிய சீறாப் புராணக் காப்பியம் 5027 செய்யுட்களைக் கொண்டது. இது விலாதத்துக் காண்டம், நுபுவ்வத்துக் காண்டம், ஹிஜ்ரத்துக் காண்டம் ஆகிய மூன்று காண்டங்களைக் கொண்டதாகும். இம்மூன்று காண்டங்களும் 92 படலங்களைக் கொண்டு அமைந்ததாகும்.

இக்காப்பியம் முழுமைபெறாது உறனிக்கூட்டத்தார் படலத்துடன் நிற்கிறது. பெருமானாரின் எஞ்சிய வரலாற்றை பனீ அஹமது மரைக்காயர் தொடர்ந்து பாடி முடித்துள்ளார். இந்நூல் 1829 செய்யுட்களைக் கொண்டது. 39 படலங்களாக அமைந்தது. இது 'சின்ன சீறா' என்று அழைக்கப்படுகிறது.

**ஸுலைமான் (அலை):** நபிமார்களில் 'ராஜநாயகம்' எனப் போற்றப்படுபவர் ஸுலைமான் (அலை) ஆவார். தாவூது (அலை) அவர்களின் திருமகனாகப் பிறந்த இவர் தம் பதின்மூன்றாவது வயதிலேயே அரியணை ஏறினார். ஒரே சமயத்தில் அரசராகவும் நபியாகவும் விளங்கியவர். இவர் 'இறைவா! என் அறிவைப் பெருக்கு' என வேண்டியதற்கேற்ப இறைவன் இவருக்கு எல்லாவித அறிவையும் வழங்கினான். இதனால் மாபெரும் அறிவுச்சுடராக விளங்கினார். அதே சமயம் மிகச் சிறந்த ஆற்றல்மிக்க அரசராகவும் திகழ்ந்தார்.

இவருக்கு மனிதர்கள் பேசும் எல்லா மொழிகளும் தெரியும். அத்துடன் சிங்கம், புலி முதலிய மிருகங்களின் மொழியும் புரியும். ஈ, எறும்பு போன்ற பூச்சிகளும் பறவைகளும் பேசும் மொழிகளும் தெரியும். மனித குலத்தை மட்டும் இவர் ஆளவில்லை. ஜின்களாகிய பூதங்களையும் இவர் ஆட்சி செய்தார். இவரது ஆட்சி எகிப்திலிருந்து அப்கானிஸ்தான் வரை பரவியிருந்தது.

இவர் கி.மு. 970 முதல் கி.மு. 930 வரை பேரரசராக விளங்கியபோதிலும் மிக எளிய வாழ்வே வாழ்ந்தார். கூடை முடைதல், மரப் பெட்டிகள் செய்தல் போன்ற வேலைகளைச் செய்தார். அவற்றை விற்று அதன்மூலம் வரும் வருமானத்தையே தமக்கெனச்செலவு செய்து கொண்டார். சில சமயம் ஒட்டு ஆடைகளை அணிவார். ரொட்டித் துண்டுகளே பெரும்பாலும் அவர் உணவாக இருக்கும். அரசாங்க நிதியிலிருந்து தமக்கென எதுவும் எடுத்ததில்லை. நீதியை நிலைநாட்டும் அவர் தீர்ப்புகள் மக்களை மகிழ்ச்சிப்படுத்தின. 'நீதிக்கரசர்' என மக்களால் இவர் பெரிதும் போற்றப்பட்டார்.

இவர் நின்ற நிலையில் இறைவனை வணங்கிக் கொண்டிருந்தபோது இவரது உயிர் பிரிந்தது. இவரது உடல் பைத்துல் முகத்தஸில் குப்பத்தஸ் ஸக்ரா என்ற இடத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது.

**ஸூஃபி:** இஸ்லாமிய மெய்ஞ்ஞானிகள் 'ஸூஃபிகள்' என அழைக்கப்படுவர். இவர்கள் இஸ்லாமியச் சித்தர்கள் ஆவர். இந்த ஞானம் அரபியில் 'தஸவ்வுஃப்' என்று அழைக்கப்படும்.

ஸூஃபி என்ற சொல்லுக்குத் 'தூய்மை' என்பது பொருளாகும். இதற்கு கம்பளி அணி என்று வேறொரு பொருளும் உண்டு என்பர். மிருதுவான ஆடைகளை விடுத்து கரடு முரடான ஆடைகளை அணிந்தமையால் இவர்கள் இப்பெயர் பெற்றனர். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் இவர்கள் 'திண்ணைத் தோழர்கள்' என அழைக்கப்பட்டனர். இவர்கள் முரட்டுக் கம்பளி ஆடைகளை அணிந்திருப்பர்.

ஸூஃபிகள் எப்போதும் வணக்கத்திலும், தியானத்திலுமே ஈடுபட்டிருப்பர். மெய்ஞ்ஞான மார்க்கமாகிய ஸூஃபித்

துவத்தை வளர்த்து வளமடையச் செய்த பெருமை கௌதுல் அஃலம் முஹிய்யுத்தீன் ஆண்டகை அவர்களையே சாரும். இவரே சூஃபித்துவத் தந்தையாக சூஃபிகளின் தலைவராகப் போற்றப்படுகிறார்,

உலகப் பற்றற்றவர்களாக, இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகப் பாவிக்கும் மன இயல்பினராக இறைவனின் இன்னருளைப் பெற ஆறு வழிமுறைகளைப் பின்பற்றி ஒழுகுவர். அவையாவன:

1. தாஅத் (கீழ்படிதல்) 2. ஷரீஅத் (சட்டம்), 3. தரீக்கத் (வழி) 4. மஃரிபத் (இறைஞானம்), 5. ஹகீகத் (உண்மைஞானம்) 6. அகீதத் (இறைவன் மீது கொள்ளும் அளவிலா அன்பு). இப் படித்தரங்களை முறையாகப் பின்பற்றி இறைவனிடம் தங்களை முழுமையாக ஒப்படைத்துக்கொள்வது சூஃபிகளின் இயல்பாகும்.

இந்திய சூஃபிகளுள் அஜ்மீரில் அடக்கமாகியுள்ள காஜா முயீனுத்தீன் சிஷ்தி தலையாயவராகக் கருதப்படுகிறார். தமிழகத்தில் மெய்ஞ்ஞானிகளாகிய சூஃபிகள் பலர் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்களில் மெய்ஞ்ஞானி பீர் முஹம்மது அப்பா, குணங்குடி மஸ்தான், ஞானியார் அப்பா போன்றோர்களும் தென்காசி ரசூல்பீவி, கீழக்கரை செய்யது ஆசியா உம்மா போன்ற பெண்பாற் சூஃபிகளும் குறிப்பிடத் தக்கோராவர். இவர்கள் சூஃபித்துவ அடிப்படையில் மெய்ஞ்ஞானப் பாடல்களை நூற்றுக் கணக்கில் தமிழில் எழுதிக் குவித்துள்ளனர்.

**சேகனாப் புலவர்:** 'புலவர் நாயகம்' என இஸ்லாமியத் தமிழ்ப் புலமையுலகால் போற்றப்படும் சேகனாப் புலவரின் முழுப்பெயர் ஷைகு அப்துல் காதிர் நெய்னா லெப்பை என்பதாகும். இதுவே சுருங்கிய வடிவில் 'சேகனா' என அழைக்கப்படலாயிற்று. இவர் சென்னைக்கடுத்துள்ள கோவளம் எனும் ஊரில் பிறந்தவர். இவர் தந்தை காயல்பட்டினத்தைச் சேர்ந்த ஹபீபு முஹம்மது லெப்பை ஆவார்.

இவர் கீழக்கரையில் புகழ்பெற்று விளங்கிய மார்க்க மேதை தைக்கா சாஹிபு அவர்களிடம் மார்க்கக் கல்வியும், ஞான உபதேசமும் பெற்றார். அப்போது இவருடன் கல்வி கற்றவர் பிற்காலத்தில் மிகப்பெரும் மெய்ஞ்ஞானியாக விளங்கிய குணங்குடி மஸ்தான் ஆவார்.

இவர் கல்விப் பயிற்சி முடிந்தபின்னர் தம் தந்தையார் செய்துவந்த நவரத்தின வணிகத்தையே இவரும் மேற்கொண்டார். எனினும் இவருக்குத் தமிழின் மீதிருந்த ஆர்வம் இவரைப் புலவராக்கிற்று. தமிழின் ஆற்றல் முழுவதையும் அறிந்துணர்ந்த இவர் திறம்பட்ட புலவராகப் பாடல் இயற்றத் தொடங்கினார். மார்க்க ஞான அறிவும், தமிழறிவும் இணைய இஸ்லாமியத் தமிழ் இலக்கியங்கள் பல உருவாயின. அவற்றுள் குறிப்பிடத்தக்கன புதூகுஷ்ஷாம் (ஷாம் நகர் வெற்றி), திருமணி மாலை, குத்பு நாயகம், திருக்காரணப்புராணம் ஆகிய நான்குமாகும். இந்நான்கு காப்பியங்களுள் முடிமணியாகத் திகழ்வது புதூகுஷ்ஷாம் காப்பியமே யாகும். இது 6786 செய்யுட்களைக் கொண்டதாகும். ஒரே புலவர் நான்கு காப்பியங்களைப் பாடிய பெருமை புலவர் சேகனாப் புலவர் அவர்களையே சாரும்.

சேகனாப் புலவர் காப்பியங்களை அன்னியில் சுவர்க்கநீதி, நாகை அந்தாதி, கோத்திர மாலை போன்ற நூல்களையும் வண்ணப்பாக்களையும் சித்திரக்கவிகள் சிலவற்றையும் இயற்றி

யுள்ளார். இவர் வடமொழிப் புலமையும் பெற்றிருந்தார்.

சீறாப்புராணத்தை முதன்முதலாக அச்சேற்றிய பெருமை இவரையே சாரும். இவர் ஹிஜ்ரி 1268 துல்கஃதா பிறை 27 திங்களன்று சென்னையில் காலமானார். இவரது இறுதி விருப்பப்படி இவரது உடல் இவர்தம் பள்ளித் தோழர் குணங்குடி மஸ்தான் அடக்கத் தலத்திலேயே அருகாக நல்லடக்கம் செய்யப்பட்டது.

**சேகுத்தம்பிப் பாவலர்:** இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற பெரும் தமிழ்ப்புலவராகத் திகழ்ந்தவர் சேகுத் தம்பிப் பாவலர். 'ஷைகுத்தம்பி' எனும் இயற்பெயர். மருவி 'சேகுத்தம்பி' எனவாயிற்று. இவர் 1874ஆம் ஆண்டு ஆகஸ்ட் 30ஆம் நாள் குமரி மாவட்டம் கோட்டாற்றுக்கு அருகே இலங்கடை எனும் ஊரில் பிறந்தார். இவர் தந்தையார் பெயர் பக்கீர் மீரான் என்பதாகும்.

மிக இளம் வயது முதலே குர்ஆனையும் பிற மார்க்கக் கல்விகளையும் கற்றார். பின்னர் பள்ளியில் சேர்ந்து ஐந்தாம் வகுப்புவரை தமிழ்க் கல்வியும் ஆங்கிலக் கல்வியும் கற்றார். பிறகு புலவர் நாராயணசாமி என்பாரிடம் தமிழ் இலக்கிய, இலக்கணங்களை முறையாகக் கற்றுத் தேறினார். இளம் வயது முதலே கவிதை எழுதும் ஆற்றல் கைவரப் பெற்றவராகத் திகழ்ந்தார். இதனால் பலரும் இவரைப் 'பாவலர்' என்றே அடைமொழியிட்டு அழைக்கலாயினர். இவரது அபார நினைவாற்றல் பலரையும் பிரமிக்க வைத்த ஒன்றாகும்.

இவர் கோட்டாறு ஞானியார் சாஹிப் அவர்களின் மெய்ஞ்ஞானப் பாடல்களை அச்சிடவேண்டி சென்னை வந்தார். இட்டா பார்த்தசாரதி அச்சகத்தில் அச்சுப் பணிகளைக் கவனித்து வந்தபோது, இவரது புலமையைக் கண்டு அச்சக உரிமையாளர் திகைப்படைந்தார். பல இலக்கிய நூல்களைப்பதிப்பித்து வந்த அவருக்கு ஒரு தமிழ்ப் புலமையாளர் தேவைப்பட்டார். எனவே, பார்த்தசாரதியின் வேண்டுகோளுக்கிணங்க பாவலர் சென்னையிலேயே தங்கினார். அச்சகப் பணியோடு அங்கிருந்து வெளியான 'யதார்த்தவாதி,' 'இஸ்லாமிய மித்ரன்' ஆகிய இதழ்களின் ஆசிரியப் பணியையும் ஆற்றி வந்தார்.

இளமை தொட்டே அவதானப் பயிற்சி செய்து வந்தார் பாவலர். முன்பு ஒருமுறை கோட்டாற்றில் 'சோடசாவதானம்' செய்து வெற்றி பெற்றிருந்தார். நண்பர்களின் வேண்டுகோளை ஏற்று சென்னை விக்டோரியா மண்டபத்தில் சதாவதானம் செய்தார். 1907 ஆம் ஆண்டு மார்ச் 7 ஆம் நாள் நடைபெற்ற இக்கூட்டத்திற்கு அக்காலத்தில் புகழ்பெற்ற அறிஞர்கள், புலவர்கள் அனைவருமே வந்திருந்தனர். அவதானத்திலும் பங்குகொண்டு வினாத் தொடுத்து உரிய விடை பெற்றனர். ஒரே சமயத்தில் நூறு வேலைகளைச் செய்வதே 'சதாவதானம்' எனப்படும். இச்சாதனையில் பலரும் வியக்க வெற்றிவாகை சூடினார். அன்று முதல் இவர் சதாவதானி சேகுத்தம்பிப் பாவலர் என்றே அழைக்கப்படலானார். இவரதுசதாவதானத்திறமையையும் புலமையையும் நினைவாற்றலையும் கண்டு வியந்த அமைப்புகள் பல புதிய பட்டங்களையும் பரிசுகளையும் தந்து பாராட்டி மகிழ்ந்தன.

அக்காலத்தில் வடலூர் இராமலிங்க வள்ளலாரின் திருவருட்பாவை எதிர்த்து ஒரு இயக்கமே நடந்து வந்தது. கதிரை

வேற்பிள்ளை போன்றவர்கள் இராம லிங்க அடிகளின் பாடல்கள் 'அருட்பா' அன்று 'மருட்பா'வே, என்றும், 'மருட் பா மறுப்பு' என்றும் கூட்டங்களில் கூறி வந்தனர். அதனை எதிர்த்து பாவலர் அவர்கள் 'மருட்பா மறுப்பு' என்றாலே அவை அருட்பாவே என்பதை விளக்கி யும் ஆதாரங்களை அடுக்கிக் காட்டியும் மறுத்து வந்தார். இவரது வாதத் தையே மக்கள் ஏற்றனர். அவை அருட் பாக்களே என்பது இவர் மூலம் நிலை நாட்டப்பட்டது. பாவலரும் "தேவா மிர்தப் பிரசங்கக் களஞ்சியம்'' என்று பட்டம் சூட்டப்பட்டார்.

இவர் கவிதை நூல்கள் பலவற்றை யும் உரைநடை நூல்கள் சிலவற்றையும் எழுதி வெளியிட்டுள்ளார். அவற்றுள் கோட்டாற்றுப் பிள்ளைத்தமிழ், கோட்டாற்றுப் பதிற்றுப் பத்தந்தாதி, கல்வத்து நாயகம் இன்னிசைப் பாமாலை, ஷம்சுத்தாசீன் கோவை, நாயக மான்மிய மஞ்சரி ஆகிய கவிதை நூல்கள் குறிப்பிடத்தக்கனவாகும். உரைநடை நூல்களுள் சீறாப்புராண உரைநடை, தேவலோகப் பழிக்குற்ற வழக்கு, சீறா நாடகம் ஆகியன முக்கிய நூல்களாகும். இவருடைய மகனார் K.P.S ஹமீதும் (செந்தாமரை), பெயரர் ஷைகுத் தம்பியும் கவிஞர்கள் ஆவர்.

இவர் 1950ஆம் ஆண்டு பிப்ரவரி 12ஆம் நாள் கோட்டாற்றில் மறை வெய்தினார்.

**சேரமான் பெருமாள்:** இவர் கொடுங் கோளூரை ஆண்டு வந்த மூன்றாம் சேரமான் பெருமாள் ஆவார். இவர் 'சாமரின்' என்ற பெயராலும் அழைக் கப்படுகிறார். இவர் மலையாள நாயர் வகுப்பைச் சேர்ந்தவர்.

அரபு நாட்டிலிருந்து இலங்கையைச் சேர்ந்த ஆதம் மலையைக் காண ஷைகு ஜகீயுத்தீன் என்பவர் வந்திருந்தார். அவர் மூலம் சேரமான் பெருமாள் பெருமானாரின் பெருமைகளைக் கேட் டறிந்தார். ஷைகு ஜகீயுத்தீன் அரபு நாடு திரும்பும்போது அவர்களுடனே யே சேரமான் பெருமாளும் அரபு நாடு புறப்பட்டார். புறப்படுமுன் அரசுப் பொறுப்பைத் தம் மருமகனிடம் தந்து சென்றார். அன்று முதல்தான் மரு மக்கள் தாயம் எனும் பழக்கம் கேரளத் தில் வழக்கத்திற்கு வரலாயிற்று.

அரபு நாடு நோக்கிப் பயணம் செய்த சேரமான் பெருமாள், பாரசீக வளை குடாவில் உள்ள ஷஹ்ர் எனும் ஊரை அடைந்து இஸ்லாத்தைத் தழுவினார். அப்துர் ரஹ்மான் எனும் பெயருடன் இரு ஆண்டுகள் அங்கே வாழ்ந்தார், பின் அங்கிருந்து மக்கா, மதீனா சென் றார். ஸபர் எனும் ஊரில் நான்காண்டு கள் தங்கினார்.

கேரளம் திரும்பி இஸ்லாத்தைப் பரப்ப எண்ணியிருந்தார். எனினும், தமக்கு இறுதி நெருங்கிவிட்டதை உணர்ந்தார். தம் சார்பில் கேரளம் சென்று இஸ்லாத்தை பரப்புமாறு தம் தோழர்களை வேண்டினார். அவர் களிடம் அறிமுகக் கடிதமும் கையொப் பமிட்டுக் கொடுத்தார். அதன்பின் விரைவிலேயே காலமானார். அவ்வூரி லேயே அவர் உடல் நல்லடக்கம் செய் யப்பட்டது. இன்றும் அங்கு அவரது அடக்கத்தலம் அவர் பெயராலேயே அழைக்கப்பட்டு வருகிறது.

இவர் தந்த அறிமுகக் கடிதத்தோடு கேரளம் வந்த ஷரப் இப்னு மாலிக், மாலிக் இப்னு தீனார், மாலிக் இப்னு ஹபீப் ஆகிய தோழர்கட்கு கொடுங் கோளூர் மன்னர் அனைத்து வசதிகளை யும் செய்து தந்தார். அத்துடன் பள்ளி வாசல் கட்டவும் உதவினார். அவ் வாறு கொடுங்கோளூரில் கட்டப்பட்ட பள்ளிவாசலே இந்தியாவில் கட்டப்

பட்ட முதல் பள்ளிவாசல் எனச் சொல்லப்படுகிறது. இதன் பின்னர் கொல்லம் போன்ற இடங்களில் பள்ளிவாசல்கள் சட்டப்பட்டன. இதன் பிறகு இஸ்லாமும் கேரளமெங்கும் விரைந்து பரவலாயிற்று.

**ஞானியார் சாகிபு:** இஸ்லாமிய மெய்ஞ்ஞானத் தமிழ்ப் புலவர்களுள் குறிப்பிடத்தக்கவர் ஞானியார் சாகிபு ஆவார். குமரி மாவட்டம் கோட்டாறில் பிறந்தவர். இவரது இயற்பெயர் ஷைகு முஹிய்யுத்தீன் மலுக்கு முதலியார் என்பதாகும். இவர் தந்தை ஷைகு அபூபக்ர், தாயார் சையது மீரான் பீவி.பிற்காலத்தில் இவர் ஞான மேதையாக விளங்கியதால் 'ஞானியார் சாகிபு' என்றே அழைக்கப்பட்டார்.

இவர் பதினான்கு வயதினராக இருந்தபோது ஞானமேதை ஜமாலுல் மிஹ்பரிய்யி என்பவரால் ஈர்க்கப்பட்டார். அவரிடம் தீட்சை பெற்றார். அதன்பின் ஞான மார்க்கத்தில் மூழ்கியவராய் காடுகளுக்கு அடிக்கடி போவதும் தியானத்திலும் தவத்திலும் ஈடுபடுவதுமாக இருந்தார். பிறகு மணமேற்குடியில் சின்னாட்கள் தங்கி தம் ஞான குருவை மீண்டும் சந்தித்து உபதேசம் பெற்றார். கமுதி சென்று எளிய வாழ்வு வாழ்ந்தார். அங்கு சையது முஹிய்யுத்தீன் யூஸுஃப் என்பவரின் பேரன்புக்குரியவரானார். அவரது அன்பு வேண்டுகோளுக்கிணங்க அவரது விருப்பத்திற்கேற்ப மெய்ஞ்ஞானப் பாடல்கள் பலவற்றைப் பாடினார். அவை 'மெய்ஞ்ஞானத் திருப்பாடல்கள்' என்ற பெயரில் நூலாக வெளிவந்துள்ளன.

இவர்கள் ஹிஜ்ரி 1209 ஜமாதியுல் அவ்வல் பிறை 14இல் காலமானார். இவரது உடல் கோட்டாற்றில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது. இவரது அடக்கவிடத்தில் ஆண்டுதோறும் உர்ஸ் விழா கொண்டாடப்பட்டு வருகிறது.

**தப்லீக்:** இஸ்லாமியப் பிரச்சாரத்தைக் குறிக்கும் சொல்லாகத் 'தப்லீக்' கருதப்படுகிறது. 'தப்லீக்' என்றால் 'சேர்ப்பித்தல்' என்பது பொருளாகும். ஈமான்குறைந்தவர்களை ஈமானின் பக்கம் அழைத்துச் சென்று சேர்ப்பதால் இவ்வாறு குறிப்பிடப்படுகிறது.

'தப்லீக்' பணி இன்று நேற்று தொடங்கியதல்ல. அஃது ஆதம் (அலை) தொடங்கி அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள் காலம்வரை தொடர்ந்து நடைபெற்றதாகும். ஒரு இலட்சத்து இருபத்திநான்காயிரம் நபிமார்களும் 'தப்லீக்' பணி செய்தவர்களேயாவர். அவ்வழியிலே பெருமானார் (ஸல்) அவர்களும், அவர்தம் சகாபாக்களும் வலிமார்களும் 'தப்லீக்' பணியைத் தொடர்ந்து கொண்டேயிருந்தார்கள்.

இந்தியாவில் இதில் ஒரு விதத் தொடர்பு ஏற்பட்டபோது, மௌலானா முஹம்மது இல்யாஸ் (ரஹ்) அவர்கள் தப்லீகை ஓர் இயக்கமாகச் செயல்படுத்தலானார்கள். இந்த இயக்கத்தில் பங்கு கொண்டோர் 'தப்லீக் ஜமாஅத் என்று அழைக்கப்பட்டார்கள். இந்தியாவில் தொடங்கப்பட்டாலும் இது ஒரு உலக இயக்கமாகவே இயங்கி வருகிறது. இதன் தலைமையகம் டெல்லியில் நிஜாமுத்தீன் அவுலியா தர்காவின் ஒரு பகுதியில் அமைந்துள்ளது.

இவ்வியக்கத்தில் பங்கு கொள்வோர் தங்கள் குடும்பத்தை, தொழிலைவிட்டும் ஊர் ஊராச் சென்று இஸ்லாமியப் பிரச்சாரம் செய்து மக்களைத் தீன் வழிக்கு மீட்டு வருகிறார்கள்.

தப்லீகில் ஈடுபட்டுள்ளோர் பள்ளிவாசல்களில் தொழுகை முடிந்த

பின்னர் அங்குள்ளோரிடையே தீனின் சிறப்பு, ஐவேளைத் தொழுகையின் முக்கியத்துவம் பெருமானாரின் பெரு வாழ்வு, நபித்தோழர்களின் நற்சிந்த னை ஆகியவை பற்றி எடுத்தோதுவர். இஃது தஃலீம் என அழைக்கப்படுகிறது.

தப்லீகின் மற்றொரு பகுதியினர் வாரத்தில் மூன்று நாட்கள் சிறு தொகையினராக வாழும் முஸ்லிம் சகோதரர்களை அணுகி தொழுகை யின் மகத்துவத்தை உணர்த்தித் தொழ அழைத்து வருவர். இச்செயல் ‘கஷ்து’ என்று அழைக்கப்படும்.

இனி தப்லீக்,ஜமாஅத்தாரால் ‘இஜ் திமா’ மாநாடும் நடத்தப்படுகிறது. இது விரிவான முறையில் நடைபெறும் இஸ் லாமியப் பிரச்சார மாநாடாகும். இத்தகைய மாநாடு இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்து நடைபெறும். நீண்ட தூரங்களிலிருந்தெல்லாம் மக் கள் மாநாட்டில் கலந்து தீனின் கொள் கைகளில் தெளிவு பெறுவர்.

இத்தகைய தப்லீக் பணிகளால் ஒவ் வொரு முஸ்லிமின் ஈமானும் பலப்படு கிறது. முஸ்லிம் அல்லாதவர்கள் இஸ் லாத்தின் சிறப்பை உணர்ந்து அதன் பால் இணைய வாய்ப்பேற்படுகிறது. இவ்வியக்கத்தில் முக்கிய பங்கேற் றிருந்த ஷைகுல் ஹதீஸ் மௌலானா ஜகரிய்யா (ரஹ்) பயனுள்ள பெரும் இஸ்லாமிய நூற்கள் பல இயற்றியுள் ளார்கள்.

**தமீம் அன்சாரி:** பெருமானார் (ஸல்) மதீனாவிற்கு வந்த பிறகு,மதீனா நகர வாசிகளில் பலர் அவரது ஆதரவாளர் களாக அமைந்தனர். அவர்கள் அன் சாரிகள் என அழைக்கப்பட்டனர். அத் தகைய அன்சாரிகளில் ஒருவரே தமீம் அன்சாரி அவர்கள்.

அவர் இஸ்லாமியப் பிரச்சாரத்தின் பொருட்டு கப்பற்பயணம் மேற்கொண் டிருந்தார். அப்போது தமக்கு இறுதி நெருங்கிவிட்டதை உணர்ந்தார். தம் நண்பர்களை அழைத்துத் தம்மைப் பற் றிய விபரங்களை ஒருசெப்புத்தகட்டில் பொறித்து, தாம் இறந்தபின் தன் சட லத்துடன் அதைப் பெட்டியில்வைத்துக் கடலில் விட்டு விடும்படியும் இது யார் கையில் கிடைக்கிறதோ அங்கேயே அடக்கம் செய்துவிடுவார்கள் என்றும் கூறினார். அதன்படியே செய்யப்பட் டது. அவரது உடலத்தோடு கூடிய பெட்டி பலகாலம் கடலில் மிதந்தது. இறுதியாக கோவளம் கடற்கரையோர மாக வந்தது. முஸ்லிமல்லாத மீனவர் கள் அதை எடுக்க முயன்றபோது அவர் கள் கைக்குக் கிடைக்காமல் விலகிச் சென்றது. முஸ்லிம் மீனவர்கள் முயன்ற போது அவர்கள் கையில் அகப்பட்டது. திறந்து பார்த்து செப்புப் பட்டயம் மூலம் செய்தியறிந்த முஸ்லிம் மீனவர் கள் கடற்கரையிலேயே அவரது உடலை நல்லடக்கம் செய்தனர்.

அதன்பிறகு நீண்டகாலம் கழித்து, ஆற்காடு நவாப் நோயினால் கடுமை யாகப் பாதிக்கப்பட்டார். எவ்வளவோ மருத்துவம் செய்தும் நோய் குணமாக வில்லை. ஒரு நாள் கனவில் தமீம் அன் சாரி தோன்றி தம் கப்ர்மீது கட்டிடம் எழுப்புமாறு பணித்தார். நவாப் அவ் வாறே செய்ய, அவர் நோய் தீர்ந்தது. மகிழ்ச்சியடைந்த ஆற்காடு நவாப், மூன்று கிராமங்களை இத் தர்காவின் பராமரிப்புச் செலவுக்கென அளித்துள் ளார்.

இன்றும் ‘ஜியாரத்’ செய்ய இத் தர்காவிற்கு மக்கள் திரளாக வந்து செல்கின்றனர். ஆண்டுதோறும் துல் ஹஜ் பிறை 16இல் உர்ஸ் வைபவம் நடை பெறுகிறது. இதில் உள்நாட்டிலிருந்து மட்டுமல்லாது இலங்கை, மலேசியா போன்ற வெளிநாடுகளிலிருந்தும் ‘ஜியாரத்’ செய்ய வருகின்றனர்.

அவரது உடலுடன் பெட்டியில் வைக்கப்பட்ட செப்புப் பட்டயம் இன்றும் ஐதராபாத் நிஜாமின் கருவூலத்தில் பத்திரமாக இருப்பதாகக் கூறப்படுகிறது.

**தராவீஹ்** : ரமளான் முதல் பிறை கண்டதிலிருந்து 'லைலத்துல் கத்ர்' இரவு வரை நாள் தோறும் இஷாத் தொழுகைக்குப்பின் தொழும் தொழுகை 'தராவீஹ்' எனப்படும். இரண்டிரண்டு ரக்அத்தாக இருபது 'ரகஅத்' தொழவேண்டும். 'தராவீஹ்' என்ற பதத்திற்கு 'ஓய்வு பெறுதல்' என்பது பொருளாகும். ஒவ்வொரு நான்கு 'ரகஅத்' தொழுகைக்குப்பின் சில நிமிடங்கள் ஓய்வெடுத்து மீண்டும் தொழத் தொடங்குவதால் இப்பெயர் வழங்கலாயிற்று,

ஒவ்வொரு நாளும் தராவீஹ் தொழுகையின்போது, ஒரு ஜுஸ்வுக்குச் சற்று அதிகமாக ஓதி இருபத்தியேழாம் நாள் 'லைலத்துல் கத்ர்' அன்று குர்ஆன் ஓதுதலை முழுமைப்படுத்தி ''கத்தம்'' ஓதி முடிப்பர். இறுதி மூன்று நாட்கள் ஸூரா ஃபீலிலிருந்து அல்ஹம்து ஸூரா வரை திரும்பத் திரும்ப ஓதி முடிப்பர். தராவீஹ் தொழுகைக்குப் பின் வித்ருத் தொழுகை தொழப்படும்,

**தவா:ஃப்**: கஃபத்துல்லாஹ்வை ஏழு முறை சுற்றி வருவது தவாஃப் எனப்படும். 'தவாஃப்' என்ற சொல்லுக்குச் 'சுற்றுதல்' என்பது பொருளாகும். இவ்வாறு ஏழுமுறை கஃபாவை சுற்றி வரும் முறை ஆதம் (அலை) காலம் முதலே நடைபெற்று வருகிறது. அதற்கு முன் வானவர்களும், ஜின்களும் கஃபாவைச் சுற்றி வந்தனர்.

மக்கா சென்று உம்ரா, ஹஜ் செய்வோர் இஹ்ராம் உடையுடன் உளூச் செய்து கொண்டு, தவாஃப் சுற்ற வேண்டும். முதல் சுற்றின்போது கஃபாவில் பதிக்கப்பட்டுள்ள அல் அஸ்வத் கருநிறக்கல்லிற்கு எதிரில் நிற்க வேண்டும். நிற்போரின் நெஞ்சு அல் . அஸ்வதிற்கு நேராக இருக்கவேண்டும். தவாஃப் துவங்குமுன் 'பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர்' எனக் கூறியபடி இரு கைகளை காதுவரை உயர்த்தி விட்டு விடவேண்டும். பின் அல் அஸ்வதை நோக்கிச் சென்று, அதனை முத்தமிட வேண்டும். பின், இடக்கைப் பக்கமாக கஃபா இருக்கும் வண்ணம் சுற்றி வர வேண்டும். அப்போது ஏதாவது ஒரு துஆவை ஓதி வர வேண்டும். அல் அஸ்வத்துக்கு நேராக வரும்போது மீண்டும் 'பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர்' என்று கூறிச் சுற்றைத் தொடர வேண்டும். இவ்வாறே ஏழுமுறை சுற்றி தவாஃபை முடிக்க வேண்டும்.

அதன்பின் உடனடியாக இரண்டு ரகஅத் தொழவேண்டும். இத்தொழுகையை அருகில் உள்ள மகாமெ இப்ராஹீமில் தொழுவது மிகவும் நல்லது.

இறுதியாக அருகிலுள்ள ஜம்ஜம் கிணற்று நீரைப் பருகவேண்டும். நடக்க இயலாதவர்கள் கட்டிலில் அமர்ந்தபடி தவாஃப் செய்யலாம். ஒருவர் மற்றவருக்காகவும் தவாஃப் செய்யலாம்.

**தாவூத் (அலை)** நபிமார்களில் ஒருவரான தாவூத் (அலை) யாகூப் நபி வழி வந்தவராவார். இவருடன் பிறந்த பதினொரு பேரில் இவரே இளையவர்.

இவர் அரசராகவும், நபியாகவும் விளங்கியவர். இறைவன் இவர்மூலம் 'ஸ்பூர்' வேதத்தை இறக்கியருளினான். அதனை இவர் எழுபது ராகங்களில் ஓதுவாராம்.

இவர் அரசராக இருந்தாலும், அரசு கருவூலத்திலிருந்து ஒரு பைசாவைக் கூட எடுத்துப் பயன்படுத்தியதில்லை. இறையருளால் போர்க்கவசம் செய்யும் திறன் பெற்றவராக இருந்தார். எனவே, போர்க்கவசம் செய்து விற்று, அதில் ஒரு பகுதியைத் தமக்காகவும், மறுபாதியை ஏழை எளியவர்க்குத் தானம் செய்தும் வாழ்ந்தார்.

இவர் தம் வாழ்நாளில் பைத்துல் முகத்தஸை நிர்மாணித்துப் பள்ளி வாசல் கட்ட முயன்றார். அம்முயற்சி வெற்றிபெறவில்லை. இவர் புத்திரர் சுலைமான் (அலை) அவர்கள் இப் பணியை நிறைவு செய்தார்கள்.

இறைவனை மிக அதிகமாக வணங்கி வந்த தாவூத் (அலை) தம் நூறாவது வயதில் காலமானார். இவரது உடல் பைத்துல் முகத்தஸ் அருகில், ஒரு குன் றில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

**தாஜ்மஹல்**: முகலாயப் பேரரசர் ஷாஜஹான் தம் அன்பு மனைவி மும் தாஸ் நினைவாக எழுப்பிய கல்லறைக் கட்டடமே தாஜ்மஹல். யமுனை நதிக் கரையில் ஆக்ரா கோட்டைக்கருகில் இவ்வெழில் கட்டிடங்களில் எல்லாம் அழகு மிக்கதாகக் கருதப்படுகிறது. உலக அதிசயங்களில் ஒன்றாகவும் எண் ணப்படுகிறது.

தாஜ்மஹல் 95½ மீட்டர் சதுரப் பரப் புள்ள மேடை மீது 68 சதுர மீட்டர் கொண்ட கட்டிடமாக உருவாக்கப்பட் டுள்ளது. இம்மேடையின் நான்கு மூலை களில் சற்றே வெளிப்புறமாகச் சாய்ந்த மினராக்கள் நான்கு அமைக்கப்பட்டுள் ளன. தாஜ்மஹலின் வெளிப்புறம் முழு மையும் வெண்ணிறச் சலவைக் கற் களால் பதிக்கப்பட்டுள்ளது. உட்புறத் தில் பல்வேறு நாடுகளிலிருந்து தருவிக் கப்பட்ட பல வண்ணக் கற்கள் பதிக்கப் பட்டுள்ளன. இவை நாற்பது வகைகள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

தாஜ்மஹல் இரு மாடிகளைக் கொண்டதாகும். நான்கு முனைகளில் சிறு கோபுரங்கள் நான்கு அமைந்துள் ளன. மண்டபத்தின் மத்தியில் சமாதி போல் அமைக்கப்பட்டுள்ளது. இது போலியான சமாதியாகும். உண்மைச் சமாதி அதற்கு நேர்கீழாக அமைந்துள் ளது. அவ்விடத்தில் ஹிஜிரி 1040 மறைந்த மும்தாஜ் மஹல் என அழைக் கப்பட்ட அர்ஜுமந்த பானுபேகத்தின் அடக்கத்தலம் இது என பாரசீக மொழியில் பொறிக்கப்பட்டுள்ளது. அதன் தலைப்பகுதியில் குர்ஆன் ஆயத் பொறிக்கப்பட்டு உள்ளது. தாஜ்மஹ லைச் சுற்றிலும் அழகுமிகு பூங்கா வண்ணப் பூக்களோடு காட்சி தருகிறது. நீரூற்றுகள் பல அமைந்துள்ளன. தாஜ் மஹலின் முன்புறம் சலவைக் கல்லால் ஆன நீர்த்தடாகமும் நீரூற்றுக்களோடு அமைந்துள்ளன. இத் தடாகத்தின் தெளிந்த நீரில் தாஜ்மஹலின் தோற் றம் அழகாகவும் தெளிவாகவும் தெரி வது கண்கொள்ளாக் காட்சியாகும். இதன் இடப்புறத்தில் அழகிய மசூதியும் உண்டு.

இதனை உள்நாடு மற்றும் துருக்கி போன்ற வெளிநாட்டுக் கட்டிடக்கலை நிபுணர்களும் பங்கு கொண்டு உருவாக் கினர். இதனைக் கட்டிமுடிக்க இருபதி னாயிரம் ஆட்கள் இருபத்திரண்டு ஆண்டுகள் உழைத்துள்ளனர். அக்கால மதிப்புப்படி சுமார் ஒன்றரைக்கோடி ரூபாய் செலவாகியுள்ளது. நிலா வெளிச்சத்தில் தாஜ்மஹல் கண்கொள் ளாக் காட்சியாக இருக்கும்.

**திப்பு சுல்தான்:** அன்னியர் ஆதிக் கத்தை எதிர்த்துப் போராடிய மன்னர் திப்பு சுல்தான் ஆவார். இவர் 1750 -ஆம் ஆண்டு நவம்பர் 21ஆம் நாள் பெங்களூருக்கு அருகேயுள்ள தேவ னாலி எனும் ஊரில் பிறந்தார். இவர்

தந்தை ஹைதர் அலி, இவரைப் போல வே அன்னியர் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடிய மாபெரும் வீரராவார்.

திப்பு ஷா வலியுல்லாஹ் மீது கொண்டிருந்த அன்பின் விளைவாக, இவர் பெற்றோர் இவருக்குத் 'திப்பு' எனப் பெயரிட்டனர். திப்பு இளம் வயதிலேயே அறிவு வேட்கையும், வீர உணர்வும் மிக்கவராக விளங்கினார். அரபி, பார்ஸீ, உருது, கன்னட மொழிகளில் நல்ல தேர்ச்சி பெற்ற திப்பு திறம்பட இராணுவப் பயிற்சியும் பெற்றார்.

பதினேழு வயதிலேயே இராணுவ அதிகாரியாக நியமிக்கப்பட்டார். இவர் மங்களூரைக் கைப்பற்றி, அங்கிருந்து ஆங்கிலப் படையினரை சென்னைக்கு விரட்டியடித்தார். இந்த வெற்றி மூலம் ஆங்கிலப்படையினருக்கு இவர் சிம்மசொப்பனம் ஆனார். அதன்பின் மேலைக் கடற்கரையிலுள்ள மற்றொரு முக்கிய இடமான பொன்னானியை முற்றுகையிட்டார். அப்போது இவர் தந்தை ஹைதர் அலீ இறக்கவே இவர் அரியணை ஏறினார். அப்போது இவரது ஆட்சிப்பகுதி வடக்கே கிருஷ்ணா நதியும், மேற்கே அரபிக்கடலும், கிழக்கே கிழக்குத் தொடர்ச்சி மலையும், தெற்கே திருவாங்கூரும் கொண்டதாக அமைந்திருந்தது.

ஹைதர் அலி இறந்ததால், திப்புவை எளிதாக வென்று விடலாம் என ஆங்கிலேயர் எண்ணினர். ஆனால் திப்பு பெரும் படையுடன் அவர்கள் மீது போர்த் தாக்குதல் நடத்தினார். தோல்வியடைந்த ஆங்கிலேயர்களைக் கைது செய்து சிறையிலிட்டார். அவர்களுள் ஆங்கிலப் படைத் தளபதி மாத்திவ்ஸும் ஒருவராவார். இவரை எதிர்த்து வெற்றிபெறமுடியாது என உணர்ந்த ஆங்கிலேயர் இவரோடு உடன்படிக்கை செய்து கொண்டனர். அதன்படி சிறை வைக்கப்பட்டிருந்த தளபதி உட்பட ஆங்கிலப்படையினரை திப்பு சுல்தான் விடுதலை செய்தார்.

இவர் 1789ஆம் ஆண்டில் திருவாங்கூர் மீது படையெடுத்தார். இதை அறவே விரும்பாத ஆங்கிலேயர் உடன்படிக்கைக்கு எதிராக திப்பு சுல்தான் நடந்து கொள்வதாகக் குற்றம் சாட்டினர். தங்கள் ஒப்பந்தத்தையும் குறித்துக் கொண்டனர். இதன் விளைவாக நடந்த போரில் திப்பு சுல்தான் தோல்வியடைந்தார். அதன்பின் சீரங்கப் பட்டிணத்தில் இருந்த திப்பு சுல்தான் அரண்மனையை ஆங்கிலேயத் தளபதி காரன் வாலிஸ் முற்றுகை இட்டார். முற்றுகையின் கடுமையைக் கண்ட திப்பு ஆங்கிலேயத் தளபதியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டார். அதன் பயனாகத் திப்புவின் ஆட்சிப் பகுதியில் பாதியும் முப்பது இலட்சம் ரூபாய் இழப்பீடும் தருவதாக ஒப்பந்தம் ஏற்பட்டது. பணம் தரும் வரையில் தம் இரு ஆண்மக்களையும் பணயமாக ஆங்கிலேயரிடம் ஒப்படைத்தார் திப்பு சுல்தான். சிறிது காலத்திற்குள் பயணத்தொகையைச் செலுத்தித் தம் மக்களை மீட்டுக் கொண்டார்.

இதனால் மிகவும் வேதனைப்பட்ட திப்பு சுல்தான் ஆங்கிலேயரை ஒழிக்க மீண்டும் முயற்சிகளை மேற்கொள்ளலானார்.. இதை அன்னியரை எதிர்க்கும் போராகக் கருதாது 'ஜிஹாது' (மார்க்கப்) போராகவே கருதினார். ஆங்கிலேயர்களை வெற்றிகொள்ளும் வரை, பஞ்சணையில் படுப்பதில்லை எனச் சபதமேற்றார். கூடாரத்திற்குப் பயன்படும் ஒருவகை முரட்டுத் துணியின் மீதே அன்று முதல் உறங்கி வந்தார்.

விரைவிலேயே ஃபிரெஞ்சுக்காரர்களின் உதவியுடன் ஆங்கிலேயர்களை விரட்டியடிக்க முயன்றார். இவர் துணைவர்களான திவான் பூரணைய்யா, மீர் சாதிக், மீர்குலாம் ஆகியோர் இரகசிய

மாக ஆங்கிலேயருடன் தொடர்பு வைத்துக்கொண்டு, திப்பு சுல்தானுக்குத் துரோகம் இழைத்தனர். அவர்கள் தீட்டிய சதித் திட்டத்தின் விளைவாக ஆங்கிலேயர் சீரங்கப்பட்டணக் கோட்டையை முற்றுகையிட்டனர். அப்போது திப்பு சுல்தான் உணவு உண்டு கொண்டிருந்தார். திடீரென முற்றுகையிட்ட செய்தியறிந்து போர்க்களம் புகுந்தார். வீரப்போரிட்டு போர்க்களத்திலேயே இறந்தார். இவரது உடல் இவர் தந்தையின் அடக்கவிடத்திற்கு அருகிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டது.

இஸ்லாமிய மார்க்கப் பற்று மிக்கவராக விளங்கியவர் திப்பு சுல்தான். கற்றறிந்த அறிஞர்களையும், கலைஞர்களையும் மத, இன, சாதி, வேற்றுமை இன்றி ஆதரித்துப் போற்றினார். இஸ்லாமிய, இந்து சமய புனிதவிடங்களுக்கு நிறைய மானியம் வழங்கினார். மது விலக்குக் கொண்டுவந்தார். ஜமீன்தார் முறையை நீக்கினார். உழுபவர்களுக்கே நிலம் சொந்தம் என்ற கொள்கையைக் கடைப்பிடித்தார். பட்டுத் தொழில் வளர்ச்சிக்கு அடிகோலினார். வேளாண்மை செழிக்க காவிரி மீது அணைகட்டும் பணியைத் துவங்கினார். 'கிருஷ்ண ராஜ சாகர்' என்று புகழ்பெற்ற அணைக்கட்டுக்கு இதுவே முன்னோடியாகும்.

**தீன்:** 'பிரதிபலன்' எனும் பொருளுடையது 'தீன்' எனும் அரபுச் சொல். இதற்கு வாழ்க்கைச் சட்டம், வாழ்க்கை நெறி, மார்க்கம் எனும் வெவ்வேறு பொருள்களும் உண்டு. பொதுவாக 'தீன்' என்பதற்கு இஸ்லாமிய மார்க்கம் என்பதே திரண்ட பொருளாகும். 'லகும் தீனுகும் வலியதீன்' என வரும் திருமறை வாசகத்துக்கு "உங்கள் மார்க்கம் உங்களுக்கு, என் மார்க்கம் எனக்கு" என்பது பொருளாகும்.

**துஆ:** 'துஆ' எனும் அரபுச் சொல்லுக்கு 'இறைஞ்சுதல்' என்பது பொருளாகும். இதனைத் தமிழில் 'இறை வேட்டல்' என்று கூறலாம். இரு கரமேந்தி இறைவனின் அருள் வேண்டிச் செய்யும் துஆக்கள் இறைவனுக்கு உவப்பைத் தருகின்றன. திருமறையின் முதல் அத்தியாயமான 'ஸூரத்துல் பாத்திஹாவு'க்கு 'ஸூரத்துல் துஆ' என்ற வேறொரு பெயரும் உண்டு. இதிலிருந்து துஆவுக்கு இறைமறை தரும் சிறப்பை நன்கு உணரலாம்.

மன ஓர்மையுடன் இறைவனிடம் துஆக் கேட்க வேண்டும். நியாயமான துஆக்கள் இறைவனால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. அவை நிறைவேற்றப் படுகின்றன.

**துருக்கர்:** துருக்கி நாட்டைச் சேர்ந்தவர்கள் துருக்கியவர் ஆவர். இவர்களே 'துருக்கர்' என்ற பெயரில் மரூஉச் சொல்லால் அழைக்கப்படுகின்றனர். 'துருக்கர்' என்ற சொல்லே தமிழ் இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ளது.

இச்சொல் மேலும் மாற்றமடைந்து 'துலுக்கர்' என ஆகியுள்ளது. தமிழகப் பாமர மக்கள் உருது மொழி பேசும் முஸ்லிம் மக்களைத் துலுக்கர் என்ற சொல்லால் அழைக்கின்றனர். உருது மொழியும் துலுக்கர் மொழி என்றே குறிக்கப்படுகிறது.

**துருக்கி:** ஐரோப்பாவையும் ஆசியாவையும் இணைக்கும் நாடாக துருக்கி அமைந்து உள்ளது. துருக்கி நாட்டின் ஒரு பகுதி ஐரோப்பாவிலும், மற்றொரு பகுதி ஆசியாவிலுமாக அமைந்துள்ளது. மர்மரா, பாஸ்பரஸ் கடல்கள் ஆசிய, ஐரோப்பியத் துருக்கியப் பகுதிகளைப் பிரிக்கின்றன. வடக்கே கருங்கடலும் வடமேற்கே ரஷியாவின் காக்கசும் கிழக்கே ஈரானும் தெற்கே சிரியா,

ஈராக் மத்திய தரைக்கடற்பகுதிகளும் மேற்கே ஏஜியன் கடல், கிரீஸ் ஆகியவை யும் எல்லைகளாக அமைந்துள்ளன. துருக்கி நாட்டின் மொத்தப் பரப்பளவு 7,80,576 ச. கி. மீட்டராகும். துருக்கி நாட்டின் மொத்த மக்கள் தொகை சுமார் 5 கோடியாகும், இவர்களில் 99 சதவிகிதத்தினர் முஸ்லிம்கள்.

துருக்கி நாடு மலைகளும், ஆறுகளும், ஏரிகளும் நிறைந்த நாடாகும். இங்கு குளிர்காலத்தில் குளிர் அதிகமாகவும் கோடை காலத்தில் வெப்பம் அதிக மாகவும் இருக்கும்.

ஏழாம் நூற்றாண்டில் துருக்கி இன மக்கள் இஸ்லாத்தில் இணைந்து முஸ்லிம்களாயினர். இவர்கள் கலீஃபா விடம் பணியாற்றினர். பத்தாம் நூற் றாண்டில் இவர்கள் ஈரான், ஈராக் ஆகிய நாடுகளில் பரவி வாழ்ந்தனர். 1071இல் செல்ஜூக் துருக்கியர்களின் அரசர் அல்ப் அர்ஸலான் பைசாந்தியப் பேரரசருடன் போரிட்டு, அனதோலி யாவை வெற்றி கொண்டார். அதன் பின், அப்பகுதிக்குத் தங்கள் இனப் பெயரான துருக்கி என்பதைச் சூட்டி னர். 1451இல் உதுமானிய அரியணை ஏறிய இரண்டாம் முஹம்மது தம் ஆட்சியை ஐரோப்பாவரை விரிவுபடுத் தினார். இவ்வாறு துருக்கியின் எல்லை ஐரோப்பாவரை நீண்டது.

சுல்தான் சுலைமானின் காலத்தில் உச்ச நிலை பெற்றது உதுமானியப் பேரரசு, அவருக்குப்பின் கொஞ்சங் கொஞ்சமாக வலு குன்றியது. இறுதி யில் ஐரோப்பாவின் நோயாளி என அழைக்கும் வண்ணம் சீர்கேடு அடைந் தது.

இரண்டாம் உலகப்போரின்போது, ஜெர்மனியுடன் இணைந்து தோல்வி அடைந்தது. அதனால் ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள பெரும் பகுதிகளை இழந்தது. பின்னர் முஸ்தபா கமால் சுல்தானிய ஆட்சியை அகற்றி, குடியர சாட்சியை ஏற்படுத்தினார். பலப்பல சீர்திருத்த முறைகளைக் கையாண்டு நாட்டை அழிவிலிருந்து காப்பாற்றி னார். எல்லா வகையிலும் துருக்கியை வலுமிக்க நாடாக்க முயன்றார். இத னால் இவரை துருக்கி மக்கள் ‘அத்தா துர்க்’ என அழைக்கலாயினர். இதற்கு ‘துருக்கித் தந்தை’ என்பது பொருளா கும். இரண்டாம் உலகப்போருக்குப் பின் ‘நேட்டோ’ (NATO) கூட்டமைப் பில் உறுப்பினர் ஆகியது. துருக்கி நாட்டின் தேசியமொழி துருக்கி ஆகும். இது ரோமன் எழுத்துருவில் எழுதப்படு கிறது. நாட்டின் தலைநகரம் அங்காரா என்பதாகும். இது ஆசியப் பகுதியில் அமைந்துள்ளது.

**தௌர்:** இஸ்லாமிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடம் ‘தௌர்’ குகை. இது மக்காவிலிருந்து ஐந்து கிலோ மீட் டர் தொலைவில் அமைந்துள்ளது. பெருமானார் (ஸல்) அவர்களும் அபூ பக்ர் (ரலி) அவர்களும் மக்காவிலிருந்து மதீனா செல்லும் வழியில் எதிரிகளிட மிருந்து தப்பிக்க இங்குதான் மறைந்து இருந்தனர்.

அப்போது களைப்பு மிகுதியில் அபூ பக்ர் (ரலி) அவர்களின் தொடை மீது தலைவைத்து பெருமானார் அவர்கள் கண்ணயர்ந்தார். அப்போது ஒரு பாம்பு (ரலி) அவர்களின் காலைக் கடித்தது. விஷம் ஏறி தாங்க முடியாத வலி ஏற்பட்டது. அண்ணலார் அவர் களின் தூக்கம் கலையக்கூடாதே என்று எண்ணினார் அபூபக்ர் (ரலி) அவர் கள். எனவே, காலை இழுக்கவோ, உதறவோ இல்லை. வலி பொறுக்க முடியாமல் கண்ணீர் விட்டார். கண் விழித்த பெருமானார் அவர்கள் அபூ பக்ர் (ரலி) அவர்களின் நிலையை உணர்ந்தார். பாம்பு தீண்டிய இடத்

தில் எச்சிலை உமிழ்ந்தார். விஷம் இறங்கியது. வலி அடியோடு நீங்கியது.

அவர்களைத் தேடிவந்த மக்கா குறைஷிகள் குகையின் வாயிலை அடைந்தனர். அப்போது அபூபக்ர் (ரலி) அவர்கள் பெருமானார் அவர்களை நோக்கி, 'நாம் இருவர் இங்கு இருப்பதை எதிரிகள் கண்டுபிடித்து விடுவார்களோ?' என்றார். உடனே நாயகத்திருமேனி அவர்கள் நாம் இருவர் மட்டும் அல்ல, அல்லாஹ்வையும் சேர்த்து மூவர் உள்ளோம் என்று பதில் கூறினார்.

எதிரிகள் குகையின் வாயிலருகே வந்த போது, அங்கே திடீரென ஒரு சிலந்தி வலை தோற்றம் தந்தது. எதிரிகள் 'இச்சிலந்தி வலை முஹம்மது பிறப்புக்கும் முன்பு தோன்றியதுபோல் காணப்படுகிறது. இச்சிலந்தி வலையைச் சேதப்படுத்தாமல் யாரும் உள்ளே சென்றிருக்க முடியாது' என எண்ணியவர்களாய் அவ்விடம் விட்டு அகன்றனர். அப்போது அக்குகையினுள்ளிருந்து இரண்டு புறாக்கள் வெளிப்பட்டன. ஆட்கள் யாரும் உள்ளேயிருப்பின் இப்புறாக்கள் குகையில் இருந்திருக்க முடியாது. யாரும் இல்லாததால் இவை அங்கிருந்து வெளிப்படுகின்றன. எனக் கருதி வந்த வழியே திரும்பிச் சென்றனர்.

நான்காம் நாள் எதிரிகளின் தேடும் வேட்டை ஓய்ந்தது. அதன்பின் அண்ணல் அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் குகையினின்றும் வெளிப்பட்டனர். பின்னர் யத்ரிப் நகர் நோக்கிப் பயணத்தைத் தொடர்ந்தனர்.

இவ்வாறு மக்காவிலிருந்து மதினா நோக்கிப்புறப்பட்ட நாளிலிருந்தே இஸ்லாமிய ஆண்டான ஹிஜ்ரி தொடங்குகிறது.

**தௌராத்:** இறைவனால் மூஸா (அலை) அவர்கட்கு வழங்கப்பட்ட வேதம் 'தௌராத்' ஆகும். மூஸா (அலை) யூத இனத்தவராதலால் இவ்வேதம் யூத வேதமாக அமைந்தது. இவ்வேதத்தை ஸினாய் மலையில் இறைவன் தன் கரத்தால் அமைத்தான் என்றும் நம்பப்படுகிறது. இவ்வேதத்தின் கருப்பொருளாக அமைந்திருப்பது 'பத்துக் கட்டளைகள்' ஆகும்.

தௌராத் வேதம் மூஸா (அலை) அவர்களின் தாய்மொழியான ஹீப்ரு மொழியிலேயே இருந்தது. இச்சொல்லுக்குச் 'சட்டம்' எனப் பொருள் கூறப்படுகிறது. மூஸா (அலை) அவர்களின் வழி இறையைப் பின்பற்றும் யூத மக்களுக்கு வாழ்வியல் சட்டங்களை வரையறுத்துக் கூறும் வேதமாக இஃது கருதப்படுகிறது.

இவ்வேதம் கி.மு. 607வரை ஜெரூசலத்தில் பாதுகாக்கப்பட்டு வந்தது. அதன்பின் ஏற்பட்ட போரில் ஜெரூசலம் அழிக்கப்பட்டது. அப்போது தௌராத் வேதத்தின் மூலப்படி எரிக்கப்பட்டது. அதன்பின், இவ்வேதம் பற்றி கிரேக்க மொழியில் பெயர்க்கப்பட்டிருந்த பகுதிகளையும், பலருடைய நினைவுகளிலிருந்தவற்றையும் திரட்டினர். இவ்வாறு மீண்டும் தௌராத் வேதம் உருவாக்கப்பட்டது. எனவே தற்போது பாடபேதத்தோடு கூடிய மூன்று வகையான வேதங்கள் யூதர்களால் கையாளப்பட்டு வருகின்றன.

பைபிளில் உள்ள பழைய ஏற்பாடே தௌராத்தின் வேதம் எனக் கூறப்படுகிறது.

**நஸ்ரூல் இஸ்லாம்:** எழுபது ஆண்டுகட்கு முன்பு புத்துணர்வூட்டும் புதுமைக் கவிதைகள் பலவற்றை இயற்றிப் புகழ் பெற்ற வங்கக் கவிஞர் காஜி நஸ்ருல் இஸ்லாம். இவர் தம் எழுச்சி மிகு கவிதைகளால் புரட்சிக் கவிஞர் எனும் புகழாரம் பெற்றவர்.

நஸ்ருல் இஸ்லாம் 1899ஆம் ஆண்டு மே 24இல் வங்கக் கிராமமான கர்லியாவில் பிறந்தார். இவர் தந்தை பெயர் காஜி பக்கீர் முஹம்மது என்பதாகும். இளம் வயதிலேயே தந்தையை இழந்த நஸ்ருல் இஸ்லாம் வறுமையில் வாடினார். வறுமை காரணமாகக் கடைகளிலும் வீடுகளிலும் ஊழியம் செய்து அதனால் வரும் குறைந்த வருமானத்தை கொண்டு தாமும் தம் மூன்று சகோதரர்களும் அடங்கிய குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டியதாயிற்று.

இளம் வயதிலேயே கவிதை உணர்வு மிக்கவராகத் திகழ்ந்தார். தெருப் பாடகர்களுக்கான பாடல்களை எழுதிக் கொடுத்துவந்தார். இப்பாடல்களைப் பாடும் தெருப்பாடகர்கள் மக்களின் கவனத்தை இப்பாடல்கள் மூலம் ஈர்த்தனர்.

பத்தாம் வகுப்புவரை கல்வி கற்ற நஸ்ருல் இஸ்லாம், தாமாக முயன்று சமஸ்கிருதம், பார்ஸீ, உருது மொழிகளைக் கற்றுக்கொண்டார்.

நாட்டுப்பற்று மிக்கவரான நஸ்ருல் இஸ்லாம் விடுதலைப் போராட்டத்தில் குதிக்க விரும்பினார். நாட்டை அடிமைப்படுத்தி ஆண்டுவரும் வெள்ளையர்களை எதிர்க்கப் போர்ப் பயிற்சி அவசியம் என எண்ணினார். அதற்காக போர்ப் பயிற்சியை 49-வது வங்கப் பேரணிமூலம் பெற்றார். விடுதலை உணர்வு பொங்கும் சுதந்திரப் போராட்டப் பாடல் 'முக்தி' என்ற பெயரில் வெளிவந்து இவரது விடுதலை வேட்கையை உலகுக்கு உணர்த்தியது.

அவர் போர்ப் பயிற்சி பெற்று ஹவில்தாராகப் பணியாற்றிய படையணி விரைவிலேயே கலைக்கப்பட்டது. அதன்பின் அவர் எழுத்துத் துறையில் அதிகக் கவனம் செலுத்தினார். புதினம், சிறுகதை, நாடகம், கவிதை எனப் பல்வேறு இலக்கிய வடிவங்களில் எழுதிக் குவித்தார்.

இவர் கவிதைகள் புரட்சிகரமான கருத்துக்களையும் உணர்வுகளையும் தாங்கி வெளிவந்தன. அவற்றுள் பெரும் புகழ் கவிதை பெற்ற 'பித்ரோஹி' என்ற கவிதையாகும். இக்கவிதையைப் படித்த ரவீந்திரநாத் தாகூர் இவரது புரட்சி மனப்பான்மையையும், கவிதையின் சிறப்பையும் மிகவும் பாராட்டினார்.

பின்னர் இவர் பத்திரிகை யொன்றைத் தொடங்கி அதன் ஆசிரியராக விளங்கினார். 'தும்கெட்டு' என்ற பெயரைக் கொண்ட அவ்விதழில் இவர் எழுதிய கவிதை ஆட்சியினருக்கு எதிராக இருந்ததனால் இவர் ஓராண்டு சிறையில் அடைக்கப்பட்டார். அங்கு இவரை ஆங்கில அதிகாரிகள் மிக மோசமாக நடத்தினர். விடுதலைக்குப் பின்னர் இவர் மனம் தளராமல் தொடர்ந்து விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டார். காந்தீயக் கொள்கைளை ஆதரித்துச் சுதந்திர உணர்வூட்டும் பல கவிதைகளைத் தொடர்ந்து எழுதினார். இவரது புரட்சிக்கனல் தெறிக்கும் சுதந்திரப் பாடல்களில் மக்கள் வீறு கொண்டு எழுந்தனர்.

1942ஆம் ஆண்டில் பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டார். வங்காள அரசு அவருக்கு நிதியுதவி தந்து ஆதரித்தது. இவர் 1930இல் எழுதிய கவிதையே பங்களாதேஷின் தேசிய கீதம், 1975இல் இறந்த இவரது நல்லுடல், அரசு மரியாதையுடன் டாக்கா பல்கலைக் கழக வளாகத்தில் அடக்கம் செய்யப்பட்டது.

**நாகூர்:** தமிழ் நாட்டில் உள்ள முக்கிய இஸ்லாமியத் தலங்களுள் நாகூரும் ஒன்றாகும். இவ்வூர் தஞ்சை மாவட்டத்தில் கடலோரப்பகுதியில் அமைந்

துள்ள ஊராகும். இவ்வூரின் ஆதிப் பெயர் நாகப்பூர் என்பதாகும். இதுவே நாளடைவில் மருவி 'நாகூர்' என ஆயிற்று.

இங்குதான் நாகூர் ஆண்டகை ஷாஹுல் ஹமீது ஒலியுல்லாஹ் 28 ஆண்டுகள் தங்கி இஸ்லாமியப் பிரச்சாரம் செய்துள்ளார். இறுதியில் இங்கேயே அடக்கமாகிவிட்டார். இதனால் இவ்வூர் பெரும்புகழ்பெற்று விளங்கலாயிற்று. மத, இன வேறுபாடின்றி மக்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், வெளிநாடுகளிலிருந்தும் வந்து இங்குள்ள தர்காவில் ஜியாரத் செய்கின்றனர். ஆண்டுதோறும் நாகூர் ஆண்டகையின் நினைவு நாளாக உர்ஸ் விழா நடைபெறுகிறது.

இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்கள் பலரும் இங்கே வாழ்ந்து மறைந்துள்ளனர். இதனால் இவ்வூரை இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்களின் கோட்டை என்று போற்றுகின்றனர். அவர்களுள் தலையாயவராகக் கருதப்படுபவர் குலாம் காதிறு நாவலர் ஆவார்.

இவ்வூரில் தர்காவைத் தவிர்த்து ஏழு மசூதிகளும், மூன்று பெரும் மதரஸாக்களும் உள்ளன.

**நாமா:** பாரசீக மொழியிலுள்ள இலக்கிய வகைகளில் ஒன்று 'நாமா' என்பதாகும். இது 'நாமே' என்ற சொல்லிலிருந்து வந்ததாகும். இதற்கு வரலாறு என்பது பொருள் ஆகும். இது தமிழில் புதிய இலக்கிய வடிவமாக இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்களால் கொண்டு வந்து சேர்க்கப்பட்டுள்ளது.

தமிழில் மொத்தம் பதினாறு நாமா இலக்கியங்கள் உள்ளன. செய்யது அஹமது மரைக்காயர் இயற்றிய 'நூறு நாமா' என்னும் நூல் உலகப் படைப்பு வரலாற்றை விரித்துரைக்கிறது. மதாறு சாஹிபு பாடிய 'மிஃறாஜ் நாமா' இலக்கியம் பெருமானார் (ஸல்) அவர்களின் விண்ணுலகப்பயணத்தை விளக்கிக் கூறுகிறது. ஷாமுனாலெப்பை யாத்த 'இருஷாது நாமா' இறைவணக்கம் புரியாதோர் இறுதியில் பெறும் தண்டனைகளை விரித்துரைக்கிறது. ஆம்பூர் அப்துல்காதர் சாஹியு பாடிய 'சக்கறாத்து நாமா' மரண வேதனைகளை விவரிப்பதாகும். இந்நூல் தமிழ் முஸ்லிம் பெருமக்களிடையே பெரும்புகழ் பெற்ற நூலாகும்.

**நிகாஹ்:** 'நிகாஹ்' என்ற அரபுச் சொல்லுக்குத் 'திருமணம்' என்று பெயர். இஸ்லாத்தின் திருமணம் என்பது 'ஸுன்னத்' ஆகும். துறவறமும் சந்நியாசமும் இஸ்லாத்தில் போற்றப்படவில்லை.

ஒரு ஆணும் பெண்ணும் திருமணம் செய்து கொண்டு, பிள்ளைகளைப் பெற்று வாழ்வது சரியான குடும்ப வாழ்வாகும். திருமணம் செய்து கொள்ள விரும்பும் மணமகன் 'மஹர்' கொடுக்க வசதியுள்ளவனாகவும் மணமகளுக்குரிய செலவுகளைச் செய்யக் கூடியவனாகவும் இருத்தல் வேண்டும்.

திருமணச் சடங்குகளில் நான்கு மத்ஹபுகளுக்கிடையே சிறுசிறு வேறுபாடுகள் உண்டு. ஆயினும் திருமணத்தின் போது இரு சாட்சிகள், மணப்பெண்ணின் சம்மதம் பெறுதல், மணமகன் சம்மதம் கூறுதல், மஹர் தருதல் ஆகியன இன்றியமையாத அடிப்படை அம்சங்களாகும். இஸ்லாமியத் திருமணம் வாழ்க்கை ஒப்பந்தமாகும்.

**நிய்யத்:** இஸ்லாத்தில்' நிய்யத்' என்பது மிக முக்கியமான ஒன்றாகும். அதற்கு 'எண்ணம்' என்பது பொருளாகும். இந்த எண்ணம் வலுவானதாக இருக்க வேண்டும் என்பது நியதி. இந்த

எண்ணம் நல்லதாகவோ தீயதாகவோ இருக்கலாம். எண்ணத்தின் தன்மைக் கேற்ப இறைவன் கூலி தருவான். இயன்றவரை நல்ல எண்ணங்களை உள்ளத்தில் தேக்குபவர்களே இறைவனிடம் நற்கூலி பெறுவர். ஏனெனில் 'நிய்யத்' என்பது மற்றொரு வகையான மனத்தூய்மையாகும்.

உலூச் செய்யும்போதும் தொழத் தொடங்கும்போதும் நோன்பு நோற்கும் போதும் ஹஜ்ஜின்போதும் குர்பானி கொடுக்கும்போதும் ஜகாத்வழங்கும் போதும் மற்றும் இஸ்லாமிய புனிதக் காரியங்களை ஆற்றும்போதும் நிய்யத் செய்து கொள்வது மிகமிக அவசியமாகும்.

நிய்யத் இல்லாது 'இபாதத்' இல்லை என்பது மார்க்கப் பெரியார்களின் கருத்தாகும்.

**நூர்ஜஹான்:** இவர் முகலாயப் மா மன்னர் ஜஹாங்கீரின் மனைவியாவார். இவர் தந்தை ஈரான் நாட்டைச் சேர்ந்த கியாஸுத்தீன் என்பவர். ஷீயா பிரிவைச் சேர்ந்த இவர் வாழ்வில் ஏற்பட்ட பொருளாதார பாதிப்பால் டெல்லி வந்தார். வரும்வழியில் காந்தஹார் நகரில் பிறந்தவர் நூர்ஜஹான். இவர் தந்தை அக்பரின் அரண்மனைப் பணியில் சேர்ந்தார்.

இவருக்குப் பெற்றோர் இட்ட இயற்பெயர் 'மெஹ்ருன்னிஸா' என்பதாகும். இவர் பருவமடைந்ததும் ஷேர் ஆப்கன் என்பவருக்கு மணமுடித்துத் தரப்பட்டார். பெண் மகவு ஒன்று பிறந்த சிறிது காலத்திற்குள், இவர் கணவர் எதிரிகளால் கொல்லப்பட்டார், அதன்பின் அக்பர் அரண்மனையிலேயே விதவைக் கோலத்துடன் வாழ்ந்து வந்தார்.

அப்போது இவரது அழகில் மயங்கிய இளவரசர் ஸலீம் இவரை மறுமணம் செய்து கொண்டார். ஸலீம் பட்டமேற்றதும் தம் பெயரை ஜஹாங்கீர் என மாற்றிக் கொண்டார். அத்துடன் தம் மனைவி மெஹ்ருன்னிஸாவின் பெயரை 'நூர் மஹல்' என மாற்றி, பின் அதையும் தம் பெயருக்கேற்ப ''நூர்ஜஹான்' என அமைத்தார். இதற்கு 'உலகத்தின் ஒளி' என்பது பொருளாகும்.

நூர்ஜஹான் பெண்ணாக இருந்தாலும், ஆணைப்போலவே செயல்படும் திறன் கொண்டவராக இருந்தார். ஜஹாங்கீர் நோய்வாய்ப்பட்டுத் தளர்ச்சியடைந்தார். அப்போது அரசு காரியங்கள் அனைத்தையும் நூர் ஜஹானே திறம்பட கவனித்துக் கொண்டார். நம்மைவிட அறிவாற்றலும், வீரஉணர்வும் மிக்க நூர்ஜஹான் பொறுப்பில் நாட்டை ஒப்படைத்து இருந்தார் ஜஹாங்கீர். அவரும் தீரமுடன் எதிரிகளின் சூழ்ச்சிகளையும், கலகங்களையும் அடக்கி நாட்டைத் தம் பொறுப்பில் வைத்திருந்தார்.

1627ஆம் ஆண்டு அக்டோபரில் ஜஹாங்கீர் இறந்தார். அரியணைப் போட்டியில் இளவரசர் குர்ரம் வென்று, ஷாஜஹான் என்ற பட்டத்துடன் சிம்மாசனம் ஏறினார். அத்துடன் நூர்ஜஹானின் ஆட்சியும் அதிகாரமும் முடிவுற்றன. ஷாஜஹான் அளித்த உதவித் தொகையைக் கொண்டு வாழ்ந்த நூர்ஜஹான் தம் 72- வது வயதில் காலமானார். அவரது உடல் லாகூரில் ஷாஜஹான் அடக்கவிடத்திற்கு அருகில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

**நூஹ் (அலை):** நபிமார்களிலேயே உலகில் நீண்டகாலம் வாழ்ந்தவர் நூஹ் (அலை) ஆவார். இதனால் இவர் 'கபீருல் அன்பியா' என அழைக்கப்படுகிறார். இதற்கு 'நபிமார்களில் முதியவர்' என்பது பொருளாகும். இவர் இவ்வுலகில் 1050 ஆண்டுகள் வாழ்ந்துள்ளார்.

இவரின் தாயகம் ஈராக் நாடாகும். நாற்பதாம் வயதில் நபிப்பட்டம் பெற்றார். ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகள் தம்மக்களிடையே ஓரிறை வணக்கத்தை வற்புறுத்தி வந்தார். மக்கள் எவரும் இப்பிரச்சாரத்துக்குச் செவி சாய்க்கவில்லை. மாறாக நூஹ் (அலை) அவர்களை ஏசியும் அடித்தும் துன்புறுத்தியும் வந்தனர். மிருக உணர்வு கொண்ட இம்மக்கள் திருந்த இனி வழியே இல்லை என்பதை உணர்ந்தார். இம்மக்களை அழித்துவிட இறைவனிடம் இறைஞ்சினார். அப்போது இறைவன் ஒரு கப்பலைக் கட்டுமாறு இவருக்குப் பணித்தான். இவரும் இரண்டாண்டுகள் கடுமையாக உழைத்து, பல அடுக்குகள் கொண்ட பறவை வடிவிலான கப்பலைக் கட்டி முடித்தார்.

இறைவனின் ஆணைப்படி ஒரே இறைவனை வணங்கும் வணக்கதாரிகளும், உலகின் உயிரினங்களில் ஒவ்வொரு ஜோடியும், பல நாட்களுக்குத் தேவையான உணவுகளும் கப்பலில் ஏற்றப்பட்டன.

இறையின் திருவுளப்படி கடும் மழை கொட்டியது. எங்கும் ஒரே வெள்ளக் காடாகியது. பெருகியோடிய நீரினிடையே கப்பல் மிதக்கலாயிற்று. ரஜப் மாதம் முதல் நாளிலிருந்து துல்ஹஜ் மாதம் இறுதி நாள்வரை சுமார் ஆறு மாத காலம் இக்கப்பல் உலகைச்சுற்றி வலம்வந்தது. இறுதியில் மழை நின்றது; நீர் வடிந்தது. கப்பல் ஜூதி மலைமீது நின்றது. இறைவன் ஆணைப்படி முஹர்ரம் பத்தாம் நாள் கப்பலிலிருந்து உயிரினங்களும் நூஹ் (அலை) அவர்களின் குடும்பத்தினரும் பிறரும் வெளிப்பட்டனர்.

அதன்பின்னர் நூஹ் (அலை) 60 ஆண்டுகள் உலகில் வாழ்ந்து ஓரிறை வணக்க முறையிலான இறை நெறியை மக்களிடையே பிரச்சாரம் செய்து வந்தார். அவர் காலமானபோது, அவரது உடல் பைத்துல் முகத்தஸில் நல்லடக்கம் செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது.

**நொண்டி நாடகம்:** இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்கள் தமிழுக்கென உருவாக்கிய இஸ்லாமிய இலக்கிய வடிவங்களுள் நொண்டி நாடகமும் ஒன்றாகும். பழந்தமிழ் இலக்கிய வகைகளுள் ஒன்றாக நொண்டி நாடகம் குறிக்கப்படவில்லை. இதனால் இவ்வகை இலக்கிய வடிவம் பிற்காலத்திலே உருவாக்கப்பட்டது என்பது தெளிவாகும்.

தமிழில் உள்ள நொண்டி நாடகம் ''செய்தக்காதி நொண்டி நாடக'' மாகும். தவறு செய்யும் ஒருவன் தண்டனைக்குள்ளாகிக் கால் வெட்டப்படுகிறான். வள்ளல் ஒருவரின் பொருளுதவியோடு ஹஜ் செல்கிறான். மக்காவில் தன் இழந்த காலை மீண்டும் பெறுகிறான். இதுதான் கதைக் கரு.

இனிய இசை ஓசையுடைய நொண்டிச் சிந்துவில் பாடல்கள் அமைந்துள்ளன. ஊர் நடுவே உள்ள மேடையில் கையில் இசைக்கருவியுடன் ஒற்றைக் காலை மடித்துக் கட்டிக் கொண்டு தன் கதையைக் கூறுவான். பல்வேறு பாத்திரங்களாகத் தானே மாறி நடிப்பான்.

தவறு செய்யத் தூண்டும் சமூகத்தின் கோணல் நிலைகளைச் சுட்டிக்காட்ட வந்த அங்கத (Satire) நாடகமாகும் இது. தவறை உணர்ந்து, இறை மன்னிப்புக் கேட்போருக்கு இறையருள் கிட்டும் என்பதையும் இந்நாடகம் உணர்த்துகிறது. சீதக்காதியின் வள்ளன்மையைக் கூறுவதால் அவரின் பெயரால் 'செய்தக்காதி நொண்டி நாடகம்' என அழைக்கப்படுகிறது. இதன் ஆசிரியர் யார் எனத் தெரியவில்லை.

இந்து சமயத்தைச் சேர்ந்த ஆசிரியர் பலரால் பல்வேறு தலைப்புக்களில் 8

நொண்டி நாடகங்கள் இதுவரை இயற்றப்பட்டுள்ளன.

**நோன்பு:** இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளுள் மூன்றாவது கடமையாக அமைந்திருப்பது நோன்பு ஆகும். நோன்புக் கடமை ரமலான் மாதத்தில் முதல் நாள் தொடங்கி தொடர்ந்து அம்மாதம் முழுவதும் நிறைவேற்றப் படுகிறது.

அதிகாலை நான்கு மணிக்கு முன்னதாகவே உண்பதும் பருகுவதும் நிறுத்தப்படுகிறது. மீண்டும் முன்னிரவு ஆறரை மணிவாக்கில் நோன்பு முடிக்கப்படுகிறது. அதற்குப் பிறகே உண்ணவும் பருகவும் முடியும்.

இறைவன் தன் திருமறையில் 'லஅல்லகும் தத்தகூன்' (இதனால் நீங்கள் இறையச்சமுடையோர்கள் ஆகலாம்) என்று கூறியுள்ளான். இதிலிருந்து இறையச்ச உணர்வைப் பூரணமாக உள்ளத்தில் உருவாக்கி நிலைபெறச் செய்வதே நோன்பின் முழுமுதல் நோக்கமாகும்.

நோன்பின்போது அல்லாஹ் இட்ட கட்டளையை இம்மியும் பிசகாது முழுமையாக மனக் கட்டுப்பாட்டோடு நோன்பாளி நிறைவேற்றுகிறார். அல்லாஹ்வின் அன்பையும் அவன் அளிக்கும் வெகுமதியையும் பெறுகிறார். அதற்கான பயிற்சிக் களமாக அமைந்திருப்பதே ரமலான் மாத நோன்பு.

மனக் கட்டுப்பாடும், மன உறுதியும் மிக்கவராக வாழ நோன்பு பெரும் துணை புரிகிறது. எல்லா வகையிலும் மனத்தைக் கட்டுப்படுத்துவதுதான் தூய்மையான போராட்டம் (ஜிஹாதுல் அக்பர்) என்றார் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள்.

நோன்புக் காலத்தில் தீய செயல்களைச் செய்யாததோடு தீய உணர்வே மனதில் எழச் சிறிதும் இடமில்லாமல் போகிறது. நோன்பாளி பசித் துன்பத்தை அனுபவிப்பதால் பிறர் பசியைப் போக்க முனைகிறான்.

மருத்துவ அடிப்படையில் நோன்பு மிகச் சிறப்பாக இயற்கை மருத்துவ முறையாக அமைந்துள்ளது. உடலில் கொழுப்பு மிகுந்திருத்தல், நீரிழிவு நோய், இரத்த அழுத்தம், மூத்திரக் காய் வீங்கியிருத்தல், நாட்பட்ட கீல்வாத நோய் போன்றவை குணமாகின்றன.

ரமலானில் தொடர்ந்து நோன்பு நோற்பதால் உடலில் கொழுப்புச் சத்துச் சேர்வது குறைகிறது. இதனால் உடல் பருமன் குறைய மாரடைப்பு நோய் தவிர்க்கப்படுகிறது.

தொடர் நோன்பின்போது உடல் உறுப்புகள் போதிய அளவு ஓய்வு பெறுகின்றன. ரமலான் மாதத்திற்குப் பின் அவை புத்துணர்வோடு வேலை செய்கின்றன.

**ஃபத்வா:** இஸ்லாமியச் செயல்பாடுகளில் ஐயம் ஏற்படின் அவற்றிற்கான சரியான தீர்வை மார்க்க ஞான மேதைகள் மூலம் பெறுவதே 'ஃபத்வா' எனப் படுகிறது. இஸ்லாத்தின் நான்கு மத்ஹபுகளின்படி அந்தந்த மத்ஹபுகளின் சட்ட திட்டங்களுக்கேற்ப தீர்வு சொல்லப்படும். இத்தீர்வை முஃப்தி வழங்குவார். அரசு நியமித்த காஜி, அரபிக் கல்லூரிகளில் முதல்வர் பணியாற்றுவோர் இத்தகைய ஃபத்வா எனும் தீர்வை வழங்க உரிமை படைத்தோராவர்.

ஃபத்வா வழங்குவோர் அந்தந்த மத்ஹபுகளின் சட்டதிட்டங்களை நன்கு அறிந்தவராக இருத்தல்வேண்டும். அவர்கள் தரும் ஃபத்வாவின்படியே சில சமயம் வழக்குமன்றத் தீர்ப்புகள் வழங்கப்படுகின்றன.

**பயான்:** இஸ்லாமியப் பொருள் பற்றி அல்லது எந்த ஒரு விஷயம் பற்றி தெளிவு படுத்துவதே 'பயான்' என்று கூறப்படுகிறது. பயான் செய்வோர் தெளிந்த அறிவும், சொல்லாற்றலும் மிக்கவராக இருத்தல் அவசியம். இஸ்லாமிய அறிவு நிரம்பப் பெற்றிருத்தல் வேண்டும்.

கேட்போர் தெளிவு பெறுவதோடு, தொடர்ந்து சிந்திக்கத் தூண்டும் முறையில் பயான் அமைதல் வேண்டும். இஃது பேச்சாக அன்றி எழுத்தின் வழி விளக்க வுரையாகவும் அமையலாம். எனவே தான், திருக்குர்ஆன் விளக்கவுரைகள் 'பயானுல் குர்ஆன்' என்று அழைக்கப் படுகின்றன.

**பர்தா:** இச்சொல் பார்ஸிச் சொல்லாகும். இதற்குத் 'திரை' என்று பொருள். அரபு மொழியில் இதற்கு 'ஹிஜாப்' என்பர். இது பொதுப்பெயராக இருப்பினும் பெண்கள் அணியும் திரையையே குறிக்கும் சொல்லாகப் பயன்பட்டு வருகிறது. பெண்கள் பர்தா அணியும் பழக்கம் உலகில் ஐயாயிரம் ஆண்டுகளாக இருந்து வருகிறது.

பெண்களின் அழகும் கவர்ச்சியும் ஆண்களின் உணர்வுகளைக் கிளர்ந்தெழச் செய்கிறது. இதனால் ஆண்கள் ஒழுக்கவியல் நெறிக்குப் புறம்பாக தடம்புரள நேர்கிறது. எளிதில் உணர்ச்சிவயப்படும் பெண்டிரும் இதனால் பெரும் பாதிப்புக்கு ஆளாகின்றனர். எனவே தான் பஞ்சையும் நெருப்பையும் அருகருகே வைப்பது அவை பற்றி எரிய ஏதுவாகிவிடும். இதனாலேயே ஆடவர் முன்பு பெண்டிர் தங்கள் உடல் அழகை, கவர்ச்சியைக் காட்டும் உறுப்புகளைத் துணியால் மூடி மறைத்துக் கொள்ள வேண்டும் என இஸ்லாம் போதிக்கிறது. இஸ்லாமிய முறையில் பெண்கள் அணியும் பர்தா ஆண்களைக் காக்கும் கேடயமாகவும் அமைகிறது.

பெருமானார் (ஸல்) அவர்கள் காலத்திற்குச் சற்று முன்புவரை பழங்காலத்தில் பேணுதலான பர்தா முறை இல்லாதிருந்தது. இதனால் ஒழுக்க வாழ்வும் சீரழிந்திருந்தது. எனவே தான், அண்ணலார் (ஸல்) தீன் நெறிவழி ஒழுக்கத்தைப் பேணிப் பாதுகாக்க பர்தா முறையை வலியுறுத்தி நிலை நாட்டினர் ''...(பெண்களிடம்) யாதொரு பொருளை நீங்கள் கேட்கும்படி நேரிட்டால் நீங்கள் திரைக்கு அப்பால் இருந்துகொண்டே அவர்களிடம் கேளுங்கள். இது உங்கள் இருதயங்களையும் அவர்கள் இருதயங்களையும் பரிசுத்தமாக்கி வைக்கும்......'' *(33:53)* என அல்லாஹ் தன் திருமறையில் கூறியுள்ளான். இதிலிருந்து ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே திரை இருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. பெண்கள் ஆண்கள் மத்தியில் நடமாட வேண்டிய கட்டாயம் ஏற்படின் பெண்கள் பர்தா அணிந்தே செல்ல வேண்டும் என்பதும் கட்டாயமாகிறது.

உள்ளங்காலிலிருந்து உச்சந்தலை வரை உடையால் பெண் தன் உடலை மறைத்துக்கொள்வதே சரியான பர்தா முறையாகும்.

**ஃபர்லு:** இதற்குக் 'கட்டாயக் கடமை' என்பது பொருளாகும். இஸ்லாமிய மார்க்க நெறிகளில் சிலவற்றைக் கட்டாயம் கடைப்பிடித்து ஒழுக வேண்டும். இவை பர்லாகும். சான்றாக, இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளான; இறைநம்பிக்கையாகிய கலிமா, தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் ஆகியவை கட்டாயக் கடமைகளாகும். இவை ஃபர்லுகளாகும்.

ஃபர்லு இரு வகைகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. அவற்றுள் ஒன்று, ஃபர்லு

ஐன் என்பது. தொழுகை, நோன்பு போன்றவை ஃபர்லு ஐன் ஆகும். இவை கட்டாயம் ஒவ்வொருவராலும் நிறை வேற்றப்பட்டே யாகவேண்டும். மற் றொன்று 'ஃபர்லு கிஃபாயா' என்ப தாகும். ஒரு இடத்தில் அல்லது ஊரில் வாழும் மக்களில் சிலராவது நிறைவேற் றும் கடமை ஃபர்லு கிஃபாயா வாகும். சான்றாக: ஜனாஸாத்தொழுகை.

**பரா அத் இரவு:** இஸ்லாமியப் புனித இரவுகளில் 'பராஅத் இரவு' ஒன்றா கும். ஷஃபான் மாதம் பதினைந்தாம் இரவு 'பராஅத் இரவு' ஆகும். பராஅத் எனும் சொல்லுக்கு 'விடுதலை அடை தல்' என்பது பொருளாகும். இது 'ஷபே பராஅத்' என்றும் அழைக்கப்படு கிறது. இந்த இரவில்தான் அல்லாஹ் நரகக் கொடுமையிலிருந்து ஆயிர மாயிரம் பாவிகளை விடுதலை பெறச் செய்கிறான்.

'பராஅத்' அன்று பகலில் நோன்பு நோற்று இரவில் கண்விழித்து இறை வணக்கம் புரிவர். அன்று இரவு முழுதும் தொழுது கேட்கும் துஆக்களை வல்ல அல்லாஹ் ஏற்று அருள்புரிகிறான். அன்று இறந்துவிட்ட பெற்றோர் உற் றார் உறவினர்களின் பாவங்களை மன் னித்து, பேரின்பப் பெருவாழ்வு அளிக்கு மாறு இறைவனிடம் மன்றாடுவர். மறைந்தவர்களின் ஆன்ம நலனுக்காக பாத்திஹா ஓதுவர். பராஅத் இரவு அன்று மஃறிபுக்குப் பிறகு மூன்று யாஸீன் ஓதுவர். முதல் யாஸீன் நீண்ட ஆயுளுக்காகவும், இரண்டாவது யாஸீன் வாழ்க்கையில் வள வசதிகளுக் காகவும், மூன்றாவது யாஸீன் நோய் நொடிகளிலிருந்து பாதுகாப்புப் பெறு வதற்காகவும் ஓதப்படும். பின் இரவு முழுவதும் ஸுன்னத்தான பலவகை தொழுகைகளைப் புரிந்து துஆக் கேட்பர்.

**பலஸ்தீனம்:** மத்திய ஆசியாவில் அமைந்துள்ள சிறியநாடு பலஸ்தீனம் ஆகும். பன்னெடுங்காலத்திற்கு முன்பு பிலிஸ்டைன் இன மக்கள் இங்கு குடி யேறி வாழலாயினர். அதனால் இப் பகுதியும் அவர்கள் இனப் பெயரா லேயே அழைக்கப்பட்டது. அதுவே நாளடைவில் 'பலஸ்தீன்' என்றாயிற்று.

இஸ்லாமிய மார்க்கம் பரவத் தொடங்கிய காலத்தில், இப்பகுதியில் வாழ்ந்த அரபு மக்கள் இஸ்லாத்தை ஏற்று முஸ்லிம்களாயினர். சிலுவைப் போரின்போது சிறிதுகாலம் கிருஸ்த வர்களின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது தவிர, மற்றப்படி 1918வரை முஸ்லிம் களாலேயே ஆளப்பட்டுவந்தது. இறுதி யாகத் துருக்கியின் பகுதியாக இருந் தது. 1918இல் முதல் உலகப்போரின் போது இப்பகுதி ஆங்கிலேயர்களின் ஆட்சியின் கீழ்வந்தது.

தங்களுக்கென சொந்தநாடு இல் லாது பல்வேறு நாடுகளிலும் பரவி வாழ்ந்த நாடோடிகளான யூத இன மக்கள் பலஸ்தீனில் குடியேற ஆங்கி லேய ஆட்சி வழி வகுத்தது. இதை ஏற்காத பலஸ்தீன முஸ்லிம்கள் பெரும் போராட்டம் செய்தனர். இதில் ஆயிரக்கணக்கான பலஸ்தீன முஸ்லிம் கள் உயிரிழந்தனர். அதே சமயத்தில் யூதர்கள் உலகெங்கிலுமிருந்து பலஸ் தீனில் குடியேறலாயினர். இதனால் பெரும்பான்மையினராக வாழ்ந்த முஸ்லிம்கள் சிறுபான்மையாயினர். சிறுபான்மையினரான யூத மக்கள் பெரும்பான்மையாயினர்.

1948ஆம் ஆண்டில் ஆங்கில அரசு வெளியேறியபோது ஆட்சி உரிமையை யூதர்களிடம் ஒப்படைத்து முழுச் சுதந் திரம் அளித்தது. பின்னர், அங்கிருந்த பத்து இலட்சம் முஸ்லிம்கள் வலுக் கட்டாயமாக வெளியேற்றப்பட்டனர். அவர்கள் அகதிகளாகப் அண்டை நாடு

களில் தஞ்சமடைந்தனர். ஐ.நா. சபை பலஸ்தீனை அரபுப் பகுதி, இஸ்ரேல் (யூத) பகுதி என இரு நாடுகளாகப் பகுத்து தீர்மானம் நிறைவேற்றியது. இஸ்ரேல் அவ்வப்போது திடீர் படையெடுப்புகள் மூலம் பலஸ்தீனத்தின் பெரும்பகுதியைக் கைப்பற்றிக் கொண்டுள்ளது.

அன்று முதல் இன்று வரை இரு பகுதிகளுக்குமிடையே சச்சரவு இருந்து வருகிறது. யாஸிர் அரஃபாத் தலைமையில் பலஸ்தீன விடுதலை இயக்கம் பலஸ்தீன் நாட்டை யூதர்களிடமிருந்து மீட்கத் தொடர்ந்து போராடி வருகிறது.

இன்றைய இஸ்ரேல் நாடு 20,770 கி.மீ. பரப்பளவைக் கொண்டுள்ளது. மக்கள் தொகை சுமார் நாலரை இலட்சமாகும்.

**பாகிஸ்தான்:** 1947ஆம் ஆண்டு இந்தியா விடுதலை பெற்றபோது உருவான நாடு பாகிஸ்தான். தொடக்கத்தில் பாகிஸ்தான் நாடு மேற்குப் பாகிஸ்தான், கிழக்குப் பாகிஸ்தான் என இரு பகுதிகளாக அமைந்திருந்தது. 1971 இல் மொழிப்பிரச்சினை காரணமாக முஜீபுர் ரஹ்மான் தலைமையில் கிழக்குப் பாகிஸ்தான் பிரிந்து தனி நாடாகியது. அதுவே இன்றைய பங்களாதேஷ் நாடு. இன்று பாகிஸ்தான் என்று அழைக்கப்படும் முழு நாடு பழைய மேற்குப் பாகிஸ்தான் மட்டுமே.

இன்றைய பாகிஸ்தான் கிழக்கே இந்தியாவையும், மேற்கே ஈரானையும், வடக்கே சீனாவையும், தெற்கே அரபிக் கடலையும் எல்லைகளாகக் கொண்டு அமைந்துள்ளது. வடமேற்கே அமைந்துள்ள அஃப்கானிஸ்தான் மற்றொரு முக்கிய அண்டை நாடாகும். பாகிஸ்தானின் மொத்தப் பரப்பளவு 8,03,943 ச.கி.மீ. ஆகும். மக்கள் தொகை சுமார் ஒன்பது கோடியாகும். பஞ்சாப், சிந்து, வடமேற்கு எல்லைப்புற மாகாணம், பலுச்சிஸ்தானம் ஆகிய நான்கு மாநிலங்களைக் கொண்ட கூட்டமைப்பாகும் பாகிஸ்தான்.

பாகிஸ்தானுக்கு நீர்வளம் தருவது சிந்துநதியும், அதன் கிளை நதிகளான சீலம், சீனாப், ரவி, சட்லெஜ் ஆகிய ஆறுகளாகும். பாகிஸ்தான் ஒரு மித வெப்ப நாடாகும்.

பாகிஸ்தானில் சிந்து, பலுச்சி, பஞ்சாபி மொழிகள் பேசப்பட்டாலும் தேசிய மொழியாக உருதும் ஆங்கிலமும் உள்ளன. இங்குள்ள மக்களில் 97 சதவிகிதம் பேர் முஸ்லிம்களாவர். தலைநகரம் இஸ்லாமாபாத் ஆகும்.

பாகிஸ்தான் ஒரு இஸ்லாமியக் குடியரசு ஆகும்.

**பாத்திமா (ரலி):** பெண் குலத்தின் பெருமைக்கு இலக்கணமாகத் திகழ்ந்த பாத்திமா (ரலி) பெருமானார் (ஸல்) அவர்களின் திருமகளாவார். அண்ணல் நபி (ஸல்) அவர்கட்குப் புதல்வியர் நால்வர். அவர்களுள் பாத்திமா (ரலி) தந்தையோடு மிக நெருக்கமுடையோராக விளங்கியவர்; நபிகள் நாயகத்தின் மறைவுவரை அவர்தம் நிழல்போல் இருந்தவர்.

நபிகள் திலகம் (ஸல்) அவர்கள் நபித்துவம் பெறுவதற்கு ஐந்து ஆண்டுகட்கு முன்பு, ரமலான் 20இல் பிறந்தவர் பாத்திமா (ரலி). நபித்துவம் பெற்றபின் குறைஷியரிடையே இஸ்லாமியப் பிரச்சாரம் செய்தார் பெருமானார் (ஸல்) அவர்கள். அப்போது சிலை வணக்கக் குறைஷியர் பெருமானார் அவர்கட்குப் பெருந்துன்பம் தந்து வந்தனர். அவற்றையெல்லாம் சிறுமி

யாக இருந்தபோது நேரில் கண்டு மனம் வருந்தித் துடித்தவர் பாத்திமா (ரலி).

அப்போது ஒரு நாள் கஃபாவில் தொழுது கொண்டிருந்த பெருமானார் அவர்கள் கழுத்தில் ஆட்டின் சிறு குடலை மாலையாகப் போட்டு, கை கொட்டிச் சிரித்தான் உக்பா எனும் கொடியவன். தம் தந்தையின் உடல் மீது பட்ட அக்குடலை அழுதவண்ணம் நீக்கி, அவரது உடலை நீரால் கழுவினார் அன்பு மகள் பாத்திமா (ரலி). அழுது துடித்த பாசமகளுக்கு ஆறுதல் கூறித் தேற்றினார், அன்புத் தந்தை.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து மதீனா சென்ற பின்னர் பாத்திமா (ரலி) மதீனாவுக்கே அழைத்துத்தங்களுடன் வைத்துக் கொண்டார். பாத்திமா (ரலி) பருவமடைந்தபோது, அவரது அழகையும், இணையிலா ஒழுக்கத்தையும், பண்பான போக்குகளையும், இறை உறுதியையும் கண்ட செல்வர் பலர் அவரை மணம் செய்து கொள்ள விரும்பினர். பெரும் செல்வத்தை மஹராகத் தந்து மணம் முடிக்கத் துடித்தனர். பெருமானார் பேரன்புக்குரிய அணுக்கத் தோழர்களான அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), உதுமான் (ரலி), அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ப் ஆகியோரும் பெரும் பொருளை மஹராகத் தந்து மணம் செய்துகொள்ள விரும்பினர். ஆனால் இறை ஆணைப்படி வறியவரான வீரர் திலகம் அலீ (ரலி) அவர்கட்கு மிகக் குறைந்த மஹருக்குப் பாத்திமா (ரலி)வை மணம் முடித்துத் தந்தார் பெருமானர் அவர்கள். இருவரின் இணையிலாப் பொருத்தத்தை உலகமே புகழ்ந்து போற்றியது.

இஸ்லாமியத் திருமணம் எவ்வாறு அமையவேண்டும் என்பதற்கு இவர்களின் நிக்காஹ் ஒரு முன் உதாரணமாகும். ஆடம்பரமற்ற முறையில் எளிமையாக நடைபெற்றது. பெருமானார் அவர்கள் தம் அன்பு மகளுக்குத் தந்த சீதனப் பொருட்கள் ஒரு மூங்கில் கட்டில், தோலாலான் விரிப்பு. நீர் எடுக்கப் பயன்படும் ஒரு தோல் துருத்தி, தோல் தலையணை, தண்ணீர் குடிக்கப் பயன்படும் ஒரு குவளை, மாவு அரைக்கும் ஒரு திருகை இவை மட்டுமே யாகும்.

தம் அன்பு மகளின் திருமணத்திற்கென்று புதுப்பொருளாக ஒரு குப்பாயம் தைத்துத் தந்திருந்தார் அன்புத் தந்தை. அதையும் திருமணத்தன்றே குளிரால் நடுங்கிய வறிய முதியவர் ஒருவருக்குத் தானமாகத் தந்துவிட்டார் கருணை வடிவான பாத்திமா (ரலி).

திருமணமான ஒரு பெண் புகுந்த வீட்டில் எப்படி உத்தம மனைவியாக நடந்து கொள்ளவேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்கினார் பாத்திமா (ரலி). வறியவரான தம் கணவரின் வருவாய்க்கேற்ப குடும்பம் நடத்தினார். கணவரின் மனப் போக்கறிந்து செயல்பட்டார். மாவு அரைப்பது, வீடு கூட்டுவது, துணி துவைப்பது, கணவரின் சுவைக்கேற்பச் சமைப்பது ஆகிய பணிகளை மகிழ்வோடு செய்து வந்தார். பிற்காலத்தில் பணிப்பெண் உதவி கிடைத்தபோது கூட, வீட்டுப் பணிகளைப் பகுத்துக்கொண்டு முறையோடு செய்து வந்தார்.

பாத்திமா (ரலி) அவர்கட்கு ஹஸன் (ரலி) ஹுஸைன் (ரலி) ஆகியஇருஆண் மக்கள் பிறந்தனர். அண்ணலார் தம் மகள், மருமகன், பேரப்பிள்ளைகள் மீது அளவிலா அன்பைச் சொரிந்தார். (முஹ்ஸின் என்று ஒரு குழந்தை பிறந்து சிசுவாகஇருக்கும்போது கா[illegible]யிற்று).

இணையற்ற இறைப்பற்றும், இனிய பண்பு நலன்களும், அடக்க உணர்வும், இரக்க உணர்வும், பிறர் நலன் நாடும் பேரன்பும் மிக்கத் தம் மகளைப்பற்றிக் கூறும்போது 'பாத்திமா என் இதயத்தின் பகுதி' எனக் கூறினார் அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்கள்.

தம் தந்தை காலமான துயரைத் தாங்கமுடியாது துடித்தார். அழுது மாய்ந்தார். பலநாட்கள் இரவும் பகலும் அழுது துடித்தார். அந்த அளவுக்குத் தம் தந்தை மீது அன்பும் பாசமும் கொண்டிருந்தார். அதன் விளைவாகத் தந்தை மறைந்த ஆறாவது மாதத்தில் ரமலான் பிறை மூன்றில் பாத்திமா (ரலி)தம் 29வது வயதில் காலமானார். இவரது உடல் மதீனாவில் ஜன்னத்துல் பகீயில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

சொர்க்கம் செல்லும் பெண்களிலேயே மிகச் சிறந்தவர்களாகவும் மேலானவர்களாகவும் நால்வர் இருப்பர்.பாத்திமா, கதீஜா: ஆஸியா, மர்யம் ஆகியோரே அவர்கள். அவர்களுள் தலையாயவராக இருப்பவர் பாத்திமா (ரலி). இவர்களே முதன் முதலாக சொர்க்கத்துள் புகுவர். இவர்களின் பரிந்துரையின் பேரிலேயே மற்றப் பெண்களுக்குச் சொர்க்கப் பெருவாழ்வை இறைவன் அளிப்பான்.

**பாத்திஹா:** இதற்குத் 'தோற்றுவாய்' என்பது பொருளாகும். இது மக்காவில் முதன்முதலாகவும் முழுமையாகவும் இறைவனால் அருளப்பட்ட இறைச்செய்தியாகும். இதுவே முதல் அத்தியாயமாக திருக்குர்ஆனில் அமைந்துள்ளது.

இந்த அத்தியாயத்தில் ஏழு ஆயத்துகள் உள்ளன. இவை திரும்பத்திரும்ப ஓதப்படுபவை என அல்லாஹ் தன் திருமறையில் கூறியுள்ளான். மேலும் இதற்குமுன் வந்த இறைவேதங்களான தௌராத். ஸபூர், இன்ஜீல் ஆகிய வேதங்களில் இத்தகைய அத்தியாயம் அமைந்திருக்கவில்லை. திருக்குர்ஆனில் மட்டுமே அமைந்துள்ளது. எனவே, அனைத்து வேதங்களுக்கும் மேலான தகுதியை திருமறைக்கு இந்த அத்தியாயமே தேடித் தருகிறது. இந்த அத்தியாயத்தைத் திரும்பத்திரும்ப ஓதும் ஒருவர் திருமறை முழுவதையும் ஓதிய பலனைப் பெறுகிறார் என்பது ஆன்றோர் வாக்கு. இதற்குக் காரணம் திருமறையின் சாரம் முழுவதும் இந்த அத்தியாயத்தில் அடங்கியிருப்பதுதான்.

மேலும் இந்த அத்தியாயம் முழுமையும் இறைவனை நோக்கி இறைஞ்சி வேண்டுவதாகவே அமைந்துள்ளது. அத்துடன் அவ்வேண்டுதல்களும் ஒருமையில் அமையாமல் பன்மையிலேயே அமைந்துள்ளன.

''(அருளும் அன்பும் உடைய எங்கள் இறைவனே) 'உன்னையே நாங்கள் வணங்குகிறோம். உன்னிடமே நாங்கள் உதவியும் தேடுகிறோம்.

நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக!''

என்ற வசனங்கள் பன்மையில் அமைந்திருப்பதற்குக் காரணம் இதனை ஓதுபவர் தனியராக இருப்பினும், அப்போது அவருடன் வானவர்களும் ஏனைய முஸ்லிம்களும் இணைந்து இறைஞ்சுவதால் தான் பன்மைச் சொற்களை இதில் இறைவன் அமைத்துள்ளான்.

பொதுவாக எந்த ஒரு செயலையும் துவங்கும் முன்பு பாத்திஹா ஓதித் துவங்குவது நியதியாகும்.

**பாபர்:** முகலாயப் பேரரசை இந்தியாவில் முதன் முதலாக நிலைநிறுத்தியவர் பாபர். இவரது முழுப்பெயர் ஸாஹிருத்தீன் பாபர் என்பதாகும். பாபர் என்ற துருக்கி மொழிச் சொல்லுக்குப் 'புலி' என்பது பொருளாகும். இவர் தந்தை மாவீரர் தைமூர் வழி

வந்தவர். இவர் தாயார் செங்கிஸ்கான் வழித்தோன்றல் ஆவார். 1483ஆம் ஆண்டு பிப்ரவரி 14இல் மத்திய ஆசியாவில் உள்ள பர்கானா எனு மிடத்தில் பிறந்த இவர் இளமையிலே யே நல்ல உடல் வலு வாய்க்கப்பெற்ற வராக இருந்தார். துருக்கி மொழியும், பார்ஸீ மொழியும் நன்கு கற்றறிந்தார். இம்மொழிகளில் கவிதை இயற்று வதைப் பொழுதுபோக்காகக் கொண் டவர்.

இவருடைய பன்னிரண்டாம் வயதில் இவர் தந்தை காலமானார். ஆட்சி யைக் கைப்பற்ற பெரும் கலகம் ஏற்பட் டது. பாபர் ஊரைவிட்டே ஓடினார். தளராது முயன்று மூன்றாண்டுகட்குப் பின் சமர்கந்த்மீது படையெடுத்துக் கைப்பற்றினார். சில ஆண்டுகட்குப் பின் பாபர் எதிரிகளால் அங்கிருந்து விரட்டப்படுவதும் மீண்டும் சமர்கந் தைக் கைப்பற்றுவதுமாகக் கழிந்தது.

இவர் காபூலை 1504இல் கைப்பற்றி னார். அப்போது இவர் இந்தியாவின் மீது படையெடுப்பது பற்றிச் சிந்தித் தார். அப்போது டில்லியை ஆண்ட இப்ராஹீம் லோடி மீது மனக்கசப்புக் கொண்ட அவர் சிறிய தந்தை பாபரை அணுகினார். பாபர் மூலம் லோடியை வஞ்சம் தீர்க்க விரும்பி, அவரை டில்லி மீது படையெடுக்கத் தூண்டினார்.

பாபர் டில்லி மீது படையெடுத்தார். பானிபட் எனுமிடத்தில் போர் நடந் தது. டில்லி சுல்தான் இப்ராஹீம் லோடியின் படை மிகப்பெரியதாக இருந்தது. ஆனால் பாபர் பயன்படுத் திய நவீன படைக்கலனான பீரங்கிமுன் லோடியின் படை எதிர்த்து நிற்க இயல வில்லை. பீரங்கி சத்தம் கேட்ட மிகப் பெரிய யானைப்படை பயத்தால் பிரண்டோடும்போது லோடியின் படையையே மிதித்துக் கொன்றது. இவ்வாறு இறந்தோரின் எண்ணிக்கை இருபதினாயிரமாகும். லோடியும் போரில் மாண்டார். பாபர் டில்லியைக் கைப்பற்றித் தம் முகலாய ஆட்சியை நிறுவினார்.

அதன்பின் ராணா சங்காவின் தலை மையில் பாபர்மீது படையெடுத்து வந்த மிகப் பெரும் படையணிகளைக் கொண்ட ராஜபுத்திரப் படையை ஆக்ராவுக்கு அருகில் கௌனா எனு மிடத்தில் எதிர்த்துப் போரிட்டார். ராஜபுத்திரரின் பெரும்படையைக் கண்டு கலக்கமடைந்த வீரர்களுக்கு பாபர் வீர உணர்வை ஊட்டினார். அல்லாஹ்வின் பாதையில் வீரத் தியா கம் செய்வோம் என்று வீரவுரையாற்றி உற்சாகப்படுத்தினார். இறுதி வெற்றி பாபருக்கே கிடைத்தது. இதன்பின் பீகார், வங்காள நாடுகளையும் பிற சிறு பகுதிகளையும் கைப்பற்றினார். அவரது ஆட்சி காபூல் முதல் வங்காளம் வரை பரவியிருந்தது.

அவர் மகன் ஹுமாயூன் நோயால் படுத்தபடுக்கையாகக் கிடந்தார். இன்னும் இரண்டு நாளில் இறந்து விடு வார் என்ற நிலை. அப்போது இறை வனிடம் இறைஞ்சி, 'என் உயிரை எடுத்துக்கொண்டு, என் மகன் உயிரைக் காப்பாற்று இறைவா!' என வேண்டி மன்றாடினார். இறையருளால் ஹுமா யூன் நோய் நீங்கி உயிர் பிழைத்தார். விரைவிலேயே பாபர் உயிர் நீத்தார். இவரது இறுதி விருப்பப்படி இவர் உடல் காபூலில் நல்லடக்கம் செய்யப் பட்டது.

பாபர் மிகச் சிறந்த வீரராக ஆட்சி யாளராக விளங்கியது போன்றே மிக உயர்ந்த கவிஞராகவும் திகழ்ந்தார். பார்ஸீ மொழியிலும் துருக்கி மொழி யிலும் காதல், போர் பற்றிய கவிதை கள் பலவற்றை இயற்றியுள்ளார்.

துருக்கி மொழியில் 'பாபா நாமா' எனும் பெயரில் தம் வரலாற்றை எழுதியுள்ளார். இது ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

**பார்ஸீ:** இது பாரசீக நாட்டின் மொழியாகும். ஈரானின் மறுபெயரே பாரசீகம். ஈரான் நாட்டில் ஆதியில் பேசப்பட்ட மொழி பஹ்லவி என்பதாகும். நெருப்பை இறைவனாக வணங்கிய ஈரான் மக்களின் வேதமான 'ஜெந்த் அவெஸ்தா' பஹ்லவி மொழியிலேயே உள்ளது.

பாரசீக நாட்டின் ஒரு பகுதி ஃபார்ஸ் என்று அழைக்கப்பட்டது. அப்பகுதி மக்கள் பேசிய மொழி இனிமையாகவும், எளிமையாகவும் இருந்தது. இதைப் பலரும் விரும்பிக் கற்றுப் பேசலாயினர். இம்மொழி அப்பகுதியின் பெயராலேயே 'பார்ஸீ' என அழைக்கப்பட்டது. நாளடைவில் அம்மொழியின் பெயராலேயே ஈரான் நாடு பாரசீகம் என அழைக்கப்படலாயிற்று.

இஸ்லாம் பரவத்தொடங்கியபோது, அதில் முதலாமாவராக இணைந்தவர் ஸல்மான் பார்ஸீ எனும் பாரசீகர் ஆவார். இவர் திருக்குர்ஆனின் சில சிறிய அத்தியாயங்களை பார்ஸீ மொழியில் பெயர்த்தார். இதுவே முதன் முறையாக பார்ஸீ மொழியில் எழுதப்பட்ட முதலாவது இஸ்லாமிய இலக்கியமாகும். இஸ்லாத்தின் தொடர்பினால் அரபி மொழியும் செல்வாக்குப் பெறும் நிலை ஏற்பட்டது. அரபிமொழித் தொடர்பினால் பார்ஸீ மொழி விரைந்து வளரத் தொடங்கியது. புதுவளம் பெற்றது.

தொடக்கத்தில் ஈரானிய இஸ்லாமிய அறிஞர்கள் மார்க்க மொழி என்ற அளவில் அரபிமொழியிலேயே இஸ்லாமிய நூல்களைப் படைக்க முனைந்தனர். பின்னர் இனிய மொழியான பார்ஸீயிலும் இஸ்லாமிய நூல்களை உருவாக்கினர். இமாம் கஸ்ஸாலி (ரஹ்) போன்ற மாமேதைகளின் படைப்புகள் பார்ஸீ மொழியில் வெளியான பின்பு, முஸ்லிம் உலகின் பெருங் கவனம் இம்மொழியின்பால் சென்றது. பல்வேறு வகையான இலக்கியங்கள் எழுதிக் குவிக்கப்பட்டன. அரசர்கள் பார்ஸீ மொழி வளர்ச்சியில் பேரார்வம் காட்டினர்.

பார்ஸீ மொழி வளர்ச்சியில் இந்தியாவுக்கும் பங்கு உண்டு. இந்திய நாட்டை ஆண்ட முஸ்லிம் மன்னர்கள் அரசு மொழியாக பார்ஸீயையே தேர்ந்தெடுத்தனர். அதன் வளர்ச்சிக்கு ஆக்கபூர்வமாக உழைத்தனர். பார்ஸீ மொழிக் கவிஞர்களை ஆதரித்தனர். பார்ஸீ மொழிக் கவிஞர்கள் பேரிலக்கியங்களை உருவாக்கிப் பெரும் புகழ் பெற்றனர். அண்மைக் காலத்தில் மாபெரும் மறுமலர்ச்சிக் கவிஞரான இக்பால் தம் புகழ் பெற்ற படைப்பான 'ஜாவீத் நாமா'வை பார்ஸீ மொழியிலேயே உருவாக்கினார். மற்றும் உமர் கைய்யாம், ஸஃதீ, ஜாமி, மௌலானா ரூமி போன்ற பாரசீகக் கவிஞர்களும் அமீர் குஸ்ரூ, காலிப், இக்பால் போன்ற இந்தியக் கவிஞர்களும் பார்ஸீ மொழி வளர்ச்சிக்குப் பெரும்பங்காற்றியோர் ஆவர்.

தமிழில் உள்ள நாமா இலக்கியங்கள் பார்ஸீ மொழியில் உள்ள நாமா இலக்கிய வடிவத்தை அடியொற்றி எழுதப்பட்டவையாகும்.

**ஃபிக்ஹு:** இச்சொல்லுக்கு அரபியில் 'அறிவு' என்பது பொருளாகும். பொதுவாக 'ஃபிக்ஹு' என்பது இஸ்லாமிய மார்க்க சட்டதிட்டங்களைப் பற்றிய அறிவாகும்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வாழ்ந்த காலத்தில் மார்க்க சம்பந்த மான இஸ்லாமிய வாழ்வியல் தொடர் பான பிரச்சினைகளுக்கு உரிய விளக் கங்களையும், தீர்வுகளையும் கூறி தெளிவு படுத்தினார்கள். அண்ணலா ரின் மறைவுக்குப்பின், பல்வேறு வகை யான புதுப் பிரச்சினைகள் எழலாயின. பெருமானாரோடு மிக நெருக்கமாக இருந்த நபித்தோழர்கள், பெருமானா ரின் சிந்தனை வழியே தீர்வு காண முற் பட்டனர். இத்தீர்வுகளின் தொகுப்பே பிக்ஹு சட்டங்களாக அமைந்தன. பின்னர் நான்கு இமாம்களும், அவர்தம் மாணவர்களும் இத்தகைய மார்க்கத் தீர்ப்புகளைத் திரட்டி பிக்ஹு சட்ட திட்டத் தொகுப்புகளாக்கினர். புதி தாக எழும் மார்க்கப் பிரச்சினைகள் எதுவாயினும் அவற்றிற்கு பிக்ஹுவை அடியொற்றியே தீர்ப்பு உருவாக்கப் படும்.

**பிச்சை இப்ராஹீம் புலவர்:** இஸ்லா மியத் தமிழ்ப் புலவர்களிலேயே இலக் கியத் திறனும் இலக்கண ஆற்றலும் ஒருங்கே பெற்ற பெரும் புலமையாள ராக விளங்கியவர் பிச்சை இப்ராஹீம் புலவர் ஆவார்.

இவர் இளமையில் கல்வியில் ஆர்வ மில்லாதவராக இருந்தார். இவரை வலுக்கட்டாயமாகப் பள்ளிக்கு இவர் பெற்றோர் அனுப்புவது வழக்கம். காலப் போக்கில் இவர் கல்வியில் கருத் தூன்றலானார். தமிழ் இலக்கியமும், இலக்கணமும் இவருக்குப் பேரார்வத் தை ஏற்படுத்தின. பதினாறு வயது நிரம்பும் முன்னரே இவர் பாக்கள் இயற்றுவதில் வல்லவரானார். பதி னெட்டு வயதாகும்போது மற்றவர் களுக்கு இலக்கணம் கற்பிக்க, இலக்கண வகுப்புகளை நடத்த ஆரம்பித்தார். இவரது இலக்கண வகுப்பில் பலர் சேர்ந்து இலக்கணம் கற்றனர். இவர் தம் வழக்கமான கருவாட்டு வியா பாரத்திற்கிடையேயும், இலக்கணப் பள்ளியை பதினைந்து ஆண்டுகள் தொடர்ந்து நடத்தி வந்தார். புதிய கவிதைகளை இயற்றுவதும், பிறர் இயற்றிய பாடல்களைத் திருத்துவதும், இலக்கணம் பற்றி எழும் ஐயப்பாடு களைப் போக்குவதும் சாற்றுக்கவி இயற்றித் தருவதும் இவரது பொழுது போக்காக இருந்தன.

இவரது தமிழ்ப் புலமையை அறிந்த எஸ். பி. ஜி. கல்லூரி நிர்வாகிகள் இவ ரைத் தங்கள் கல்லூரியில் தமிழ்த் துறைப் பேராசிரியராகப் பணியாற்ற அழைத்தனர். அவர்கள் அழைப்பை ஏற்று தம் 38வது வயதில் கல்லூரித் தமிழ்த்துறைப் பேராசிரியர் ஆனார்.

இவரும் அக்காலத்தில் பெரும்புலமை யாளராகவும் நாவலராகவும் விளங்கிய குலாம் காதிறு நாவலரும் இணை பிரியா நண்பர்கள். நாவலரிடம் அவ்வப் போது பிச்சை இப்ராஹீம் புலவர் பாடம் கேட்பதும் உண்டு. நாவலரின் இஸ்லாமியத் தமிழ்ப் படைப்புக்கு, பிச்சை இப்ராஹீம் புலவர் உரை எழுதி யுள்ளார்.

பிச்சை இப்ராஹீம் எண்ணற்ற தமிழ் நூல்களுக்குச் சாற்றுக்கவிகள் வழங்கி யுள்ளார். மூல நூல் படைப்புகளாக வும் பல நூல்களை இயற்றியுள்ளார். அவற்றுள் நாகூர் பிள்ளைத்தமிழ், நாயகத் திருப்புகழ், நத்ஹுரொலி ஆண்டகைப் பிள்ளைத்தமிழ், திரு மதீனத்து மாலை, மஹ்பூப் சுப்ஹானி மாலை, திருமதீனத்துக் கலம்பகம் ஆகிய நூற்கள் குறிப்பிடத்தக்கவை யாகும்.

இசையார்வம் மிக்கவராகவும் இவர் விளங்கினார். இசைப் பாடல்களை இயற்றி அவற்றிற்குத் தக்காரைக் கொண்டு சுரவரிசை அமைத்துப் பாடச்

சொல்லிக் கேட்பதில் பெருவிருப்ப முடையவராக விளங்கினார்.

தமிழ் இலக்கணத்தில் பெரும்புலமை பெற்று விளங்கினார். கம்பரிலிருந்து, அவர் காலப் புலவர்கள் பலரின் இலக்கியப் படைப்புகளில் காணும் இலக்கணப் பிழைகளைத் துணிவாக எடுத்து கூறுவது இவர் இயல்பு. அதனால், துணிவு நிறைந்த அவரது நக்கீர உள்ளத்தைப் பாராட்டும் வகையில் இவரை 'இலக்கணக் கோடரி' என்று அழைத்தனர். இவருக்கு நன்னூல் போன்ற இலக்கண நூல்கள் மட்டுமல்லாது 'தொல்காப்பியம்' முழுமையும் மனப்பாடம். எனவே இவர் 'குட்டித் தொல்காப்பியர்' எனவும் புகழப்பட்டார்.

கருவாட்டு வணிகத்தில் பெருஞ்செல்வராக விளங்கிய இவர் தம் தொழிலை சரிவரக் கவனிக்காததாலும் வறிய புலவர்களுக்கு வாரி வழங்கியதாலும் ஏழ்மை நிலை பெற்றார்: 1908ஆம் ஆண்டில் தம் 45வது வயதில் மறைந்தார்.

**ஃபிர்தௌஸி:** பாரசீக நாட்டின் மாபெரும் கவிஞர் ஃபிர்தௌஸி ஆவார். 'ஃபிர்தௌஸ்' என்ற அரபுச் சொல்லுக்கு 'சொர்க்கப் பூங்கா' என்பது பொருளாகும். அதன் அடிப்படையில் அமைந்ததே 'ஃபிர்தௌஸி' எனும் பெயர். இவரது இயற்பெயர் அபுல் காசிம் ஹஸன் இப்னு இஸ்ஹாக் இப்னு ஷரப் என்பதாகும். இவர் 935-ஆம் ஆண்டு பாரசீக நாட்டில் பாஸ் எனும் ஊரில் பிறந்தார். தந்தையார் பெயர் ஃபக்ருத்தீன் அலி அஹமது என்பதாகும்.

இளமை முதலே பார்ஸீ மொழியில் கவிபுனைந்து பாடுவதில் ஆர்வமும் திறமையும் மிக்கவராக இருந்தார். ஒரு சமயம் இவரது பாடலைக் கேட்டு மகிழ்ந்த சுல்தான் மஹ்மூது கஸ்னவீ இவரது பாடல் ஃபிர்தௌஸின் (சொர்க்கப் பூங்கா) பேரழகையும் பேரின்பத்தையும் கொண்டிருப்பதாகப் புகழ்ந்துரைத்தார். ஃபிர்தௌஸ் எனும் பாராட்டுச் சொல்லே இவரது புனை பெயராக ஆயிற்று.

மறைந்த பாரசீக மன்னர்களின் வாழ்வை அடிப்படையாகக் கொண்டு நாமா இலக்கியங்கள் படைப்பது அக்கால வழக்கம். அத்தகைய நாமா இலக்கியம் ஒன்றை ஷா நாமா எனும் பெயரில் படைக்கப் பணித்தார். அதற்காக ஒரு கண்ணிக்கு ஒரு பொற்காசு வீதம் அளிக்கப்படும் என மஹ்மூது கஸ்னவீ கூறினார். பத்தாயிரம் கண்ணிகள் பாடி முடித்தவுடன் பத்தாயிரம் பொற்காசுகளை வாங்கிக் கொள்ளலாம் எனக் கூறியிருந்தார். ஆனால் ஷா நாமா முழுவதையும் பாடி முடித்தபின் முழுத்தொகையைப் பெற்றுக் கொள்வதாகக் கூறி எழுதத் தொடங்கினார். தொடர்ந்து முப்பத்தெட்டு ஆண்டுகள் உழைத்து அறுபதினாயிரம் கண்ணிகளைக் கொண்ட ஷா நாமாவைப் பாடி முடித்தார்.

ஃபிர்தௌஸி இம் மாபெரும் பணியைச் செய்து முடித்ததை அறிந்த பிற புலவர்கள் இவர் மீது பொறாமை கொண்டனர். இதனால் மன்னர் மனதைக் கெடுத்து பொற்காசுகளுக்குப் பதிலாக வெள்ளிக் காசுகளைப் பரிசாக வழங்குமாறு செய்தனர். சுல்தான் அளித்த அறுபதினாயிரம் வெள்ளிக் காசுகளை பெரும் வெறுப்புடன் பெற்று அங்கிருந்தவர்கட்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு மன்னர் மீது வசை பாடிவிட்டு வெளியேறினார்.

நீண்ட நாட்களுக்குப்பின் மஹ்மூது கஸ்னவி இந்தியாவின்மீது படையெடுத்தார். தம் அமைச்சரோடு அவர் உரையாடிக்கொண்டிருந்தபோது அமைச்சர் பேச்சினூடே ஒரு பாடலைக் கூறினார். அதன் சொற்சுவையிலும், பொருட்சுவையிலும் மனதைப் பறிகொடுத்தார் சுல்தான். அப்பாடல் ஃபிர்தௌஸி இயற்றியது என்பதை அறிந்து பெரு மகிழ்வு கொண்டார். ஃபிர்தௌஸி முப்பத்தெட்டு ஆண்டுகள் உழைத்து ஷா நாமா எழுதியும் அதன் பயனைப் பெற முடியாது போன துயரத்தைச் சுல்தானிடம் அமைச்சர் வெளிப்படுத்தினார். இதைக்கண்டு மனம் வருந்திய சுல்தான் மஹ்மூது கஸ்னவி, கஸ்னா திரும்பியதும் அவருக்குத் தாம் வாக்களித்தபடி அறுபதினாயிரம் பொற்காசுகளை வழங்க விரும்புவதாக அமைச்சரிடம் கூறினார். அவ்வாறே ஊர் திரும்பியவுடன் பொற்காசுகளையும் அனுப்பினார். அப்பரிசு அவர் இருப்பிடத்தை அடைந்தபோது ஃபிர்தௌஸியின் நல்லுடல் அடக்கவிடத்தை நோக்கிப் பயணம் சென்று கொண்டிருந்தது.

ஃபிர்தௌஸி ஷா நாமாவுக்கு அடுத்தபடியாக 'யூசுப் சுலைகா' எனும் அரிய இலக்கியத்தைப் பார்ஸீ மொழியில் படைத்துப் புகழ்பெற்றார்.

**பிலால் (ரலி):** இஸ்லாத்தில் தொழுகைக்காக முதன் முதலாக பாங்கு எனும் அதான் கூறிய பெருமைக்குரியவர் பிலால் (ரலி).

இவர் இஸ்லாத்தில் இணைவதற்கு முன் குறைஷி ஒருவரிடம் அடிமையாக இருந்தார். இவர் அபிசீனியா நாட்டிலிருந்து அடிமையாக வாங்கி மக்காவுக்குக் கொண்டு வரப்பட்டவர்.

இஸ்லாத்தின் ஓரிறை வணக்கமுறைகளை அறிந்து, அதன்பால் ஈர்க்கப்பட்டு முஸ்லிம் ஆனார். இவர் முஸ்லிமாகி நபி வழி நடப்பதை விரும்பாத இவர் எசமானர் இவருக்குச் சொல்லொணாத் துன்பங்களைத் தந்தார். சுடுமணலில் கிடத்தி மார்பில் பாராங்கல்லை வைத்தார். அப்போதும் இவர் சிறிதும் மனம் தளராது 'அல்லாஹ்' ஒருவனே! 'அல்லாஹ் ஒருவனே' என முழங்கிக் கொண்டிருந்தார். இதையறிந்த அபூபக்ர் (ரலி) இவரை விலை கொடுத்து வாங்கி விடுதலை செய்தார். அன்று முதல் பெருமானாரின் நிழலாக வாழ்ந்தார். அடிமையாயிருந்து இஸ்லாத்தில் இணைந்தவர்களில் இவரே முதன்மையானவர்.

மதீனாவில் முதல் முறையாகத் தொழுகைக்கென பள்ளிவாசல் உருவாக்கப்பட்டது. அப்போது யாரைக் கொண்டு முதன் முறையாக தொழுகை அழைப்பாகப் பாங்கு சொல்வது என்ற பிரச்சினை எழுந்தது. பெருமானார் (ஸல்) பிலாலைப் பாங்கு சொல்லுமாறு பணித்தார். இவ்வாறு இஸ்லாத்தின் முதல் முஅத்தினாக பிலால் (ரலி) நியமிக்கப்பட்டார். அபிசீனிய நாட்டின் முதல் முஸ்லிமும் இவரே யாவார்.

இவரது இனிய குரல் பாங்கின் சிறப்பை உயர்த்துவதாக இருந்தது. இவரது கணீரென்ற கம்பீரமான குரல் அர்ஷு வரை கேட்பதாக ஜிப்ரீல் (அலை) ஒரு சமயம் கூறினார்.

பெருமானார் பங்கேற்ற போர்களிலெல்லாம் இவர் கலந்து கொண்டுள்ளார். வீரத்தோடு போரிட்டுள்ளார். உமர் (ரலி) இவரை ஸையதுனா (எஜமானே) என அடைமொழியிட்டு அழைப்பது வழக்கம்.

பெருமானார் மறைந்தபின் இவர் மதீனாவில் இருக்கப் பிடிக்காமல் சிரியா சென்று தங்கினார். இதன்பின் இவர்

பாங்கு சொல்வதில்லை. இதற்குப் பின் இவர் தவிர்க்க முடியா நிலையில் இருமுறை மட்டுமே பாங்கு சொல்லியுள்ளார். ஒரு சமயம் உமர் (ரலி) ஜெரூசலம் வந்திருந்தபோது அவரின் வேண்டுகோளுக்கிணங்க ளுஹர் தொழுகைக்குப் பாங்கு சொன்னார். மற்றொரு சமயம் மதீனா வந்திருந்தபோது அண்ணலாரின் பேரரர்கள் ஹஸன் (ரலி), ஹுஸைன் (ரலி) வேண்டுகோளுக்கிணங்க பஜ்ர் தொழுகைக்கு பாங்கு சொன்னார். அதன்பின் அவர்கள் மறைவுவரை பாங்கு சொல்லவே இல்லை.

பின்னர் திமிஷ்க் சென்று வாழ்ந்த பிலால் (ரலி) ஹிஜ்ரி 20ஆம் ஆண்டில் காலமானார். அவரது உடல் அங்குள்ள பாபுஸ் ஸகீரு கோட்டை வாயிலருகே நல்லடக்கம் செய்யப்பட்டது. இன்று வரை நினைவுக் கட்டிடம் ஏதுமின்றி தரையாகவே உள்ளது. அடையாளத்துக்கென அதன்மீது துணி போர்த்தப் பட்டுள்ளது.

**பீர்முஹம்மது அப்பா:** இஸ்லாமியத் தமிழ் மெய்ஞ்ஞான சூஃபிக் கவிஞர்களிலே தலையாயவராக விளங்குபவர் பீர்முஹம்மது அப்பா அவர்களாவார். இவர் தென்காசியில் பிறந்தார். தந்தையார் பெயர் சிறு மலுக்கர் என்பதாகும். இவரை சதக்கத்துல்லா அப்பா சந்தித்த குறிப்பிலிருந்து இவர்கள் இருவரும் ஒரே காலத்தில் வாழ்ந்ததாகத் தெரிகிறது.

இவர் மலையாளக் காடுகளில் சுமார் 95 ஆண்டுக்காலம் தவமிருந்ததாகக் கூறப்படுகிறது. பின் 15 ஆண்டுக்காலம் யானை மலையில் கடுந்தவம் செய்ததாகவும் கூறப்படுகிறது. இன்று அங்குள்ள ஒரு மேட்டுப்பகுதி 'பீர்மேடு' என்ற பெயராலேயே அழைக்கப்படுகிறது. திருவாங்கூர் மன்னர் இவர் பெருமையை உணர்ந்து இவரை உபசரித்ததாகக் குறிப்புகள் உள்ளன.

தவ வாழ்வை விடுத்து திருமணம் செய்துகொண்டு தக்கலையில் வாழ்ந்து வந்தார். அப்போது அவர் நெசவுத் தொழில் செய்து வருமானம் தேடி வாழ்ந்தார். அப்போதுதான் சதக்கத்துல்லா அப்பா அவர்கள், இவரை நேரில் கண்டு இவரின் பெருமையை அறிந்து சென்றார். இவர் உடல் தக்கலையில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது. இவரது அடக்கவிடத்தைச் சுற்றி நினைவிடமாக தர்கா ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது. அங்கு இவரது மறைவு நாளான ரஜப் 14இல் உர்ஸ் விழாவாக நடத்தப்படுகிறது. அப்போது இரவு முழுவதும் இவரது அடக்கவிடத்தைச் சுற்றி அமர்ந்து இவர் இயற்றிய ஞானப்புகழ்ச்சி நூலை சந்த இசையோடு பாடுகின்றனர். இது வேறெங்கும் காணாத சிறப்பு நிகழ்ச்சியாகும்.

இவர்கள் சுமார் பதினெட்டாயிரம் மெய்ஞ்ஞானப் பாடல்களை எழுதியுள்ளார். அவற்றுள் திருநெறி நீதம், மஃரிபத்து மாலை, பிஸ்மில் குறம், ஞானப் புகழ்ச்சி, சர நூல், ஞான ரத்தினக் குறவஞ்சி ஆகியன குறிப்பிடத்தக்கனவாகும். இவர்களின் பாடல்கள் சிலவற்றுக்கு செவ்வல் மாநகரத்தைச் சேர்ந்த நெய்னார் முஹம்மதுப் புலவர் என்பவர் உரை எழுதியுள்ளார். இவரது மெய்ஞ்ஞானப் பாடல்களைப் பற்றிய ஆய்வுக் கருத்தரங்குகள் நடந்துள்ளன. ஆய்வுத் தொகுப்புகளும் வெளிவந்துள்ளன.

**பைத்துல் மால்:** மக்களின் நன்மைக்கென மக்களிடமிருந்து திரட்டப்படும் பொதுப்பணம் அல்லது பொருள் சேமிப்பு 'பைத்துல் மால்' என அழைக்கப்படுகிறது.

இஸ்லாமிய வரலாற்றில் இத்தகைய பைத்துல் மாலை உருவாக்கிச் செயல்

படுத்தியவர் அபூபக்ர் (ரலி) ஆவார். இதன் பொருள் முழுமையும் மக்களிட மிருந்தே திரட்டப்படும். மக்களின் நன்மைக்கென்றே செலவிடப்படும். இஸ்லாமியர் ஆட்சியில் பல வழிகளில் பைத்துல் மால் பொருள் திரட்டப்பட்டது. ஏழை வரியான ஜகாத் தொகை, போர்களில் கைப்பற்றும் பொருள்களில் ஐந்தில் ஒரு பங்கு, புதையலில் கிடைக்கும் பொருள்கள், வாரிசுரிமை இல்லாப் பொருள்கள், முஸ்லிம் அல்லாதாருக்கு விதிக்கப்படும் ஜிஸ்யா எனும் சிறப்பு வரி ஆகியவை பைத்துல் மாலில் சேர்க்கப்படும்.

பைத்துல் மால் பணத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு ஆட்சித் தலைவர் அல்லது பைத்துல் மால் குழுத் தலைவருடையதாகும். இதில் அவருக்கென நிர்ணயிக்கப்படும் தொகை மட்டுமே ஊதியமாக எடுக்கமுடியும். அதற்கு மேல் எக்காரணம் கொண்டும் பைத்துல் மால் பணத்தைக் கையாள உரிமை இல்லை.

பைத்துல் மால் பணம் பொதுமக்கள் நன்மைக்காக மட்டுமே செலவு செய்யப்படும். இதனை யாருக்குச் செலவு செய்ய வேண்டும், எப்படிச் செலவு செய்ய வேண்டும் என்பதற்கான விதிமுறைகள் கண்டிப்புடன் கையாளப்படும்.

வறுமை வாய்ப்பட்ட ஏழை எளியவர்கள் உழைத்துப் பொருளீட்ட இயலாத பார்வையற்றோர் போன்ற உடல் ஊனமுற்றவர்கள் கடுமையான நோயால் நீண்ட நாட்களாகத் துன்புறும் நோயாளிகள் பைத்துல் மால் பொருளைப் பெற முதல் உரிமை பெற்றவர்கள் ஆவர். நாட்டின் நலனுக்காகவும் மக்களின் நலனுக்காகவும் உழைக்கும் உழைப்பாளிகள், அறிஞர்கள் எவ்விதப் பிரதி பலனையும் எதிர்பாராது மக்களுக்கு இறைமறையை ஓதிக்கொடுக்கும் உஸ்தாதுகள், இமாம்கள், முஅத்தின்கள், மார்க்கக் கல்விகற்க எவ்வித வசதியுமில்லாத ஏழை மாணவர்கள் ஆகியோர் பைத்துல் மால் உதவி பெறத் தகுதிப் படைத்தவர்களாவர்.

நீதியை நிலைநாட்ட பிரதிபலன் பாராது வாதிடும் வழக்கறிஞர்கள், மக்களின் பிணித்துயர் போக்க உழைக்கும் மருத்துவர்களும் பைத்துல் மால் உதவிபெற அருகதை உள்ளவராவர்.

நாட்டின் பொது வருமானம் பெருகவும், உணவு உற்பத்தி அதிகரிக்கவும் உழைக்கும் விவசாயிகளும் மக்களின் பொருளாதார உயர்வுக்குத் திட்டமிட்டுச் செயலாற்றும் வணிகர்கள் ஆகியோர் பைத்துல் மாலிலிருந்து கடன் பெறத் தகுதியுள்ளோர் ஆவர்.

இப்போது பைத்துல் மால்கள் நாட்டு அளவிலும் நகர அளவிலும் ஊர் அளவிலும் கூட அமைக்கப்பட்டு செயல்படுத்தப்படுகின்றன.

**பைத்துல் முகத்தஸ்:** 'புனித இல்லம்' எனும் பொருளில் பைத்துல் முகத்தஸ் எனும் பெயர் அமைந்துள்ளது. ஜெரூசலம் நகரில் அமைந்துள்ள பைத்துல் முகத்தஸை சுலைமான் (அலை அவர்கள் கட்டிமுடித்தார்கள் இதற்கு ஹீப்ரு மொழியில் 'பெத் ஹம்மிக்தஸ்' என்று பெயர். இதுவே பின்னர் அரபி மொழியில் 'பைத்துல் முகத்தஸ்' என மருவி அழைக்கப்படலாயிற்று.

நபிமார்களின் தாயகம் என அழைக்கும் வண்ணம் பெருமை பெற்றது இப் புனிதத் தலம். தாவூது (அலை) அவர்களும், சுலைமான் (அலை) அவர்களும் ஆட்சி செய்த புனித பூமி இது. ஜக்கரிய்யா (அலை), யஹ்யா (அலை), ஈஸா (அலை) ஆகியவர்கள் வாழ்ந்து

இறையருள் பெற்ற இடம். இங்குதான் இப்ராஹீம் (அலை), இஸ்ஹாக்(அலை) தாவூது (அலை), சுலைமான் (அலை), மர்யம் நாச்சியார் ஆகியோரின் நல்லுடல்கள் அடக்கப்பட்டுள்ளன. இறுதி நாளின் தீர்ப்புக்கான மஹ்ஷர் பெருவெளி இங்கேதான் அமையும் எனக் கூறப்படுகிறது.

மிஃறாஜ் அன்று மஸ்ஜிதுல் ஹரமிலிருந்து இங்குள்ள மஸ்ஜிதுல் அக்ஸாவுக்கு அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கொண்டு வரப்பட்டு, பின் விண்ணுலகு அழைத்துச் செல்லப்பட்டார்கள். மஸ்ஜிதுல் அக்ஸா என்பது பைத்துல் முகத்தஸே ஆகும்.

இங்குள்ள மஸ்ஜிதுல் அக்ஸா எனும் பைத்துல் முகத்தஸ் பள்ளி முஸ்லிம்களுக்கும், மாதாகோயில் கிருஸ்தவர்களுக்கும், இங்குள்ள 'அழுகைச் சுவர்' யூதர்களுக்கும் புனித இடங்களாக அமைந்துள்ளன.

**மக்கா:** இஸ்லாத்தின் மிகப்பெரும் புனித நகராக அமைந்திருப்பது மக்காவாகும். இது அரேபியா நாட்டில் ஹிஜாஸ் மாநிலத்தில் அமைந்துள்ளது. மக்கா என்ற சொல் 'மிக்ராஃப்' என்ற சொல்லின் திரிபு ஆகும். இதன் பொருள் 'தொழுமிடம்' என்பதாகும்.

இறை ஆணைப்படி ஆதி மனிதர் ஆதம் அவர்கள் வல்ல அல்லாஹ்வை வணங்க முதல் வணக்கத்தலம் இங்கேதான் அமைந்திருந்தது. அதுவே கஃபத்துல்லா எனும் இறையில்லம்,

அல்லாஹ்வின் கட்டளைக்கிணங்க இப்ராஹீம் (அலை), தம் மனைவி ஹாஜராவையும், தம் சின்னஞ்சிறு பாலகன் இஸ்மாயீலையும் இங்குதான் கொண்டுவந்து விட்டுச் சென்றார். அதன் பின்னரே இங்கு மக்கள் குடியேற மக்கா நகர் உருவாயிற்று. இங்குதான் இறையருளால் பொங்கிய ஜம்ஜம் கிணறு உள்ளது.

கஃபாவை மீண்டும் புனரமைத்தவர் இப்ராஹீம் (அலை) ஆவார். மக்கள் இங்கு வந்து ஹஜ் கடமையை நிறைவேற்ற வேண்டும் என்ற இறைவனின் ஏவலை எடுத்துரைத்தார். இதன் பிறகு ஹஜ் கடமையை நிறைவேற்ற மக்கள் நாலா திக்கிலிருந்தும் இங்கே வந்து செல்லலாயினர். மக்கா நகர் மேலும் வளர்ந்து வளமடைந்தது. மக்கள் போற்றும் புனித நகரமாக ஹரமாக உருவாகியது.

பண்டையக் காலத்தில் மக்கா நகர் வணிகக் கேந்திரமாகவும் விளங்கியது. வணிகர்கள் எத்திக்கை நோக்கிச் சென்றாலும் இந்நகர் வந்தே செல்வது வழக்கம். இவ்வாறு நகருள் வரும் வணிகர்களிடம் நுழைவுக்கட்டணமும் வசூலிக்கப்பட்டது. மக்கா செல்வச் செழிப்புள்ள நகரமாக விளங்கியது. இங்குக் குறைஷி இன மக்களே பெரும்பான்மையினராக இருந்தனர். இதனால் மக்கா நகரம் அவர்களின் ஆளுகையின் கீழ் இருந்துவந்தது.

அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவில்தான் பிறந்து வளர்ந்தார்கள். நபித்துவம் பெற்ற பிறகு சில ஆண்டுகள் மக்காவில் இருந்து கொண்டு இரகசியமாக இஸ்லாமியப் பிரச்சாரம் செய்து வந்தார்கள். இக்காலத்தில் குறைஷிக் காபிர்களால் பெருந்துன்ப துயரங்களுக்கு ஆளானார்கள். அவர்களிடமிருந்து தப்ப அபூபக்ர் (ரலி) அவர்களுடன் மக்காவிட்டு மதீனா சென்றார்.

பின், எட்டாண்டுகள் கழித்து மாநபி மக்காவை வெற்றி கொண்டார். அப்போது அவர் மக்களை நோக்கி 'வானங்களையும் பூமியையும் படைத்த வல்ல அல்லாஹ் மக்கா மாநகரை

மாண்புடைய நகரமாக ஆக்கியுள்ளான். இறுதிவரை இந்நகர் அவ்வாறே தான் இருக்கும். இங்குள்ள புல்பூண்டுகளை யாரும் பிடுங்கவோ மரங்களை வெட்டவோ பிராணிகளை வேட்டையாடவோ இரத்தம் சிந்தவோ கூடாது' எனக் கூறினார். அன்றிலிருந்து இம்முறையே இங்குக் கடைப்பிடித்து வரப்படுகிறது.

இன்று உலகின் அனைத்துப் பகுதியிலிருந்தும் இருபத்தியைந்து இலட்சத்திற்கு மேற்பட்ட முஸ்லிம்கள் ஹஜ் புனிதப் பயணம் மேற்கொண்டு மக்க மாநகரம் வருகின்றனர்.

இன்று மக்கா மாநகரம் சவூதி மன்னரின் ஆளுகையின் கீழும் பராமரிப்பிலும் இருந்து வருகிறது.

**மத்ரஸா:** கல்வி கற்பிக்கப்படும் இடம் மத்ரஸா ஆகும். பள்ளிக்கூடத்தைக் குறிக்கும் பொதுச் சொல்லாக இருப்பினும், இஃது குறிப்பாக இஸ்லாமிய மார்க்கக் கல்வி பெறும் இடத்தையே குறிப்பதாகும்.

தொடக்கத்தில் மார்க்கக் கல்வி போதிக்கும் இடங்களாகப் பள்ளிவாசல்களே அமைந்திருந்தன. மதீனாவில் பள்ளிவாசல் உருவானவுடன் அங்கிருந்தபடியே நபிகள் நாயகம் (ஸல்) இறைச் செய்திகளுக்கு விளக்கம் தந்து வந்தார். அவர்களின் போதனையைக் கேட்டு மூன்று முறை திரும்பச் சொல்லி மனனம் செய்து கொள்வது வழக்கம்.

நாளடைவில் குர்ஆன் விளக்கம் தருவதற்கெனத் தம் தோழர்களில் சிலரை வெவ்வேறு கூட்டத்தினரிடம் அனுப்பி வைத்தார். நபித்தோழர்களும் இக்கூட்டத்தினரை பள்ளிவாசலுக்கு அழைத்தே மார்க்க போதனை செய்தார். காலப்போக்கில் இப்போதனைகளில் திருக்குர்ஆன் விளக்கங்கள், இஸ்லாமிய சட்டத்திட்டங்கள் மட்டுமல்லாது வேறு பல கலைகளைப் பற்றிய விளக்கவுரைகளும் இடம் பெற்றன. இதன் விளைவாக இஸ்லாத்தையும், இதர வாழ்வியல் கலைகளையும் துறைகளையும் விளக்கவும் போதிக்கவும் தனி மத்ரஸாக்கள் அமைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவ்வகையில் ஹிஜ்ரி 361இல் கெய்ரோவில் உருவான தனி மத்ரஸாதான் புகழ் பெற்ற 'அல் அஸ்ஹர்'. அவ்வாறே ஹிஜ்ரி 449இல் பக்தாதில் நிறுவப்பட்டதே மத்ரஸா நிஜாமிய்யா. இதே போன்று வேறு பல மத்ரஸாக்களும் மத்திய கிழக்கு நாடுகளில் உருவாக்கப்பட்டன.

இத்தகைய மத்ரஸாக்கள் சிறிதும் பெரிதுமாக நூற்றுக்கணக்கில் உருவாக மன்னர்களும், நிலப்பிரபுக்களான அமீர்களும், சமுதாய நலன்நாடும் வணிகர்களும், செல்வந்தர்களும், அறிஞர்களும் பெருமுயற்சி மேற்கொண்டார்கள். இத்துறையில் பெண்களும் பெரும் அக்கறை காட்டினர்.

இன்று உலகெங்கும் இலட்சக்கணக்கான மத்ரஸாக்கள் மார்க்கக் கல்வி புகட்டி வருகின்றன. பள்ளிவாசல் உள்ள ஊர்களிலெல்லாம் மத்ரஸாக்களும் உருவாக முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. பல மத்ரஸாக்களில் இலவச உணவும் உடையும் உறையுளும் அளிக்கப்படுகின்றன.

அரபு நாடுகளைப் போன்றே இந்தியாவில் உள்ள தேவ்பந்த், லக்னோ மத்ரஸாக்கள் புகழ் பெற்றவையாகும். தமிழகத்தில் வேலூரில் உள்ள மத்ரஸா பாக்கியத்துஸ் ஸாலிஹாத், சென்னையிலுள்ள மத்ரஸா ஜமாலியா, உம்ராபாதிலுள்ள ஜாமியா தாருஸ்ஸலாம் போன்றவை குறிப்பிடத்தக்க மத்ரஸாக்கள் ஆகும். தமிழகத்தில் ஐம்பதுக்கு மேற்பட்ட பெரிய மத்ரஸாக்கள் உண்டு. சிறிய மத்ரஸாக்களுக்கு

கணக்கில்லை. சில மத்ரஸாக்களில் பொதுவான மார்க்கக் கல்வியும், சில வற்றில் குறிப்பிட்ட வகை மார்க்கக் கல்வியும் போதிக்கப்படுகின்றன.

இவற்றைத் தவிர 'மத்ரஸதுன் நிஸ்வான்' என்ற பெயரில் பெண்களுக் கென்றே பல மத்ரஸாக்கள் நடை பெற்று வருகின்றன.

**மத்ஹப்:** 'மத்ஹப்' என்ற அரபிச் சொல்லுக்கு 'வழி' என்பது பொருளா கும். இஸ்லாமியத் திருமறையான திருக்குர்ஆன் இறைவனால் மனித குலத்துக்கு வழங்கிய இறைச் சட்ட மாகும். இச்சட்டத்துக்கு நடைமுறை வாழ்வியலுக்கான விளக்கங்களாக அமைந்தவை பெருமானாரின் வாழ் வையும் வாக்கையும் ஆதாரமாகக் கொண்ட ஹதீஸ்கள். திருக்குர்ஆனை யும் ஹதீஸையும் ஆதாரமாகக் கொண்டு வகுக்கப்பட்ட இஸ்லாமியச் சட்ட திட்டங்களே 'பிக்ஹு' சட்டங் கள். இதனை வகுத்துத் தொகுத்தவர் கள் எண்மர் ஆவர். அவர்கள் பிக்ஹு சட்ட அடிப்படையில் சிறுசிறு வேறு பாடுகளோடு கூடிய எட்டு மத்ஹபு களை உருவாக்கினர். இவற்றுள் நான்கு மத்ஹபுகள் அதாவது வாழ்வியல் வழி முறைகள் உலக முஸ்லிம்களால் பின் பற்றப்பட்டு வருகின்றன. அவை யாவன: ஹனஃபி, ஷாஃபி, மாலிக், ஹன்பலி ஆகியனவாகும். நான்கு இமாம்களின் பெயராலேயே இந்த மத்ஹபுகள் அமைந்தள்ளன. அவை:

1. ஹனஃபி மத்ஹப்: இந்த மத்ஹபை அபூ யூசுப் முஹம்மது ஆகியோரின் துணையுடன் இமாமுல் அஃலம் அபூ ஹனீஃபா (ரஹ்) வகுத்தமைத்தார். இந்த மத்ஹபைச் சார்ந்த முஸ்லிம் களே இன்று உலகில் பெரும்பாலோ ராக வாழ்கின்றனர்: இம்மத்ஹபைச் சார்ந்தோரின் உலக எண்ணிக்கை சுமார் ஐம்பது கோடியாகும். இவர்கள் இந்தியா, துருக்கி, பாகிஸ்தான், அப் கானிஸ்தான், ஜோர்டான் போன்ற நாடுகளில் வாழ்கின்றனர்.

2. ஷாஃபி மத்ஹப்: ஹனஃபி மத் புக்கு அடுத்தபடியாக முஸ்லிம்கள் பின் பற்றும் மத்ஹப் இதுவாகும். சுமார் முப்பது கோடிப்பேர் இதனைப் பேணி நடக்கின்றனர். இவர்களில் பெரும் எண்ணிக்கையினர் பலஸ்தீனம், எகிப்து, லெபனான், ஈராக், சவூதி அரேபியா, யமன், இலங்கை மற்றும் இந்தியாவின் மலையாளக் கடற்கரை களிலும் தமிழ்நாட்டின் கிழக்குக் கடற் கரைகளிலும் வாழ்கின்றனர்.

3. மாலிக் மத்ஹப்: இம் மத்ஹப் இமாம் மாலிக் இப்னு அனஸ் (ரஹ்) அவர் களால் ஏற்படுத்தப்பட்டது. இந்த மத் பை சூடான், துனீஸ், மொராக் கோ, அல்ஜீரியா, பஹ்ரைன் ஆகிய நாடுகளைச் சேர்ந்த சுமார் பத்துக் கோடி முஸ்லிம்கள் பின்பற்றுகின்றனர்.

4. ஹன்பலி மத்ஹப்: ன்பலி மத்ஹபு உலகில் முந்தைய மூன்று மத்ஹபு களைக் காட்டிலும் குறைவானவர் களால் பின்பற்றப்படுகிறது இம் மத்ஹபை உருவாக்கியவர் இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்) ஆவார். லெபனான், சிரியா, சவூதி அரேபியாவின் சில பகுதிகளில் வாழும் ஒரு கோடிப் பேர் இம்மத்ஹபைப் பின் பற்றுகின்றனர்.

நான்கு இமாம்களும் அறிவாற்றல் மிக்கவர்கள். அவர்கள் தத்தம் சிந்த னைத் திறனுக்கேற்ப நான்கு மத்ஹபு களை உருவாக்கி உள்ளனர். இந்நான்கு மத்ஹபுக்களுக்கிடையே சிறுசிறு வேறு பாடுகளே உள்ளன. இஸ்லாமிய அடிப் படைக்கொள்கை, கோட்பாடுகளில் எவ்வித மாற்றமும் இல்லை. இஸ்லா

மியச் சட்டங்களில் மட்டுமே சிறுசிறு மாற்றங்கள் உண்டு. அவையும் நேர் வழிகளைக் காட்டுவனவே. இந்நான்கு மத்ஹபுகளும் இஸ்லாம் எனும் கொடி மரமானது நான்கு புறமும் கயிற்றால் இறுகப் பிணைத்திருப்பதற் கொப்பா கும்.

மற்றும் ஸுப்யானுத் தௌரீ (ரஹ்), தாவூத் ஸாஹிரீ (ரஹ்), தபரீ (ரஹ்), அவ்ஸாயீ (ரஹ்), ஹஸனுல் பஸரீ போன்றோரும் தனித்தனி மத்ஹபு களை உருவாக்கியிருந்தனர். இவை காலப்போக்கில் நிலைபெறாமல் மறைந்து போயின.

**மதீனா:** மதீனா என்பதற்கு 'மாநகர் அல்லது பட்டணம்' என்பது பொருளா கும். இந்நகரின் பழைய பெயர் 'யத்ரிப்' என்பதாகும். பெருமானார் (ஸல்) மக்காவை விட்டு மதீனா வந்து தங்கியபின், இந்நகரை மக்கள் 'மதீனத் துந் நபி' என அழைக்கலாயினர். இதற்கு 'நபியின் மாநகர்' என்பது பொருளாகும். நாளடைவில் இப் பெயர் சுருங்கி மதீனா என ஆயிற்று.

அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) இந் நகரில் வாழ்ந்து மறைந்ததால் இஸ்லா மியப் புனித நகராகப் போற்றப்படு கிறது. பெருமானார் உருவாக்கிய மஸ்ஜிதுந் நபவீயும் அவரது அடக்க விடமான ரௌலா ஷரீஃபும் இங்குள்ள மையால் உலக முஸ்லிம்கள் ஹஜ்ஜின் போது மட்டுமல்லாது மற்றையக் காலங்களிலும் ஜியாரத் செய்ய இங்கு வந்து செல்கின்றனர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் குடும்பத்தைச் சார்ந்த சிலரும் ஸஹா பாக்களில் பலரும் இங்குள்ள ஜன்னத் துல் பகீயிலேயே அடக்கம் செய்யப்பட் டுள்ளனர். இந்நகரில் இறப்போரே இறுதித் தீர்ப்பு நாளின்போது முதலில் எழுப்பப்படுவர்.

சவூதி அரேபியாவின் முக்கிய நகர் களில் ஒன்றான மதீனாவில் இரண்டு இலட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் வாழ்கின்றனர். இங்கு ஒரு இஸ்லா மியப் பல்கலைக்கழகம் உள்ளது. இதில் உலகெங்கணுமிருந்து முஸ்லிம் மாண வர்கள் வந்து பயின்று செல்கின்றனர்.

**மலக்கு:** மலக்கு எனும் சொல்லுக்கு 'வானவர்' என்பது பொருளாகும். மலக்குகளை ஒளியைக் கொண்டு இறைவன் படைத்துள்ளான். மலக்கு கள் ஆணுமில்லை; பெண்ணுமில்லை; அலியுமில்லை. எனினும் இவர்கள் ஆண்பால் விகுதியைக் கொண்டே அழைக்கப்படுகின்றனர்.

இறைவனின் கட்டளைகளை நிறை வேற்றுவதும் அல்லாஹ்வை வணங்குவ துமே இவர்களின் வேலை. இவர்களை இறைவன் பன்னிரண்டு வகையினராகப் பிரித்துள்ளான். ஒவ்வொருவருக்கும் உரிய பணிகளை அல்லாஹ் தனித் தனியே விதித்துள்ளான். அதன்படியே அவர்கள் பணிசெய்து ஒழுகுவர். இவ் வானவர்களின் தலைவராக விளங்கு பவர் ஜிப்ரீல் (அலை) அவர்களாவார்.

வானவர் தலைவருக்கு அடுத்த நிலை யில் மூன்று வானவர்கள் உள்ளனர். அவர்களில் மீகாயீல் மழையையும் தாவர வர்க்கத்தையும் ஆள்பவர். இஸ்ராயீலின் பொறுப்பில் மரணம் உள்ளது. இறைவன் ஏவும் ஏவல்களைச் செய்பவர் இஸ்ராஃபீல் ஆவார். வான வர் படையும் உள்ளன. இவர்கள் இறக்கைகளை உடைய தூதுவர்களா வர்.

ஒவ்வொரு மனிதனுடனும் இறப்பு வரை மலக்குகள் தங்கி அவர்கட்கு ஷைத்தானிடமிருந்து பாதுகாப்புத் தருகின்றனர்.

உருவமற்ற அரூபிகளான வானவர் களை மனிதன் தன் ஊனக் கண்ணால்

காண இயலாது, இறைநேசச் செல்வர்களான சூஃபிகள் இவ்வானவர்களை நேருக்கு நேராகக் காண இயலும் எனக் கூறப்படுகிறது

**மலேசியா:** 'மலை நாடு' எனப் பொருள்படும் மலேயாவே 'மலேசியா' என அழைக்கப்படுகிறது. இது தென் கிழக்கு ஆசியாவில் இந்தியாவுக்குக் கிழக்கே அமைந்துள்ளது. இது ஒரு இஸ்லாமிய நாடாகும். பதினொரு மாநிலங்களும் சரவாக், சபா பகுதிகளும் அடங்கிய கூட்டரசு நாடாகும். இந்நாட்டின் மொத்தப் பரப்பளவு 3, 29, 749 ச.கி. மீட்டராகும். மொத்த மக்கள் தொகை சுமார் இரண்டு கோடியாகும். நாட்டின் தேசிய மொழி பாஸா மலேசியா. தலைநகர் கோலாலம்பூர்.

மலேசிய நாடு மலைகள் நிறைந்த நாடாகும். எங்கு நோக்கினும் மரங்கள் அடர்ந்த மலைகளும் காடுகளுமாகவே காட்சி தரும். இதனால் இந்நாட்டில் அடிக்கடி மழை பெய்கிறது. இந்நாட்டின் விளைப்பொருட்களில் முக்கியமானவை ரப்பரும் செம்பனையுமாகும். இங்கு மிகுதியாக தகரமும் பெட்ரோலும் கிடைக்கிறது.

இந்நாட்டில் மலேயர்களை அன்னியில் சுமார் நாற்பது இலட்சம் சீனர்களும் பத்து இலட்சம் இந்தியர்களும் (அவர்களில் தமிழர்களே மிகுதி) குடியுரிமை பெற்று வாழ்கின்றனர்.

பதின்மூன்றாம் நூற்றாண்டில்தான் இங்கு இஸ்லாம் பரவியது. ஐநூறு ஆண்டுகளுக்குள் மலேயர்கள் அனைவரும் முஸ்லிம்களாயினர்.

இரண்டாவது உலகப் போரின்போது இந்நாட்டை ஜப்பானியர் கைப்பற்றினர். பின்னர், ஆங்கிலேயர்களால் கைப்பற்றப்பட்டது. 1957ஆம் ஆண்டு ஆகஸ்ட் 31ஆம் நாள் மலேசியா விடுதலை பெற்றது. மலேசியச் சுல்தான்களில் ஒருவர் பேரரசராக ஐந்தாண்டுகட்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஆட்சி ஜனநாயக முறைப்படி பிரதம மந்திரியின் தலைமையில் செயல்படுகிறது. இந்நாட்டின் தென் பகுதியில் உள்ள மலாக்கா எனும் கடற்கரை நகரில் வலிமார்கள் சிலர் அடக்கமாகியுள்ளனர்.

**மர்யம்:** ஈஸா (அலை) அவர்களை ஈன்றெடுத்த அன்னை மர்யம் ஆவார். இவர் பிறப்பதற்கு முன்பே இவர் பெற்றோர், இவர் பிறந்தவுடன் பைத்துல் முகத்திஸ் ஊழியத்திற்கென வழங்கி விடுவதாக வேண்டுதல் செய்திருந்தனர். அதன்படி அவர் பிறந்தவுடன் அவருக்கு மர்யம் என்று பெயரிட்டனர். இதற்கு 'ஊழியம் செய்பவர்' என்பது பொருளாகும்.

இவர் குழந்தையாக இருந்தபோது மிகவும் அழகாக இருந்தார். எனவே பலரும் இவரை எடுத்து வளர்க்க விரும்பினர். இறுதியில் அந்த வாய்ப்பு ஜக்கரியா (அலை) அவர்கட்கே வாய்த்தது. மர்யத்தைத் தனி அறையில் வைத்துக் காத்து வளர்த்தார். மர்யம் பருவமடைந்தார்.

இறை ஆணைக்கிணங்க ஜிப்ரீல் (அலை) மர்யம் வயிற்றில் சூர் ஊத கர்ப்பமுற்றார். திருமணம் ஆகாமலே இறையருளால் கருவுற்ற மர்யம் அல்லாஹ்வின் ஆணைக்கிணங்க பைத்துல் முகத்திஸைவிட்டுவெளியேறினார். பைத்துல் லஹம் (பெத்லேகம்) எனுமிடத்தில் குழந்தை ஈஸா (அலை)வை ஈன்றெடுத்தார். அப்போது அவருடன் யூஸுஃபில் புகாரி மட்டுமே உடன் இருந்தார். பின்னர் குழந்தையுடன் பைத்துல் முகத்திஸ் மீண்டார். மணமாகாமல் குழந்தை பெற்ற மர்யத்தை

இழித்தும் பழித்தும் பேசினர். சிலர் கொன்று விடவும் திட்டமிட்டனர். குழந்தை தன் மழலை வாய் திறந்து தாம் இறைதூதர் ஈஸா மஸீஹ் என்பதை அறிவித்தது. இதைக் கேட்டு வியந்து தங்கள் தீய எண்ணங்களை விட்டொழித்தனர்.

ஆனால் ஏரதூஸ் மன்னன் மர்யத்தைக் கொல்ல எண்ணியபோது மர்யமும் குழந்தையும், யூஸுஃபுல் புகாரியுடன் எகிப்து சென்று வாழலானார்.

சில ஆண்டுகட்குப்பின் ஏரதூஸ் மன்னன் இறக்கவே மீண்டும் மர்யம் ஈஸாவுடன் பைத்துல் முகத்திஸ் திரும்பினார். வழியில் சில காலம் நாசரத் எனுமிடத்தில் தங்கினார்.

மர்யத்தின் கற்பின் பெருமையை இறைவன் தன் திருமறையில் குறிப்பிட்டுள்ளான்.

**மனாரா:** இச்சொல்லுக்கு 'எல்லைக் கல்' என்பது பொருளாகும். ஆரம்பக் காலத்தில் ஹரம் ஷரீபின் நான்கு எல்லைகளைக் குறிக்கும் சொற்கள் 'மனாருல் ஹரம்' என்றே அழைக்கப் பட்டன.

பிற்காலத்தில் மனாராக்கள் சற்று உயரமாகக் கட்டப்பட்டன. அப்போது அதன் உச்சியிலிருந்து எதிரிகளின் வரவைக் கண்டறிய முடிந்தது. மாலையில் அதன் உச்சியில் விளக்கேற்றி வைத்து மக்ரிப் தொழுகை நேரம் அறிவிக்கப்பட்டது. அதன்பின், அதன் உச்சியிலிருந்து முஅத்தின் பாங்கு சொல்லி மக்களுக்குத் தொழுகை அழைப்பு விடப்பட்டது. இன்னும் சில இடங்களில் இப்பழக்கம் இன்றும் தொடர்கிறது.

ஹிஜ்ரீ 45 வரை பள்ளிகளில் மனாரா கட்டும் வழக்கம் இல்லை. பஸராவில் ஆளுநராக ஸியாத் இருந்தபோதுதான் (ஹிஜ்ரி 46) பள்ளியில் மனாரா அமைக்கும் பழக்கம் தொடங்கப்பட்டது. அதன்பின்பு, ஹிஜ்ரி 53இல் முஆவியாவின் ஆணைக்கிணங்க பள்ளிக்கு நான்கு மூலைகளில் மனாரா கட்டும் பழக்கம் வழக்கத்திற்கு வந்தது. பின்னர் மனாரா அமைப்பதில் பேரார்வம் காட்டியவர் உமையாக் கலீபா வலீத் ஆவார். ஹிஜாஸிலும் சிரியாவிலும் உள்ள பள்ளிகளில் அழகான மனாராக்கள் அமைக்கப்பட்டன. அதன்பின் மனாரா அமைப்பது உலகெங்கும் பரவியது. மனாராக்களின் அமைப்பும் எண்ணிக்கையும் நாட்டுக்கு நாடு வேறுபடுகிறது.

**மஸ்அலா:** மஸ்அலா என்ற அரபிச் சொல்லுக்குத் 'தேடுதல்,' 'வினவுதல்,' 'வினா' எனப் பலபொருள்கள் உண்டு. இச்சொல் 'ஸுஆல்' எனும் அரபுச் சொல்லின் அடியாகப் பிறந்ததாகும். இதற்குக் கேள்வி என்பது பொருள். இது தமிழில் மருவி 'மசலா' என வழங்குகிறது.

ஒரு மார்க்க விற்பன்னரிடம் சென்று கேள்விகேட்டு விளக்கம் பெற்றுத் தெளிவடைவதே மஸ்அலா ஆகும். இவ்வாறு கேள்வியை உள்ளடக்கிய மசலா இலக்கியங்கள் மூன்று தமிழில் இயற்றப்பட்டுள்ளன. அவை, ஆயிர மசலா, நூறு மசலா, வெள்ளாட்டி மசலா ஆகும்.

**மஸ்தான்:** 'மஸ்த்' எனும் பார்ஸீச் சொல்லின் அடிப்படையில் தமிழில் உருவாக்கம் பெற்ற சொல்லே மஸ்தான் என்பது. மஸ்த் எனும் பார்ஸீச் சொல்லுக்கு இறைமயக்கம் என்பது பொருளாகும். இஸ்லாமிய மெய்ஞ் ஞானிகளாகிய சூஃபிகள் எந்நேரமும் இறைச் சிந்தனையில் பித்துப்பிடித்தவர்கள்போல் காணப்படுவர். இவர்கள்

இறைமயக்கத்தில் இருப்பவர்கள். இத்தகையவர்கள் மஸ்தான் என்ற பெயரில் அழைக்கப்படுவர். குணங்குடி மஸ்தான், வாலை மஸ்தான் போன்றவர்கள் இத்தகையவர்கள் ஆவர்.

**மஸ்ஜித்:** மஸ்ஜித் எனும் சொல் ஸுஜூது என்பதிலிருந்து வந்ததாகும். இதற்குத் 'தொழுகைத் தலம்' என்பது பொருளாகும்.

உலகில் மனிதன் இறைவனைத் தொழுவதற்கு என ஏற்படுத்தப்பட்ட முதல் தொழுகைத்தலம் கஃபா ஆகும். இரண்டாவதாக ஸுலைமான் (அலை) அவர்களால் எழுப்பப்பட்ட சக்ராவாகும். மூன்றாவது மஸ்ஜித் குபாவில் அண்ணல் நபி (ஸல்) அவர்களால் அமைக்கப்பட்ட மஸ்ஜிதுத் தக்வா. நான்காவது பள்ளிவாசல் மதீனாவில் பெருமானாராலேயே எழுப்பப்பட்ட மஸ்ஜிதுந் நபவீயாகும்.

இதன் பின்னர் இஸ்லாம் எங்கெல்லாம் பரவியதோ அங்கெல்லாம் மஸ்ஜிதுகளும் தொழுகைக்கென எழுப்பப்பட்டன. முஸ்லிம்கள் வெற்றிபெற்ற சில இடங்களில் இருந்த பழைய கட்டடங்களே மசூதிகளாக மாற்றப்பட்டன. பள்ளிவாசலின் உட்புறத் தோற்றத்திலும் வெளி அமைப்பிலும் நாட்டுக்கு நாடு சிறு வேறுபாடுகள் இருப்பது தவிர்க்க முடியாததாகியது. ஆயினும் காலப்போக்கில் மசூதிகள் மிஹ்ராப், மனாரா, மக்ஸுரா, ஹெளஸ் ஆகியவற்றோடு அமைக்கப்படலாயின. இன்று உலகில் பல்லாயிரக் கணக்கான பள்ளிவாசல்கள் உள்ளன. இவற்றுள் பைத்துல் முகத்தஸில் உள்ள மஸ்ஜிதுல் அக்ஸா, கார்டோவாவில் உள்ள பள்ளிவாசல், துருக்கியில் இஸ்தன்புலிலுள்ள ஸுலைமானிய பள்ளி வாசல் டில்லியில் உள்ள ஜும்மா மஸ்ஜித் ஆகியவை அழகுமிக்கவையாகும்.

இந்தியாவில் கட்டப்பட்ட முதல் பள்ளிவாசல் கேரளாவில் உள்ள கொடுங்கோளூரில் 642இல் மாலிக் இப்னு தீனரால் உருவாக்கப்பட்ட பள்ளிவாசலாகும்.

பள்ளிவாசல்கள் தொழுகைக்கான இடமாக மட்டுமல்லாது முஸ்லிம்கள் ஒருங்கிணைய உதவும் சந்திப்புத் தலமாகவும் விளங்குகிறது.

**மஸ்ஜிதுல் அக்ஸா:** இதற்கு 'தொலைவிலுள்ள தொழுகைத் தலம்' என்பது பொருளாகும்: ஸுலைமான் நபியால் பைத்துல் முகத்தஸின் தென் பகுதியில் தொழுவதற்கென்று நிர்மாணிக்கப்பட்ட மஸ்ஜிதுல் அக்ஸாவை நோக்கியே முன்பு தொழுகை நடத்தப்பட்டு வந்தது. மதீனாவில் இருந்த அண்ணல் (ஸல்) அவர்களும் மஸ்ஜிதுல் அக்ஸாவை நோக்கியே தொடக்கத்தில் தொழுது வந்தார். பிறகுதான் இறை ஆணைக்கொப்ப கஃபாவை நோக்கித் தொழுதார்.

பெருமானார் (ஸல்) அவர்களின் விண்ணேற்றத்தின்போது இப்பள்ளிக்கு வந்து தொழுது,அதன் பின்னரே விண்ணேகினார்.

இப்பள்ளியும் 'ஹரம் ஷரீஃப்' போன்றே இஸ்லாமியர்களால் போற்றப்படுகிறது. மக்கா, மதீனா ஆகிய புனிதத் தலங்களுக்கு அடுத்த புனித இடமாக அமைந்திருப்பது 'மஸ்ஜிதுல் அக்ஸா'வே யாகும்.

**மஸ்ஜிதுந் நபவீ:** மதீனாவில் ஆரம்பத்தில் பெருமானார் (ஸல்) அவர்களால் கட்டப்பட்ட முதல் பள்ளிவாசலாகும். அதனால் இது 'நபியின் பள்ளிவாசல்' எனும் பொருளில் 'மஸ்ஜிதுந் நபவீ' எனும் பெயரால் அழைக்கப்படலாயிற்று.

அண்ணலார் முதன் முதலாக மதீனாவினுள் நுழைந்தபோது, அவர் ஏறி வந்த ஒட்டகம் அல் கஸ்வா முதன் முதல் படுத்த இடம் இது. திறந்த வெளியாக இருந்த இந்த இடம் இரு அநாதைகட்குச் சொந்தமாக இருந்தது. அவர்கட்கு விலையாக ஒரு தொகையைக் கொடுத்து, இந்நிலத்தை வாங்கிப் பள்ளியை உருவாக்கினார் பெருமானார் (ஸல்) அவர்கள்.

அண்ணல் அவர்கள் அடிக்கல் நாட்டிய இப்பள்ளியின் ஏழடி சுற்றுச் சுவர் சுடப்படாத செங்கலால் கட்டப்பட்டது. ஈச்சமரத் தூண்களை நட்டு, அதன் மீது ஈச்சந்தட்டிகள் பரப்பப்பட்டு செம்மண் பூசப்பட்டது. தரை மண்ணால் மெழுகப்பட்டது. மழைக் காலத்தில் தரை சகதியாக ஆகிவிடும். முதல் தொழுகை அழைப்பான பாங்கு பிலால் (ரலி) அவர்களால் இங்கு தான் சொல்லப்பட்டது.

தொடக்கத்தில் இப்பள்ளியின் கிப்லா பைத்துல் முகத்திஸை நோக்கி அமைக்கப்பட்டது. பின்னர் இறை ஆணைக்கிணங்க கிப்லா கஃபாவை நோக்கித் திருப்பப்பட்டது.

இப்பள்ளி கட்டி முடிக்கப்பட்டபிறகு, நடந்த முதல் தொழுகை ளுஹர் தொழுகை ஆகும். கைபர் போருக்குப் பின்னரே பள்ளியில் மிம்பர் அமைக்கப்பட்டது. பெருமானார் (ஸல்) அவர்கள் காலமான பின்னர் அவர் நல்லுடல் இப்பள்ளியின் ஒரு பகுதியிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது.

மஸ்ஜிதுந் நபவீ காலந்தோறும் சீரமைக்கப்பட்டு இன்றைய எழில்மிகு வடிவத்தைப் பெற்றுள்ளது. இப்பள்ளியில் தொழும் தொழுகை வீட்டில் தொழும் தொழுகையை விட ஐம்பதினாயிரம் மடங்கு உயர்ந்தது என நபிகள் திலகம் (ஸல்) கூறியுள்ளார்.

**மஹ்ஷர்:** 'மஹ்ஷர்' என்பதற்குக் 'கூட்டம்' என்பது பொருளாகும். இறுதித் தீர்ப்பு நாளின்போது விசாரணைக்கென மக்கள் கூடும் மைதானத்தின் பெயர் மஹ்ஷர் ஆகும். இந்தப் பெருவெளி மேடு பள்ளமில்லாதது. எவ்வித மறைப்பும் இல்லாதது. இவ்வெளி வெண்மையாகத் தோற்றமளிக்கும். இங்குதான் இறந்தோர் அனைவரும் எழுப்பப்படுவர்.

இந்த மஹ்ஷர் மைதானம் பைத்துல் முகத்திஸ் அமைந்துள்ள இடமாக இருக்கலாம் அல்லது சிரியாவின் பகுதியாக அமையலாம் என்றும் கூறப்படுகிறது.

மஹ்ஷர் பெருவெளிக்குப் புகையில்லாத நெருப்பு மூலம் மக்கள் வந்து சேருவர். அவர்கள் உடையேதும் அணிந்திருக்க மாட்டார்கள். காலில் காலணி ஏதும் இருக்காது. நிர்வாணமாக இருப்பினும் ஒருவர் இன உறுப்பை மற்றவரால் காண முடியாது. அப்போது மலைகள் வெடித்துச் சிதறும். வானம் பிளந்து வெண்ணெய்போல் உருகி இறங்கும். சூரியன் மிகத் தாழ்வாக வந்துவிடும். அதன் அனல் தகிப்பினால் மனித உடல் வியர்வைக் காடாகி விடும். அப்போது இறை நிழலைத் தவிர்த்து எந்த நிழலும் இராது. அப்போது அங்குள்ள மனிதர்கள் இறையருள் வேண்டி நீண்டகாலம் வானத்தை நோக்கி நிற்பர். அங்கு விசாரணை ஏதும் இருக்காது. ஆனால் அவரவர் செய்த குற்றங்கள் ஒவ்வொருவருக்கும் நன்கு புலப்படும். ஒருவர் மற்றவரின் குற்றங்களை அறிவதால் ஒருவர் மற்றவரை நோக்கி, 'ஏன் இந்தக் குற்றத்தைச் செய்தீர்?' எனக் கேட்டுக்கொள்வார். இவ்வாறு நிகழும் இடமே மஹ்ஷர் மைதானம்.

**மஹர்:** நிக்காஹ்வின்போது மண மகன் மணமகளுக்கு வழங்கும் திருமணக் கட்டணம் மஹர் என்று அழைக்கப்படுகிறது. மணமகன் மணமகளுக்கு மஹர் வழங்கவேண்டுமெனத் திருமறையில் அல்லாஹ் தெளிவாகக் கூறியுள்ளான். இந்தத் தொகையை வழங்குவதன் மூலம் மணமகளின் தகுதியை மணமகன் உயர்த்துகிறான். இந்தத் தொகை குறைந்த பட்சம் பத்து நாணய மதிப்புடையதாக இருக்க வேண்டும். இதற்கு மேற்பட்ட தொகையை மணமகன் தகுதிக்கும், செல்வ வளத்திற்குமேற்ப வழங்கலாம். மணமகள் விரும்பிச் சம்மதித்தால் மஹரை கடன் சொல்லி நிக்காஹ் செய்து கொள்ளலாம். இது கூடியவரை தவிர்க்கப்படுவது நல்லது. நிக்காஹ் வின் போதே மஹர்த் தொகை கொடுத்து விடுவது உத்தயமாகும்.

இதற்கு மாறாக பெண் வீட்டாரிடமிருந்து கைக்கூலி எனும் வரதட்சணை வாங்குவது இஸ்லாமிய நெறிக்கு முற்றிலும் புறம்பானதாகும்.

**மிஃராஜ்:** அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் விண்ணுலகு சென்று திரும்பியதைக் குறிப்பது மிஃராஜ் எனும் சொல். இதற்கு 'உயருதல்' என்பது பொருளாகும். பெருமானாரின் விண்ணேற்றம் ரஜப் மாதம் 27-ஆம் தேதி நடைபெற்றது. அன்று இரவு ஜிப்ரீல் (அலை) அல்லாஹ்வைச் சந்திக்க அண்ணலாரை அழைத்துச் சென்ற சம்பவத்தை விவரிப்பதே மிஃராஜ்.

பெருமானார் (ஸல்) அவர்கள் ஜிப்ரீல் (அலை) அவர்களுடன் புராக்கின் மீது ஏறி முதலில் பைத்துல் முகத்திஸ் சென்றனர். அங்கே தொழுது விட்டு, மீண்டும் விண்ணகப் பயணத்தைத் தொடர்ந்தார். அல்லாஹ்வை அணுகியபோது அவனது பேரொளி அண்ணலாரை மயக்கமுறச் செய்து விட்டது. பின்னர் இறை ஆணைப்படி சொர்க்கம், நரகங்களையும், முந்தைய நபிமார்களையும் கண்டு பேசிவிட்டு மண்ணகம் திரும்பினார். நபிகள் நாயகத்தின் இத்தகைய விண்ணேற்ற அனுபவங்களை விவரிப்பதே மிஃராஜ் ஆகும்.

**மிம்பர்:** (மின்பர்) 'மிம்பர்' எனும் அரபிச் சொல்லுக்கு 'உயரமான இடம்' என்பது பொருளாகும். ஜும்ஆவின் போது கதீப் ஏறி நின்று குத்பா ஓதும் மேடையே மிம்பர் ஆகும். இது மிஹ்ராபுக்கு அடுத்து அமைந்திருக்கும்.

தொடக்கத்தில் மதீனாவின் மஸ்ஜிதுந் நபவீயில் பெருமானார் குத்பாப் பேருரை ஆற்றினார். அப்போது அவர் ஈச்சங்கட்டை ஒன்றில் ஏறிநின்று சொற்பொழிவாற்றுவது வழக்கம்.

கைபர் போரின்போது அவருக்கு நஞ்சூட்டப்பட்டதனால், உடல் தளர்வு ஏற்பட்டது. அதனால் அவரால் நீண்ட நேரம் நிற்க இயலாத நிலை. அப்போது அவர் தோழர் தமீம் தாரி என்பவர் மரத்தால் சிறு மேடை செய்து அதில் வசதியாக உட்கார்ந்து குத்பா ஓது மாறு வேண்டினார். அதற்கிணங்க ஈச்சங்கட்டையை அகற்றி, அவ்விடத்தில் போடப்பட்ட மரமேடை குத்பா ஓதப் பயன்படுத்தப்பட்டது. இம்மர மேடையில் இரண்டுபடிகள் இருந்தன.

அவருக்குப்பின் வந்த அபூபக்ர் (ரலி) கலீஃபாவானவுடன், இரண்டாவது படியில் அமர்ந்து குத்பா உரை நிகழ்த்தினார். உமர் (ரலி) கலீஃபாப் பதவி ஏற்ற பின் முதல்படியில் அமர்ந்து குத்பா ஓதினார். அவருக்கும் பின்வந்த உதுமான் (ரலி) பெருமானார் (ஸல்) அமர்ந்த மேடையிலே அமரலானார். இதை யாரும் ஏற்காததால் எதிர்ப்பு ஏற்பட்

டது. முஆவியா (ரலி) காலத்திலும் யஜீத் காலத்திலும் மிம்பர் ஐந்து படிகளைக் கொண்டதாக அமைந்தது.

பிற்காலத்தில் மிம்பர் அழகுள்ளதாகவும் மூன்று, படிகளையும் அமருவதற்கான இருப்பிடத்தையும் உடையதாகவே உலகெங்கும் அமைக்கப்பட்டது. இன்றும் அம்முறையிலேயே அமைந்து வருகிறது. மூன்றாவது படியில் நின்று கதீப் குத்பா ஓதுவது வழக்கமாக உள்ளது.

ஆயினும், ஒரு சில நாடுகளில் சிறிது வேறுபாட்டோடு மிம்பர் அமைக்கப் பட்டு உள்ளது என்பது கவனித்தற்குரியதாகும். மக்கா ஹரம்ஷரீபிலும், மதீனாவிலுள்ள மஸ்ஜிதுந் நபவியிலும் பல படிகளுள்ளதாக மிம்பர் அமைக்கப் பட்டுள்ளது. மலேஷியாவில் உள்ள பல பெரிய பள்ளிவாசல்களில், பல படிகள் உள்ள மேடை மிஹ்ராபுக்கு அருகில் அமைக்கப்படுகிறது. அதன் உச்சிப் பகுதியில் ஓர் இருக்கையும் போடப்பட்டுள்ளது. குத்பா ஓதும் கதீப் ஒரு பக்கமாகப் படிகளில் ஏறி நின்றும், இடையே இருக்கையில் அமர்ந்தும் குத்பா ஓதுகிறார். மறுபுறப் படிகள் வழியே இறங்கிச் சென்று தொழவைக்கிறார்.

கலீஃபாக்களின் காலத்தில் அவர்களின் அதிகாரச் சின்னமாக இம் மிம்பர் கருதப்பட்டது. பிற்காலத்தில் அந்நிலை அடியோடு மாற, கதீப்கள் குத்பா ஓதும் மேடைகளாக மட்டும் அமையலாயின. மிம்பர் மேடை புனிதமான இடமாகக் கருதப்படுவதால் இவ்விடத்தில் வைத்து உறுதி மொழிகள் பெறப்படுகின்றன. இங்கு செய்யும் சத்தியம் பொய்ப்பின் அசத்தியவாதி நரகம் புகுவார் எனக் கூறப்படுகிறது.

**மீக்காயீல்:** இவர் வானவர்களில் முக்கியமான ஒருவர். இவர் இரண்டாவது வானத்தின் பாதுகாவலர் எனக் கூறப்படுகிறது. மழை பொழியச் செய்வது, உலக உயிரினங்களுக்கு உணவு அளிப்பது, கடல்களைப் பராமரிப்பது ஆகியவை இவருக்கு இறைவன் இட்டுள்ள பணிகளாகும்.

முதல் மனிதராகிய ஆதமைப் படைக்க மண்ணெடுத்து வருமாறு அல்லாஹ் இவரைப் பணித்தான். இவரும் மண்ணைக் கையில் எடுக்க முனைந்தார். மண் அலறியது. இதனால் மண் எடுக்காமலே இறைவனிடம் திரும்பினார்.

பின்னர், ஆதமைப் படைத்து முடித்தவுடன் ஆதம் (அலை) அவர்கட்குச் ஸுஜூது செய்யுமாறு இப்லீஸ் முதலாக வானவர்களை அல்லாஹ் பணித்தான். இப்லீஸ் ஸுஜூது செய்ய மறுத்துவிட்டான். ஆனால் மீக்காயீல் ஜிப்ரீல் (அலை) மற்ற வானவர்கள் இறை ஆணைப்படி ஸுஜூது செய்தனர்.

கிருஸ்தவர்களும் யூதர்களும் மீக்காயீலை மனித இனப் பாதுகாவலர் எனக் கருதிப் போற்றுகின்றனர்.

**மீலாத்:** 'மீலாத்' எனும் அரபுச் சொல்லுக்குப் 'பிறந்த நாள்' என்பது பொருளாகும். இச்சொல் குறிப்பாகப் பெருமானார் (ஸல்) அவர்களின் பிறந்த நாளையே குறிக்கும். 'மீலாதுந் நபி' என்றால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பிறந்த நாள் எனப் பொருள்படும். நாயகத் திருமேனியின் பிறந்த நாள் ரபீயுல் அவ்வல் மாதம் பன்னிரண்டாம் நாள் ஆகும்.

பெருமானார் அவர்களின் பிறந்தநாள் அவர்கள் மறைந்து அறுநூறு ஆண்டுகள் வரைக் கொண்டாடப்பட்டதாகத் தெரியவில்லை. அதன்பின் கொண்டாடச் சில முயற்சிகள் நடந்தன. அவ்

வாறு நடந்த. பிறந்த நாள் விழாக் களும் அரசு அதிகாரிகள் மார்க்கப் பெரியவர்கள் மட்டும் கலந்து கொள் ளும் விழாவாகவே நடைபெற்றன.

பின்னர், பலரும் கலந்து கொள்ளும் வகையில் மீலாத் விழா நடைபெற லாயிற்று. 1910ஆம் ஆண்டு துருக்கி சுல்தான் மூன்றாம் முராதுவின் பெரும் முயற்சியில் மீலாத் விழா மக்கள் அனை வரும் இணைந்து கொண்டாடும் தேசி யத் திருவிழாவாக முதன் முதலாகக் கொண்டாடப்பட்டது. அதன் பின் இந்தியாவில் மீலாத் அன்று இரவு பள்ளிவாசல்கள் தோறும் ரபியுல் அவ்வல் முதல் பன்னிரண்டு நாட்கள் மௌலீது ஓதப்பட்டு இனிப்பு வழங்கி மகிழும் பழக்கம் ஏற்படலாயிற்று. இன்று தமிழகம் எங்கும் ரபீயுல் அவ்வல் பன்னிரண்டாம் நாள் இரவும் அதற்கு அடுத்த நாட்களிலும் மீலாது கூட்டங்கள் இரவிலும் பகலிலும் நடை பெறுகின்றன. முஸ்லிம் அறிஞர்களும், பிறசமயப் பெரியோர்களும் உரை நிகழ்த்துகின்றனர். மக்கள் பெருமள வில் கலந்து கொள்கின்றனர்.

**முஃமின்:** இந்த அரபுச் சொல்லுக்கு 'இறை நம்பிக்கையாளர்' என்பது பொருளாகும். ஈமான்தாரிகளாகிய நம்பிக்கையாளர்களைக் குறிக்கும் இச் சொல் திருமறையிலும் இடம் பெற்றுள் ளது. திருமறையின் 23ஆம் அத்தி யாயம் அல்முஃமினூன் என்றும், 40ஆம் அத்தியாயம் அல்முஃமின் என்றும் தலைப்புப் பெயருடையவை ஆகும். இறைவனின் 99 திருப்பெயர்களில் முஃமின் என்பதும் ஒன்றாகும்.

**முயீனுத்தீன் சிஷ்தி, காஜா:** அஜ் மீரில் அடக்கமாகியுள்ள மாபெரும் இறைஞானச் செல்வர் காஜா முயீனுத் தீன் சிஷ்தி ஆவார். இவரது தந்தை ஸையிது கியாஸுத்தீன் அஹ்மது, ஹுஸைன் (ரலி) வம்சா வழியைச் சேர்ந்தவர். தாயார் ஸையிதா மாஹினூர், ஹஸன் (ரலி) வழி வந்த வர். இவர்களின் திருமகனாக ஹிஜ்ரி 530 ரஜப் 14ஆம் நாள் வெள்ளிக் கிழமை அஃப்கானிஸ்தானில் உள்ள ஸீஸ்தான் எனுமிடத்தில் பிறந்தார்.

இவர் ஒன்பது வயது நிறைவடை வதற்கு முன்னரே திருமறை முழுவதை யும் மனனம் செய்து விட்டார். இவரு டைய இளம் வயதிலேயே பெற்றோர் காலமாகி விட்டனர். இவர் தந்தை விட்டுச்சென்ற சிறு தோட்டத்தின் மூலம் வந்த வருவாயைக் கொண்டே தம் இளமை வாழ்வைக் கழித்து வந்தார்.

ஒரு நாள் சூஃபி ஒருவர் இவருக்கு உண்ண ஓர் எள்ளுருண்டையைத் தந் தார். அதனை உண்டபின் இவர் எண்ணத்திலும், செயலிலும் பெரும் மாறுதல் ஏற்பட்டது. தம் சொத்தை விற்று ஏழைகளுக்கு வழங்கினார். பின்னர் பொருள் ஏதுமற்றவராகத் தம் ஆன்மீகப் பயணத்தைத் தொடர்ந் தார்.

ஹிஜ்ரி 560ஆம் ஆண்டில் மாபெரும் சூஃபி ஞானச் செல்வராகத் திகழ்ந்த காஜா உஸ்மான் ஹாரூனி அவர்களின் சிஷ்தியா தரீக்காவில் சேர்ந்தார். அவரிடம் முரீது எனும் தீட்சை பெற் றார். அங்கேயே இருபது ஆண்டுகள் தங்கினார். இக்காலகட்டத்தில் இவரது சூஃபித்துவ உணர்வும், இறைஞானச் சிந்தனையும் இவரை மாபெரும் வலீ நிலைக்கு உயர்த்தின.

பின்னர் இவர் கஞ்சம் எனுமிடம் சென்று மெய்ஞ்ஞானப் பெரியார் ஷைகு நஜ்முத்தீன் குப்ராவிடம் சில காலம் தங்கி மேலும் பக்குவம் பெற் றார். அதன்பின் அங்கிருந்து பக்தாது

சென்று இறைஞானப் பேரொளியாகத் திகழ்ந்த கௌதுல் அஃலம் முஹியுத்தீன் அப்துல்காதர் ஜீலானி (ரஹ்) அவர்களையும், மற்றொரு ஞான மேதையான ஷஹாபுத்தீன் ஸுஹ்ரவர்தீ (ரஹ்) அவர்களையும் சந்தித்தார். பிறகு பல ஊர்களில் பயணம் செய்தார். ஆங்காங்கே ஞான ஒளி பரப்பிவந்த இஸ்லாமியப் பெரியார்களை இறைஞானச் செல்வர்களையும் கண்டு உறவாடி மேலும் மேலும் ஞான ஒளி பெற்றார்.

தம் ஹஜ்ஜுக் கடமையை இனிது நிறைவேற்றி மதீனா சென்றார். அங்கு பெருமானார் (ஸல்) அடக்கவிடத்தில் ஜியாரத் செய்து ஸலாம் கூறினார். அப்போது அங்கிருந்து வெளிப்பட்ட பதில் ஸலாமில் இந்தியாவுக்குச் செல்லப் பணிக்கும் ஆணையும் அடங்கியிருந்தது.

பின் அங்கிருந்து லாகூர் சென்று சில காலம் தங்கிப் பின் மூல்தான் சென்றார். அங்கு தங்கியிருந்த ஐந்தாண்டு காலத்தில், சமஸ்கிருத மொழியையும் பிராகிருதத்தையும் கற்றறிந்தார். அதன்பின் டெல்லி சென்றார். இறுதியாக அஜ்மீர் சென்று தங்கலானார். இவரது மெய்ஞ்ஞானச் சொற்பொழிவு பல்லாயிரம் மக்களின் அறிவுக் கண்ணையும் மனக்கதவையும் திறந்தன. இவரை அணுகியோர் அனைவரும் இஸ்லாமிய நெறியோடு இணைந்தனர். இவரது புகழ் எங்கும் பரவியது. மக்களிடையே இவருக்கு அபரிமிதமாக வளர்ந்து வந்த செல்வாக்கைக் கண்டு அஜ்மீர் மன்னர் அச்சமடைந்தார். எனவே, இவரை அஜ்மீரை விட்டு வெளியேற ஆணையிட்டார். இதைக்கண்டு அஞ்சாமல் அஜ்மீர் மன்னரை முஸ்லிம் படையிடம் ஒப்படைத்து விட்டதாகக் கூறினார். அவர் கூறியவாறே டில்லி சுல்தான் ஷஹாபுத்தீன் கோரி அஜ்மீர் மீது படையெடுத்து மன்னன் பிரிதிவிரராஜைக் கைதியாகப் பிடித்துச் சென்றார். கோரி அஜ்மீர் வந்து இவர்களைத் தரிசித்தார். அதன்பின் டில்லி அரியணை ஏறிய இஸ்லாமிய மன்னர்கள் அஜ்மீர் சென்று காஜா முயினுத்தீன் சிஷ்தி அவர்களைத் தரிசித்து ஆசி பெற்றுச் செல்வதை வழக்கமாகக் கொண்டனர்.

அஜ்மீரில் இருந்தபடி ஞான ஒளி பரப்பிவந்த ஆன்மீகப் பேரரசர் தம் 97ஆம் ஆண்டில் ஹிஜ்ரி 633 ரஜப் ஆறாம் நாள் காலமானார். அவரது நல்லுடல் அங்கேயே அடக்கம் செய்யப்பட்டது. இவரால் இஸ்லாமானவர்களின் தொகை தொண்ணூறு இலட்சத்துக்கும் அதிகம் எனக் கூறப்படுகிறது.

இவரது அடக்கவிடத்திற்கு முஸ்லிம் மன்னர்களும் சாதாரண குடிமக்களும் அன்றும் இன்றும் சென்று வருகின்றனர். முகலாய மன்னர்கள் கட்டிய பள்ளிவாசல்களும் அடக்கவிடத்தில் கட்டப்பட்ட மணி மண்டபமும் எழில் மிக்கவையாகும்.

**முல்லா நஸ்ருத்தீன்:** 'நல்லாத்தான் சொன்னார் முல்லா நஸ்ருத்தீன்' என்பது பழமொழியாகும். இவரையும் இவரது நகைச்சுவைப் பேச்சையும் அறியாதவர்களே உலகில் இல்லை எனலாம். இதனால் இவரை எல்லா நாட்டினரும் தங்கள் நாட்டைச் சார்ந்தவராகவே கருதி மகிழ்கின்றனர்.

முல்லா நஸ்ருத்தீன் துருக்கியில் உள்ள எஸ்கிஷஹ்ர் என்ற ஊரில் பிறந்து வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. அவரது பிறந்த நாளன்று நடைபெறும் விழாவில் இவரது நகைச்சுவைச் சம்ப

வங்கள் மக்களுக்கு நடித்துக்காட்டப் படுகின்றன. இவரைப் பற்றிய நகைச் சுவைக் கதைகள் எல்லா மொழிகளி லும் வெளிவந்துள்ளன. அவை சிரிப் போடு சிந்தனையையும் சேர்த்துத் தர வல்லனவாகும். திரைப்படங்களும் வெளிவந்துள்ளன.

**முனாஜாத்:** இந்த அரபுச் சொல் லுக்கு 'இரகசியமாய்ச் சொல்லுதல்' என்பது பொருளாகும். பர்லுத் தொழுகைக்குப்பின் தொழப்படும் நஃபில் தொழுகையும் முனாஜாத் என்று கூறப்படுவது உண்டு.

'இறைவனிடம் மனமுருகிப் பிரார்த் தனை செய்தலே முனாஜாத்' எனப் படும். இதன் மூலம் முனாஜாத் என்ப தற்கு இஸ்லாமிய பக்தியுணர்வை வெளிப்படுத்தும் இறைவேட்டல் என்ற கருத்துப் பெறப்படுகிறது. இத்தகைய இறையுணர்வை வெளிப்படுத்தும் இஸ் லாமியப் பக்தி பனுவல்கள் 'முனா ஜாத்து பாடல்கள்' என்றே அழைக்கப் படுகின்றன.

இவ்வகையான முனாஜாத்துப் பாடல்கள் தமிழில் ஏராளமாக உள் ளன. இப்பாடல்கள் இறைவன் மீதும் நபிமார்கள், இறைநேசச் செல்வர்கள் மீதும் பாடப்பட்டவையாகும். இப் பாடல்களில் பக்தி உணர்வு பொங்கிப் பொழியும். தீன் நெறியாகிய இஸ்லாத் தின் கொள்கை கோட்பாடுகளையும் சாதாரணப் பாமரரும் எளிதில் புரிந்து கொள்ளப் பேருதவியாய் அமைவன முனாஜாத்துப் பாடல்களே யாகும்.

தமிழில் இதுவரை வெளிவந்துள்ள முனாஜாத்து நூல்கள் இருபதுக்கு மேற்பட்டவையாகும். முனாஜாத்துப் பாடியோருள் புலவர் நாயகம் சேக னாப் புலவர், பதுருத்தீன் புலவர், காசிம் புலவர், குணங்குடி மஸ்தான் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

**முஸ்தலிஃபா:** இந்த இடம் மினாவுக் கும், அரஃபாத் பெருவெளிக்கும் இடையே அமைந்து உள்ளது. இங்கு ஹஜ் கடமையாற்றுவோர் துல்ஹஜ் பிறை 9-க்கும் 10-க்கும் இடையில் ஒரு நாள் இரவு இங்குத் தங்கிச் செல்ல வேண்டும். தங்குவது லைலத்துல் கத்ர் இரவில் பெறுகின்ற நன்மையைவிட அதிக நன்மையை பெறமுடியும் என்றும் கூறப்படுகிறது.

இப்லீஸ் மீது எறிவதற்கான சிறு கற்களை ஹாஜிகள் இங்கே சேகரித்துக் கொள்வார்கள். நாம் கேட்கும் துஆக் களை வல்ல அல்லாஹ் ஏற்றுக் கொள் ளும் இடங்களில் முஸ்தலிஃபாவும் ஒன்றாகும்.

**முஸ்லிம்:** தீன் வழி வாழ்வோர் முஸ்லிம் ஆவார். முஸ்லிம் என்ற அரபுச் சொல்லுக்கு அல்லாஹ்வுக்கு முற்றிலும் அடிபணிவர். 'இஸ்லாத்தை ஏற்றுப் பேணுபவர்', 'சாந்தி பெற்ற வர்' என்னும் பொருள்களுண்டு. இதே பொருளில் திருமறை இப்ராஹீம் (அலை) அவர்களைப் பற்றி 'அவர் ஒரு முஸ்லிமாகவும் ஹனீஃபாகவும் (நேர் வழியாளராக) இருந்தார்' எனக் கூறு கிறது (3: 67).

**முஹம்மது (ஸல்):** நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) நானில மக்களுக்கு இறைவழிகாட்ட வந்த இறுதி இறைத் தூதர் ஆவார்.

அரேபியாவில் அக்காலத்தில் மிகப் பெரிய வணிகக் கேந்திரமாக மக்கா நகர் விளங்கியது. அங்கு அப்துல்லாஹ் ஆமீனா தம்பதியரின் புதல்வராகப் பிறந்தார் முஹம்மது. அவர் பிறந்தது கி.பி. 571 ஏப்ரல்20 ஆம் நாளாகும் (ரபியுல் அவ்வல்12). இவர் பிறப்பதற்குச் சில மாதங்கட்கு முன்பே தந்தை அப்துல் லாஹ் காலமாகிவிட்டார். இவர் ஆறு

வயதுச் சிறுவராக இருந்தபோது, தாயார் ஆமீனாவும் மறைந்தார். அதன் பிறகு தம் பாட்டனார் அப்துல் முத்தலிபின் அரவணைப்பில் வளர்ந்து வந்தார். அண்ணலார் எட்டு வயதை எட்டுமுன் பாட்டனாரும் காலமானார். அதன்பிறகு தம் பெரிய தந்தை அபூதாலிபால் வளர்க்கப்பட்டு, வாலிப நிலையடைந்தார்.

ஆடு ஒட்டகம் மேய்ப்பது முதல் வணிகம்வரை பல தரப்பட்ட பணிகளைச் செய்தார். இளமை முதலே இனிய பழக்க வழக்கங்களின் இருப்பிடமாகத் திகழ்ந்தார். பெரியவர்களின் அன்பையும் மதிப்பையும் பெற்றார். எப்போதும் உண்மையே பேசினார். நேர்மையை எப்போதும் கடைப்பிடித்தார். இதனால், மற்றவர்களின் நம்பிக்கைக்குரியவராக விளங்கினார். எல்லோரும் அவரை 'அல் அமீன்' என்றே அழைத்தார்கள். இதற்கு 'நம்பிக்கைக்குரியவர்' என்று பொருள். ஏட்டுப்படிப்பு அறவே பெறாவிட்டாலும், அறிவுக்கூர்மை மிக்கவராக விளங்கினார்.

ஒரு சமயம் குறைஷிக் குலத்தினர் 'கஃபா' இறை இல்லத்தைப் புதுப்பித்துக் கட்டி வந்தனர். அதில் முன்னரே 'ஹஜருல் அஸ்வத்' எனும் புனிதக் கருங்கல் இடம் பெற்றிருந்தது. இஃது சொர்க்கத்திலிருந்து வந்ததாகக் கருதப்படுகிறது. இதனை அதற்குரிய இடத்தில் எந்தக் குடும்பத்தினர் தூக்கி வைப்பது என்பதில் தகராறு ஏற்பட்டது. இவ்விஷயத்தில் தீர்வு காணும் பொறுப்பை, மறுநாள் அதிகாலை முதன்முதலாக கஃபாவுக்குள் யார் நுழைகிறாரோ அவரிடம் ஒப்படைப்பது என முடிவு செய்தனர். அதிகாலை முஹம்மது கஃபாவுக்குள் நுழைந்தார். அதைக்கண்டு எல்லோரும் மகிழ்ந்தனர். முஹம்மதிடம் விஷயத்தைக் கூறி தீர்ப்பு வழங்குமாறு வேண்டினர். அதற்குச் சம்மதித்த முஹம்மது தம் மேல் துண்டை எடுத்து விரித்தார். அதன் நடுவில் கல்லைத் தூக்கி வைத்தார். அதன் நான்கு மூலைகளையும், சச்சரவு செய்த நான்கு குடும்பத் தலைவர்கள் பிடித்துத் தூக்கி வரும்படி கூறினார். அவர்களும் அவ்வாறே தூக்கிவர அதற்குரிய இடத்தில் நாயகம் அக்கல்லை எடுத்து வைத்தார். இதனால் எல்லோருக்குமே மகிழ்ச்சி ஏற்பட்டது. ஏற்படவிருந்த சச்சரவு தவிர்க்கப்பட்டது. முஹம்மதுவின் அறிவுக் கூர்மையை அனைவரும் பாராட்டினர்.

நேர்மையும் அறிவுத்திறனும் மிகுந்தவராக முஹம்மது விளங்கினார். அப்போது மக்கா நகரின் செல்வ வளம் மிகுந்த வணிகப் பெண்மணியாக கதீஜா பெருமாட்டியார் விளங்கினார். அவர் தம் வணிகப் பிரதிநிதியாக முஹம்மதை வெளிநாடுகளுக்கு அனுப்பினார். அவர் திறமையாகவும், நேர்மையாகவும் வணிகம் செய்து பெரும் இலாபத்துடன் திரும்பினார். அவரது நேர்மையும் ஒழுக்கமும், கதீஜா பிராட்டியைப் பெரிதும் கவர்ந்தன. விரைவில் முஹம்மதை மணந்து கொண்டார். அவர்களுக்குப் பாத்திமா எனும் பெண் குழந்தையும் பிறந்தது.

இல்லற வாழ்வில் இனிதே ஈடுபட்டிருந்த முஹம்மது முப்பத்தெட்டு வயதை நெருங்கிக் கொண்டிருந்தார். தம்மைச் சுற்றி நாள்தோறும் நடைபெறும் மது, சூது, விபச்சாரம் போன்ற சமூக ஒழுக்கக்கேடான செயல்கள் அவரை அதிகம் வருத்தின. அறியாமையினாலும், மூட நம்பிக்கையினாலும் இறைவன் பெயரால் அவர்கள் இழைத்துவரும் அநீதியான அனாச்சாரச் செயல்கள் அவரைப் பெரிதும் சிந்திக்கத் தூண்டின.

இத் தீய போக்கிலிருந்து மக்களை மீட்க வழிதேடினார். தியான முறைகள் மூலம் தம் உள்ளொளியைப் பெருக்க முனைந்தார். இதற்காக மக்கா நகருக்கு அருகில் உள்ள ஹிரா குகையில் நாட்கணக்கில் தனிமைத் தவம் இருந்தார். அங்கு இறைவனைக் குறித்தும், படைப்பின் அற்புதங்களைக் குறித்தும் ஆழ்ந்த சிந்தனையிலும் தியானத்திலும் ஈடுபடலானார். இதற்காகப் பல நாட்கள் பசித்திருந்தார். தனித்திருந்தார். மனத்தை அடக்கி அறிவு வழி சிந்திக்க மோனத் தவமிருந்தார். இவ்வாறு நாட்கள் வாரங்களாகவும் மாதங்களாகவும் ஆண்டுகளாவும் உருண்டோடின.

கி.பி. 609 ரமலான் மாதம் அவரின் நாற்பதாம் வயதில் ஒரு நாள் இரவு ஹிரா குகையில் தியானத்தில் இருந்த முஹம்மது 'ஓதுவீராக' எனும் குரல் கேட்டுத் திடுக்கிட்டார். அவர் முன் காட்சியளித்த ஓர் உருவம் 'நான்தான் ஜிப்ரயீல்' என்று கூறியது. "இறைவனுடைய செய்திகளையும், அவனுடைய வேத வெளிப்பாடுகளையும் மனித இனத்திற்கு அறிவிப்பதற்காக நீர் இறைவனால் நியமிக்கப்பட்டிருக்கிறீர் என்பதை உமக்குத் தெரிவிப்பதன் பொருட்டு இறைவனால் அனுப்பப்பட்ட வானவர் நான்" என்று அவ்வுருவம் தன்னை அடையாளம் காட்டிக் கொண்டது. அத்துடன் முஹம்மது இறைவனின் நபியாக, தூதராக நியமிக்கப்பட்டுள்ளதையும் அறிவித்து, அவரை ஓதப் பணித்தது.

நான் ஓதுபவன் அல்லனே (எனக்கு ஓதத் தெரியாதே!) எனக் கூறினார். இதைக் கேட்ட வானவர் தலைவர் ஜிப்ரீல் (அலை) அண்ணலாரை இறுகத் தழுவினார். பின் 'ஓதுக' என்றார். அப்போதும் பெருமானார் ஓதவில்லை. மொத்தம் மும்முறை ஜிப்ரீல் (அலை) தழுவிய பின்னர் பெருமானார் வாயைத் திறந்து ஓதத் தொடங்கினார். 'இக்ரஉ' எனத் தொடங்கும் இறைமறை வசனங்கள் ஐந்து பெருமானார் வாய்மூலம் முதன் முதலாக வெளிப்பட்டன.

இந்த அற்புத நிகழ்ச்சியைத் துணைவியார் கதீஜாவிடம் கூறினார். பெருமானார் முஹம்மது கூறிய அனைத்தையும் அம்மையார் நம்பினார். பெருமானாரை இறைதூதராக ஏற்றுக் கொண்டார். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனே; முஹம்மது அவனுடைய திருத்தூதர் என்பதில் முழு நம்பிக்கை வைத்து இஸ்லாமிய மார்க்கத்தில் தன்னை முதன்மையாளராக இணைத்துக் கொண்டார். பின்னர், அபூபக்ர் ஸித்தீக், வீரர் அலீ முதலானோர் இஸ்லாத்தில் நம்பிக்கை கொண்டு இணைந்தனர்.

இன்றைய உலக மக்களில் நான்கில் ஒருவர் வீதம் நம்பிக்கை வைத்துள்ள இஸ்லாம் மார்க்கம் இவ்வாறுதான் வளர்ந்தது.

மக்காவாசிகள் பல தெய்வ உருவ வழிப்பாட்டில் மூழ்கிக் கிடந்தனர். 'உருவமற்ற, இணை-துணை இல்லாத அல்லாஹ் ஒருவனே இறைவன்' என்று பெருமானார் கூறுவதை ஏற்க மறுத்தனர். தீய வழிகளில் ஒழுக்கக் கேடர்களாக வாழ்ந்த மக்காவாசிகளில் சிலர் பெருமானார் கூறும் நன்னெறிகளைக் கேட்டு [illegible]ண்டனர்.

நல்லவர்[illegible] [illegible]லர் நபிகள் நாயகம் (ஸல்) போதித்த இஸ்லாமிய நெறியில் நம்பிக்கை கொண்டு முஸ்லிம்களாகி, நல்வழி நடந்தனர். இதைக் கண்டு குறைஷிகள் கோபமும் கொதிப்பும் கொண்டனர். மிரட்டி அடக்கி ஒடுக்க

முயன்றனர். பல வகையான தீங்குகளை இஸ்லாத்தில் இணைந்தவர்களுக்கு ஏற்படுத்தினர். எண்ணற்ற இடர் ஏற்பட்டபோதிலும் நபிகள் நாயகம் (ஸல்) உறுதி குறையாமல் இஸ்லாத்தை எடுத்துச் சொல்லி வந்தார். இதனால் கலக்கமடைந்த எதிரிகள் நபிகள் நாதரை பெருஞ்செல்வத்துக்கு அதிபதியாகவும் மன்னராகவும் ஆக்குவதாக ஆசை வார்த்தை கூறினர். அதற்குப் பகரமாக 'ஒரே இறைவன்' என்ற கொள்கையை விட்டுவிடும்படியும் வேண்டினர். இதற்கெல்லாம் சற்றும் இணங்காமல் தொடர்ந்து இஸ்லாமியப் பிரச்சாரம் செய்து வந்தார் நாயகத் திலகம். இறுதியில் அவரைக் கொல்லத் திட்டம் திட்டினர்.

அப்போது இறை கட்டளைப்படி நபிகள் நாயகமும், தோழர் அபூபக்ரும் மக்காவை விட்டு வெளியேறினர். மதீனா செல்லும் வழியில் இருந்த தௌர் குகையில் தங்கி இளைப்பாறிக் கொண்டிருந்தனர். அப்போது எதிரிகள் அவர்களைத் தேடி குகையின் வாயிலை அடைந்தனர். அங்கே இறையருளால் சிலந்தி வலை பின்னியிருந்தது. கூட்டில் புறா முட்டையிட்டிருந்தது. அதனால் குகையினுள் யாரும் இருக்க முடியாது என எண்ணித் திரும்பி விட்டனர்.

மீண்டும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் மதீனா நோக்கித் தம் பயணத்தைத் தொடர்ந்தனர்.

இவ்வாறு பெருமானார் (ஸல்) மக்காவிலிருந்து மதீனா சென்ற நிகழ்ச்சியே 'ஹிஜ்ரத்' என்று அழைக்கப்படுகிறது. இதிலிருந்துதான் இஸ்லாமிய ஆண்டான 'ஹிஜ்ரி' தொடங்குகிறது.

முன்னரே இஸ்லாமிய நெறியில் தங்களை இணைத்துக்கொண்டிருந்த மதீனா வாசிகள் பெருமானாரை வரவேற்றனர். தங்களுடன் தங்கவைத்துக் கொண்டனர். நாளடைவில் இஸ்லாத்தில் நம்பிக்கை கொண்ட மக்கா வாசிகள் மதீனா வந்து சேர்ந்தனர். மதீனாவில் முதன்முதலாக தொழுகைக்கான 'பள்ளிவாசல்' ஒன்றை நபிகள் நாயகம் (ஸல்) கட்டினார். அடிமையாக இருந்து இஸ்லாத்தை ஏற்று விடுதலை பெற்ற கறுப்பரான பிலால் அவர்கட்குத் தொழுகைக்கு அழைக்கும் 'பாங்கு' சொல்லும் பணியை அளித்தார்.

மதீனாவில் வேகமாக இஸ்லாம் பரவி வருவதைக்கண்டு மக்காவாசிகள் வெகுண்டனர். அவர்கள் பெரும்படையுடன் மதீனா மீது படையெடுத்துச் சென்றனர். 'பத்ர்' எனுமிடத்தில் நடந்த முதற்போரில் பெருமானார் (ஸல்) மிகச்சிறு படையுடன் சென்று எதிரிகளுடன் போரிட்டார். இதில் பெருமானாருக்கு மகத்தான வெற்றி கிடைத்தது.

தோல்வியடைந்த குறைஷியர் அடுத்த ஆண்டே மீண்டும் படையெடுத்துச் சென்று 'உஹத்' எனுமிடத்தில் போரிட்டனர். இதில் முஸ்லிம்களே இறுதி வெற்றி பெற்றனர். இஸ்லாம் வேகமாக வளர்ந்து எங்கும் பரவியது.

நபிகள் நாயகத்தை வெற்றி கொள்ள இயலாது என்பதை நாளடைவில் குறைஷியர் உணர்ந்தனர். உம்ரா செய்வதற்கு 1,400 முஸ்லிம்களுடன் பெருமானார் (ஸல்) மக்கா நோக்கிப் புறப்பட்டார். போரில் வீணாக மக்கள் மடிவதைத் தவிர்க்க ஹுதைபிய்யா எனுமிடத்தில் பெருமானார் குறைஷிகளோடு ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டார். அதன்படி அடுத்த ஆண்டு உம்ரா - ஹஜ் செய்ய வருவதாகக் கூறி பெருமானார் மதீனா

திரும்பினார். ஒப்பந்தப்படி குறைஷி கள் நடக்கவில்லை.

பெருந்தொகையினரான முஸ்லிம் களுடன் பெருமானார் ஹஜ் பயணம் மேற்கொண்டார். மக்காவுக்கு அருகில் உள்ள குன்றின்மேல் தங்கினர். இரவில் நீண்ட வரிசையாக அடுப்பு மூட்டினர். மிகப்பெரும் பரப்பில் அடுப்பெரிவதால் மாபெரும் படையுடன் அண்ணலார் வந்து தங்கியிருப்பதாகக் குறைஷிகள் கருதினர். இனி எக்காரணம் கொண் டும் முஸ்லிம்களை வெல்ல முடியாது என்று கருதினர். பெருமானாரிடம் சரணடைவது என முடிவு செய்தனர். பின் தங்கள் ஆயுதங்களை ஒப்ப டைத்து குறைஷியர் தம் தோல்வியை ஒப்புக்கொண்டனர்,

இவ்வாறு போர் ஏதும் இன்றி, மாநபி மக்கா நகரைக் கைப்பற்றி வெற்றி பெற்றார். எதிரிகளில் பலரும் இஸ்லாத்தில் நம்பிக்கை கொண்டு இணைந்தனர்.

இதனால் பெருமானாரின் பெருமை யும் புகழும் திசை எங்கும் பரவின. இஸ்லாமிய மார்க்கத்தின் நன்னெறி களை அறிந்துணர்ந்த பிற பகுதி மக்கள் முஸ்லிம்களாயினர். இதனால் அரேபியாவெங்கும் அடுத்துள்ள நாடு களிலும் இஸ்லாம் வலுவாக வளர்ந்து உலகப் பெரும் மார்க்கமாக நிலை பெற்றது.

தம் இறுதி இறைத்தூதை முழுமைப் படுத்திய நபிகள் நாயகம் (ஸல்) இறை வாக்குப்படி வாழ்ந்துகாட்டிய மனிதப் புனிதர் ஆவார்.

உலகுக்கோர் அழகிய முன்மாதிரி யாக வாழ்ந்து காட்டிய அண்ணலார் தம் அறுபத்து மூன்றாம் வயதில் மதீ னாவில் காலமானார்கள். பெருமா னார் மதீனாப் பள்ளியிலேயே நல்லடக் கம் செய்யப்பட்டார்.

**முஹம்மது அலீ, மௌலானா:** விடு தலைப் போராட்ட கால முஸ்லிம் தலைவர்களில் மிக முக்கியமானவர் மௌலானா முஹம்மது அலீ அவர்கள். உத்திரப்பிரதேசத்தில் உள்ள ராம்பூர் சமஸ்தானத்தில் 1878ஆம் ஆண்டில் பிறந்தார். சிறுவராக இருக்கும்போதே தம் தந்தையை இழந்து, தாயார் ஆபிதா பானுவால் வளர்க்கப்பட்டார். அக்காலப் போக்குக்கு மாறாக இவரது அன்னை இவரை ஆங்கிலக் கல்வி கற்க வைத்தார். பள்ளிக் கல்வியை முடித்த இவர் அலீகர் பல்கலைக்கழகத்தில் தம் படிப்பைத் தொடர்ந்தார். இவரது ஆங்கில அறிவு ஆங்கிலப் பேராசிரியர் களையே திகைக்க வைத்தது. மேற் படிப்புக்காக லண்டன் சென்று பி.ஏ. ஹானர்ஸ் படிப்பில் தேறினார். ஆனால் அடுத்து எழுதிய ஐ.சி. எஸ் தேர்வில் தோல்வியடைந்தார்.

இந்தியா திரும்பிய பின்னர் ராம்பூர் சமஸ்தானத்திலும் பரோடா சமஸ் தானத்திலும் கல்வி அதிகாரியாகச் சிலகாலம் பணிபுரிந்தார். பின்னர் ஆங்கிலத்திலும், உருதுவிலும் இரு இதழ்களை நடத்தினார். அவற்றில் அரசின் போக்கையும், அரசியல் நட வடிக்கைகளையும் விமர்சனம் செய்து வந்தார். இதனால் கசப்படைந்த ஆங்கில அரசு அவற்றின்மீது பல தடவை நடவடிக்கை எடுத்தது.

இந்திய முஸ்லிம்களிடையே ஒருமை உணர்வைத் தோற்றுவிக்க தீவிரமாக முயன்றார். அவர்களின் சக்தியையும், சிந்தனையையும் ஒருமுகப்படுத்த விழைந்தார். அதன் விளைவாக 1906-ஆம் ஆண்டு டாக்காவில் முஸ்லிம்களின் மாநாடு ஒன்றை நடத்தினார். அதில் மற்றவர்களோடு இணைந்து முஸ்லிம்

லீக் எனும் பேரமைப்பை உருவாக்கினார். முஸ்லிம்களின் முன்னேற்றத்திற்கான மாபெரும் சக்தியாக உருவெடுக்க வழி வகுத்தார்.

அதனைப் பின்னர் இந்திய விடுதலை இயக்கமாகத், தலைமை ஏற்று நடத்தினார். இதற்காக அரசு அவருக்கு நான்காண்டு சிறைத்தண்டனை அளித்தது. சிறைவாழ்வு முடிந்து வெளிவந்தவுடன் முன்பைவிட வேகமாக விடுதலைக்குப் பாடுபட்டார். ஒத்துழையாமை இயக்கத்தில் தம்மோடு எண்ணற்ற முஸ்லிம்களை ஈடுபடச்செய்தார். இதன் விளைவாகச் சிறை சென்றோரில் முஸ்லிம்களின் எண்ணிக்கையே அதிகமாக இருந்தது. இப்போராட்டங்களில் பங்குபெற அலீகர் பல்கலைக்கழகத் தலைமை மறுத்தது. இதனால் டெல்லியில் 'ஜாமியா மில்லியா' என்னும் புதிய பல்கலைக்கழகத்தை முஸ்லிம்களுக்கென உருவாக்கினார்.

இவர் 1923ஆம் ஆண்டில் காக்கினாடாவில் நடந்த காங்கிரஸ் மகா சபைக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதன்பின் இந்து சமயத் தீவிரவாதத் தலைவர்கள் சிலரின் தவறான போக்குகளால் வகுப்புக் கலவரம் மூண்டது. இதனால் இந்துக்களும் முஸ்லிம்களும் பெரும் பாதிப்புக்கு ஆளாயினர். இந்நிலையை அறவே வெறுத்த முஹம்மது அலீ இந்து-முஸ்லிம் ஒற்றுமைக்கான பலமுயற்சிகளை மேற்கொண்டார். ஆனால் காங்கிரஸ் தலைவர்கள் சிலரின் போக்கு இதற்கு உதவுவதாக இல்லை. இதைக் கண்டு மிகவும் வருந்தினார். விரக்தியடைந்த நிலையில் மனவேதனையுடன் காங்கிரஸை விட்டு வெளியேறினார். அதன் விளைவாகக் கடுமையான நோய்வாய்ப்பட்டார்.

இந்நிலையில் லண்டனில் நடைபெற்ற வட்டமேஜை மாநாட்டில் கலந்துகொள்ள அழைக்கப்பட்டார். இந்திய விடுதலை ஒன்றையே கருத்தில் கொண்ட முஹம்மது அலீ, டாக்டரின் கட்டுப்பாடுகளையும் மீறி அம்மாநாட்டில் கலந்து கொண்டார். மாநாட்டில் வீரப்பேருரையாற்றினார். "இந்தியாவுக்கு விடுதலை கொடுங்கள்; இன்றேல் எனக்கு இங்கேயே ஒரு புதைகுழி கொடுங்கள்!" என முழங்கினார். அளவுக்கதிகமாக உணர்ச்சி வசப்பட்ட முஹம்மது அலீயின் இதயம் வெடிக்க, அங்கேயே இறப்பெய்தினார்.

அவரது உடல் நபிமார்களின் கோட்டையாக விளங்கிய பலஸ்தீனத்திற்குக் கொண்டு செல்லப்பட்டு நல்லடக்கம் செய்யப்பட்டது.

**முஹம்மது அலீ:** அமெரிக்காவைச் சேர்ந்த இவர் உலகின் மாபெரும் குத்துச் சண்டைவீரர் ஆவார். இவரின் முன்னோர்கள் அடிமைகளாக அமெரிக்காவுக்குக் கொண்டு வரப்பட்ட கறுப்பர்களாவர். இவர் சிறுவராக இருந்த போதே, வீர உணர்வு மிக்கவராக இருந்தார். மற்றவர்களைவிடத் தம்மை உயர்ந்தவனாக, சிறந்தவனாகக் கருதிக் கொள்வார். அந்த உணர்வுடனேயே செயல்படுவார். இவர் பெற்றோர்கள் கிருஸ்துவ சமயத்தைச் சார்ந்தவர்கள். இவர் பெயர் காஸ்ஸியஸ்கிளே என்பதாகும்.

நல்ல உடல் உறுதி கொண்ட இவர் குத்துச்சண்டைப் பயிற்சியில் தீவிர முனைப்புக் காட்டினார். குத்துச் சண்டைப் போட்டியில் உலகப் புகழ்பெற வேண்டும் என்ற இலட்சிய உணர்வுடன் கடுமையாகப் பயிற்சி பெற்றார். அத்துறையில் விரைவிலே தனித்திறமை பெற்றார். ரோமில் நடந்த ஒலிம்பிக்

கில் கலந்து கொண்டு வெற்றி பெற்றார். அதன்பின் இவர் புகழ் அமெரிக்காவில் மட்டுமல்லாது உலகெங்கும் பரவியது.

1964 ஆம் ஆண்டு பிப்ரவரி 25 ஆம் நாள் அமெரிக்காவில் நடைபெற்ற உலகக் குத்துச்சண்டை வீரர் போட்டியில் உலகக் குத்துச்சண்டை வீரரான சோனிலிஸ்டனைத் தோற்கடித்து 'உலகவீரர்' என்னும் பட்டத்தைப் பெற்றார். வெற்றி பெற்ற மேடையிலேயே தாம் இஸ்லாத்தைத் தழுவி முஸ்லிமாகிவிட்டதாகவும் தம் பெயர் முஹம்மது அலீ என்றும் இனி இப்பெயராலேயே அழைக்கவேண்டும் என்றும் அறிவித்தார். இது அமெரிக்கர்களுக்கு அதிர்ச்சியாக இருந்தது. இதன்பின் நடந்த பல போட்டிகளில் தொடர்ந்து வெற்றிவாகை சூடினார். இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் அல்லாஹ்வின் பேரருளும் மாவீரர் அலீ (ரலி) அவர்களின் பெயரைத் தாம் சூடியிருப்பதுமே எனக் கூறினார்.

இவரை இஸ்லாமிய உலகம் வரவழைத்துப் பாராட்டி மகிழ்ந்தது. இதனால் எரிச்சலடைந்த அமெரிக்க அரசு இவரை வியட்நாம் போரில் ஈடுபட அழைத்தது. ஒரு முஸ்லிமை ஆணையிட்டுப் போரில் ஈடுபடச்செய்ய முடியாது எனக் கூறி மறுத்தார். இதற்காக அரசு இவர்மீது வழக்குத் தொடுத்தது. வழக்கு முடியும்வரை குத்துச் சண்டையில் ஈடுபடக்கூடாது எனத் தடைவிதித்தது. இந்தச் சமயத்தில் இஸ்லாமிய மார்க்கப் பிரச்சாரத்தில் மிகத் தீவிர முனைப்புக் காட்டினார். மாபெரும் பொதுக் கூட்டங்களில் சொற்பொழிவாற்றினார். இஸ்லாமியப் பிரச்சாரத்துடன் பெரும் பொருள் குவிந்தது.

மூன்றரை ஆண்டுகளுக்குப் பின் அமெரிக்க உயர்நீதி மன்றம் இவருக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தது. இவர் மீண்டும் குத்துச் சண்டையில் தீவிரமாக ஈடுபட்டார். பலப்பல வெற்றிகளை ஈட்டினார். ஓரிரு தோல்விகளைத் தழுவினாலும், தொடர்ந்து உலகக் குத்துச்சண்டை வீரராகவே விளங்குகிறார். உலகிலேயே குத்துச்சண்டையை அதிகமானோர் கண்டு களித்தது இவரது குத்துச்சண்டையையேயாகும். குத்துச்சண்டைக்கென உலகிலேயே பெரும் பரிசுத் தொகையைப் பெற்றவரும் இவரேயாவார்.

அமெரிக்காவுக்குள் மட்டும் இருந்த குத்துச்சண்டையை உலகெலாம் புகழ் பெறச் செய்த பெருமை இவரையே சாரும். இன்று குத்துச் சண்டைப் போட்டிகளிலிருந்து விலகியிருந்தாலும் இஸ்லாமியப் பிரச்சாரத்திலும் இஸ்லாமிய நற்பணிகளிலும் முனைப்புடன் செயல்பட்டு வருகிறார்.

**முஹம்மது இஸ்மாயீல், காயிதே மில்லத்:** தமிழ் நாட்டில் பிறந்து இந்தியாவின் மாபெரும் முஸ்லிம் தலைவராக விளங்கியவர் காயிதேமில்லத் முஹம்மது இஸ்மாயீல் சாகிப் அவர்கள். இந்திய யூனியன் முஸ்லிம் லீக்கின் தனிப்பெரும் தலைவராக விளங்கியவர்.

இவர் 1896ஆம் ஆண்டு ஜூன் ஐந்தாம் நாள் திருநெல்வேலி பேட்டையில் பிறந்தவர். இவர் ஹஜ்ஜுப் பெருநாள் அன்று பிறந்ததால் இப்ராஹீம் (அலை) அவர்களின் திருக்குமாரர் இஸ்மாயீல் (அலை) அவர்களின் நினைவைப் போற்றும் வகையில் 'முஹம்மது இஸ்மாயீல்' எனப் பெயரிடப்பட்டார். இவர் தந்தை மார்க்க ஞானம் நிரம்பப் பெற்ற மௌலவியாவார். திருவாங்கூர் மன்னர் குடும்பங்களுக்குத் துணி விற்பனை செய்யும் வணிகராகவும் இருந்தவர். இவர் தமிழ், அரபி மொழி

களோடு பார்ஸீ, உருது, சமஸ்கிருதம், ஆகிய மொழிகளையும் அறிந்த பன்மொழிப்புலவராகவும் விளங்கினார்.

முஹம்மது இஸ்மாயீலுக்கு ஐந்து வயது ஆகும்போது தந்தை காலமானார். இவரின் அன்புத் தாயார் முஹிய்யுத்தீன் பாத்துமாவே ஆரம்பப் பள்ளி முதல் கல்லூரிக் கல்விவரை இவரைப் படிக்கவைத்தார்.

இவர் சென்னைக் கிருத்துவக் கல்லூரியில் இறுதி ஆண்டு பி. ஏ. படிக்கும்போது காந்தியடிகளின் அழைப்பை ஏற்று கல்லூரியை விட்டு வெளியேறி விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டார்.

1920 ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற சென்னை மாகாண அரசியல் மாநாட்டில் முக்கிய பங்கு வகித்தார். ஒத்துழையாமைத் தீர்மானம் நிறைவேற்றத்தில் பெரும் பங்கு கொண்டார்.

இளமைதொட்டே பொதுமக்கள் தொண்டில் பேரார்வம் கொண்டவராக இருந்தார். அரசியல் ஈடுபாட்டுடன், தொழில் துறையிலும் ஈடுபாடு கொண்டார். அக்காலத்தில் புகழ் பெற்ற நிறுவனமான ஜமால் முஹிய்யுத்தீன் தோல் நிறுவனத்தில் பணி செய்தார். பின் அதன் நிர்வாகியாகவும் பங்குதாரராகவும் ஆனார்.

காங்கிரஸ் பேரியக்கத்தின் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்த போதிலும் இந்திய முஸ்லிம் சமுதாயத்தின் விழிப்பிலும் முன்னேற்றத்திலும் அதிக அக்கரை காட்டினார். இதற்கான அமைப்பாக முஸ்லிம் லீக் செயல்படத் தொடங்கியதும், காங்கிரசைவிட்டு விலகி லீகில் இணைந்தார். வெகு விரைவில் மலபார், கர்நாடக, ஆந்திரப் பகுதிகள் இணைந்த அன்றைய சென்னை மாகாண முஸ்லிம் லீக்கின் தலைவராக உயர்ந்தார்.

1947இல் நடந்த கராச்சி மாநாட்டிற்குப் பிறகு, தனியாகப் பிரிந்த இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் தலைவரானார். நாடு விடுதலை பெற்ற பிறகு முஸ்லிம் லீக் அமைப்பு அவசியமா என்ற விவாதம் எல்லா மட்டத்திலும் நடந்தது. அதைக் கண்டு சிறிதும் மனம் தளராமல், இந்திய முஸ்லிம்களின் முன்னேற்ற உந்து சக்தியாக, பாதுகாப்புக் கேடயமாக முஸ்லிம் லீக் அமைப்பு இருந்தேயாகவேண்டும் என உறுதியாக பதில் அளித்தார். தாம் இறக்கும்வரை தலைமைப் பதவியை வகித்து வழி காட்டி வந்தார்.

இனிய பண்புகளின் உறைவிடமாகத் திகழ்ந்த காயிதே மில்லத் அவர்களை அனைத்துக் கட்சித் தலைவர்களும் அன்பு காட்டிப் பாராட்டினர். இவரது இறைப்பற்றும், அறிவார்ந்த நிதானப் போக்கும் அனைவராலும் பாராட்டப் பட்டன. இவர் சட்டப் பேரவை, நாடாளுமன்றம், அரசியல் நிர்ணய சபை ஆகியவற்றின் உறுப்பினராக அமைந்து அரும்பணி ஆற்றினார். அரசியல் நிர்ணய சபைக் கூட்டத்தில் இந்தியாவின் பொது மொழி எது என்று கடுமையான விவாதம் நடந்தது. பலரும் இந்திமொழியை ஆதரித்தனர். இவர் மிகப் பழமையானதும், இனிமையானதுமான தமிழ் மொழியே இந்தியப் பொது மொழியாக இருக்க எல்லா வகையிலும் ஏற்றது என முழக்கமிட்டார். இவர் தம் தொகுதிக்குச் செல்லாமலே இருமுறை கேரளாவில் உள்ள மஞ்சேரி தொகுதியிலிருந்து நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது இவரது சாதனை முத்திரையாகும்.

இந்திய முஸ்லிம்களால் ‘காயிதே மில்லத்’ என அழைக்கப்பட்ட முஹம்

மது இஸ்மாயீல் சாஹிப் 1972ஆம் ஆண்டு ஏப்ரல் ஐந்தாம் நாள் காலமானார். அவர் உடல் திருவல்லிக்கேணி வாலாஜா மசூதியில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

**முஹம்மது துக்ளக்:** துக்ளக் அரச பரம்பரையின் புகழ்பெற்ற மன்னர் முஹம்மது துக்ளக் ஆவார். இவரது இயற்பெயர் உலுக்கான் என்பதாகும். இவர் ஜவ்னா என்ற பெயராலும் அழைக்கப்பட்டார். இவர் வாரங்கல் மீது படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றதால் சுல்தான் முஹம்மது என்ற பெயருடன் பாராட்டப் பட்டார். தந்தை கியாஸுத்தீனின் மறைவுக்குப் பிறகு இவர் 1325இல் அரியணை ஏறினார். அப்போது இவர் சுல்தானுல் முஜாஹித் முஹம்மது துக்ளக் என்ற பட்டப் பெயரால் அழைக்கப்பட்டார்,

இளமை தொட்டே அறிவுக்கூர்மை மிக்கவராக இருந்தார். நிறையப் படிக்கும் பழக்கமுள்ளவர். இலக்கியம், தத்துவம், தருக்கவியல், அறிவியல் துறைகளில் பேரார்வமுடையவராக இருந்தார். இத்துறைகளில் பேரறிவு பெற்றிருந்தார். பார்ஸீ மொழியில் பெரும் புலமையாளராகத் திகழ்ந்தார்.

இவரது ஆட்சிப் பரப்பு மத்திய இந்தியாவில் புனேவரை விரிவடைந்திருந்தது. இதனால் வடகோடியில் இருந்த டில்லித் தலைநகரை புனேக்கு அருகில் இருந்த தேவகிரிக்கு மாற்றினார். இதனால் வரி வசூல் செய்யவும் நிர்வாகத்தைத் திறம்படச் செய்யவும் வசதியாக இருக்கும் எனக் கருதினார். இதற்காகத் தேவகிரியின் பெயரை தௌலதாபாத் எனவும் மாற்றினார். அங்கு அரசமாளிகைகளையும் அரசு நிர்வாகக் கட்டிடங்களையும். கட்டினர். அரசுத்துறையினருக்கான வீடுகளையும் கட்டினார். இதற்காகப் பெருஞ்செலவு செய்தார். ஆனால் டில்லி மக்கள் இதை விரும்பவில்லை. எனவே, மீண்டும் தலைநகரை டில்லிக்கே மாற்றினார். இதனால் மக்கள் பெரும் அவதிக்கு ஆளாயினர்.

இவர் காலத்தில் வெள்ளியில் நாணயங்கள் அச்சிடப்பட்டு வந்தன. சீனா, கிரீஸ் போன்ற நாடுகளில் காகித நாணயங்கள் புழக்கத்தில் இருந்து வருவதை அறிந்தார். தம் ஆட்சியிலும் நாணய மாற்றம் செய்ய விரும்பினார். வெள்ளிக்குப் பதில் தாமிர நாணயங்கள் புழக்கத்திற்கு வந்தவுடன், கள்ள தாமிர நாணயங்களும் ஏராளமாக வெளி வரலாயின. இதை அறிந்த துக்ளக் தாமிர நாணயத்தைச் செல்லாததாக்கி மீண்டும் வெள்ளி நாணயத்தையே கொண்டு வந்தார். கருவூலத்தில் இருந்து தாமிர நாணயத்திற்குப் பதிலாக வெள்ளி நாணயத்தைக் கொடுக்க ஏற்பாடு செய்தார். இதனால் அரசுக்குப் பெரும் நட்டம் உண்டாயிற்று.

இவ்வாறு இவர் புத்திசாலித்தனமான முடிவுகளைச் செய்தாலும். அவை நடைமுறைக்கேற்றவையாக அமைவதில்லை.

இவர் இஸ்லாத்தில் ஆழ்ந்த பற்றுக் கொண்டவர். மார்க்க ஞானம் மிக்கவர். தம் குடிமக்களின் நன்மை ஒன்றையே குறியாகக் கொண்டு ஆட்சி செய்தவர். இவர் கற்றறிந்த மேதையாக இருந்தமையால் கல்வி வளர்ச்சிக்கு மிகுந்த முக்கியத்துவம் தந்தார். ஏராளமான பள்ளிகளை உருவாக்கினார். நூற்றுக்கணக்கான பள்ளிவாசல்களையும் அவற்றில் மதரஸாக்களையும் ஏற்படுத்தினார். இவர் மக்களின் ஆரோக்கிய வாழ்விலும் ஆர்வம்

காட்டினார். பொது மருத்துவ மனைகளை ஏற்படுத்தி ஏழைகளுக்கு இலவச சிகிச்சை தர ஏற்பாடு செய்தார்.

இவர் நீதிநெறி போற்றுவதில் நிகரற்றவராக விளங்கினார். இவர் எவ்வித தாரதம்மியமும் இல்லாமல் இந்து சமயம் போன்ற பிற சமய மக்களை சமமாக நடத்தி அவர்களின் அன்பைப் பெற்றார்.

இவர் சிந்தனை மிக நவீனமானதாக இருந்தது. இவருடைய முற்போக்கான நடவடிக்கைகள் மக்களின் போக்கையும் சிந்தனையையும் ஒட்டியனவாக அமையவில்லை. இதனாலேயே அவருடைய சிறந்த முன்னேற்ற நடவடிக்கைகள் மக்களால் கேலிக்குரியனவாகக் கருதப்பட்டன. இதனால் மக்களிடையே குழப்பங்கள் தோன்றலாயின. எதிரிகள் இச்சூழ்நிலையைத் திறம்படக் கையாண்டு கலகங்களை ஆங்காங்கே உருவாக்கினர். இவரது ஆட்சியின் கீழ் இருந்த தக்காணப் பகுதிகள் சிலவும், வங்காளமும் தன்னிச்சையாக விடுதலைப் பிரகடனம் செய்தன. இவர் சிந்துவில் ஏற்பட்ட கலகத்தை அடக்கப் படையுடன் சென்றார். அப்போது நோன்பு நோற்றிருந்தார். நோன்பு திறந்த சிறிது நேரத்தில் உயிர் துறந்தார். இவரது உடல் சிறிது காலம் ஷஹ்வான் எனுமிடத்தில் அடக்கம் செய்யப்பட்டது. பின்னர், போர் நின்றபின் டில்லிக்குக் கொண்டு வந்து நல்லடக்கம் செய்யப்பட்டது.

**முஹர்ரம்:** இஸ்லாமிய ஆண்டின் முதல் மாதமாக அமைந்திருப்பது முஹர்ரம் மாதம் ஆகும். பெருமானாருக்கு முன்பிருந்தே அரபியர்கள் முஹர்ரம் மாதத்தை சிறப்புமிகு புனித மாதமாகக் கருதி போற்றி வந்தனர். இம்மாதத்தில் அமைதியுடன் வாழ ஒவ்வொருவரும் உறுதி கொள்வர். இம் மாதத்தில் பகைமை, குரோதம், சண்டை சச்சரவுகள் போன்ற தீய உணர்வுகளை விட்டு முற்றிலும் நீங்கியவர்களாக வாழ வேண்டும். இத் தீய தன்மைகளிலிருந்து விலக்கப்பட்ட அதாவது ஹராமாக்கப்பட்ட மாதம் என்பதைக் குறிக்கும் வகையிலேயே இம்மாதத்தின் பெயர் 'முஹர்ரம்' என அமைந்தது.

அமைதி வாழ்வுக்கு வழிகாட்டும் முஹர்ரம் இறைவன் விதித்துள்ள இறுதித் தீர்ப்பு நாளை நினைவுறுத்தி அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும் இறையச்ச மாதமாகவும் அமைந்துள்ளது. முஹர்ரம் பத்தாம் நாள் சிறப்புமிகு நாளாகும். மனுக்குலத்தின் இறுதித் தீர்ப்பு நாள் முஹர்ரம் பத்தாம் நாளிலேயே நிகழ்வுறும். இவ்வகையில் மறுமை வாழ்வை நினைவூட்டி நேர் வழிப்படுத்தும் வழிகாட்டி மாதமாகவும் முஹர்ரம் அமைந்துள்ளது.

இஸ்லாமியக் கோட்பாட்டின்படி வானம், பூமி, சூரியன், சந்திரன், கிரகங்கள், சொர்க்கம், நரகம் ஆகிய அனைத்தும் முஹர்ரம் பத்தாம் நாளன்றே இறைவனால் படைக்கப்பட்டன. முதன் முதலாக மழையை இறக்கியதும், ஆதித் தந்தையாகிய ஆதம் (அலை) அவர்களையும் ஹவ்வாத் தாயாரையும் பூமியில் இறக்கியதும் இப் பத்தாம் நாளன்றுதான்.

வரலாற்றுச் சிறப்புமிகு மாதமாக முஹர்ரம் அமைந்துள்ளது.

முன்பொரு சமயம் எகிப்து நாட்டை ஆண்டு வந்த ஃபிர்அவ்ன் எனும் கொடுங்கோல் மன்னன், தன்னைக் கடவுள் எனப் பிரகடனப் படுத்திக் கொண்டான். எல்லோரும் தன்னையே வணங்க வேண்டுமெனக் கட்டாயப் படுத்தினான். மறுத்தவர்களைக்

கொடுமைப்படுத்தினான். ஈவு இறக்க மின்றிக் கொன்று குவித்தான்.

'இறைவனால் படைக்கப்பட்ட எதுவுமே வணங்குதற்குரியவை அல்ல; மூலப் படைப்பாளனாகிய இறைவன் மட்டுமே வணங்குதற்குரியவன்' என அப்போது மக்களிடையே போதனை செய்து வந்தார் மூஸா நபி. இதனால் சினங்கொண்ட கொடுங்கோலனின் கொடுமைகளிலிருந்து விடுபட எகிப்தை விட்டு வெளியேறியபோது, செங்கடல் பிளந்து வழிவிட்டது. அப்பிளவினூடே ஃபிர்அவ்ன் விரட்டிச் சென்றான். மூஸா நபியும் அவரைப் பின்பற்றியோரும் கரை சேரவே, பிளந்து நின்ற செங்கடல் இணைந்தது. கடலிடை அகப்பட்ட ஃபிர்அவ்னும் அவன் படையினரும் கடலுள் மூழ்கி அழிந்தனர். இந்நிகழ்ச்சி நடைபெற்றது முஹர்ரம் பத்தாம் நாளாகும்.

இந்நாளை மூஸா நபிவழி வந்த யூதர்களும் முஸ்லிம்களும் 'ஆஷுரா' தினமாகக் கடைப்பிடித்து நோன்பு நோற்று வருகிறார்கள். ரமலான் நோன்புக்கு அடுத்தபடியாகச் சிறப்பு மிகு நோன்பாக 'ஆஷுரா' நோன்பு கருதப்படுகிறது. பத்தாம் நாள் எனப் பொருள்படும், வகையில் 'யவ்முல் ஆஷுரா' என அழைக்கப்படும் பத்தாம் நாளன்றே, இறைவனின் திருவுளப்படி பத்து நிகழ்வுகள் நடைபெற்றதால் 'ஆஷுரா' நாள் என்று அழைக்கப்பட்டது.

நூஹ் நபி ஊழிக்கால மழையிலிருந்து உயிரினங்களைக் காக்க அவற்றைக் கப்பலில் ஏற்றி கடலில் சுற்றிச் சுழன்று இறுதியில் கரையிறங்கிய நாள் முஹர்ரம் பத்தாம் நாளாகும்.

தாவூது நபிக்கு இறை மன்னிப்புக் கிடைத்தது இப்பத்தாம் நாளில்தான். 'ஒரே இறைவன்' என்ற ஒப்பற்ற இறைத் தத்துவத்தை உலகுக்குப் போதித்த இப்ராஹீம் நபிக்கு 'கலீல்' (இறைத்தோழர்) எனும் உன்னதப் பட்டத்தை இறைவன் வழங்கியதும் இப்பத்தாம் நாளிலேதான். ஈஸா நபியை இறைவன் விண்ணுலகத்திற்கு அழைத்துக் கொண்டதும் முஹர்ரம் பத்தாம் நாளன்றுதான்.

இவையனைத்தும் பெருமானாருக்கு முன்னதாக நடைபெற்ற இறையருள் நிகழ்வுகளாகும்.

பெருமானாரின் பெருவாழ்வுக்குப் பின்னர், அவர்தம் பேரர் இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களும் அவர்தம் குடும்பத்தினரும் தோழர்களும் 'கர்பலா' எனுமிடத்தில் எதிரிகளால் இதே முஹர்ரம் பத்தாம் நாளன்று தான் கொல்லப்பட்டார்கள்.

முஹர்ரம் 9, 10 அல்லது 10, 11 ஆகிய இருநாட்களில் நோன்பு நோற்பது முஸ்தஹப் (விரும்பத்தக்கது) ஆகும். முஹர்ரம் பத்தாம் நாள் மட்டும் என நோன்பு நோற்பது மக்ரூஹ் விரும்பத்தகுந்ததில்லை; தவிர்க்கப்பட வேண்டும். ஏனெனில் யூதர்கள் தாம் முஹர்ரம் பத்தில் மட்டும் நோன்பு நோற்றனர்.

**மூஸா (அலை):** நபிமார்களில் முக்கியமானவர். மூஸா (அலை) ஆவார். அவர் பனூ இஸ்ராயீல் கூட்டத்தை வழி நடத்த அவர்களினிடையே தோன்றிய இறைத்தூதர் ஆவார். இவருக்கு இறைவன் 'தௌராத், எனும் வேதத்தை அருளினான். இவர் தந்தையார் பெயர் இம்ரான் என்பதாகும். தாயார் பெயர் யூகானிது ஆகும்.

இவர் பிறந்த அன்று எகிப்து மன்னன் ஃபிர்அவ்ன் என்பவன் ஒரு கனவு கண்டான். அதை அரசாங்கச் சோதிடர்களி

டம் கூறி கனவுப்பலன் கூறுமாறு கேட்டான். கனவுப் பலனைக் கணித்த சோதிடர்கள், பிர்அவ்ன் ஆட்சிக்கு முடிவு கட்டும் ஆண் குழந்தையொன்று பிறந்திருப்பதாகக் கூறினர். இதைக் கேட்டு வெகுண்ட மன்னன் அன்று பிறந்த ஆண் குழந்தைகளை அழிக்க ஆணையிட்டான். இதையறிந்த குழந்தையின் பெற்றோர் அக்குழந்தையை ஒரு பெட்டியில் வைத்து நைல் நதியில் விட்டுவிட்டனர். அப்பெட்டி அரண்மனைத் தோட்டமருகே ஒதுங்கியது. பிர்அவ்ன் குடும்பத்தினர் அப்பெட்டியை எடுத்தனர். திறந்து பார்த்த போது உள்ளே அழகிய ஆண் குழந்தை இருப்பதைக் கண்டு திகைப்பும் வியப்பும் அடைந்தனர். அக்குழந்தையின் அழகில் மயங்கிய பிர்அவ்னின் மனைவி ஆஸியா அதனைக் கண்ணும் கருத்துமாக வளர்க்க விரும்பினார். பிர்அவ்ன் அக்குழந்தையைக் கொல்ல முற்பட்ட போது, 'குழந்தை பெரிதாக இருப்பதால் இது கனவு காண்பதற்கு முன்னதாகவே பிறந்திருக்கும். எனவே, இக்குழந்தையால் மன்னனுக்குத் தீங்கு நேர வாய்ப்பில்லை' எனக் கூறி தம் கணவன் குழந்தையைக் கொல்லாமல் காப்பாற்றினார். தொடர்ந்து குழந்தை அரண்மனையிலேயே வளரலாயிற்று.

அக்குழந்தைக்கு 'மூஸா' எனப் பெயரிட்டனர். இது ஒரு ஹீப்ரு மொழிச் சொல்லாகும். 'மூ' என்றால் நீர் என்று பொருள். 'ஸா' என்பதற்கு மரம் என்பது பொருளாகும். நீரில் மிதந்து வந்த மரப்பெட்டியில் இருந்த குழந்தையாதலால் இப்பெயர் சூட்டப்பட்டது.

அரண்மனையில் வளர்ந்து வாலிப நிலையடைந்தார். ஒரு நாள் அரண்மனைக்கு அருகே ஏற்பட்ட சிறு சச்சரவில் எதிர்பாராமல் ஒருவனை மூஸா கொல்ல நேர்ந்தது. கொலைக்குற்ற தண்டனைக்குப் பயந்து அரண்மனையை விட்டு வெளியேறினார். மத்யன் எனும் இடத்திற்குச் சென்று அங்கு ஷுஐப் (அலை) அவர்களிடம் பத்து ஆண்டுகள் ஆடுமேய்க்கும் பணியாற்றினார். அவரின் அன்பு மகள் சபூராவை மணந்து கொண்டார். பின்னர் எகிப்து திரும்பும் வழியில் அவர் ஒரு நபி என்பது இறைவனால் அறிவுறுத்தப்பட்டது. அத்துடன் பிர்அவ்னை நேர்வழிக்குக் கொண்டு வரும் பொறுப்பும் இவர் மீது இறைவனால் சுமத்தப்பட்டது. இறைக் கட்டளைப்படி பிர்அவ்ன் அரண்மனை சென்று மன்னனைக் கண்டார். 'தானே இறைவன்' எனும் மமதை ஒழிந்து வல்ல இறைவன் ஒருவனே என்றும் அவனே வணங்குதற்குரியவன் என்றும் உபதேசித்தார். இச்சொற்களைச் செவிமடுக்க விரும்பாத பிர்அவ்ன் மூஸா (அலை) அவர்கட்குப் பெரும் துன்பங்களையும் தாங்கொணாச் சோதனைகளையும் உண்டாக்கினான். அனைத்தையும் இறைவன் பெயரால் பொறுத்துக்கொண்டார். பொறுக்க முடியா நிலையில் இறை ஆணைப்படி பனூ இஸ்ரவேலர்களுடன் வெளியேறினார். செல்லும் வழியில் செங்கடல் குறுக்கிட்டது. மூஸா (அலை) இறை ஆணைப்படி தம் கைத்தடியால் அடிக்க, செங்கடல் பிளந்து வழிவிட்டது. இவர்களைப் பிர்அவ்னும் அவர் படையினரும் துரத்தி வந்தனர். மூஸா (அலை) அவர்தம் கூட்டத்தினர் கரையேறியபோது பிர்அவ்ன் படையினர் நீர்ப்பிளவின் இடையில் இருந்தனர். பிளந்து நின்ற நீர் மீண்டும் இணையவே பிர்அவ்னும் படையும் நீரில் மூழ்கி மாண்டனர்.

பின்னர், மூஸா (அலை) அவர்கள் சிரியா சென்றார். இறையாணைப்படி

அரீஹா எனும் பகுதிக்குச் சென்று, அறப்போர் செய்து மக்களை நல்வழிப் படுத்த பனீ இஸ்ரவேலர்களை அழைத் தார். அவர்கள் ஏளனம் பேசி உடன் வர மறுத்தனர். இதனால் இறைவனின் கோபத்திற்கு ஆளாகி துன்புறலாயினர். ஆயினும் மூஸா (அலை) அங்கு சென்று வெற்றியடைந்தார். இஸ்ரவேலர் களை மன்னிக்குமாறு இறைவனை வேண்டினார். இவர் வேண்டுதலை இறைவன் ஏற்று பனூ இஸ்ரவேலர் களின் துயரம் போக்கினான்.

இறை ஆணைப்படி மூஸா (அலை) தூர்சினாய் மலை சென்றார். அங்கே இறைவனுடன் உரையாடும்பேறு பெற் றார். இறைவன் இவருக்குப் பத்துக் கட்டளையும் 'தௌராத்' வேதத்தை யும் அருளினான்.

மூஸா (அலை) மலையிலிருந்து இறங் கும் முன்பு சாமிரி என்பானின் துர் போதனையின் விளைவாக இஸ்ர வேலர்கள் காளைமாட்டு உருவைச் செய்து வணங்கலாயினர். இதைக் கண்டு வெகுண்ட மூஸா (அலை) அவ் வுருவத்தை நொறுக்கிக் கடலில் தூக்கி எறிந்தார். பின்னர், இஸ்ரவேலர்களின் வணக்கத்திற்கென தனி ஆலயத்தை அமைத்தார். சனிதோறும் அங்கு இறைவணக்கம் செய்யப் பணித்தார்.

சுமார் 150 வயதுவரை வாழ்ந்து மக்களுக்கு இறைவழி காட்டினார். இறைவனுடன் நேருக்கு நேராக உரை யாடும் பேறு பெற்றமையினால் 'கலீ முல்லாஹ்' எனப் போற்றப்படலா னார்.

**மௌலிது:** இச்சொல் பெருமானா ரின் பிறந்த நாளையும் பிற இறை நேசச் செல்வர்களின் பிறந்த நாளை யும் குறிக்கும் சொல்லாக அமைந்துள் ளது. அண்ணலாரின் பிறந்த நாளான ரபியுல் அவ்வல் பிறை 12இல் 'மீலாதுந் நபி' விழாவாகக் கொண்டாடப்படு கிறது. பிறை முதல் நாள் தொடங்கி 12ஆம் நாள் முடிய பள்ளிவாசல்களி லும் வீடுகளிலும் பெருமானாரின் மீது புகழ்ப்பாக்கள் இசைக்கப்படுகின்றன. இதுவே மௌலிது ஆகும். இதில் பெரு மானார் மீது பாடும் சலவாத்துகளே அதிகம் இடம் பெறுகின்றன.

அராபியாவிலும் துருக்கி, இந்தியா, எகிப்து போன்ற நாடுகளிலும் மௌலிது ஓதப்படுகின்றது. மற்ற நாடுகளிலும் இடங்களிலும் தனிப்பட்ட ஒரு சில வீடுகளில் மௌலிது ஓதும் பழக்கம் இருந்து வருகிறது. இத்தகைய மௌலிது அரபி மொழியில் மட்டுமல் லாது அவரவர் தாய்மொழியிலும் புகழ்ப்பாக்களாக இசைக்கப்படுவ துண்டு. இதற்கென்றே மௌலிது குழுக்களும் உண்டு.

மௌலிது ஓதும் இடத்திற்குப் பெரு மானார் எழுந்தருளுவார் என்பது ஆன் றோர் கணிப்பாகும். அண்ணலாரின் அழகிய முன்மாதிரி வாழ்வையும் வாக் கையும் நினைவுகூரும் வாய்ப்பாக மௌலிது அமைகிறது.

**யாஸிர் அரஃபாத்:** செயல்திறனும் அறிவாற்றலுமிக்க பலஸ்தீன் விடுதலை இயக்கத் தலைவரான இவர் 1988இல் பலஸ்தீனத்திற்கு வெளியே அமைக்கப் பட்ட பலஸ்தீன் அரசின் தலைவர் ஆவார்.

1929இல் பைத்துல் முகத்திஸில் பிறந்த இவர் இளமையிலேயே துடிப் பும் வீரஉணர்வும் மிக்கவராக இருந் தார். கெய்ரோ பல்கலைக் கழகத் தில் படித்து பொறியியல் பட்டம் பெற் றார். இரண்டாம் உலகப்போருக்குப் பின் யூதர்கள் பலஸ்தீனப் பகுதிகளை ஆக்கிரமித்துக்கொண்டது இவரது

வாழ்க்கைக்குத் திருப்புமுனையாக அமைந்தது. யூதர்களை எதிர்க்கும் நடவடிக்கைகளில் ஈடுபடலானார். இதற்கு முதற்படியாக பலஸ்தீன் மாணவர் இயக்கத்தின் தலைவரானார். இளைஞர்களின் எழுச்சிமிகு தலைவராகப் பணியாற்றிய அதே சமயம் கொரில்லா போர்ப்பயிற்சியும் பெற்றார். இஸ்ரேலுக்கு எதிராகக் கொரில்லாப் போரை நடத்தலானார்.

1965இல் பிரிட்டன், ஃபிரான்ஸ் ஆகிய நாடுகள் சூயஸ் கால்வாயைக் கைப்பற்றப் போர் தொடுத்தன. இப் போரில் இஸ்ரேலும் சேர்ந்து கொண்டது. யாஸிர் அரஃபாத் எகிப்திய படையில் சேர்ந்து கடுமையாகப் போரிட்டார். எகிப்து வெற்றி பெற்றது.

பின், யாஸிர் அரஃபாத் குவைத் நாடு சென்றார். அங்கிருந்தபடியே பலஸ்தீன் இளைஞர் சக்தியைத் திரட்டி பலஸ்தீன விடுதலை இயக்கத்தை வலுப்படுத்தினார். அரபு நாடுகளில் உள்ள பல்வேறு அமைப்புகளோடும் இயக்கங்களோடும் தொடர்பு கொண்டு தங்கள் போராட்டத்துக்கு ஆதரவு திரட்டினார். தங்கள் பலஸ்தீன விடுதலைப் போராட்டத்துக்கான கொள்கைகளையும் செயல்பாடுகளையும் விளக்கிக்கூற 'அல் பத்ஹ்' எனும் வார ஏட்டைத் தொடங்கினார். பதிப்பகம் ஒன்றைத் தொடங்கி தங்கள் விடுதலை இயக்க உணர்வுகளை உலக மக்கள் அறிந்துணர வழிகண்டார். இதனால் இந்தியா உட்பட பல நாடுகள் யாஸிர் அரஃபாத்தின் நடவடிக்கையை ஆதரிக்கின்றன. உதவி ஒத்துழைப்புகளை நல்கி வருகின்றன. பலஸ்தீன விடுதலைக்குத் துணை நிற்கின்றன.

**யாஸீன்:** திருக்குர்ஆனின் அத்தியாயங்களில் யாஸீன் ஒன்றாகும். இவ்வத்தியாயம் 'யாஸீன்' எனத் தொடங்குவதால் இது 'ஸூரத்துல் யாஸீன்' எனக்குறிக்கப்படுகிறது. எல்லா வகையிலும்சிறப்புமிக்கதாக விளங்கும்யாஸீன் அத்தியாயத்தை 'கல்புல் குர்ஆன்' அதாவது 'குர்ஆனின் இதயம்' எனப் பெருமானார் சிறப்பித்துக் கூறியுள்ளார். இதிலிருந்து இதன் பெருஞ்சிறப்புப் புலனாகிறது. இதை ஓதுவதால் நன்மை கிடைக்கும். 'உங்களில் இறந்தோர்க்காக இதனை ஓதுங்கள்' எனப் பெருமானார் கூறியுள்ளதிலிருந்து, இறந்தோர்க்காக இதை ஓதுவதிலும் மிக்க பயனுண்டு. அண்ணல் நபிகள் நாயகத்தின் திருப் பெயர்களில் 'யாஸீன்' என்பதும் ஒன்றாகும்.

**யூனானி:** இது ஒருவகை மருத்துவ முறையாகும். இச்சொல் 'ஐயோனியன்' எனும் கிரேக்கச் சொல்லினடியாகப் பிறந்ததாகும். கிரேக்க நாட்டிலிருந்த மருத்துவமுறை பாரஸீக, அரபு மருத்துவ முறைகளோடு கலந்து, புதுவகையாக உருவெடுத்தது. அதுவே யூனானி மருத்துவமுறையாகும்.

யூனானி மருத்துவமுறை மத்திய கிழக்கு நாடுகளில் நீண்டகாலம் நிலவி வந்தது. முகலாயர்கள் இந்தியாவில் ஆட்சி செலுத்தத் தொடங்கிய பின்னர் இம்மருத்துவமுறை இந்தியாவில் பரவி வளரத் தொடங்கியது.

அப்போது இந்தியாவில் ஆட்சி செய்த சிக்கந்தர் லோடி ஆயுர்வேத முறையையும் யூனானி முறையையும் ஒன்றிணைத்துப் புதுவகை மருத்துவ முறையை உருவாக்கினார். அதன் வளர்ச்சிக்கும் வழி வகுத்தார். ஆனால் முகலாயர்கள் யூனானி மருத்துவ முறைக்கு மட்டுமே முக்கியத்துவம் அளித்தார்கள். இதனால் இணைப்பு முறை நாளடைவில் வலுவிழந்து விட்

டது. யூனானி முறை மட்டுமே வள மடைந்தது.

ஆங்கிலேயர் ஆட்சி பீடமேறிய பின் னர் தங்கள் மருத்துவமுறையான அலோபதிக்கு முக்கியத்துவமளித்தனர். இதனால் இந்திய வைத்திய முறை களான ஆயுர்வேத, யூனானி, சித்த மருத்துவ முறைகள் நாளடைவில் நசிய லாயின.

நாடு விடுதலை பெற்றபின் இந்திய மருத்துவ வகைகளான யூனானி, ஆயுர் வேதம்,சித்த மருத்துவ முறைகள் மீண் டும் வளரத்தொடங்கின. இவற்றின் வளர்ச்சிக்கு அரசு எல்லாவித உதவி களையும் ஒத்துழைப்புகளையும் நல்கி வருகிறது. இவற்றிற்கான ஆராய்ச்சிக் கூடங்கள் நாட்டின் பல பகுதிகளில் அரசின் அரவணைப்போடு இயங்கி வரு கின்றன. இந்திய மருத்துவ முறைகள் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் நாளுக்கு நாள் புகழ்பெற்று வருகின் றன.

**ரஸூல்:** இச்சொல்லுக்கு 'இறை தூதர்' என்பது பொருளாகும். மக்க ளுக்கு இறைவழி காட்டுவதற்கென அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட இறை தூதர்கள் நபிமார்கள் என அழைக்கப் படுவர். இவர்களின் தொகை ஆதம் (அலை) தொடங்கி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஈராக ஒரு இலட்சத்து இருபத்தி நான்காயிரமாகும்.

இந்நபிமார்களுள்ளும் மேம்பட்டவர் களாகக் கருதப்படுபவர்கள் ரஸூல் மார்கள். இவர்களின் தொகை 313 ஆகும். இவர்களே இறைவேதங்களைப் பெற்று மக்களுக்கு அளிக்கும் பேறு பெற்றவர்கள். வானவர்களையும் ரஸூல்கள் என்று சில இடங்களில் திருக்குர்ஆன் கூறுகிறது. ஆனால், நபி மார்கள் மனிதர்களாக மட்டுமே அமைவர்.

**ரமலான்:** இஸ்லாமிய மாதங்களில் ஒன்பதாவதான இது மிக முக்கிய மாத மாகும். இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளில் ஒன்றான 'நோன்பு' இம்மாதத்தில் முழுமையாக நிறை வேற்றப்படுகிறது. 'ரமலான்' என்ற சொல்லுக்குச் 'சுட்டெரித்தல்' என்பது பொருளாகும். இம்மாதம் முழுவதும் நோன்பு நோற்று தராவீஹ் எனும் சிறப்புத் தொழுகைகளை நிறைவேற்று வதன் மூலம் தங்கள் பாவங்களைச் சுட் டெரிப்பதால் இப்பெயர் பெற்றது. திருக்குர்ஆனில் ரமலான் மாதம் மட் டுமே இறைவனால் குறிப்பிடப்பட்டுள் ளது.

இம்மாதத்தின் மற்றொரு சிறப்பம் சம் இது வேதங்களின் மாதமாகவும் அமைந்துள்ளதாகும். இம்மாத முதல் நாளன்று இப்ராஹீம் (அலை) அவர் கட்கு ஸுஹ்பு (வேதம்) இறைவனால் அருளப்பட்டது. இம்மாதம் ஆறாம் நாள் மூஸா (அலை) அவர்களுக்கு இறைவனால் 'தௌராத்' வேதம் தந் தருளப்பட்டது. இம்மாதத்தின் பன்னி ரண்டாம் நாளன்று தாவூது (அலை) அவர்கட்கு ஜபூர் வேதம் இறக்கியருளப் பட்டது. ரமலான் மாதம் பதினெட் டாம் நாளன்று ஈஸா (அலை) அவர் கட்கு இன்ஜீல் வேதம்வழங்கப்பட்டது. ரமலான் இருபத்தியேழாம் நாளான லைலதுல் கத்ர் இரவன்று முஹம்மது (ஸல்) அவர்கட்கு புர்கான் எனும் திருக்குர்ஆன் அருள்வது துவங்கப்பட் டது.

இஸ்லாம் விதித்த ஐம்பெரும் கடமை களில் ஹஜ் தவிர்த்து ஏனைய நான்கு கடமைகளும் இம்மாதத்தில்தான் ஒரு சேர நிறைவேற்றப்படுகின்றன. எனவே, ரமலான் மாதம் அனைத்து மாதங்களிலும் சிறப்புடைய மாத மாகப் போற்றப்படுகிறது.

**ரூமி:** இவருடைய முழுப்பெயர் ஜலாலுத்தீன் ரூமி என்பதாகும். இவர் மாபெரும் சூஃபிக் கவிஞராகப் போற்றப்படுகிறார்.

இவர் 1207ஆம் ஆண்டு செப்டம்பர் 30ஆம் நாள் பஹாவுத்தீன் முஹம்மதுவின் இரண்டாம் மகனாக பல்கில் பிறந்தார். ஏழுவயதுப் பாலகனாக இருந்தபோதே மிகுந்த பேணுதலுடன் நடக்கலானார். இறைப்பற்று மிக்கவராகத் தொழுகை, நோன்பு முதலிய மார்க்கக் கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றி வந்தார்.

இவர் தம் கல்வியைத் தொடக்கத்தில் தம் தந்தையாரிடமிருந்தும், பின்பு ஸையித் புர்ஹானுத்தீன் திர்மீதியிடமிருந்தும் பெற்றார். மார்க்க ஞானம் நிரம்பப் பெற்ற இவர் எதிர்பாராத விதமாக ஷம்ஸுத் தப்ரீஸ் எனும் மெய்ஞ்ஞானச் செல்வரைச் சந்தித்தார். அன்று முதல் அவரையே தம் ஞான குருவாகக் கொண்டார்.

இவர் தம் குருமீது அளவிலா அன்பும் மரியாதையும் கொண்டிருந்தார். தொடக்கத்தில் இசையை வெறுத்த இவர், தம் குருவின் உறவால் இசைப் பித்தரானார். இதைக்கண்டு வருந்திய ரூமியின் நண்பர்களும், உறவினர்களும் இவர் குருவை இவரிடமிருந்து பிரித்தனர். குருவைக் காணாத ரூமி பித்துப் பிடித்தவரானார். தம் குருவைத் தேடி திமிஷ் நகர் சென்றார். அங்கும் காணாமல் வருந்தினார். தம் பிரிவாற்றாமையைக் கவிதைகளாக வடித்துத் தேறுதல் அடைந்தார். அக்கண்ணீர்க் கவிதைகளே பிற்காலத்தில் 'தீவானே ஷம்சுத் தப்ரீஸ்' என்ற பெயரில் நூலாக வந்தது.

குருவை இழந்து தவிக்கும் இவரது இரங்கத்தக்க நிலை கண்டு வருந்திய நண்பர்களும் உறவினர்களும் ஷம்ஸுத் தப்ரீஸைக் கண்டுபிடித்து இவரோடு சேர்த்தனர். ஆயினும், சில காலத்திற்குப் பின் பொறாமை காரணமாக இவர் குரு கொலை செய்யப்பட்டார்.

தம் ஞான குருவை இழந்துவிட்ட ரூமி, தம் சிந்தனையை ஞான மார்க்கம் நோக்கிச் செலுத்தினார். இவரது சிந்தனையின் செழுமையினைக் கண்ட இவர் சீடர்கள் அமரத்துவக் கவிதைகளை வடிக்குமாறு வேண்டினர். இவரும் இரவு பகலாக பேரிலக்கியம் படைக்கும் பெரும்பணியில் ஈடுபடலானார்.

இவரது அமரத்துவ இலக்கியப் படைப்பு 'மஸ்னவீ' என்ற பெயரில் வெளிவந்தது. ஆத்ம ஞானப் பேரொளிப் படைப்பான இந்நூல் உலகப் பேரிலக்கியங்களில் ஒன்றாகப் போற்றப்படுகிறது. பார்ஸீ மொழி இலக்கியங்களிலேயே இது முத்திரை இலக்கியமாகும். இது மொத்தம் 26, 600 அடிகளைக் கொண்டதாகும்.

இவர் தமது 68ஆம் வயதில் காலமானார். சிறந்த கவிஞராகவும் மாபெரும் மெய்ஞ்ஞானச் செல்வராகவும் விளங்கினார். மகாகவி இக்பால் போன்றவர்கட்கு ஆன்மீக ஞான குருவாகவும் விளங்கினார்.

**லெப்பை:** 'லப்பைக்' எனும் அரபிச் சொல்லிலிருந்து வந்த புதிய சொல்லே 'லெப்பை' என்பது. இதற்கு 'இதோ ஆஜரானேன்,' 'செவிமடுத்தேன்' என்பது பொருளாகும். இச்சொல்லினடியாகப் பிறந்த மற்றொரு சொல் 'லெவ்வை' என்பதாகும்.

இந்தியாவில் இஸ்லாம் பரவத் தொடங்கிய காலத்தில், அரபிகள் இங்குக் குடியேறி இஸ்லாமிய மார்க்கப்

பிரச்சாரப் பணியில் ஈடுபட்டனர். இங்குள்ள பலர் மார்க்கத்தில் இணைந்ததோடு, மார்க்க அறிவுபெற அவர்களின் சீடர்களாகவும் ஆயினர். இவர்களும் மார்க்கப் பிரச்சாரத்தில் அரபிகளுடன் பணியாற்றலாயினர். அப்போது அவர்கள் அரபிகள் கூறிய பணிகளைச் செய்ய ''இதோ செவிமடுத்தேன்'', 'இதோ ஆஜராகிவிட்டேன்' எனும் பொருளில் 'லெப்பைக்' எனக் கூறுவது வழக்கமாயிற்று. நாளடைவில் இச்சொல் நிலைபெற, சீடர்கள் இச்சொல்லாலேயே அழைக்கப்படலாயினர். காலப்போக்கில் அரபிகள் ஆற்றிவந்த இஸ்லாமியப் பிரச்சாரப் பணிகளை இச்சீடர்களும் அவர் வழி வந்தோரும் தொடர்ந்து ஆற்றலாயினர். இவர் தம் வழித்தோன்றல்கள் இன்றும் 'லெப்பை' என்ற பெயராலேயே அழைக்கப்படுகின்றனர். தமிழக முஸ்லிம்களில் ஒரு பகுதியினர் இப்பெயருக்குரியவர்களாக உள்ளனர். திருச்சிராப்பள்ளி மாவட்டம் பெரம்பலூர் வட்டத்தில் 'லெப்பைக் குடிக்காடு' என்ற பெயரில் ஒரு ஊர் அமைந்துள்ளது. இது முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழும் ஊராகும்.

**லைலதுல் கத்ர்:** இச்சொல்லுக்குக் 'கண்ணிய மிகுந்த இரவு' என்பது பொருளாகும். 'நெருக்கமான இரவு' என்ற பொருளும் இதற்குக் கூறப்படுகிறது.

இஸ்லாமியத் திருமறையான திருக்குர்ஆன் இந்த இரவில்தான் மனித குலத்துக்காக இறைவனால் இறக்கியருளத் துவங்கப்பட்டது. இதனால் இந்த இரவு மிகவும் கண்ணியம் வாய்ந்த இரவாகக் கருதிப் போற்றப்படுகிறது. அன்றைய இரவில் வானவர்கள் இறையருளை மக்கட்கு வாரி வழங்க பூமிக்கு வருகிறார்கள். இதனால் பூமியில் மிகுந்த நெருக்கடி ஏற்படுகிறது. இதனால் இந்த இரவு 'நெருக்கமான இரவு' என்ற பெயராலும் குறிக்கப்படலாயிற்று. இவ்விரவில் செய்யப்படும் இறைவணக்கம், ஆயிரம் மாத வணக்கப் பலனைவிட அதிகம் என இறைமறை கூறுகிறது.

'லைலதுல் கத்ர்' இரவு ரமலான் மாதம் 27ஆம் நாள் இரவாக அமைந்துள்ளது. எனினும் 'லைலதுல் கத்ர்' இரவை வழிபாடுகளுக்காக ரமலான் பிறை 20-க்குப் பின்னுள்ள ஒற்றைப்படை இரவுகளில் தேடிக் கொள்ளுங்கள் எனப்பெருமானார்கூறியுள்ளார்கள் 'லைலதுல் கத்ர்' என்பது ஒன்பது எழுத்துகளால் ஆனது. இது மூன்று முறை திருக்குர்ஆனில் வருவதால் (3+9-27) 27ஆம் நாள் இரவே லைலதுல் கத்ர் இரவு எனக் கருதப்படுகிறது. இந்த இரவில் சிறப்புத் தொழுகைகள் தொழப்படுகின்றன. இந்த இரவு ஆயிரம் மாதங்களைவிடச் சிறப்புடையது என அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறுகிறான்.

**வக்ஃபு:** இறைவனின் பெயரால் மக்களின் பொது நன்மைக்கென நிலையான சொத்தைத் தானமாக வழங்குவது 'வக்ஃபு' எனப்படும். இச்சொல்லுக்கு 'நிலைநிறுத்துதல்' என்பது பொருளாகும். இறைவன் பெயரில் குறிப்பிட்ட பொது நன்மையை நோக்கமாகக் கொண்டு நிலைநிறுத்தப்படும் சொத்து வக்ஃபுச் சொத்தாகும். இவ்வாறு அளிக்கப்படும் சொத்து இறைவன் உடைமையாகிவிடுகிறது. இதன்பிறகு வக்ஃபுச் சொத்தின் மீது அதனை வழங்கியவருக்கோ அவரின் வாரிசுதாரர்களுக்கோ எவ்வித உரிமையும் இல்லாது போய் விடுகிறது.

வக்ஃபு செய்யப்படும் பொருள் எளிதில் அழியக்கூடியதாக இருக்கக் கூடாது அழியாநிலையில் வருவாய் தரக்கூடியதாக இருத்தல் வேண்டும்.

வக்ஃபு செய்பவர்கள் தாங்கள் உயிரோடு இருக்கும்போதே தங்கள் சொத்தை வக்ஃபுக்காக எழுதி வைக்கலாம். உயில்மூலம் ஒருவர் தம் மொத்த சொத்தையும் வக்ஃபு செய்தால் அவ்வக்ஃபு சொத்தின் மதிப்பில் மூன்றில் ஒரு பங்குதான் வக்ஃபுக்குப் போய்ச் சேரும். மற்ற இருபங்குகள் வக்ஃபு செய்தவரின் வாரிசுகளுக்குப் போய்ச் சேரும்.

வக்ஃபுச் சொத்து எந்த நோக்கத்திற்காக வக்ஃபு செய்யப்பட்டதோ அந்த நோக்கம் நிறைவேறும் வகையிலேயே அவ்வக்ஃபு வருமானம் செலவு செய்யப்படும். வக்ஃபு சொத்தைப் பராமரிக்கவும் மற்ற நிர்வாகச் செலவுகளுக்கும் வக்ஃபு வருமானம் பயன்படுத்தப்படலாம்.

வக்ஃபு செய்யப்பட்ட எந்த ஒரு சொத்தையும் யாரும் விற்கவோ, வேறு வகையில் பராதீனப் படுத்தவோ செய்ய முடியாது. ஆயினும், வக்ஃபு வாரியம் அல்லது நீதி மன்றம் அனுமதித்தால் விற்று வேறு சொத்தாக மாற்ற இயலும். வக்ஃபு சொத்தின் பொறுப்பாளர் முத்தவல்லி என்று அழைக்கப்படுவார். சொத்தை வக்ஃபு செய்தவரே முத்தவல்லியாக இருக்கலாம். அவர் நியமிக்கும் நபர்களோ அல்லது அவர் வாரிசுகளோ முத்தவல்லியாக இருக்கலாம். முத்தவல்லி ஆவதற்குச் சில நிபந்தனைகள் விதிக்கப்பட்டுள்ளன.

ஒரு குறிப்பிட்ட சொத்தைத் தம் குடும்பத்துக்கென்றோ அல்லது தம் வாரிசுகளுக்கென்றோ வக்ஃபு செய்யப்படுவதும் உண்டு. இஃது 'வக்ஃபு அலல் அவ்லாத்' என அழைக்கப்படும். ஆனால் இதில் குறிப்பிட்ட ஒரு பங்கு பொது நலனுக்காக என்று இருக்க வேண்டும்.

தமிழ் நாட்டில் சுமார் 6,000 வக்ஃபுகள் உள்ளன. அவற்றின் மொத்தச் சொத்தின் மதிப்பு சுமார் முன்னூறு கோடியாகும்.

**வண்ணக்களஞ்சியப் புலவர்:** இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்களில் வண்ணம் பாடுவதில் வல்லவராகத் திகழ்ந்த முஸ்லிம் தமிழ்ப்புலவர். இவரது இயற்பெயர் ஹமீத் இப்ராஹீம் என்பதாகும். வண்ணப்பாக்கள் புனைவதில் தனித்திறம் பெற்ற புலவராக விளங்கியதால் இவருக்கு 'வண்ணக்களஞ்சியப் புலவர்' எனும் பட்டம் வழங்கப்பட்டது. இப்பட்டம் நாகூர் தர்காவில் நடந்த புலவர்கள் கூட்டத்தில் வழங்கப்பட்டதாகத் தெரிகிறது.

இப்பெரும் புலவர் இராமநாதபுரம் மாவட்டத்தில் முதுகுளத்தூருக்கு அருகில் உள்ள மீசல் எனும் ஊரில் பிறந்தவர். இவர் சுலைமான் (அலை) அவர்களின் வாழ்வை விரித்துரைக்கும் காவியமாக 'இராஜநாயகம்' நூலை இயற்றினார். இக்காவியம் இவரது தமிழ்ப் புலமைக்கும், மார்க்க ஞானத்திற்கும் அரிய சான்றாக விளங்குகிறது. இந்நூல் 2,240 விருத்தப்பாக்களால் ஆனது. இந்நூலுடன் 'தீன் விளக்கம்' எனும் பெயரில் சையிது இப்ராஹீம் ஷஹீத் (ரஹ்) அவர்களின் வாழ்வையும் வாக்கையும் விளக்கிக்கூறும் காப்பியம் ஒன்றையும் படைத்துள்ளார். இவர் படைத்த மற்றொரு நூல் 'குத்பு நாயகம்' என்பதாகும்.

இவர் நாடகத்தமிழ் வளர்ச்சிக்கும் துணை செய்துள்ளார். 'அலி பாதுஷா' நாடகம் என்பது அப்படைப்பு.

இவர் தம் வாழ்வின் பெரும்பகுதியை நாகூரிலேயே கழித்தார். இவரது புலமையைப் பாராட்டி தஞ்சாவூர் மன்னர் இவருக்குச் சிங்கமுகச் சிவிகை

யொன்றைப் பரிசு அளித்திருந்தார். இவர் தமது 81ஆம் வயதில் இராஜ சிங்கமங்கலத்திற்கருகில் தும்படைக் காக் கோட்டையில் காலமானார்.

**வஹீ:** அல்லாஹ் தன் தூதர்களுக்கு அறிவிக்கும் இறைமறைச் செய்திகளே 'வஹீ' என அழைக்கப்படுகிறது. 'வஹீ' எனும் அரபுச் சொல்லுக்கு 'இறைச் செய்தி வெளிப்படுத்தல்' என்பது பொருளாகும்.

இறைத்தூதர்களாகிய நபிமார் களுக்கு மட்டுமே வஹீ எனும் இறைச் செய்தி இறைவனால் நேரடியாகவும், வானவர் தலைவர் ஜிப்ரீல் (அலை) அவர்கள் மூலமும் அளிக்கப்படுகிறது. இந்த இறைச் செய்திகளே பின்னர் இறைமறையாகவும் அமைகிறது.

நபிமார்களுக்கு வழங்கும் இறைச் செய்தி போன்றே வலிமார்களுக்கு மன உதிப்பாகச் செய்தி அருளப்படுவதும் உண்டு. இதை அரபி மொழியில் 'இல் ஹாம்' என்று அழைப்பார்கள். ஷைத் தான் சில சமயங்களில் தவறான வழி யில் செலுத்த சில உணர்வுகளை மனித னுக்கு ஊட்டித் தூண்டுவான். இத்த கைய தீய உணர்வுகள் 'வஸ்வாஸ்' என்ற பெயரால் அழைக்கப்படுகிறது.

இறைத்தூதர்களிலேயே மிக அதிக அளவில் இறைச் செய்திகளை வஹீயா கப் பெற்றவர் பெருமானார் (ஸல்) அவர்களே ஆவார். அவருக்கு சுமார் இருபத்தி நான்காயிரத்திலிருந்து இரு பத்தியேழாயிரம் தடவைகளுக்குமேல் வஹீயாக இறைச் செய்தி வழங்கப்பட் டிருப்பதாக மார்க்க அறிஞர்கள் கணக் கிட்டுள்ளனர். இதுவே இஸ்லாமியத் திருமறையான 'திருக்குர்ஆன்' தொகுப்பாகும். மற்ற நபிமார்களுக்கு மூவாயிரம் தடவைகள் வரை வஹீயாக இறைச்செய்தி இறங்கியது.

இறைவனிடமிருந்து இறைச்செய்தி யை வஹீயாகப் பெருமானார் பெற, அவரது உள்ளத்தைப் பலப்படுத்தும் வகையில் பல நிகழ்வுகள் அவருக்கு அமைந்தன.

பெருமானார் முன் சில சமயம் விண் ணில் ஒளித்திறள்கள் ஒருங்கு திரண்டு தோன்றும். அவற்றை அவர் வியப் போடு உற்று நோக்கும்போது மறைந்துபோகும். சில சமயம் மெல் லிய குரலில் யாரோ பேசுவதுபோல் தெளிவில்லாமல் இருக்கும். செவி மடுத்து உற்றுக்கேட்கும்போது அவ் வொலி நின்று போகும். இவ்வாறு பல நாட்கள் நடந்து பெருமானார் மண உரம் பெற்ற நிலையில் ஹிரா குகையில் 'லைலதுல் கத்ர்' இரவில் ஜிப்ரீல் (அலை) நேரில் தோன்றினார். பெரு மானாரைக் கட்டியணைத்து இறைச் செய்தியை ஓதச்செய்தார். பெருமா னாரும் ஓதத்தொடங்கவே அச்செய்தி உள்ளத்தில் புகுந்து நிலைத்தது.

சில சமயங்களில் ஒலிவடிவில் இறைச் செய்தி வஹீயாய் இறக்கப்பட்டது. வேறுசில சமயங்களில் ஒளி வடிவிலும், உருவ வடிவிலும் ஜிப்ரீல் (அலை) அவர் களால் இறைச்செய்தி வஹீயாக அறிவிக்கப்பட்டது.

**வாணியம்பாடி:** வடார்க்காடு அம் பேத்கார் மாவட்டத்தில் அமைந்துள்ள சிறு நகரமாகும். இங்கு வாழும் மக்க ளில் பெரும்பாலோர் முஸ்லிம்களாவர். மைசூரை ஆண்ட ஹைதர் அலி ஆங்கி லேயர்களை இங்கு எதிர்த்துப் போரிட்டு வெற்றி பெற்றதாக வர லாறு கூறுகிறது.

இந்திய விடுதலைப் போராட்டத் தின் போதும், கிலாஃபத் இயக்கத்தின் போதும் இவ்வூர் அவற்றில் பெரும் பங்கு கொண்டு பணியாற்றியுள்ளது.

இவ்வூர் முஸ்லிம் மக்களில் பெரும்பாலோர் வணிகர்களாவர். தோல் சம்பந்தமான தொழில்கள் இவ்வூரில் முக்கியத் தொழிலாக நடைபெறுகிறது. இவ்வூர் முஸ்லிம்களில் பெரும்பாலோர் உருது மொழி பேசுகின்றனர். எனவே இவ்வூர் முஸ்லிம்கள் உருது மொழி வளர்ச்சியிலும் பெரும்பங்கு கொண்டுள்ளனர். விடுதலைப் போராட்ட காலத்தில் இங்கு மூன்று உருது மொழி இதழ்களும், ஒரு தமிழ் இதழும் வெளி வந்துள்ளன.

இவ்வூர் முஸ்லிம் வணிகர்கள் கல்வி வளர்ச்சியில் எப்போதுமே பேரார்வம் காட்டி வந்துள்ளனர். 1921ஆம் ஆண்டில் துவக்கப்பட்ட பள்ளிக்கூடம் நாளடைவில் படிப்படியாக வளர்ந்து இன்று இஸ்லாமியக் கல்லூரியாக மலர்ந்து, அறிவு மணம் வீசிவருகிறது. முஸ்லிம் ஆண் பெண்களுக்கென தனிப் பள்ளிகள் இங்குள்ளன. கல்வி பயில வசதிகள் இல்லா முஸ்லிம் ஆண்பெண் மாணவர்களுக்கு இவ்வூர் முஸ்லிம் அமைப்புகள் பொருளுதவி செய்து படிக்க வாய்ப்பேற்படுத்தி வருகின்றன.

இங்கு இருபதுக்கு மேற்பட்ட பள்ளிவாசல்கள் உள்ளன. ஆண்களுக்கும், பெண்களுக்கும் மார்க்கக் கல்வி புகட்ட தனித்தனி மதரஸாக்கள் பல இங்கு இயங்கி வருகின்றன. 'மதரஸா மத்னுல் உலூம்' என்ற பெயரில் பெண்களுக்கான அரபிக்கல்லூரி இயங்கி வருகிறது. ஹிப்ளு மதரஸா ஒன்றும் உண்டு. இவ்வூரில் உருது மொழிக் கவியரங்குகள் அடிக்கடி நடைபெறுவதுண்டு.

**ஜஃபர் ஸாதிக் (ரஹ்):** இஸ்லாமிய மார்க்க ஞான மேதைகளுள் ஒருவர். இவர் ஷியாப் பிரிவின் ஆறாம் இமாமாகவும் போற்றப்படுகிறார். இவர் ஹிஜ்ரி 80ஆம் ஆண்டில் மதீனாவில் பிறந்தார். தந்தையார் இமாம் முஹம்மது பாக்கிர் (ரஹ்). தாயார் உம்மு ஃபர்வா.

ஜஃபர் ஸாதிக் (ரஹ்) மார்க்க அறிவு மிக்கவராக விளங்கியதோடு நாவன்மை மிக்கவராகவும் திகழ்ந்தார். இவரிடம் மார்க்கக் கல்வி பெற்றவர்களில் குறிப்பிடத்தக்கவர் இமாம் அபூ ஹனீஃபா (ரஹ்) ஆவார்.

இவரது ஞானமும் நாவன்மையும் இவருக்குப் பெரும் புகழைத் தேடித் தந்தன. இவர் யாருக்கும் அஞ்சி நடக்கும் இயல்பினர் அல்லர். எனவே, அப்பாஸியக் கலீஃபா மன்ஸூர் ஆட்சியின் அவலத்தை கலீஃபாவிடமே சுட்டிக்காட்டினார். இதனால் சின முற்ற கலீஃபா இவர் மாணவரைக் கொண்டே இவருக்கு நஞ்சூட்டச் செய்து கொன்றார். 68வது வயதில் காலமான இமாம் ஜஃபர் ஸாதிக் (ரஹ்) மதீனாவிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டார்.

இவரது எழுத்தும் பேச்சுமாக சுமார் ஐந்நூறு நூல்கள் உள்ளன. அவற்றில் கவிதை நூல்களும், கனவு நூலும் அடக்கம்.

இவர் மகன்களில் ஒருவரான இஸ்மாயீல் 'இஸ்மாயிலீகள்' என்னும் பிரிவினரின் பெரும் இமாமாகக் கருதப்படுகிறார். மற்றொரு மகனான மூஸல் காலிம் (ரஹ்) ஷியா பிரிவின் ஏழாம் இமாமாகக் கருதப்படுகிறார். இவரது நினைவு நாளன்று பாத்தியா ஓதி பூரியான் வழங்கப்படுவது சில இடங்களில் வழக்கமாக உள்ளது.

**ஜகாத்:** இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளில் நான்காவது கடமை. 'ஜகாத்' எனும் அரபுச் சொல்லுக்கு 'தூய்மையாக்கல்' என்பது பொருளா

கும். தனது சொத்து வருமானத்தில் நாற்பதில் ஒரு பங்கை தானம் செய்யப் பணிப்பது ஜகாத். இதன் மூலம் தானம் செய்தது போக எஞ்சியுள்ள சொத்து தூய்மை பெறுவதால் இப் பெயர் பெற்றது எனலாம். இறைவன் தன் திருமறையில்''(நபியே)அவர்களின் பொருட்களிலிருந்து ஜகாத்தை எடுத்துக் கொண்டு அவர்களைத் தூய்மைப் படுத்தி ஆசீர்வதிப்பீராக!'' *(9:103)* எனக் கூறுகிறான். இதிலிருந்து நம் சொத்தையும், மனத்தையும் தூய்மையாக்கும் ஆற்றல் ஜகாத்துக்கு உண்டு என்பது புலனாகிறது. திருக்குர்ஆனில் பல இடங்களில் தொழுகையையும், ஜகாத்தையும் இணைத்தே இறைவன் கூறியுள்ளான்.

பைத்தியத் தன்மை இல்லாதவராக, வயதுவந்தவராக, சுதந்திரமான ஒவ்வொரு முஸ்லிமுக்கும் ஜகாத் கடமையாகும். ஜகாத் கொடுப்பவர் கடனாளியாக இல்லாமல் இருக்க வேண்டும். தம் செலவுகளெல்லாம் போக மீதமுள்ள வருமானத் தொகையில் நாற்பதில் ஒரு பங்கை ஜகாத்தாக வழங்கிவிட வேண்டும்.

ஜகாத்தை யார் யார் பெற உரிமையுள்ளவர்கள் என்பதைத் திருமறை தெளிவாகக் குறிப்பிட்டுள்ளது. 'ஜகாத் எனும் தானங்களெல்லாம், தரித்திரர்களுக்கும், ஏழைகளுக்கும், தானத்தை வசூலிப்பவர்களுக்கும், புதிதாக இஸ்லாத்தைத் தழுவியோர்க்கும், அடிமைகளை விடுதலை செய்வதற்கும், கடனில் சிக்கியவர்களுக்கும், அல்லாஹ்வுடைய பாதையில் போர் புரிவதற்கும், வழிப்போக்கர்களுக்கும் (உரித்தானதாக) அல்லாஹ் ஏற்படுத்திய கடமையாகும். *(9: 60)* என்பது திருக்குர்ஆன்.

ஜகாத் கொடுப்பவர் தமக்குரிய ஜகாத் கடமையை நிறைவேற்றுவதாக நிய்யத்துச் செய்துகொள்ள வேண்டும்.

**ஜம்ஜம்:** கஃபத்துல்லாவின் அருகில் அமைந்துள்ள குடிநீர்க் கிணற்றின் பெயர் 'ஜம்ஜம்' என்பதாகும். இதற்கு 'நில்நில்' என்பது பொருள்.

இறை ஆணைப்படி இப்ராஹீம் (அலை), தம் மனைவி ஹாஜராவையும், குழந்தை இஸ்மாயீலையும் கஃபா அருகில் விட்டுவிட்டுச் சென்று விட்டார். குழந்தை தாகத்தால் துடித்தது. தாய் ஹாஜரா நீர்தேடி ஸஃபா, மர்வா எனும் இரு குன்றுகளுக்கிடையே ஏழு முறை ஓடி நீர் தேடினார். எங்கும் நீரில்லாதது கண்டு கலங்கினார். அப்போது தாக வேட்கை மிகுதியால் துடித்த குழந்தை இஸ்மாயீல், தன் கால்களால் தரையில் ஓங்கி அடித்தது. அடித்த இடத்திலிருந்து தண்ணீர் பொங்கி ஓசையுடன் வெளிப்பட்டது. இவ்வோசை கேட்டு ஓடிவந்த அன்னை ஹாஜரா நீர் பொங்கி வெளிப்பட்டு ஓடுவதைக் கண்டு 'ஜம்ஜம்' (நில்நில்) எனக் கூவியபடி மண்ணால் அணை கட்டி நீரைத் தேக்கலானார். அன்று முதல் இந்நீரூற்று 'ஜம்ஜம்' எனும் பெயரைப் பெறலாயிற்று.

இந் நீர் நிலை பல்வேறு காலகட்டங்களில் தூர்ந்து போய் மீண்டும் மீண்டும் தூர் எடுக்கப்பட்டு பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது. அண்ணலாரின் சிறு பிராயத்தில் இக்கிணறு மீண்டும் செப்பம் செய்யப்பட்டது. இன்று ஜம்ஜம் கிணறு கஃபத்துல்லாவுக்கு அருகில் தரை மட்டத்திற்குக் கீழாக அமைந்துள்ளது. குழாய் மூலம் நீரேற்றிக் குடிக்க வழங்கப்படுகிறது.

ஜம்ஜம் கிணற்று நீரில் உலோகச் சத்துக்கள் பலவும் இருப்பதாகக் கண்

டறியப்பட்டுள்ளது. இது உடல் நல னுக்கு மிகவும் நல்லது என மருத்துவர் கள் கூறுகின்றனர்.

ஜம்ஜம் கிணற்று நீரை அருந்தும் போது தலையைத் திறந்தபடி வைத்து நின்றபடி குடிக்கவேண்டும். அப்போது 'என் அறிவு வளரவும், வருவாய் பெருக வும், நோய் தீரவும் அருள் செய்வாய், யா அல்லாஹ்' என இறைவனிடம் துஆ கேட்க வேண்டும். நம் துஆ ஏற்கப் படும் இடங்களில் ஜம்ஜம் பகுதியும் ஒன்றாகும்.

**ஜமா அத்:** முஸ்லிம்கள் இணக்கமாக ஒருங்கிணைந்து இருப்பதைக் குறிக்கும் சொல்லாக இச்சொல் அமைந்துள்ளது. ஜமாஅத் எனும் அரபுச் சொல் ''ஒன்று சேர்தல்,''''ஒற்றுமை'' என்று பொருள் படும். இறை நம்பிக்கையாளர்கள் ஒன்றுபட்டு இயங்குவதைக் குறிக்கிறது. ஒற்றுமை எனும் சயிற்றை இறுகப் பற்றிப் பிடித்து இறைவழி செல்வதை யே அல்லாஹ் விரும்புகிறான். அவர் கட்கே அருள்மழை பொழிகிறான்.

இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமை களில் ஒன்றான ஐவேளைத் தொழுகை யை ஜமாஅத்தாகத் தொழும்போது, தனியாகத் தொழும்போது கிட்டும் நன்மையைவிட இருபத்தியேழு மடங்கு அதிக நன்மை கிடைப்பதாக ஆன் றோர் கூறியுள்ளனர். ஜமாஅத்தாகத் தொழும்போதும் செயல்படும்போதும் சமத்துவமும் சகோதரத்துவமும் நிலை நிறுத்தப்படுகிறது.

**ஜமால் முஹம்மது:** இவர் தமிழகத் தின் சிறந்து விளங்கிய தோல் வணிக ரும் கல்விக் கொடையாளருமாவார். இவர் 1882இல் பிறந்தவர். இவர் தந்தையார் ஜமால் முஹியுத்தின். தாயார் கிள்று பீவி. ஜமால் முஹம்மது பள்ளிக் கல்வியை முடித்துக் கொண்டு தம் தந்தையாரின் வணிக நிறுவனத் தில் பணியாற்றலானார். இயற்கை யிலேயே அறிவுக்கூர்மையும், ஆற்றலு மிக்க ஜமால் முஹம்மது தம் தந்தை யாரைப் போலவே தொழிலில் தேர்ச்சி பெற்றார். தோல் தொழிலில் விரைந்து முன்னேறினார்.

இவர் ரஷியாவைத் தவிர உலக நாடு கள் பலவற்றுக்கும் சென்றுள்ளார். அங்குள்ள ஆட்சித் தலைவர்களையும், அரசியல் தலைவர்களையும், வணிகப் பிரமுகர்களையும் கண்டு பேசியுள்ளார். அன்றைய துருக்கிப் பிரதமர் இவர் தம் அறிவாற்றலைக் கண்டு வியந்து, இவ ரைத் துருக்கிக்கே வந்துவிடும்படியும், உயர்பதவி தருவதாகவும்வேண்டினார். தம் தாய்நாட்டில் பணியாற்றவே விரும்புவதாகக் கூறி மறுத்துவிட்டார்.

இவர் இந்தியா திரும்பிய பின்னர் உலக நாடுகளின் அரசியல் போக்கை ஆய்ந்து, இரண்டாம் உலகப்போர் மூளுவது தவிர்க்க முடியாதது என்ப தைக் கணித்தறிந்தார். இதைத் தந்தைக்குணர்த்தி போருக்கு முன்ன தாகவே தோலை வாங்கிப் பெருமள வில் சேமிக்கச் செய்தார். இவர் கணிப் பின்படியே போர் மூண்டது. தோல் விலை உயர்ந்தது, பலகோடி லாபத் தை இவர் நிறுவனத்துக்குத் தேடித் தந்தது.

இவர் காந்திஜி இடமும், ஆகாகானி டமும் பெரும் அன்பு வைத்திருந்தார். இவர் இந்திய சட்டசபையின் அங்கத் தினராக இருந்து அரும்பணியாற்றி னார். லண்டனில் நடைபெற்ற வட்ட மேசை மாநாட்டிற்கும் இந்தியப் பிரதி நிதிகளில் ஒருவராகச் சென்று வந்தார்.

தமிழ்நாட்டில் 1906ஆம் ஆண்டில் முஸ்லிம் லீக் அமைப்பு உருவாக்கத்தில் பெரும் பங்கு கொண்டார். 1928ஆம்

ஆண்டிலிருந்து 1940 வரை அதன் தலைவராகவும் இருந்தார்.

தமிழக முஸ்லிம்களின் கல்வி வளர்ச்சியில் பேரார்வம் மிக்கவராக விளங்கினார். சென்னை மவுண்ரோடில் உள்ள அன்றைய முகமடன் காலேஜை மூட அரசு முயன்றது. இவரது இடைவிடா பெருமுயற்சியின் விளைவாக அக்கல்லூரி நிலைநிறுத்தப்பட்டது. மேலும், புதிய புதிய பள்ளிகளையும் மார்க்கக் கல்வி புகட்டும் மதரஸாக்களையும் உருவாக்க முயன்றார். இதற்காகத் தாராள நன்கொடைகளை வாரி வழங்கினார்.

இவரது பெருமுயற்சியால் சென்னை பெரம்பூரில் ஜமாலியா அரபிக் கல்லூரி (இப்பொழுது தாருல் உலூம் ஜமாலிய்யா) மாபெரும் மார்க்கக் கல்வி தரும் அமைப்பாக உருவாயிற்று. திருச்சியில் இவர் பெயரால் ''ஜமால் முஹம்மது'' கல்லூரியும், மதரஸாவும் அமைந்துள்ளன.

**ஜவாதுப் புலவர்:** இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்களில் சிலேடைக் கவி பாடுவதில் சிறந்தவர். இவரது இயற்பெயர் முஹம்மது பீர் ஜவ்வாது என்பதாகும். 1745ஆம் ஆண்டு எமனேசுவரத்தில் பிறந்தவர். இவர் தாயின் வயிற்றில் இருந்தபோதே தந்தையை இழந்தார். சேதுபதி குடும்பக் குழந்தைகளுக்கு ஆசிரியராக இருந்த இவர் மாமாவே இவரை வளர்த்துப் படிக்க வைத்தார். தம் மாமாவிடமும், திருவாவடுதுரை ஆதினம் சோமசுந்தரத் தம்பிரானிடமும் தமிழ் பயின்றார். தமிழோடு வடமொழியிலும் பெரும் புலமை பெற்றார். ஏழு வயதிலேயே கவி புனையலானார். இவரது வாக்குப் பலிப்பைக் கண்டவர்கள் இவரிடம் அச்சமும் மரியாதையும் கொண்டனர்.

இவர் முஹிய்யுத்தீன் ஆண்டகை மீது பாடிய பிள்ளைத் தமிழ், மற்றும் மதீனத்தந்தாதி, நாகைக் கலம்பகம் ஆகிய படைப்புகள் குறிப்பிடத்தக்கவையாகும். இவர் வண்ணக் கவிகள் பலவும் பாடியுள்ளார். தமது 63-வது வயதில் காலமானார். இவரது உடல் பரமக்குடி பள்ளி வாயிலருகே நல்லடக்கம் செய்யபட்டுள்ளது.

**ஜனாஸா:** இறந்த ஒருவரது உயிரற்ற சடலம் ஜனாஸா என அழைக்கப்படுகிறது. இறந்த ஒருவரின் உடலைக் குளிப்பாட்டி, கபனிட்டு, அவருக்காக ஜனாஸாத் தொழுகை தொழுது அவரை கப்ருள் இடுவது ஒரு முஸ்லிமின் இன்றியமையாக் கடமையாகும்.

மாற்றுச் சமயத்தவரின் சடலம் தூக்கிவரப்பட்டாலும் ஒரு முஸ்லிம் எழுந்து நின்று மரியாதை செய்ய வேண்டும். யூதர் ஒருவரின் பிரேதம் எடுத்துச் செல்லப்பட்டபோது பெருமானார் அவ்விதம் செய்துள்ளார். ஒரு முஸ்லிம் ஜனாஸா தூக்கிவரப்பட்டால் அதனுடன் சென்று அடக்கம் முடியும்வரை இருக்க வேண்டும். அவ்விதம் செய்யின் அவனது ஆயிரம் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. ஆயிரம் நன்மைகள் இறைவனால் அளிக்கப்படுகின்றன. ஜனாஸா உள்ள சந்தூக்கை ஒருவன் நாற்பது அடி தூக்கிச் சென்றால் அவன் நாற்பது நன்மைகளைப் பெறுவான் என்பது ஹதீது வாக்கு. ஜனாஸாவைக் கப்ருள் வைத்த பின்னர் மூன்று பிடி மண் போடுவது நன்மையாகும். கப்ர் மண்ணால் மூடப்பட்டவுடன் அதன் மீது பச்சை இலைகளைக் கொண்ட செடிகளையோ, சிறு கொப்புகளையோ நட்டுவைப்பது நல்லது. அதன் பச்சை காயும் வரையுள்ள காலத்தில் கப்ரில்

உள்ளவருக்கு கப்ரு வேதனை குறை வாக இருக்கும் என்பது மரபு.

இறந்தவர் சடலத்தைப் பள்ளிவாயி லில் வைத்துத் தொழும் தொழுகை 'ஜனாஸா'த் தொழுகையாகும். ருகூஉ ஸுஜூது கஃதா, இல்லாமல் நின்ற படியே நான்கு ரகஅத் தொழுகை நான்கு தக்பீர்களுடன் தொழவேண் டும். இத்தொழுகை பர்ளு கிஃபா என அழைக்கப்படும்.

**ஜாகிர் ஹுஸைன்:** இந்தியாவின் மூன் றாவது ஜனாதிபதியாக இருந்தவர். இவரின் இயற்பெயர் ஜாகிர் ஹுஸைன் கான் என்பதாகும். இவர் இந்தியாவின் தலைசிறந்த கல்வியாளர்களில் ஒருவரா கத் திகழ்ந்தார்.

இவர் 1897ஆம் ஆண்டு ஹைதரா பாத்தில் பிறந்தார். இவருக்கு ஒன்பது வயது ஆகும் முன்பே இவர் தந்தை இறந்துவிட்டார். தம் பள்ளிக்கல்வியை ஹைதராபாத்திலும், பின்னர் உத்திரப் பிரதேசத்திலும் பயின்றார். பின்னர் இவர் கல்லூரிக் கல்வியை அலீகார் முஸ் லிம் பல்கலைக்கழகத்தில் முடித்தார். பின்பு, அங்கேயே பொருளாதார விரி வுரையாளராக இருந்தார்.

காந்திஜி, அலீ சகோதரர்கள் ஆகி யோரின் பேச்சாலும் எழுத்தாலும் ஈர்க்கப்பட்டு, விடுதலைப் போராட்ட உணர்வு பெற்றார். இதன் விளைவாக விரிவுரையாளர் வேலையை விட்டு விட்டு, தேசியக் கல்விக் கொள்கையின் அடிப்படையில் டெல்லியில் ஜாமியா மில்லியா தேசியக் கல்லூரியைத் தொடங்கி நடத்தினார்.

ஜெர்மனியில் பொருளாதார ஆய்வுக் கென டாக்டர் பட்டம் பெற்றார். பின் னர் ஜாமியா மில்லியாப் பல்கலைக்கழ கத்தின் துணை வேந்தராக இருப தாண்டுகள் அரும் பணியாற்றினார். இந்தியப் பண்பாட்டு அடிப்படையில் இந்தியாவுக்கென தனிக் கல்விக் கொள் கை வகுக்கவும், அமல்படுத்தவும் காந்திஜியோடு இணைந்து பாடு பட் டார்.

நாடு விடுதலைப்பெற்றபின்னர், அலீ கார் பல்கலைக்கழகத்தின் துணை வேந் தரானார். 1952இல் மாநிலங்களவை உறுப்பினரானார். அதன்பின் 1957இல் பீகார் மாநில ஆளுநரானார். பின் 1962இல் இந்தியக் குடியரசுத் துணைத் தலைவராகப் பொறுப்பேற்றார். இவர் கல்வி, அரசியல் துறைகளில் ஆற்றிய அரும் பணிக்காகப் 'பாரத ரத்ன' எனும் மிக உயர்ந்த விருதளித்துப் பாராட்டப்பட்டார். 1967இல் இந் தியக் குடியரசுத் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

இவர் இந்து முஸ்லிம் ஒற்றுமைச் சின் னமாக மதிக்கப்பட்டார். இவர் தமது பதவிக்காலம் முடியும் முன்பே காலமா னார். இவரது உடல் ஜாமியா மில்லியா பல்கலைக்கழக வளாகத்தினுள் நல் லடக்கம் செய்யப்பட்டது.

இவரது பெயரில் கல்லூரி ஒன்று இளையான்குடியில் இயங்கி வருகிறது.

**ஜித்தா:** இது சவூதி அரேபியாவிலுள்ள மிக முக்கிய துறைமுக நகரமாகும். இங் குள்ள மாபெரும் துறைமுகமும், பன் னாட்டு விமான தளமும் சவூதியின் வாசற்படியாக அமைந்துள்ளதென லாம். 'ஜித்தா' என்ற சொல்லுக்கு 'வழி' என்று ஒரு பொருள் கூறப்படு கிறது. மக்காவுக்கு எழுபது கிலோ மீட்டர் தொலைவில் உள்ள இந்நகரில் 'ஹவ்வா' அன்னையின் நாற்பதடி கப்ர் அமைந்துள்ளது.

ஹஜ்ஜுக்கு வரும் புனிதப் பயணிகள் இங்கிருந்து மக்கா நோக்கித் தரை மார்க்கமாகச் செல்கின்றனர்.

**ஜிப்ரீல்:** வானவர் தலைவர் 'ஜிப்ரீல்' என அழைக்கப்படுகிறார். ஜிப்ரால் என்ற சொல்லுக்கு 'இறை அடியார்' எனப் பொருள் கூறப்படுகின்றது. அல்லாஹ்வுக்கு மிக நெருக்கமான வானவர் நால்வரில் இவர் மிக முக்கியமானவர் ஆவார்.

இறை தூதர்களுக்கு 'வஹீ' எனப்படும் இறைச் செய்தி இவர் மூலமே அளிக்கப்பட்டது. இறைவன் தன் திருமறையில் ஜிப்ரீல் (அலை) அவர்களை 'ரூஹ்' எனும் அடைமொழி தந்தே குறிப்பிட்டுள்ளான்.

இவர்களின் உருத் தோற்றத்தை மூஸா (அலை), ஈஸா (அலை), ஜக்கரியா (அலை), முஹம்மது (ஸல்) ஆகியோர் மட்டுமே கண்டுள்ளனர். மற்ற நபிமார்களுக்கு இவர் தோற்றம் தந்ததில்லை. அண்ணலார் அவர்கள் ஜிப்ரீல் (அலை) அவர்களின் முழுத்தோற்றத்தை ஹிரா குகையில் ஒரு முறையும், விண்ணேற்றத்தின்போது ஒரு முறையுமாக இரு தடவைகள் கண்ணால் கண்டுள்ளார்.

ஜிப்ரீல் (அலை) அவர்களைக் காணும் சக்தி மனிதக் கண்களுக்கு இல்லை. எனவே அவர்கள் வெவ்வேறு வடிவுகளில் இந்நபிமார்களோடு உரையாடி இறைச்செய்தி வழங்கிச் செல்வது வழக்கம்.

**ஜின்னாஹ்:** பாகிஸ்தானின் தந்தையாகப் போற்றப்படும் முஹம்மது அலி ஜின்னாஹ் 1876 டிசம்பர் 25ஆம் நாளன்று கராச்சியில் பிறந்தார். இவர் தந்தையார் பெயர் ஜின்னாஹ் பூஞ்சா என்பதாகும். அவர் மிக மெல்லிய உடலை உடையவராக, உயரமாக இருந்தார். எனவே 'மெலிந்த, உயரமானவர்' எனப் பொருள்படும் 'ஜின்னாஹ்' எனும் குஜராத்திப் பெயரால் அழைக்கப்பட்டார். இவருடன் பிறந்தவர்கள் மூவர். இவரே மூத்தவர். இவர் சகோதரி பாத்திமா இவருடன் இறுதி வரை பணியாற்றியவர்.

இவர் லண்டனில் பாரிஸ்டர் படிப்புப் படித்துக்கொண்டிருந்தபோதே. இவர் மனைவியும், அடுத்து இவர் தாயும் இறந்தனர். அதைத் தொடர்ந்து இவர் தந்தையார் வாணிகம் மிகப்பெரும் இழப்புக்கு ஆளாகியது.

இவர் லண்டனில் படித்துக் கொண்டிருந்தபோதே சுதந்திர வேட்கை மிக்கவராக இருந்தார். விடுதலைப் போரட்ட வீரர்களுக்கும், தலைவர்களுக்கும் உறுதுணையாய் இருப்பதைப் பெருமையாய்க் கருதிச் செயல்பட்டார். அப்போது தேர்தலில் ஈடுபட்டுப் போட்டியிட்ட தாதபாய் நௌரோஜியின் வெற்றிக்குப் பெருந்துணையாய் இருந்தார்.

இந்தியா திரும்பிய ஜின்னாஹ் தம் குடும்பப் பொருளாதார நிலை சீர்கெட்டிருப்பதைக் கண்டார். மனம் தளராமல் கராச்சியில் தம் வழக்குரைஞர் தொழிலை மேற்கொண்டார். விரைவிலே தம் தொழிலுக்குரிய இடமாகப் பம்பாய் நகரைத் தேர்ந்தெடுத்து, அங்கே வழக்குரைஞர் தொழிலைத் தொடங்கினார்.

சிலகாலம் தற்காலிக நீதிபதி பதவியும் வகித்தார். ஆயினும் அதில் திருப்தி ஏற்படாததால், தம் திறமைக்கேற்ப வருவாய் அளிக்க வல்ல வழக்குரைஞர் தொழிலையே தொடர்ந்து மேற்கொண்டார். விரைவிலே தம் தொழிலில் பேரும் புகழும் பெரும் வருவாயும் பெற்றார். இவர் பார்ஸீப் பெண்ணை

இஸ்லாத்தில் சேர்த்து மணந்து கொண்டார்.

இவர் விடுதலை இயக்கத்தில் ஆர்வம் மிக்கவராக இருந்தார். எனவே, காங்கிரஸ் பேரியக்கத்திலும், தம்மை இணைத்துக் கொண்டிருந்தார். ஆனால் நாளடைவில் அதன் போக்கில் அதிருப்தி அடைந்து, முஸ்லிம் லீக் அமைப்பின் தலைவராகி அதனை ஒரு பலமான இயக்கமாக உருமாற்றினார். பின்னர், பாகிஸ்தான் எனும் தனிநாடு பெறுவதில் அக்கறை கொண்டார். அவ்வாறே இந்தியா விடுதலை அடைந்த போதே பாகிஸ்தானும் தனிநாடாக விடுதலை பெற்றது. பாகிஸ்தான் நாட்டின் முதல் கவர்னர் ஜெனரல் ஆனார். ஓராண்டிற்குள்ளாக 1948 செப்டெம்பர் 11இல் காலமானார். இவரது உடல் கராச்சியில் நல்லடக்கச் செய்யப்பட்டது. அவரது கப்ர் மீது அழகிய மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது.

**ஜிஹாத்:** இதற்கு 'முயலுதல்', 'உழைத்தல்' எனப் பொருள்கள் உண்டு. இறைவழியில் மேற்கொள்ளும் முயற்சிகளும், தீனின் வழியில் தீவிரமாக உழைத்துப் பாடுபடுவதும் 'ஜிஹாத்' ஆகும்.

தனது சுய நல வேட்கையை அறிவால் வென்று பொது நல உணர்வை பெறத் தன் உணர்வோடு போராடி வெற்றி பெறுவது, தங்கள் அறியாமையின் காரணமாக இறைவழி பிறழ்ந்து வாழும் மக்களைத் தடுத்துத் திருத்தித் தீனின் வழிக்குத் தடம் மாற்றிக் கொண்டு வருவது; தான் உழைத்துத் தேடிய செல்வத்தைத் தீனின் பாதையில் மன உவப்போடு செலவிடுவது; மக்களிடையே மார்க்கப் பிரச்சாரம் செய்து, அவர்களுக்கு அறிவுத் தெளிவை உண்டாக்கி இறைவழியில் நற்செயல்செய்யத்தூண்டுவது; இறைநெறியைப் போற்றிக் காக்க உழைப்பது; அம்முயற்சியில் இன்னுயிர் ஈவது ஆகிய செயல்கள் அனைத்தும் ஜிஹாத் ஆகும். இறைநெறிகாக்கும் முயற்சியில் இறப்போர் 'ஷஹீத்' எனும் சிறப்புப் பெயர் பெறுவர்.

**ஜும்ஆ:** வெள்ளிக்கிழமையைக்குறிக்கும் சொல்லாக ஜும்ஆ எனும் சொல் அமைந்துள்ளது. இந்நாளில் பள்ளி தோறும் மக்கள் தொழுகைக்கெனக் குழுமுவர். இறை வணக்கமும், இறை வேட்டலும் நிகழ்த்தி இறையருள் வேண்டும் புனித நாளாகவும் வெள்ளிக்கிழமை ஜும்ஆ அமைந்துள்ளது.

உலகப் படைப்பை முழுமையாக்கிய இறைவன் வெள்ளிக்கிழமை அன்று தான் சூரியனை உதிக்கச் செய்தான். எனவேதான் 'விடியும் நாள்களிலெல்லாம் சிறப்புடைய நாளாக வெள்ளிக்கிழமை அமைந்துள்ளது' என நாயகத் திருமேனி கூறினார். ஆதமை அல்லாஹ் படைத்ததும், மண்ணுலகில் இறக்கியதும் இந்நாளில்தான். ஆதம் இறை மன்னிப்பைப் பெற்றதும் வெள்ளிக்கிழமையில்தான். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அன்னை ஆமினாவின் வயிற்றில் சூல் கொண்டதும் இந்நாளில் தான். இறுதிநாளில் இறந்தோரை எழுப்பும் 'ஸூர்' எனும் ஒலி எழுப்பும் நாளும், இறுதி மறுமை விசாரணை நாளும் வெள்ளியன்றே அமையும்.

இந்நாள் ஏழைகளுக்கு 'ஹஜ்' ஆகவும், ஃபக்கீர்களுக்கு 'ஈத்' பெருநாளாகவும் அமைந்துள்ளது என அண்ணலார் கூறியுள்ளார்.

பெருமானார் குபாவிலிருந்து மதினா நோக்கிப் பயணம் செய்தநாள் வெள்ளிக்கிழமை. நண்பகலில் ஸலீம் பள்ளத்தாக்கை அடைந்து, தம் தோழர்

களோடு ஜும்ஆ தொழுதார். அது முதல் ஜும்ஆ தொழுகை நடைமுறைக்கு வந்தது என்பர். அங்குள்ள பள்ளி இன்றும் 'மஸ்ஜிதுல் ஜும்ஆ' என்றே அழைக்கப்படுகிறது.

**ஸஃபா, மர்வா:** கஃபத்துல்லாவுக்கு அருகில் அமைந்துள்ள இரு சிறு குன்றுகளின் பெயர் ஸஃபா, மர்வா என அழைக்கப்படுகிறது. ஆதி மனிதர் ஆதம் (அலை) அவர்களும் ஹவ்வாத் தாயாரும் எதிர் எதிராக இக்குன்றுகளின் மேல் அமர்ந்திருந்ததாகக் கூறப்படுகிறது.

இந்தக் குன்றுகளுக்கு அருகேதான் இப்ராஹீம் (அலை), தம் துணைவியார் ஹாஜராவையும், அன்புக் குழந்தை இஸ்மாயீலையும் தனியே விட்டுச் சென்றார். குழந்தை இஸ்மாயீல் தாக வேட்கையால் அழுதபோது அன்னை ஹாஜரா நீர் தேடி இந்த இரு குன்றுகளிடையே ஏழுமுறை ஓடித் துடித்தார். குழந்தை இஸ்மாயீல் துடித்து அழுத போது தன் காலைத் தரையில் அடிக்க நீர் பொங்கியது. அதுவே ஜம்ஜம் நீர் நிலை. அதுவும் ஸஃபா-மர்வாக் குன்றுகளுக்கு அருகேதான் அமைந்துள்ளது. இன்றும் உம்ரா செய்வோராக இருந்தாலும், ஹஜ் கடமையை நிறைவேற்றுவோராக இருந்தாலும் இக்குன்றுகளுக்கிடையே ஏழுமுறை தொங்கோட்டம் ஓடுவது வழக்கமாக உள்ளது. இச்செயலும் வணக்கத்தின்பாற்பட்ட செயலாகவே கருதப்படுகிறது. இங்கிருந்து கேட்கும் துஆக்கள் இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

இவ்விரு குன்றுகளும் சொர்க்கத்தின் இரு வாசல்களாகும் எனக் கூறப்படுகிறது.

**ஸபூர்:** நபிமார்களில் ஒருவரான தாவூது (அலை) அவர்கட்கு இறைவனால் அருளப்பட்ட வேதம் ஸபூர் வேதமாகும். இறைவனைப் புகழும் 150 புகழ்ப் பாக்களைக் கொண்டதே ஸபூர் வேதம். இதனை எழுபது வகையான இராகங்களில் இனிய குரலில் தாவூது(அலை) அவர்கள் பாடுவாராம். இவ்வேதம் 'யூனான்' மொழியில் அருளப்பட்டதாகக் கூறப்படுகிறது.

**ஸலவாத்:** புகழ்தல் எனும் பொருளில் ஸலவாத் எனும் அரபிச் சொல் அமைந்துள்ளது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் புகழ்தலே ஸலவாத் ஆகும். ''நிச்சயமாக அல்லாஹ்வும் அவனுடைய மலக்குகளும் நபியின் மீது ஸலவாத்துச் சொல்கிறார்கள்; (ஆகவே) நம்பிக்கையாளர்களே! நீங்களும் அவர் மீது ஸலவாத்துச் சொல்லி ஸலாமும் கூறிக் கொண்டிருங்கள்'' (33:56) என்பது திருக்குர்ஆன் வாக்கமுதாகும். இதில் 'அவர்' என இறைவன் மதிப்போடு குறிப்பிடுவது அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களையே யாகும். ஸலவாத்துடன் ஸலாமும் கூறுபவர்கள் இறைவனிடமிருந்து மிகுந்த நன்மையைப் பெறுவர் என்பது ஆன்றோர் வாக்கு. இருபத்தைந்து வகை ஸலவாத்துக்களும் பதினைந்து வகை ஸலாமும் இருப்பதாகக் கூறுவர்.

**ஸலாத்:** தொழுகையைக் குறிக்கும் சொல்லாக 'ஸலாத்' எனும் சொல் அமைந்துள்ளது. ஐம்பெரும் இஸ்லாமியக் கடமைகளில் இரண்டாவதாக அமைந்திருப்பது தொழுகையாகும். ஒவ்வொரு முஸ்லிமும் ஐவேளைத் தொழுகையைக் கட்டாயம் கடைப்பிடித்தொழுக வேண்டும் என்பது இறைக் கட்டளையாகும். தொழுகையைப் புறக்கணிப்பது இஸ்லாத்தையே புறக்கணிப்பதாகும். மனிதனைப் பாவங்களிலிருந்து மீட்பது தொழுகையே யாகும்.

''நிச்சயமாகத் தொழுகை மானக்கேடான காரியங்களிலிருந்தும் பாவங்களிலிருந்தும்(மனிதனை)விலக்குகிறது'' (29:45) என்பது திருக்குர்ஆன் வாசகம் ஆகும். மேலும் திருமறை, உள்ளச்சத்தோடு தொழுபவர்கள் வீணான செயல்களிலிருந்து விலகியே இருப்பார்கள் எனக் கூறியுள்ளது.

ஒரு நாளைக்கு ஐவேளை குளித்தால் ஒருவன் உடலில் எவ்வாறு அழுக்குத் தங்காதோ, அதேபோன்று ஐவேளைத் தொழுபவனிடம் பாவம் தங்காது என்பது பெருமானார் வாக்காகும்.

தொடக்கக் காலத்தில் பெருமானாரும் இஸ்லாத்தை ஏற்ற முஸ்லிம்களும் காலை, மாலை ஆகிய இரு வேளைகளில் மட்டுமே தொழுது வந்தனர். பெருமானார் மிஃராஜ் இரவில் விண்ணுலகு சென்று வந்த பிறகே இறையாணைப்படி ஐவேளைத் தொழுகை விதியாகியது. விண்ணேற்றம் நிகழ்ந்த மறுநாள் ஜிப்ரீல் (அலை) ஐவேளைத் தொழுகை எப்போது எப்படி நடைபெற வேண்டும் எனப் பெருமானாருக்குச் சொல்லித் தர, அதுவே இன்றளவும் இஸ்லாமியக் கடமையாகப் பின்பற்றப்பட்டு வருகிறது.

ஐவேளைத் தொழுகைகளாவன :

1. விடியும் முன் தொழும் 'பஜ்ர்' தொழுகை, 2. கதிரவன் உச்சியிலிருந்து சாயத் தொடங்கிய பின்னர் தொழும் 'ளுஹர்' தொழுகை, 3. பிற்பகல் தொழும் 'அஸர்' தொழுகை, 4. கதிரவன் மறைந்தபின் தொழும் அந்தித் தொழுகையான 'மக்ரிப்' தொழுகை, 5. முன்னிரவுத் தொழுகையாகிய 'இஷா' தொழுகை ஆகியவை ஐவேளைத் தொழுகைகளாகும்.

தொழும் இடம் தூய்மையாக இருக்க வேண்டும். தனியாகவும் தொழலாம், பலரோடு சேர்ந்தும் தொழலாம். பள்ளிவாசலில் பலரோடு சேர்ந்து தொழுதலே சிறப்புடையதாகும்.

உள்ளத் தூய்மையோடு உடல் தூய்மைக்கு ஒளுச் செய்த பின்னரே தொழுகையைத் துவக்க வேண்டும்.

ஒவ்வொரு வேளைத் தொழுகையும் தவறாது (ஃபர்ளு) தொழ வேண்டிய ரகஅத்துக்கள் வருமாறு:

பஜ்ர் (இரண்டு ரகஅத்துகள்), ளுஹர் (நான்கு ரகஅத்துகள்), அஸர் (நான்கு ரகஅத்துகள்), மஃரிப் (மூன்று ரகஅத்துகள்), இஷா (நான்கு ரகஅத்துகள்) ஆகும். இஷா தொழுகையின் போது மூன்று ரகஅத்துகள் 'வித்ரு' (வாஜிப்) தொழுகையும் தொழப்படும். இதற்கு மேலும் ஒவ்வொரு தொழுகையின்போதும் பிற சமயங்களிலும் பெருமானார் வழிமுறையைப் பின்பற்றி நஃபில் (விருப்பத்) தொழுகை எவ்வளவு வேண்டுமானாலும் தொழுது கொள்ளலாம். ஹனஃபி மத்ஹபுக்கும் ஷாஃபி மத்ஹபுக்குமிடையே சுன்னத் தொழுகையில் எண்ணிக்கை வேறுபாடு உண்டு. ஃபர்ளும் சுன்னத்தும் சேர்ந்த மொத்த ரகஅத்துகள் ஹனஃபி 40 ஆகும். ஷாஃபி 34 ஆகும்.

பொழுது புலர்ந்து கொண்டிருக்கும் போதும், கதிரவன் உச்சியில் இருக்கும் போதும், ஈதுப்பெருநாட்கள் வெள்ளிக்கிழமை ஜும்மா ஆகியவற்றின்போது கதீப் மிம்பரில் குத்பா ஓதும்போதும் தொழக்கூடாது.

நள்ளிரவில் தஹஜ்ஜத் தொழுகை தொழுவது சுன்னத் ஆகும். இத்தொழுகை குறைந்தது இரண்டு ரகஅத்துகள் இருக்கவேண்டும். பன்னிரண்டு ரகஅத்துகள் சிலாக்கியமானது ஆகும். அதிகபட்சம் எத்தனை ரகஅத்துகள் வேண்டுமானாலும் தொழலாம்.

**ஸலாம்:** 'அஸ்ஸலாமுஅலைக்கும்' என்பதின் சுருங்கிய வடிவமே 'ஸலாம்' என்பதாகும். இது முஸ்லிம்கள் ஒருவரையொருவர் சந்திக்கும்போது கூறிக் கொள்ளும் முகமன் வாழ்த்துரையாகும். இதற்கு 'உங்கள் மீது இறைவனின் சாந்தி உண்டாவதாக' என்பது பொருளாகும்.

ஆதம் (அலை) சொர்க்கப் பூங்காவில் உலவி வரும்போது அங்கிருந்த வானவர்களை நோக்கி 'அஸ்ஸலாமு அலைக்கும் யா மலாயிகத்தல்லாஹ்' என்று கூறினார். அதற்கு வானவர்கள் 'வ அலைக்கு முஸ்ஸலாம் வ ரஹ்மத்துல்லாஹ்' என மறுமொழி கூறினர். இதையே அல்லாஹ் ஆதம் (அலை) வழியினர்கது இறை நம்பிக்கையாளரின் முகமன் உரையாக ஆக்கினான். அன்று முதல் இன்றுவரை அவ்வாறே இறை நம்பிக்கையாளர்களிடையே ஸலாம் நிலைபெற்று வருகிறது.

நம்மை நோக்கி ஒருவர் 'அஸ்ஸலாமு அலைக்கும்' என்று கூறினால், அதற்கு மறுமொழியாக 'வ அலைக்கு முஸ்ஸலாம் வ ரஹ்மத்துல்லாஹி வ பரக்காத்துஹூ' என்று பதில் ஸலாம் கூறுவது சிறப்பானதாகும். இதற்கு 'அல்லாஹ்வின் சாந்தியும் அவனது அருட்பேரும் நற்பாக்கியங்களும் உண்டாவதாக' என்பது பொருளாகும்.

ஸலாம் கூறுவதில் முந்திக் கொள்வதும், உரக்கக் கூறுவதும் சிறப்புடையதாகும். தொழுகையின் இறுதியில் தோள் பக்கமாக இருபுறமும் திரும்பி ஸலாம் கூறுவதன் மூலம் வானவர்களுக்கு ஸலாம் கூறப்படுகிறது. இறந்தவர்களுக்கு ஸலாம் கூறுவது கடமையாகும். ஸலாம் கூறும்போது தலையைத் தாழ்த்தவோ அன்றி கைகளை உயர்த்தவோ கூடாது.

**ஷஹீது:** உயிர்த் தியாகம் செய்த தியாகியைக் குறிக்கும் சொல்லாக 'ஷஹீது' எனும் சொல் அமைந்துள்ளது. இறை வழியில் அறப்போர் செய்து உயிர்த்தியாகம் செய்பவர்கள் இப்பெயரால் அழைத்துப் போற்றப்படுவர். இறைவழியில் உயிரிழந்தவர்கள் அல்லாஹ்வின் நற்கூலியைப் பெறுபவர்களாக உள்ளனர் என்பது ஆன்றோர் வாக்காகும்.

**ஷாமு ஷிஹாபுத்தீன் (வலி):** இஸ்லாமியச் சட்ட அடிப்படையில் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துகளைப் பாக்களாக வடித்துத் தந்தவர் ஷாமு ஷிஹாபுத்தீன் (வலி). இவர் 1044ஆம் ஆண்டு ஹிஜ்ரி காயல்பட்டனத்தில் பிறந்தார். இவர் காயல்பட்டனம் சுலைமான்(வலி) அவர்களின் மூன்றாவது மகனாவார்.

இஸ்லாமிய மக்களில் ஒரு சிலர் இறைச் சட்டங்களைச் சரிவர உணராதவர்களாக நெறிபிறழ்ந்து வாழ முற்பட்டனர். அத்தகையவர்கட்கு இறைநெறி புகட்டி, இறைச் சட்டங்களை நினைவூட்டி, அவர்களை ஷரீயத் வழியில் திருப்பக் கவிதையைக் கையாண்டு வெற்றி பெற்றவர் ஷாமு ஷிஹாபுத்தீன். இவர் இப்பணியை மேற்கொள்ள கனவு மூலம் இறைக்கட்டளை பிறந்ததாகவும் கூறப்படுகிறது.

இஸ்லாத்தின் பெயரால் தமிழ்பேசும் முஸ்லிம் மக்களிடையே வந்து புகுந்த பல்வேறு தவறான வழிமுறைகளை, மூடப் பழக்க வழக்கங்களை, அனாச்சாரங்களைக்கடுமையாகச்சாடி பாடல்கள் புனைந்தார். இவர் பாடல்கள் எளிமையாகவும் இனிமையாகவும் அமைந்துள்ளன. இஸ்லாமிய மார்க்க ஞானத்தை ஊட்டவல்லன. மார்க்கச் சட்டதிட்டங்களைத் தெளிவாகச் சுட்டிக் காட்டி வழிதிருப்புவன.

இவர் இயற்றிய நூல்களில் பெரிய ஹதீது மாணிக்க மாலை, சின்ன ஹதீது மாணிக்க மாலை, நஸீஹத்து உபதேச மாலை, கல்யாண பித்அத் மாலை, இஹ்யா மாலை, ரசூல் மாலை, அதபு மாலை, மஃரிபத் மாலை, இஃதிலாப் மாலை ஆகியன குறிப்பிடத்தக்கனவா கும். இவர் புகையிலைப் பழக்கத்தைப் பற்றிக் கண்டித்து 'தம்பாக் மாலை' என்று ஒரு நூல் இயற்றியுள்ளார். அதில் புகையிலையின் தீமைகளையெல் லாம் விவரித்துள்ளார். இவர் ஞான மேதை சதக்கத்துல்லாஹ் அப்பா அவர்களின் சகோதரர். தமது 77வது வயதில் காலமான இவரது நல்லுடல் காயல்பட்டினம் அப்பா பள்ளியில் அடக்கம் செய்யப்பட்டுள்ளது.

**ஷாஜஹான்:** இவர் முகலாயப் பேரர சர்களில் முக்கியமானவர். பேரரசர் அக்பரின் பேரனும் ஜஹாங்கீரின் மூன் றாம் மகனுமாவார். லாகூரில் 1593 -ஆம் ஆண்டு பிறந்த இவரது இயற் பெயர் மிர்ஸா குர்ரம் என்பதாகும்.

குழந்தைப் பருவம் முதற்கொண்டே தந்தையின் பேரன்பைப் பெற்றவர். வாலிப வயதடைந்தபோது, இவர் தந்தை இவரைக் கலவரம் தோன்றிய தக்காணப் பகுதிக்குப் படையுடன் அனுப்பினார். அப்போது இவரது பெயர் ஷாஜஹான் என மாற்றப்பட் டது. இவர் தக்காணத்தை வெற்றி கொண்டு திரும்பியதும், அதற்குப் பரிசாக மன்னர் ஜஹாங்கீர் குஜராத் பகுதியை இவருக்கு அளித்து, அதை ஆளும் உரிமையையும் வழங்கினார்.

ஜஹாங்கீர் மறைவுக்குப் பின் ஏற் பட்ட அரசுரிமைப் போட்டியில் இவரே வெற்றிபெற்று அரியணை ஏறினார். இவரது ஆட்சிக்காலம் மக்கள் அனைவ ராலும் போற்றப்பட்டது. பீஜப்பூர், கோல்கொண்டா வரை இவரது ஆட்சிப் பரப்பு நீட்டிக்கப்பட்டது. அறிவாற்றலையும் வீர உணர்வையும் மிகவும் மதித்தார். தகுதி திறமைக்குப் பெரும் மதிப்பளித்துப் போற்றும் பண் பாளராகத் திகழ்ந்தார். இவரது படைத் தளபதிகளில் பெரும்பாலோர் இந்துக்களாக இருந்தமைஇவரது வேற் றுமை உணர்வு இல்லாத் தன்மைக்கு எடுத்துக்காட்டாகும்.

இவர் மறைவழி பேணும் இறைநேச ராக வாழ்ந்தார். ஐவேளைத் தொழு கையோடு வைகறையில் இறைதியானத் தில் ஈடுபடும் வழக்கமுடையவராக இருந்தார். இவர் தம் பாட்டனாரை யும், தந்தையாரையும் போன்று அஜ் மீரில் அடங்கப்பெற்றுள்ள காஜா முயீ னுத்தீன் சிஷ்தீ (ரஹ்) தர்காவுக்குக் கால்நடையாகவே சென்றுள்ளார். மன் னர்கட்குக் குனிந்து ஸலாம் கூறும் முறையை வெறுத்தார். இறைவனைத் தவிர வேறு யாருக்கும் ஒரு முஸ்லிம் தலைவணங்கக்கூடாது எனக் கருதி னார். அதற்காக குனியாமல் 'அஸ்ஸ லாமு அலைக்கும்' எனக் கூறினால் போதும் என அரசு விதியை மாற்றி னார். இஸ்லாமிய நெறி வழியிலான ஷரீயத் சட்டப்படியே தீர்ப்புகள் அமைய வழிவகுத்தார்.

கலையார்வம் மிக்கவராக விளங்கி னார்; குறிப்பாகக் கட்டிடக்கலை வளர்ச்சியில் மிகுந்த கவனம் செலுத்தி னார். தாஜ்மஹல், முத்து மசூதி, டெல்லி செங்கோட்டை, ஜாமியா மஸ் ஜித், ஷாஜஹானாபாத் போன்ற கலையழகு மிக்க படைப்புகள் இவரது கலைச் சிந்தனைக்குச் சான்றுகளாகும். ஏழு ஆண்டுகள் உழைத்து உருவாக்கப் பட்ட இவரது மயிலாசன சிம்மாசனம் ஒரு கலைப்பெட்டகமாகும். இவர் இலக்கிய ஆர்வமும் மிக்கவராக விளங் கினார். கவிஞர்களையும் இசைவாணர்

களையும் ஆதரித்தார். அடிக்கடி பரிசில்கள் வழங்கி ஊக்குவித்தார். இதில் அவர் முஸ்லிம்—முஸ்லிமல்லாதவர் என்ற பாகுபாடு காட்டியதே இல்லை. ஒவ்வோர் இரவும், தூங்கச் செல்லும் போது நல்ல இலக்கியப் பகுதிகளையும் ஞான நூல்களையும் படிக்கச் செய்து அவற்றைக் கேட்டபடியே உறங்குவது இவரது வழக்கமாகும். இவர் மூத்த மகன் தாரா மீது மிகுந்த பாசம் கொண்டிருந்தார். அவரையே தமக்குப் பின் அரசராக்கவும் எண்ணியிருந்தார். இதை அறவே விரும்பாத இளைய மகன் ஔரங்கஜீப் திடீரெனத் தம் தந்தையை ஆக்ரா கோட்டையில் சிறை வைத்து தம்மை அரசராக அறிவித்து முடிசூடிக்கொண்டார். ஆக்ரா கோட்டையில் சகல வசதிகளோடும் தம் தந்தை ஷாஜஹானை ஓய்வாக வாழச்செய்தார் ஔரங்கசீப். திடீரென நோய்வாய்ப்பட்ட ஷாஜஹான் தம் மனைவியின் கப்ர் உள்ள தாஜ் மஹாலைப் பார்த்தபடியே காலமானார். அவரது உடல் தாஜ்மஹால் கட்டிடத்திலுள்ள அவரது மனைவியின் கப்ர் அருகிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டது.

**ஷாஹுல் ஹமீது பாதுஷா நாயகம்:** நம் நாட்டின் மாபெரும் இறைநேசச் செல்வர்களில் மிக முக்கியமானவர் ஷாஹுல் ஹமீது பாதுஷா நாயகமாவார். நாகூர் நாயகம் எனப் போற்றப்படும் இவர் வட இந்தியாவில் உள்ள மாணிக்கப்பூரில் கி. பி. 1513ஆம் ஆண்டில் (ஹிஜ்ரீ 919) ரபீஉல் அவ்வல் 10ஆம் நாள் பிறந்தார். இவர் தந்தையார் ஹஸன் குத்தூஸ், இமாம் ஹஸன் (ரலி) வம்சா வழியையும் தாயார் ஸையிதா ஃபாத்திமா, இமாம் ஹுஸைன் (ரலி) வம்சா வழியையும் சார்ந்தவர்களாவர். மாபெரும் சிறப்புக்குரிய பாரம்பரிய வழி வந்த ஷாஹுல் ஹமீது பாதுஷா அவர்கள் இஸ்லாமிய ஞான நூல்களை முறைப் படிக் கற்றுத்தேர்ந்தார். மெய்ஞ்ஞான இறைவழியில் பேரார்வம் கொண்டார்.

இவரது ஞான வேட்கைக்கு ஏற்ற ஞான குருவாக முஹம்மது கௌது குவாலியரீ (ரஹ்) அமைந்தார். அவர் தந்த மெய்ஞ்ஞானப் பயிற்சி இவரை ஞானச் சுடராக ஒளிரச் செய்தது. அவரது ஆலோசனையின் பேரில் அவரது நல்லாசியுடன் தம் ஆன்மீக மாணவர் கூட்டத்துடன் உலகின் பல பகுதிகளுக்கும் சென்று இஸ்லாமிய இறை ஞானத்தைப் பரப்பும் பணியில் முனைப்புடன் ஈடுபட்டார்.

முதலில் புனித மக்க மாநகர் சென்று, தம் ஹஜ் கடமையை நிறைவேற்றினார். மதீனா சென்று பெருமானார் அடக்கவிடத்தில் ஜியாரத் செய்து ஸலாம் உரைத்தார். பின்னர் பல ஆண்டுகள், அரேபியா நாடெங்கும் பயணம் செய்து, மார்க்க ஞானச் செல்வர்களையும் புனிதத் தலங்களையும் கண்டார். மக்களிடையே மெய்ஞ் ஞானத்தைப் பரப்பினார். இறுதியில் துருக்கி நாட்டின் தலைநகரான இஸ்தம்புல் சென்றார். அங்கு சுல்தானின் உபசரிப்பில் சில நாட்கள் இருந்துவிட்டு, பக்தாது நோக்கிப் பயணமானார்.

அங்கு அடக்கமாகியுள்ள மெய்ஞ் ஞானத் தலைவர் முஹிய்யுத்தீன் ஆண்டகையின் அடக்கவிடம் சென்று ஜியாரத் செய்து ஸலாம் கூறினார். அதற்கு கௌதுல் அஃலத்தின் பதில் ஸலாம் வெளிப்பட்டதாகக் கூறப்படுகிறது. பின் ஜித்தாவிலிருந்து கப்பலேறி கேரள மேலைக் கடற்கரை ஊரான பொன்னானி வந்தடைந்தார். சிறிது காலம் அங்கே தங்கிவிட்டு மாலத்தீவு, இலங்கைத் தீவுக்குச் சென்றார். ஆதம்

மலையில் ஆதம் (அலை) அவர்களின் திருவடிகளைக் கண்டுவிட்டு பாம்பன் வழியாக முஸ்லிம் மக்கள் அதிகம் வாழும் கிழக்கரை, காயல்பட்டனம் போன்ற பகுதிகளில் பயணம் செய்து இறைஞானப் பேருரைகள் நிகழ்த்தினார். பின்னர் மதுரை சென்று பொதிகை மலை போய் அங்கு தியானத்தில் ஈடுபட்டார். இவருக்கு முன்னதாக அங்கு தவ வாழ்வு வாழ்ந்து வந்த முனிவர்கள் இவர்களின் மெய்ஞ்ஞான உரை கேட்டனர். அது இவர்களின் ஞானக் கண்களைத் திறக்கவே, அவர்கள் அனைவரும் இஸ்லாமாயினர். அதன்பின் திருச்சி வந்து நத்ஹர் ஒலியுல்லாஹ்வின் அடக்கவிடத்தில் சில நாட்கள் தங்கி இறை தியானத்தில் ஈடுபட்டார்.

அங்கிருந்து தஞ்சை வந்தார். அப்போது தஞ்சையை ஆண்டுவந்த மன்னர் அச்சுதப்ப நாயக்கருக்குத் திடீரென கைகால் இயங்காமற் போகவே பெரும் பாதிப்புக்கு ஆளானார். இது சூனியம் வைக்கப்பட்டதால் ஏற்பட்ட பாதிப்பு என்பதை அறிந்த பாதுஷா நாயகம் அச்சூனியத்தை எடுத்து மன்னரின் ஊனத்தைப் போக்கினார். மகிழ்வுற்ற மன்னர், அவருக்குப் பெரும் பரிசளித்து மகிழ்விக்க விரும்பினார். அதைத் தேவைப்படும்போது கோரிப் பெறுவதாகக் கூறி, தம் பயணத்தைத் தொடர்ந்தார்.

பின்னர் கூத்தாநல்லூர் சென்றுவிட்டு நாகூர் போய்ச் சேர்ந்தார். அங்கேயே நிரந்தரமாகத் தங்கத் தொடங்கினார். இதையறிந்த தஞ்சை மன்னர் பாதுஷா நாயகத்தின் விருப்பத்திற்கேற்ப, அவருக்கு வேண்டிய வணக்கத் தலத்தை அன்பளிப்பாக வழங்கி மகிழ்வித்தார். அங்கிருந்தபடியே இஸ்லாமியப் பிரச்சாரத்தையும் மெய்ஞ்ஞான போதனைகளையும் செய்துவந்தார். இடையில் சிறிது காலம் பர்மா சென்று வந்துள்ளதாகவும் கூறப்படுகிறது.

இவர் நாகூரில் ஹிஜ்ரி 987 ஜமாதுல் ஆகிர்பிறை 10 வெள்ளிக்கிழமையன்று காலமானார். பாதுஷா அவர்களின் நல்லுடல் அங்கேயே நல்லடக்கம் செய்யப்பட்டது. அவ்விடத்தில் அழகிய தர்கா ஒன்று நிர்மாணிக்கப்பட்டது. நாகூரில் ஆண்டுதோறும் அவர்கள் நினைவுநாள் உர்ஸ் விழாவாக சிறப்போடு கொண்டாடப்பட்டு வருகிறது. இத் தர்காவிற்கு முஸ்லிம்கள் மட்டுமல்லாது பிற சமயத்தவர்களும் நாடெங்கிலுமிருந்து பெருமளவில் வந்து ஜியாரத் செய்து செல்கின்றனர். இவர்கள் கையாண்ட பொருள்கள் பலவும் இன்று வரை பாதுகாக்கப்பட்டுவருகின்றன.

**ஷைகனாப் புலவர்:** 'புலவர் நாயகம்' எனப்போற்றப்படும் ஷைகனாப் புலவர் இஸ்லாமியத் தமிழ்ப்புலவர்களிலேயே தனித்துவம் பெற்ற பெருங்கவிஞர் ஆவார். இவர் தந்தையார் ஹபீப் முஹம்மது லெப்பை காயல்பட்டினத்தின் புகழ்பெற்ற இரத்தின வணிகராவார். கோவளத்தில் பிறந்த ஷைகனாப் புலவரின் முழுப்பெயர் ஷைகு அப்துல் காதிர் நெய்னார் லெப்பை என்பதாகும். அதுவே, நாளடைவில் சுருங்கிய வடிவில் 'ஷைகனா' என வழங்கலாயிற்று.

இவர் இளமையில் கீழக்கரையில்புகழ் பெற்று விளங்கிய மார்க்கஞானச் செல்வரான தைக்கா சாஹிப் (வலி) அவர்களிடம் கல்வி கற்றார். மார்க்கக் கல்வியோடு ஆன்மிகக் கல்வியையும் கற்றறிந்தார். அப்போது இவருடன் இணைந்து கல்வி கற்றவர் பிற்காலத்தில் மெய்ஞ்ஞான மேதையாக விளங்கிய குணங்குடி

மஸ்தான் எனும் சுல்தான் அப்துல் காதிர் ஆவார்.

தம் கல்வியை முடித்துக்கொண்ட ஷைகனா தம் தந்தை வழியைப் பின் பற்றி இரத்தின வாணிகத்தில் ஈடுபட்டார். ஆயினும் அவரது சிந்தனையும், கவனமும் இலக்கியத்தின் மீதும், பாடல் இயற்றுவதிலுமே சென்றது. எனவே, இவர் வணிகத்தை விரைவிலேயே விட்டுவிட்டுப் புலமைத் தொடர்பான பணிகளிலேயே முழுமையாக ஈடுபடலானார்.

ஆற்றொழுக்குப் போன்று கவிதை புனையவல்ல ஆற்றல் படைத்த இவர் பல்வேறு வகையான இலக்கியங்களைப் படைத்தளித்துள்ளார். புதூகுஷ் ஷாம் (ஷாம் நகர் வெற்றி), திருமணி மாலை, குத்புநாயகம், திருக்காரணப் புராணம் ஆகிய நான்கும் காப்பியப் படைப்புகளாகும். இதன்மூலம் இஸ்லாமியத் தமிழ்ப் புலவருள் நான்கு காப்பியம் பாடிய ஒரே முஸ்லிம் தமிழ்ப் புலவரென்ற பெருமை இவரையே சாரும். மற்றும் சுவர்க்கநீதி, நாகை அந்தாதி, கோத்திரமாலை போன்ற நூல்களையும் மற்றும் பல வண்ணப் பாக்களையும் இயற்றியுள்ளார். பல 'சித்திரக்கவி'களும் யாத்துள்ளார். இவர் படைப்புகளில் அளவில் மிகப் பெரியது புதூகுஷ்ஷாம் ஆகும். இது 61 படலங்களையும் 6786 செய்யுட்களையும் கொண்டதாகும்.

இவர் ஹிஜ்ரி 1268 துல்கஃதா பிறை 27 (கி.பி. 12.9.1852) அன்று சென்னையில் காலமானார். அவரது விருப்பப்படியே தம் பள்ளித்தோழர் குணங்குடி மஸ்தான் அடக்கவிடத்திற்கு அருகிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது.

**ஷைகு ஸஅதி:** இவர் மாபெரும் பார்ஸீ கவிஞரும் சிறந்த தத்துவ ஞானியும் ஆவார். இவர் 1184இல் ஷீராஸில் பிறந்தார். இவரது இயற்பெயர் முஸ்லிஹுத்தீன் என்பதாகும். 'ஸஅதி' என்பது இவரது புனைபெயராகும். இவர் பக்தாது நகரில்புகழ்பெற்று விளங்கிய நிஜாமிய்யாக் கல்லூரியில் பயின்றவர். ஷைகு ஷிஹாபுத்தீன் ஸுஹ்ரவர்தீயிடம் ஆன்மீக மெய்ஞ்ஞானப் பயிற்சி பெற்றவர். இவர் முதன் முறையாக ஹஜ் பயணத்தை நடந்தே சென்று முடித்தார். தொடர்ந்து கால்நடையாகவே பதினான்குமுறை ஹஜ் பயணம் மேற்கொண்டார்.

இவர் மத்திய கிழக்கு நாடுகளில் மட்டும் அல்லாது ஐரோப்பவிலுள்ள மேலை நாடுகளிலும் ஆசியா மைனர், இந்தியா போன்ற கீழைநாடுகளுக்கும் சென்று வந்துள்ளார். இதனால் இவர் பல்வகை அனுபவங்களும் பல்வேறு மொழியறிவும் வாய்க்கப் பெற்றவராக விளங்கினார்.

இவர் ஆன்மீகச் சிந்தனைகளின் திரட்சியாக பல நூல்களை பார்ஸீ மொழியில் கவிதையாக எழுதியளித்துள்ளார். அவற்றுள் 'குலிஸ்தான்', 'கரீமா', 'போஸ்தான்' போன்ற நூல்கள் மிக உயர்ந்த படைப்புகளாகப் போற்றப்படுகின்றன. இந்நூல்கள் ஆங்கிலம், ஃபிரெஞ்சு, ஜெர்மனி, ரஷ்யன் போன்ற ஐரோப்பிய மொழிகளிலும் அரபி, துருக்கி, ஹிந்தி, உருது, தமிழ் போன்ற ஆசிய மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

தலைசிறந்த மெய்ஞ்ஞானியாகத் திகழ்ந்த இவர் 'ஷைகு ஸஅதி' என்றே அழைக்கப்பட்டார். சிலர் மிகுந்த மதிப்புடனும் மரியாதையுடனும் அவரது

பிறந்த ஊரின் பெயரையும் இணைத்து 'ஷைகு ஸஅதி ஷீராஸி' என்று அழைத்து வந்தனர்.

இவர் சுமார் 120 வயதுவரை வாழ்ந்தார். தம் வாழ்வின் இறுதிப் பகுதியில் தம் சொந்த ஊரான ஷீராஸில் சிறு குடிலில் எளிமையாக வாழ்ந்து வந்தார். உலகெங்கிலுமுள்ள ஆன்மீகவாதிகள் இவரை வந்து பார்த்து, பல்வேறு விஷயங்களை விவாதித்துச் செல்வது வழக்கம். இவர் காலமானபின் இவர் உடல் ஷீராஸிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டது. இன்றும் உலகெங்கிலுமிருந்து மக்கள் இவர் அடக்கவிடம் சென்று ஜியாரத் செய்து திரும்புகின்றனர்.

**ஹதீது:** பெருமானார் (ஸல்) அவர்கட்கு ஜிப்ரீல் (அலை) அவர்கள் மூலம் இறைவன் மறைச்செய்திகளைத் தந்தருளினான், அவ்விறைச் செய்திகளின் தொகுப்பே இறைமறையாகிய திருக்குர்ஆன். அழகிய முன்மாதிரியாக அனுப்பப்பட்ட அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியவை, வாழ்ந்து காட்டியவை, அண்ணலார் ஏற்றுக்கொண்ட கொள்கை, கோட்பாடுகள் ஆகிய அனைத்தும் அடங்கியது அல் ஹதீஸ் ஆகும். திருமறையாகிய திருக் குர்ஆனுக்குத் தெளிவுதரும் விளக்கமே அல் ஹதீஸ் என்று கூறலாம். திருக் குர்ஆனுக்கு அடுத்தபடி சிறப்புடையதாக அல் ஹதீஸைக் கருதி உலக முஸ்லிம்களால் போற்றப்பட்டு பின்பற்றப்பட்டு வருகிறது. இரண்டுமே ஒரு முஸ்லிமின் இரு கண்களைப் போன்றவையாகும். பெருமானார் (ஸல்) இதைப்பற்றிக் கூறும்போது: "உங்களுக்கு நான் இரண்டை விட்டுச் செல்கிறேன். ஒன்று திருக்குர்ஆன், மற்றொன்று அல் ஹதீஸ். நீங்கள் இவ்விரண்டையும் இறுகப் பற்றிக் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்யின் நீங்கள் வழிதவறிச் செல்ல ஒரு போதும் வாய்ப்பேற்படாது'' எனக் கூறிச் சென்றுள்ளார்.

பெருமானார் (ஸல்) அவர்கள் மறைவுக்குப்பின்னரே ஹதீதுகள் தொகுக்கப்பட்டன. அவற்றில் ஆதாரபூர்வமான செய்திகளை இமாம்கள் புகாரீ, முஸ்லிம், திர்மிதீ, இப்னு மாஜா, நஸயீ, அபூ தாவூது, தாரு குத்னீ, அபூ ஹனீஃபா, அஹ்மது இப்னு ஹன்பல் முஹம்மது (ரஹ் : அலைஹிம்) போன்றோர் தேர்ந்தெடுத்துத் தொகுத்தனர். அவையே இன்று ஆதாரபூர்வமான உண்மையான ஹதீதுகளாக முஸ்லிம்களால் கருதப்படுகின்றன. ஹதீதுக் கலை என்பது தனித்துவமுள்ள ஒரு தனிப் பயிற்சியாகும்.

**ஹம்ஸா (ரலி):** இஸ்லாமியச் சிங்கம் எனப் போற்றப்படும் மாபெரும் வீரரான ஹம்ஸா (ரலி) பெருமானார் (ஸல்) அவர்களின் சிறிய தந்தை ஆவார். அப்துல் முத்தலிபின் கடைசி மகனான இவர் ஆரம்பத்தில் இஸ்லாத்தில் இணையாமல் இருந்தார். ஒரு சமயம் அபூஜஹ்ல் முஸ்லிம்களுக்கு இழைத்த பெருங்கொடுமைகளை வேட்டைக்குச் சென்று திரும்பும்போது கேட்டார். கொடுமை கண்டு மனம் கொதித்தவராக அபூஜஹ்லை அடித்துக் காயப்படுத்தினார். அண்ணலாருக்கு ஆறுதல் கூறும் வகையில் அவரிடம் சென்று இந்நிகழ்ச்சியைக் கூறி இஸ்லாத்தில் இணைந்தார்.

பத்ருப்போருக்கும் முன்னதாக குறைஷிகளின் கூட்டத்தைத் தாக்க ஹம்ஸா (ரலி) அவர்களின் தலைமையில் முஸ்லிம் வீரர்கள் சென்றனர். வீரப் போரிட்டு வெற்றிவாகை சூடித் திரும்பினார்.

பின்னர் நடந்த பெரும்போர்களான பத்ருப் போரிலும், உகதுப் போரிலும் சிங்கமெனச் சீறிப்பாய்ந்து வீரப் போரிட்டு எதிரிகளைக் கொன்று குவித்தார். உகதுப் போரில் கையை ஓங்கிய வண்ணம் வாளைச் சுழற்றிப் போட்ட போது மார்புக் கவசம் சற்று விலகி மேலேறிய நிலையில் வஹ்ஷீ என்பவர் குறுவாளை எறிந்து அவரைக் கொன்றார். இறந்த ஹம்ஸா (ரலி) அவர்களின் மார்பைப் பிளந்து இதயத்தைப் பிய்த்தெடுத்து அபூ சுப்யான் மனைவி ஹிந்தாவிடம் கொடுத்தார். அக்கொடுஞ்செயலைப் பாராட்டி பரிசளித்த ஹிந்தா, தம் தந்தையையும் சகோதரரையும் கொன்ற ஹம்ஸா (ரலி)யை பழிதீர்க்கும் வகையில் அவ்விதயத்தை மென்று துப்பினார்.

இவரது நல்லுடல் உகதுமலை அடிவாரத்திலேயே நல்லடக்கம் செய்யப்பட்டது. இவர்களின் மறைவு நாளன்று இவர்தம் அடக்கவிடத்திற்குச் சென்று இவர்கட்காக இறைவனிடம் இறைஞ்சுவதை அண்ணலார் (ஸல்) அவர்கள் வழக்கமாகக் கொண்டிருந்தார்.

**ஹலால், ஹராம்:** அல்லாஹ்வும், இறைத்தூதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் ஒரு முஸ்லிம் ஏற்கக் கூடியவை எவை, எவை என அறிவித்துள்ளார்கள். இவ்வாறு இவர்களால் அனுமதிக்கப்பட்டவை ‘ஹலால்’ ஆகும். விலக்கப்பட்டவை ‘ஹராம்’ எனப்படும். பெருமானாரும் இறைமறையும் நிர்ணயித்துள்ள இவ்விரண்டையும் பகுத்து நன்கு அறிந்து, உணர்ந்து, பேணி நடக்க வேண்டியது ஒவ்வொரு முஸ்லிமின் இன்றியமையாக் கடமையாகும்.

நாம் நுகரக்கூடியவற்றுள் ஆகுமானவற்றையும், ஆகாதவற்றையும் பற்றி மேலும் நன்கு ஆராய்ந்து ‘பிக்ஹு’, எனும் இஸ்லாமியச் சட்டங்களின் மூலம் இமாம்கள் தெளிவுபடுத்தியிருக்கிறார்கள்.

நாம் உண்ணும் உணவுகளிலும், கைக்கொள்ளும் செயல்களிலும் ஹலாலானவை ஹராமானவை தனித்தனியே பிரித்து அறிவிக்கப்பட்டுள்ளன. மதுக்குடி போன்ற ஹராமான உணவாளியின் தொழுகை இறைவனால் ஏற்றுக்கொள்ளப் படுவதில்லை. அவ்வாறே வட்டி போன்ற ஹராமான சம்பாத்தியமுள்ளவர்களின் வணக்கமும், துஆவும் இறைவனால் ஏற்கப்படுவதில்லை.

**ஹவ்வா:** ஆதி மனிதரும் முதல், நபியுமான ஆதம் (அலை) அவர்களின் துணைவியார் ஹவ்வா நாச்சியார் ஆவார். ஆதம் (அலை) தூங்கும்போது அவர்கட்கும் தெரியாமல் அவர்களின் இடப்புறக் கோணல் விலா எலும்பிலிருந்து அல்லாஹ் ஹவ்வா நாச்சியாரைப் படைத்தான்.

சொர்க்கத்தில் இன்பமாக வாழ்ந்த அவர்கள், உண்ணக்கூடாது என இறைவன் தடுத்து வைத்திருந்த கனியை இப்லீசின் தூண்டுதலால் புசித்தமையால் அவர்கள் அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாயினர். எனவே, இறைவனால் அவ்விருவரும் மண்ணுலகிற்கு இறக்கப்பட்டனர். அரபகத்திற்கு வந்த ஹவ்வா நாச்சியாரும் ஆதம் மலை சேர்ந்த ஆதம் (அலை) நீண்ட நெடுங்காலத்திற்குப் பிறகு அரஃபாத் பெருவெளியில் ஒன்றிணைந்தனர்.

இன்று ஜித்தாவில் ஹவ்வா நாச்சியாரின் கப்ர் உள்ளதாகக் கூறப்படுகிறது.

**ஹஜ்:** இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளில் ஹஜ் என்பது ஐந்தாவது இறுதிக் கடமையாகும். ஹஜ் என்ற

அரபுச் சொல்லுக்கு 'சந்திக்க நாடுவது' என்பது பொருளாகும். ஹஜ்ஜின் போது உலகெங்குமுள்ள முஸ்லிம்கள் கஃபா இறையில்லத்தைச் சந்திக்க நாடுவதால் இப் பெயர் பெற்றது.

கஃபா இறையில்லம் முதன் முதலில் அல்லாஹ்வால் மக்காவில் அமைக்கப் பட்டது. முதல் மனிதராகிய ஆதம் (அலை) அவர்களை மண்ணால் படைப்பதற்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இவ்விறை இல்லம் இறைவனால் உருவாக்கப்பட்டது. இக் கஃபா இறையில்லத்தை நோக்கி ஹஜ் செய்ய வானவர்கள் வருவது வழக்கம்.

ஆதம் (அலை) அவர்களும், ஹவ்வா நாச்சியாரும் பல நூறு ஆண்டுகள் மண்ணுலகில் தனித்தனியே அலைந்து திரிந்து, இறுதியில் அரஃபாத் பெருவெளியில் 'ஜபலுர் ரஹ்மத்' எனுமிடத்தில் ஒன்று சேர்ந்தார்கள். அவ்வாறு ஒன்றிணைந்த நாள் துல்ஹஜ் ஒன்பதாம் நாளாகும். பின்னர் அவர்கள் அரஃபாத் பெருவெளியில் ஒரு பகல் முழுவதும் தங்கி இறைவணக்கம் புரிந்தார்கள். சூரியன் மறைந்த அந்தி நேரத்தில் அங்கிருந்து புறப்பட்டு முஜ்தலிபா எனுமிடம் போய்ச் சேர்ந்தார்கள். அங்கே இரவு தங்கினார்கள். பின்பு மறுநாள் துல்ஹஜ் பத்தாம் நாள் ஜிப்ரீல் (அலை), அவ்விருவரையும் மக்காவில் உள்ள கஃபா இறையில்லத்துக்கு அழைத்துச் சென்றார். அங்கே ஹஜ் கடமையை எவ்வாறு நிறைவேற்றுவது என்பதைக் கற்றுக் கொடுத்தார்.அதன் பின் அவர்களாகவே ஹஜ் கடமையை செவ்வனே நிறைவேற்றினர். ஆதம் (அலை) நாற்பது தடவைக்குமேல் ஹஜ் கடமையை நிறைவேற்றியதாகக் கூறப்படுகிறது. முதல் மனிதரும் முதல் நபியுமான ஆதம் (அலை) அவர்கட்குப் பின்னர் வந்த இறை தூதர்களான நபிமார்கள் அனைவருமே ஹஜ் கடமையை நிறைவேற்றியுள்ளனர்.

நபி நூஹ் (அலை) காலத்தில் ஏற்பட்ட மாபெரும் பிரளயத்தின்போது கஃபா இறையில்லம் விண்ணுக்கு உயர்த்தப்பட்டது. பின் நீண்ட நெடுங்காலத்திற்குப் பின்னர் நபி இப்ராஹீம் (அலை) அவர்களும் அவர்தம் குமாரர் நபி இஸ்மாயீல் (அலை) அவர்களும் முன்பு கஃபா இருந்த இடத்தைக் கண்டறிந்து, அவ்விடத்திலேயே மீண்டும் கஃபா இறையில்லத்தைப் புனரமைப்புச் செய்தனர். அதன் பின்னர், இப்ராஹீம் (அலை) அவர்கள் அருகில் இருந்த ஒரு குன்றின் மீது ஏறி நின்று இறைவன் ஆணைக்கேற்ப மக்களை 'ஹஜ்' செய்ய வருமாறு மக்களுக்கு அழைப்பு விடுத்தார். அவ்வழைப்புக் கிணங்க மக்களும் அவர்தம் சந்ததியினரும் ஆண்டுதோறும் ஹஜ் செய்வாராயினர்.

காலப்போக்கில் மக்கா வாழ் குறைஷியர்கள் இறை நெறியினின்று வழுவி வாழலாயினர். அனாச்சாரமான பல பழக்கவழக்கங்களைக் கைக்கொண்டு நாளடைவில் சிலை வணக்கம் செய்யலாயினர். அதன் விளைவாக கஃபாவினுள் உருவச் சிலைகள் பலவற்றை வைத்து ஆராதித்து வணங்கி வரலாயினர். ஆண்களும் பெண்களும் நிர்வாணக் கோலத்துடன் கஃபாவை வலம் வந்தனர். இறைவன் கட்டளைப்படி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உருவ வணக்க முறைகளை அடியோடு அகற்றினார். அனாச்சாரப் பழக்கவழக்கங்களையும் அகற்றினார். இதன்மூலம் புனித கஃபா இறையில்லத்தின் புனிதத்தை மீண்டும் நிலைநாட்டிக் கட்டிக்காத்தார். ஹஜ் இஸ்லாமிய ஐம்பெரும் கடமையில் ஐந்தாவது கடமையாக ஆக்கப்பட்டது.

ஹஜ் கடமை அனைத்து முஸ்லிம் களாலும் கடைப்பிடிக்கப்படவேண்டிய கடமை ஆகும். நல்ல உடல் நலமுள்ள வயதுவந்த, அறிவுத்தெளிவும், சுயமாக இயங்கும் வல்லமையும், தேவையான வருவாயும் உள்ள ஒவ்வொரு முஸ்லிமும் கட்டாயமாக நிறைவேற்றப்பட வேண்டிய இன்றியமையாக் கடமையாக விதிக்கப்பட்டுள்ளது. ஆண், பெண் இருசாராரும் தம்வாழ்நாளில்ஒருமுறை யேனும் ஹஜ் செல்வது அவசியமாகும்.

ஹஜ் செல்வோர் தம் மனைவி மக்கள், மற்றும் தங்கள் வாழ்க்கைத் தேவைக்காகத் தம்மை நம்பியிருக்கும் பணியாளர்கள், உறவினர்கள் ஆகியோர் தான் ஹஜ் செய்யும் காலத்தில் இடரின்றி வாழ அனைத்து வசதிகளையும் செவ்வனே செய்து முடித்த பின்னரே ஹஜ் பயணம் மேற்கொள்வது அவசியமாகும். நல்ல பொருள் வசதியும் வாய்ப்பும் உள்ளவர்கட்கு ஹஜ் கட்டாயக் கடமையாகும். ஹஜ் கடமையை நிறைவேற்றும் ஹாஜிகளின் அனைத்துப் பாவங்களையும் அல்லாஹ் மன்னிக்கிறான். அவருக்குச் சொர்க்கப் பேறு கிட்டுகிறது.

வேற்றிடங்களிலிருந்து உம்ரா அல்லது ஹஜ் பயணம் மேற்கொள்வோர் மக்காவுக்கு அப்பால் ஒரு குறிப்பிட்ட எல்லையிலிருந்து இஹ்ராம் உடை உடுத்திக் கொள்ளவேண்டும். தைக்கப் படாத இரு துண்டுகளை ஆடையாகவும் போர்வையாகவும் அணிவதோடு நற்சிந்தனையோடும் நற்செயல்களோடும் இருக்கவேண்டும். இஹ்ராம் உடையில் இருப்போர்'முஹ்ரிம்' என்று அழைக்கப்படுவர்.

கஃபாவிற்குள் பாபுஸ்ஸலாம் நுழைவாயில் வழியாக ஹறம் ஷரீஃப் வந்து சேர வேண்டும். ஹஜருல் அஸ்வத் கருநிறக்கல்லைத் தொடக்கவிடமாகக் கொண்டு ஏழுமுறை தவாஃப் சுற்ற வேண்டும். தவாஃப் சுற்றி முடிந்த பின்னர் 'வாஜிபுத் தவாஃப்' தொழுகையை இரண்டு 'ரகஅத்' தொழவேண்டும். அதன்பின்னர் ஜம்ஜம் கிணற்று நீரைப் பருக வேண்டும். அன்றே ஸபா, மர்வா ஸயீயை முடிக்க விரும்பினால் அன்றே செய்யலாம். இன்றேல் துல்ஹஜ் பத்தாம் நாளன்று செய்துகொள்ளலாம். ஸயீ முடித்தவர்கள் ஆண்கள் தலை முடியை இறக்க வேண்டும். பெண்கள் தங்கள் தலைமயிரின் கொத்து முடியை குறைந்த பட்சம் ஓரங்குல நீளம் கத்தரித்துக் கொண்டால் போதும். அதன் பின் இஹ்ராம் உடையைக் களைந்து விடலாம்.

மக்காவில் தங்கி ஹஜ் செய்வோர் துல்ஹஜ் ஏழாம் நாள் அஸருக்குப் பின் எட்டாம் நாள் ஸுப்ஹுக்கு முன் முறைப்படி இஹ்ராம் உடை அணிந்து கொள்ளவேண்டும்.

துல்ஹஜ் எட்டாம் நாளன்றுபொழுது விடிந்த பின் மக்காவிலிருந்து ஐந்து கிலோமீட்டர் தொலைவிலுள்ள மினா செல்லவேண்டும். இங்குள்ள 'மஸ்ஜிதுல் கைஃப்' பள்ளிவாசலுக்கருகில் தங்குவது சிறப்பு, மினாவில் எட்டாவது நாளை முழுமையாகக்கழிக்கவேண்டும். இங்கு ளுஹர், அஸர், மஃரிப், இஷா தொழுகைகளைத் தொழவேண்டும்.

அடுத்துவரும் துல்ஹஜ் ஒன்பதாம் நாள் வைகறையில் பஜ்ரு தொழுகையை முடித்து வெயில் படர்ந்த பின் தல்பியா ஓதியபடி மினாவிலிருந்து புறப்பட்டு அரஃபாத் பெருவெளி சென்றடைய வேண்டும். இப்பெருவெளியில் எங்கு வேண்டுமானாலும் தங்கிக் கொள்ளலாம். ஆயினும், இயன்றவரை 'ஜபலுர் ரஹ்மத்தி'ற்கு அருகாகத் தங்குவது சிறப்பாகும். அங்கே தங்கும் நேரத்

தில் தங்களால் இயன்றவரை இறை வணக்கம் புரிதல் வேண்டும். தொழு தல், தல்பியா ஓதுதல், திக்ர் செய்தல், ஸலவாத்துச் சொல்லுதல், துஆக்கேட் டல் ஆகியவை அதிகமதிகம் செய்ய வேண்டும்.

அரஃபாத் பெருவெளியில் உச்சி வெயில் சாய்ந்த பின்னர் ஹஜ் துவங்குவதால் அச்சமயம் ஹாஜிகள் அனைவரும் கட்டாயம் அங்கே குழுமி யிருக்க வேண்டும். இது பர்ளு ஆகும். அரஃபாத்தில் ளுஹருக்கும், மஃரிபுக்கு மிடையே தங்காதோர் ஹஜ் கடமை நிறைவேறுவதில்லை.

அரஃபாத் பெருவெளியில் தங்கியிருக் கும்போது தொழுகைகளுக்கான நேரம் போக மீத நேரங்களை முடிந்தவரை திக்ர் செய்தல், தல்பியா ஓதுதல், இஸ்திஃபார், சலவாத்துச் சொல்லுதல் போன்ற இபாதத்தான இறைவணக்கச் செய்கைகளில் செலவழிக்க வேண்டும். ஏனெனில் அரஃபாத் பெருவெளியில் தங்கக் கிடைத்த வாய்ப்பு வாழ்வில் பெறற்கரிய பெரு வாய்ப்பாகும். எனவே, அந்த வாய்ப்பைச் சிறப்பாகப் பயன்படுத்திக் கொண்டு அல்லாஹ்வின் பேரருளை வாரிக் கொள்ள முயல வேண்டும். அரஃபாத் பெருவெளியில் கேட்கப்படும் துஆக்கள் அனைத்தை யும் அல்லாஹ் ஏற்றுக் கொள்கின் றான். எனவே, நம் குடும்பத்தினர், உறவினர், அண்டை வீட்டார், நண்பர் கள் ஆகியோர்க்காக துஆ கேட்கலாம். அவர்கள் தெரிந்தோ, தெரியாமலோ செய்த பாவங்களுக்காகப் பாவ மன் னிப்புக் கேட்டு மன்றாடலாம். அவர் களின் பாவங்களும் இங்கு தங்கும் ஹாஜிகளின் பாவங்களும் ஒரு சேர மன்னிக்கப்படுகின்றன.

அன்று அந்தியில் கதிரவன் மறைந்த பின்னர் அரஃபாத் பெருவெளியி லிருந்து புறப்பட்டு பத்து கி.மீ. தொலைவில் உள்ள முஜ்தலிபா செல்ல வேண்டும், முஜ்தலிபாவில் மஃரிப், இஷாத்தொழுகைகளை இணைத்தே தொழவேண்டும்,

அன்று இரவு முழுமையும் முஜ்தலிபா வில், திறந்த வெளியில் தங்குவது இன்றி யமையாக் கடமையாகும். அன்று இரவு முழுமையும் தொழுகை, திக்ர், ஸல வாத்து, குர்ஆன் ஓதுதல் எனப் பல வகையான இபாதத்துகளைச் செயல் படுத்திப் பயன்பெற முயலவேண்டும். இந்த இரவு 'லைலத்துல் கத்ர்' இரவை விட முக்கியத்துவமுடையதாகக் கரு தப்படுகிறது.

முஜ்தலிபாவில் துல்ஹஜ் பத்தாம் நாள் வைகறையில் பஜ்ர் தொழுது விட்டு மினாவுக்குப் புறப்படவேண்டும். புறப்படும் மினாவில் எறிவதற்காக 49 சிறு கற்களைப் பொறுக்கிக் கொள்ள வேண்டும்.

மினாவை அடைந்தவுடன் இறுதி ஷைத்தான் மீது ஏழு சிறு கற்களை ஒன்றன் பின் ஒன்றாக எறியவேண்டும். பின் குர்பானி கொடுக்க வேண்டும். அதன் பின்னர் தலைமுடியை முழுமை யாக நீக்கியோ அல்லது சற்று முடியை வெட்டியோ விடவேண்டும். பெண்கள் தங்கள் முடியின் ஒரு கொத்தை ஒரு அங்குல நீளத்தில் வெட்டிவிடவேண்டும். இதன்பின், இஹ்ராம் உடையை நீக்கி, வழக்கமான உடையை அணிந்து கொள்ளலாம்.

பின்னர், மக்கா சென்று கஃபா இறை யில்லத்தில் 'தவாஃப் ஜியாரத்' செய்ய வேண்டும். மஃரிபுக்கு முன் மினா திரும்பிவிடவேண்டும். இரவை மினா விலேயே கழிக்கவேண்டும்.

அடுத்த நாள் துல்ஹஜ் பதினோராம் நாளன்று ளுஹர் தொழுகைக்குப் பின்

முதல் ஷைத்தான்' மீது ஏழு கற்களை எறியவேண்டும். பின் கஃபாவை நோக்கித் துஆச் செய்யவேண்டும்.

அதற்குப்பின் 'இடை ஷைத்தான்' மீது ஏழு கற்களை ஒன்றன் பின் ஒன்றாக எறிந்து கஃபாவை நோக்கித் துஆச் செய்ய வேண்டும்.

இறுதியாக மூன்றாவது ஜம்ராவில் கல் எறிந்தவுடன் துஆக் கேட்காது திரும்பிவிடவேண்டும்.

இதே போன்று துல்ஹஜ் பன்னிரண்டாம் நாளன்று ளுஹருக்குப்பின் மூன்று ஜம்ராக்களிலும் முன்பு போலவே கல்லெறிதல் வேண்டும். அதன்பின் மஃரிபுக்கு முன்னதாக மக்காவிற்குத் திரும்பிவிடவேண்டும்.

இத்துடன் ஹஜ் கடமை இனிது நிறைவேறுகிறது. இறந்தவர்களுக்காகவும் இயலாதவர்களுக்காகவும் ஒருவர் ஹஜ் செய்யலாம். இது 'பத்லு ஹஜ்' என அழைக்கப்படுகிறது. ஒருவர் எத்தனை முறை வேண்டுமானாலும் ஹஜ் செய்யலாம், ஹஜ் கடமையாற்றும்போது ஒருவர் இறப்பின் அவர் உலகுள்ளவும் ஹஜ் செய்து கொண்டிருப்பவர் ஆகிறார்.

**ஹஜருல் அஸ்வத்:** இது விண்ணிலிருந்து வந்த கல் ஆகும். 'ஹஜருல் அஸ்வத்' என்பதற்குக் 'கருமைக்கல்' என்பது பொருளாகும். இஃது விண்ணிலிருந்து வந்தபோது தூய வெண்மை நிறத்தில் இருந்ததாம். பின்னர் அது கருஞ்சிவப்பாகி, பின் கருமை நிறத்தைப் பெற்றதாகக் கூறப்படுகிறது. தொடக்கத்தில் இது 15 செ.மீ. உயரமும் 20 செ.மீ அகலமும் உள்ளதாக இருந்தது. கனமற்றதான இதனை ஆதம் (அலை) சொர்க்கத்திலிருந்து கொண்டு வந்ததாகவும் கூறப்படுகிறது. நூஹ் (அலை) காலத்தில் ஏற்பட்ட பெரும் பிரளயத்தின்போது, இது அபூகுபைஸ் மலை உச்சியில் வைக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. பின்னர் கஃபா இறையில்லத்தை புனரமைத்தபோது இதைத் தேடிக் கண்டுபிடித்து கஃபாவில் பதித்து வைத்ததாகக் கூறப்படுகிறது. இவ்வாறு பதிக்கப்பட்ட மூலைப் பகுதியையே தொடக்கவிடமாகக் கொண்டு தவாப் சுற்றுவது வழக்கமாகியது.

அண்ணலாருக்கு முப்பத்தைந்து வயதாகும்போது கஃபத்துல்லாஹ் குறைஷியர்களால் மீண்டும் புனரமைத்துக் கட்டப்பட்டது. அப்போது ஹஜருல் அஸ்வதை உரிய இடத்தில் வைப்பது பற்றி இரு பிரிவினரிடையே தகராறு ஏற்பட்டபோது பெருமானார் (ஸல்) தீர்ப்புப்படி இதைத் துணியில் தூக்கி வைத்து இருபுறமும் தூக்க, பெருமானார் (ஸல்) உரிய இடத்தில் வைத்தார்.

பின்பு ஒரு சமயம் சாம்பிராணிப் புகைபோட்ட பெண்ணின் கவனக் குறைவால் கஃபா திரைச்சீலை தீப் பற்றி எரிந்தது. அத்தீவிபத்தில் ஹஜருல் அஸ்வத் மேலும் கருமை நிறம் பெற்றதோடு மூன்று பெருந்துண்டுகளாகவும் நான்கு சின்னஞ் சிறுதுண்டுகளாகவும் உடைந்து சிதறுண்டது. பெருந் துண்டுகளை வெள்ளிக் கம்பியால் பிணைத்து ஒன்றாக்கி, மீண்டும் அது இருந்த இடத்திலேயே வைக்கப்பட்டது. நான்கு சிறு துண்டுகள் மட்டுமே பதிக்கப்படாமல் எஞ்சியிருந்தன.

சில காலத்திற்குப்பின் அபூதாஹிர் என்பவரால் ஹஜர் நகருக்கு எடுத்துச் செல்லப்பட்டு 'தாருல் ஹிஜ்ரத்' எனுமிடத்தில் பாதுகாக்கப்பட்டு வந்தது.

ஹிஜ்ரீ 329ஆம் ஆண்டில் இது மீண்டும் கஃபத்துல்லாஹ்வில் பதிக்கப்

பட்டது. மீதமிருந்த இதன் நான்கு சிறு துண்டுகள் இஸ்தம்புல் நகரில் உள்ள நீல மசூதியின் மிஹ்ராபின் மேல் விதானத்தில் பதிக்கப்பட்டுள்ளன.

ஹஜருல் அஸ்வதை பெருமானார் அவர்கள் முத்தமிட்டுள்ளார்கள். அவ்வாறே இன்றும் கஃபாவில் தவாப் சுற்றுவோர் அதனை முத்தமிட்டு, அங்கிருந்தே தொடங்குகின்றனர். இறுதி நாளின்போது தன்னை முத்தமிட்டவர்களை இஃது அடையாளம் காட்டும் எனக் கூறப்படுகிறது.

**ஹஸன் (ரலி):** பெருமானாரின் பேரருள் மூத்தவர். அலீ (ரலி)-ஃபாத்திமா நாச்சியாரின் குமாரர். ஹிஜ்ரி மூன்றாம் ஆண்டு ரமலான் பிறை 15இல் பிறந்த இவருக்கு பெற்றோர் இட்ட பெயர் 'குஹாப்' என்பதாகும். ஆயினும் உருவிலும் அழகிலும் பெருமானாரைப் போன்று இருந்தமையால் 'ஹஸன்' (அழகர்) என்ற திருப்பெயரைப் பெருமானார் மாற்றிச் சூட்டினார். இவர் மீது பெருமானார் பேரன்பு கொண்டிருந்தார்.

இஸ்லாத்தின்பால் பெரும் பற்றும், மார்க்க அறிவும் நிரம்பப் பெற்றவர். அற உணர்வு மிக்கவர். நீதியையும் நேர்மையையும் இரு கண்களாகப் பாவித்தவர். பொறுமைக்கு இலக்கணமாக அமைந்தவர். அமைதியைப் போற்றியவர், இருபது முறை ஹஜ் கடமையை நிறைவேற்றியவர். தம் பொருளையெல்லாம் அறவழியில் செலவழித்தவர். அஞ்சா நெஞ்சம் படைத்தவர்.

உதுமான் (ரலி) அவர்களைப் பகைவர் கொல்ல முயன்றபோது உதுமான் (ரலி) அவர்களின் வீட்டுக்குக் காவலிருந்து காத்தவர்களுள் இவரும், இவர் இளவல் ஹுஸைன் (ரலி) அவர்களுமே ஆவர். தம் தந்தையார் அலீ (ரலி) கலீஃபாவாக ஆட்சியிலிருந்தபோது இவர் அரசியலில் ஆர்வமோ, ஈடுபாடோ காட்டாமல் ஒதுங்கியே இருந்தார்.

தம் தந்தையார் அலீ (ரலி) மறைவுக்குப் பின் இவர் கலீஃபா ஆனார். ஆனால்,இதை ஏற்காத முஆவியா(ரலி) ஹஸன் (ரலி) அவர்களை எதிர்த்தார். சுமார் ஆறுமாத காலம் மட்டுமே கலீஃபாவாக நீடித்தார். பின் ஏற்பட்ட ஒரு சமரச ஒப்பந்தப்படி கூஃபாவிலுள்ள ஜாமியா மஸ்ஜிதில் வைத்து கலீஃபா பதவியைத் துறந்தார். அதற்குப் பதிலாக குறிப்பிட்ட தொகையை ஒய்வூதியமாகப் பெற்று வந்தார். சூழ்ச்சியாக உணவு மூலம் நஞ்சூட்டப்பட்டுக் கொல்லப்பட்டார். அப்போது இவருக்கு வயது 46 ஆகும். இவரது உடல் இவர்தம் அன்னையாரின் அடக்கவிடத்திற்கு அருகிலேயே நல்லடக்கம் செய்யப்பட்டது.

பல பெண்களை மணந்து, மணவிலக்குச் செய்த இவர்கட்கு பன்னிரண்டு ஆண்மக்களும், ஐந்து பெண்மக்களும் இருந்தனர்.

**ஹாரூனுர் ரஷீத்:** உலகப் புகழ்பெற்ற மாமன்னர்களில் குறிப்பிடத்தக்க பேரரசர் ஹாரூனுர் ரஷீது ஆவார். அப்பாஸியக் கலிஃபாவான இவரது ஆட்சிக் காலத்தைப் பொற்காலம் எனக் கூறுவர்.

கலீஃபா அல் மஹ்தியின் மகனாக கி.பி. 763 பிப்ரவரியில் பிறந்தார். தாயார் பெயர் கைஸுரான் என்பதாகும். மாபெரும் கல்விக் களஞ்சியமாகக் கருதப்பட்ட யஹ்யா பர்மகீ என்பவரிடம் இளமையில் கல்வி கற்றுத் தேர்ந்தார். அறிவிலும் வீரத்திலும் நிகரற்றவராக வளர்ந்தார். இவர் தமையனார்

ஹாதி காலமானவுடன் இவர் ஆட்சிப் பொறுப்பேற்றார்.

இவரது ஆட்சிக் காலத்தில் நாட்டில் வளம் பொங்கியது. சுபிட்சமும் அமைதியும் கைகோத்து நின்றன. பல்துறை அறிஞர்களையும் கலை வல்லுநர்களையும் உள்ளடக்கிய தலைநகரம் பக்தாது. உலகின் ஒப்பற்ற நகராக உலகில் சிறப்புற்று விளங்கியது. இந்நகரை அடித்தளமாகக் கொண்டு பல்வேறு அரபு நாட்டுக் கதைகள் உருவாகி பக்தாதின் பெருமையையும் ஹாரூனுர் ரஷீத் ஆட்சிச் சிறப்பையும் பறைசாற்றின.

அக்காலத்தில் வலுவான பேரரசர்களாக விளங்கிய ஃபிரான்ஸின் சார்லிமென், சீனப்பேரரசர் ரோமானியப் பேரரசி ஐரீன் போன்றோர் இவரது நட்பை நாடினர். அரிய பொருள்கள் பலவற்றை அன்பளிப்பாக வழங்கித் தங்கள் நட்பை வலுப்படுத்திக் கொண்டனர். இவரோடு நட்பு கொண்டிருப்பதைப் பெருமையாகக் கருதி மகிழ்ந்தனர்.

ரோமானியப் பேரரசி ஐரீனுக்குப் பின் ஆட்சிபீடமேறிய நிஸிஃபோரஸ் ஹாரூனுர் ரஷீதிடம் மாறுபாடு கொண்டு போருக்கெழுந்தான். அவன் படை நடத்தி ஹெராக்லியா, டியானா போன்ற பல பகுதிகளைக் கைப்பற்றினார். தோல்வியடைந்த நிஸிஃபோரஸ் கப்பம் கட்டி வரலானான். இதன்பின் இவரிடம் போரிட யாருமே முன் வரவில்லை.

இவர் மிகச்சிறந்த போர்வீரர். அதே சமயம் மிக உயர்ந்த நல்லியல்புகளும் மார்க்கப் பேணுதலும் உள்ளவராக விளங்கினார். பலமுறை ஹஜ் பயணம் மேற்கொண்டுள்ளார். சிறந்த தொழுகையாளியாக இருந்தார்.

அமைதியான இவர் ஆட்சி அறிவு வளர்ச்சிக்கு முன்னுரிமை வழங்கியது. கிரேக்க மொழியில் அக்காலத்தில் புகழ் பெற்று விளங்கிய அறிவு நூல்கள் அனைத்தையும் அரபி மொழியில் பெயர்க்கத் தனி அமைப்பே இயங்கியது. இதன்மூலம் பல சிறந்த அறிவியல் சிந்தனைகளும், அறிவியல் நூல்களும் மொழிமாற்றம் பெற்று மக்களின் அறிவைத் துரிதமாக வளர்க்கத் துணை நின்றன. இவரது அன்பான அரவணைப்பில் மார்க்க மேதைகள் கலை வல்லுநர்கள், கவிவாணர்கள்) இசை மேதைகள் ஆகியோர் இன்புற்று வாழ்ந்தனர்.

ஒரு சமயம் எதிர்பாராமல் குராஸானில் அரசியல் குழப்பம் ஏற்பட்டது. குழப்பவாதிகளை அடக்க இவரே படை நடத்திச் சென்றார். ஸனாபாத் எனுமிடத்தில் தங்கியிருந்தபோது திடீரென நோய்வாய்ப்பட்டார். அங்கேயே காலமானார். அப்போது அவருக்கு 86 வயது. வரலாறும் அக்கால இலக்கியங்களும் இவர் பெருமையை வெகுவாகக் கூறுகின்றன.

**ஹிஜ்ரத்:** இச்சொல்லுக்கு 'இடம் பெயர்தல்' என்பது பொருளாகும். ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு முழுமையாகக் குடிபெயர்ந்து போவதே ஹிஜ்ரத் ஆகும். நபி இப்ராஹீம்(அலை) அவர்களும் அன்னை ஸாராவுடனும் லூத் (அலை) அவர்களோடு ஹர்ரான் எனுமிடத்திற்கு ஹிஜ்ரத் செய்தனர்.

அதன்பின் நிகழ்ந்த முழுமையான ஹிஜ்ரத் உதுமான் (ரலி) அவர்களும் அவர்தம் துணைவியார் ருகையாவும் மற்றும் முஸ்லிம்கள் சிலரும் பெருமானார் விருப்பப்படி அல்லாஹ்வுக்காக வேண்டி அபிஸீனியாவுக்கு மேற்கொண்ட ஹிஜ்ரத் ஆகும். அதற்குப் பிறகு குறைஷியர்களின் கொடுமை தாங்காது அண்ணலார் ஆணைப்படி

83 ஆண்களும் 18 பெண்களும் அடங்கிய முஸ்லிம் குழுவொன்று அபிஸீனியாவுக்கு ஹிஜ்ரத் சென்றது. பின்னர் குறைஷியர்களின் கொடுமை உச்சக்கட்டமானபோது முஸ்லிம்களை யத்ரிபுக்கு (மதீனா) ஹிஜ்ரத் செல்லுமாறு பெருமானார் கூறினார். அவ்வாறே முஸ்லிம்கள் ஹிஜ்ரத் சென்றனர்.

தாம் ஹிஜ்ரத் செல்ல இறை ஆணையை எதிர்நோக்கிக் காத்திருந்தார் பெருமானார் அவர்கள். அண்ணலார் எதிர்பார்த்தவாறே யத்ரிபுக்கு ஹிஜ்ரத் செல்ல கனவுமூலம் இறையாணை பிறந்தது, அதற்கொப்ப அபூபக்ர் (ரலி) அவர்களை உடன் அழைத்துக்கொண்டு யத்ரிபுக்கு (மதீனா) ஹிஜ்ரத் புறப்பட்டார். பின்னர், பெருமானாரைப் பின்பற்றி முஸ்லிம்கள் பலரும் யத்ரிபுக்கு ஹிஜ்ரத் செய்தனர். இவ்வாறு ஹிஜ்ரத் செய்தவர்கள் 'முஹாஜிர்' என அழைக்கப்பட்டனர். ஹிஜ்ரத்துக்குப் பின்பே இஸ்லாம் வலுவோடு வளர்ந்தது என்பது வரலாறு.

**ஹிஜ்ரி:** 'ஹிஜ்ரத்' என்ற சொல்லினடியாகப் பிறந்ததே 'ஹிஜ்ரி' என்ற சொல். இஸ்லாமிய ஆண்டு ஹிஜ்ரி என அழைக்கப்படுகிறது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து மதீனா நோக்கி ஹிஜ்ரத் சென்ற நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு அமைந்ததாகும்.

இஸ்லாம் நிலை பெறுவதற்கு முன்பே அராபியர்கள் பல்வேறு ஆண்டுக் கணக்குகளைக் கைக் கொண்டிருந்தனர். அவை அவர்களின் சமுதாய வாழ்வில் ஏற்பட்ட பல்வேறு முக்கிய நிகழ்ச்சிகளை ஆதாரமாகக் கொண்டிருந்தன. அவை 'அமைதி ஆண்டு', 'நில அசைவு ஆண்டு','யானை ஆண்டு' எனப் பல்வேறு ஆண்டுக் கணக்குகளைக் கொண்டதாகும். இத்தனை ஆண்டுக் கணக்குகள் அராபியர்களிடையே வழங்கி வந்த போதிலும், இஸ்லாமியருக்கென்று தனியே ஒரு ஆண்டுக் கணக்கு இருக்கவேண்டிய அவசிய அவசரத் தேவை ஏற்பட்டது.

உமர் (ரலி) இரண்டாவது கலீஃபாவாக இருந்தபோது ஒரு குறிப்பை எழுதினார். அதில் ஷஃபான் மாதம் எனக் குறித்தார். பின்னர், ஒரு ஐயம். எந்த ஆண்டின் ஷஃபான் மாதம் என்ற கேள்வியும் எழுந்தது. எனவே, முஸ்லிம்களுக்கென தனி ஆண்டு முறை இருக்க வேண்டியதன் அவசியத்தை உணர்ந்தனர். இதை அழுத்தமாக உணரும் வகையில் வேறொரு சந்தர்ப்பமும் ஏற்பட்டது. கலீஃபா உமர் (ரலி) அவர்கள் அடிக்கடி பல்வேறு மாநில ஆளுநர்கட்குக் கடிதம் எழுத வேண்டிய அவசிய, அவசரத் தேவை ஏற்பட்டது. அக்கடிதங்களில் தேதி ஏதும் குறிப்பிடாததால் ஆளுநர்கட்குக் குழப்பமேற்பட்டது. இக்குறையைப் போக்க புதிய இஸ்லாமிய ஆண்டை உருவாக்க முயற்சி மேற்கொள்ளலானார்.

இதைப் பற்றி உமர் (ரலி) தம் தோழர்களிடம் ஆலோசனை கேட்டார். சிலர் பாரசீக ஆண்டைப் பின்பற்றி அமைக்கலாம் என்றனர். வேறு சிலர் பெருமானார் (ஸல்) அவர்களின் பிறந்த நாளையே இஸ்லாமிய ஆண்டின் தொடக்கமாகக் கொள்ளலாம் என்றனர். அவ்வாலோசனையில் கலந்து கொண்ட பெருமானாரின் மருகர் அலீ (ரலி) அவர்கள் அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவினின்றும் மதீனா சென்ற நாளிலிருந்து புதிய இஸ்லாமிய ஆண்டைத் துவங்கலாம் எனக் கூறினார். இந்தஆலோசனையை

எல்லோரும் ஏற்றனர். இவ்வாறாக இஸ்லாமிய மாதம் பெருமானார் மக்காவிலிருந்து மதீனா, 'ஹிஜ்ரத்' செய்த நாளை அடிப்படையாகக் கொண்டு 'ஹிஜ்ரி' ஆண்டின் முதல் மாதமாக முஹர்ரம் மாதம் அமைக்கப்பட்டது.

பெருமானார் மக்காவினின்றும் மதீனா புறப்பட்டு இடம் பெயர்ந்து சென்றது 'ரபீயுல் அவ்வல்' மாதத்திலாகும். அண்ணல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து ரபீயுல் அவ்வல் முதல் தேதி புறப்பட்டு, வெள்ளிக்கிழமை மதீனா நகருள் புகுந்தார்கள். ஆனால். ஹிஜ்ரி ஆண்டின் முதல் மாதம் பெருமானார் புறப்பட்ட ரபீயுல் அவ்வல் மாதம் முதல் தேதியிலிருந்தோ அல்லது மதீனா நகர் போய்ச் சேர்ந்த ரபீயுல் அவ்வல் பன்னிரண்டாம் தேதியிலிருந்தோ தொடங்கப்படவில்லை. அதற்கு முன்பாக உள்ள 69 நாட்களைப் பின்னுக்குத் தள்ளி முஹர்ரம் முதல் நாள் ஹிஜ்ரி ஆண்டின் துவக்க நாளாக ஆக்கப்பட்டது. இதற்குச் சிறப்பான காரணம் உண்டு.

அக்கால அரபு மக்களின் முக்கியத் தொழிலாக அமைந்திருந்தது வணிகத் தொழிலாகும். இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளில் ஐந்தாவது இறுதிக் கடமை ஹஜ் கடமையாகும். அக்கடமையை இனிது நிறைவேற்றிய முஸ்லிம்கள் தங்கள் வாணிக நடவடிக்கைகளை மேற்கொள்ள வாய்ப்பான காலமாக முஹர்ரம் மாதம் அமைந்திருந்தது.அதனால் ரபீயுல் அவ்வல் மாதத்திற்குப் பதிலாக வாணிகத்திற்குரிய மாதமாகிய முஹர்ரம் மாதம் ஹிஜ்ரி ஆண்டின் துவக்க மாதமாக அமைக்கப்பட்டது.

**ஹுஸைன் (ரலி:)** நாயகத் திருமேனியின் பேரர்களுள் இளையவர் அலீ (ரலி) அவர்கட்கும் ஃபாத்திமா நாச்சியாருக்கும் ஹிஜ்ரி நான்காமாண்டு ஷஃபான் பிறை5இல் மதீனாவில் பிறந்தவர். பெருமானாரின் பேரன்பைப் பெற்றவர்.

தம் தமையனார் ஹஸன்(ரலி) அவர்களின் நிழலாக வாழ்ந்தவர். தம் அன்புச் சகோதரர் மறைவுக்குப் பின் அவர் முஆவியா (ரலி) அவர்களிடமிருந்து பெற்று வந்த உதவித் தொகையை இவரும் பெற்று வந்தார்.

தம் மறைவுக்குப்பின் கலீஃபா பதவியை ஹஸன் (ரலி) அவர்கட்கு வழங்குவதாக முஆவியா (ரலி) முன்பு வாக்களித்திருந்தார். ஆனால் அவ் வாக்குறுதிக்கு மாறாக அவர் மகன் யஸீது கலீஃபா பதவிக்கு வந்தார்.

யஸீத் தீய பழக்கங்கள் உள்ளவர். குடிகாரர்; தருக்கு மிகுந்தவர்; மார்க்கப் பற்றுக் குறைந்தவர். எனவே, அவர் கலீஃபா பதவிக்குத் தகுதியற்றவர் என ஹுஸைன் (ரலி) கருதினார். அவ்வாறே யஸீதின் ஆளுகைத் தலமான கூஃபாவின் மக்களும் கருதினர். எனவே, எல்லா வகையிலும் தகுதி படைத்த ஹுஸைன் (ரலி) அவர்களே கலீஃபாவாக ஆகவேண்டுமென விரும்பினர். இதற்காகத் தாங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையும்தியாகம் செய்யத் தயாராக இருப்பதாகவும் வாக்குறுதி அளித்தனர். இதற்கு வாய்ப்பாக கூஃபா நகர் வந்தால் தாங்களும் ஹுஸைன் (ரலி) கூட்டத்துடன் சேர்ந்துகொள்வதாகக் கூஃபா மக்கள் உறுதியளித்தனர். இதை முழுவதுமாக நம்பி ஹுஸைன் (ரலி) தம் குடும்பத்தார் உட்பட நூறு பேருடன் கூஃபா நகர் நோக்கிச் சென்றார். கூஃபாவுக்கு அருகில் உள்ள கர்பலா எனுமிடம் சென்று தங்கினார், அப்போதுதான் கூஃபா மக்கள் தங்களை ஏமாற்றியது

தெரிந்தது. இதற்குள் உபையதுல்லா என்பவரின் பெரும்படை சூழ்ந்து கொண்டது. யஸீதின் தலைமையை ஏற்றுக்கொண்டு உயிர் பிழைத்துச் செல்லுமாறு கூறப்பட்டது. ஹுஸைன் (ரலி) அவர்களும் அவர்தம் கூட்டத்தினரும் மறுக்கவே கடுமையாகத் தாக்கப்பட்டனர். 43 காயங்களுடன் ஹுஸைன் (ரலி) கொல்லப்பட்டார். அவரது குடும்பத்தைச் சேர்ந்த 72பேர் கொல்லப்பட்டனர். இப் படு பாதகச் செயல் கர்பலா களத்தில் முஹர்ரம் பத்தாம் நாள் நிகழ்ந்தது. இவரது தலை வெட்டப்பட்டு மதீனாவில் அன்னையின் கப்ருக்கருகில் அடக்கம் செய்யப்பட்டதாக ஒரு செய்தி கூறுகிறது. மற்றொரு செய்தி திமிஷ்க்குக்கு அனுப்பப்பட்டு அங்கு அடக்கம் செய்யப்பட்டதாகக் கூறுகிறது. இதற்கிடையில் கெய்ரோ நகரில் அடக்கம் செய்யப்பட்டதாகக் கூறப்படுகிறது. அங்குள்ள தர்கா ஒன்றில் இன்றும் ஒரு தொப்பி வடிவம் வைக்கப்பட்டுள்ளது. ஆயினும் ஹுஸைன் (ரலி) அவர்களின் உடல் கர்பலாவிலேயே அடக்கம் செய்யப்பட்டுள்ளது. அவ்விடம் 'மஷ்ஹத் ஹுஸைன்' என்ற பெயராலேயே இன்றும் அழைக்கப்பட்டு வருகிறது.

இவரும் இவர்தம் குடும்பத்தினரும் கொலையுண்ட முஹர்ரம் பத்தாம் நாள் இவரது நினைவு தினமாகக் கடைப்பிடிக்கப்படுகிறது. இந்நாளை ஷீயாப் பிரிவு முஸ்லிம்கள் துக்க தினமாகக் கொண்டு தங்கள் மார்பிலும் முதுகிலும் கையாலும் சங்கிலியாலும் அடித்துக் கொள்கின்றனர். இதனை ஊர்வலமாகச் சென்று செய்கின்றனர்.

**ஹைதர் அலி:** மைசூர் சுல்தானாக விளங்கிய திப்பு சுல்தானின் தந்தையாவார். ஹைதர் அலியின் தந்தையார் ஃபத்ஹ் முஹம்மது என்பதாகும், இவர் முகலாயப் படையணியில் பணியாற்றியவர்.

ஹைதர் அலி வீரஉணர்வுமிக்கவராக இளமைதொட்டே விளங்கினார். இதனால் இவர் படிப்பைக் கூடக் கைவிட்டு வாளோடு வளர்ந்தார். இவர்போர்ப் படையில் சேர்ந்து தம் வீரத்தை நிலை நாட்டினார். அதனால் வெகுவிரைவில் படைத் தளபதியாக உயர்ந்தார். மைசூர் மன்னர் பெயரளவுக்கு இருந்தாலும், அதிகாரம் முழுமையும் ஹைதர் வசமே இருந்தன.

இவர் தலைமையில் சென்ற படை மராட்டியப் படையை வென்று வாகை சூடியது. இதற்கு வெகுமதியாக இவர் மைசூர் மன்னரால் திண்டுக்கல் பகுதிக்கு ஆளுநராக நியமிக்கப்பட்டார். அங்கு இவர் ஒரு வலுவான கோட்டையைக் கட்டினார். அதன் பின் இவர் கண்ணனூர்வரை சென்று சிற்றரசர்கள் பலரை வெற்றிக்கொண்டார். இவர் வெற்றிகளைக் கண்டு வெகுண்ட நிஜாம் மன்னரும், மராட்டியரும் ஆங்கிலேயர்களும் ஒன்றிணைந்து ஹைதருடன் போரிட்டனர். இறுதி வெற்றி ஹைதருக்கே கிட்டியது.

இவர் சென்னைமீதும் படையெடுத்தார். பரங்கிமலை வரை வந்த இவரிடம் ஆங்கில அரசாங்கம் சமரச உடன்படிக்கை செய்து கொண்டது. அதன் படி ஆற்காடு நவாப் வசமிருந்த கரூர் பகுதியை மைசூருக்கே திருப்பி தந்தது. அதன்பின் கடப்பை, பெல்லாரி போன்ற ஆந்திரப் பகுதிகளையும் கைப்பற்றினார். இவற்றைக் கைப்பற்றிய தன் நோக்கம் ஆங்கிலேயர்களை எச்சரித்து, அவர்களை இந்திய மண்ணிலிருந்து விரட்ட வேண்டும் என்பதே. இந்நோக்கத்தைப் புரிந்து கொண்ட

ஆங்கிலேயர்கள் இவருக்கு எதிராகச் சதி செய்யலாயினர். மராட்டியரும், நிஜாமும், ஆற்காடு நவாபும் ஹைதருக்குத் துரோகமிழைக்க முற்பட்டனர். எனவே, ஹைதர் ஃபிரெஞ்சுக்காரர்களின் துணையைத் தேடினார். அவர்களும் இவருக்கு உரிய நேரத்தில் துணையாயிருக்கவில்லை. எனவே, ஆங்கிலேயர்களை அறவே விரட்டும் இவரது திட்டம் நிறைவேறாமலே போனது.

இவர் நாட்டுப்பற்றுமிக்க மாவீரராக விளங்கினார். இவருக்கு எழுதப்படிக்கத் தெரியாவிட்டாலும் வியக்கத்தக்க அளவு நினைவாற்றல் மிக்கவராக விளங்கினார். இவர் புற்றுநோய் காரணமாகச் சித்தூருக்கருகில் 1782ஆம் ஆண்டு டிசம்பர் 7ஆம் நாள் காலமானார்.

**ஸ்ரீலங்கா:** இலங்கையைக் குறிக்கும் இன்றைய பெயரே 'ஸ்ரீலங்கா' என்பது. இந்நாடு இஸ்லாமிய நூல்களில் 'ஸரந்தீப்' என்ற பெயரால் குறிப்பிடப்படுகிறது. நூஹ் (அலை) அவர்கள் காலத்தில் ஏற்பட்ட மாபெரும் பிரளயத்திற்கு முன் இந்நாடு லெமூரியாக் கண்டத்தின் ஒரு பகுதியாக அமைந்திருந்தது. பிரளயத்திற்குப் பின்னர் தனித்தீவாக ஆயிற்று. சிங்களத்தீவு என்ற வேறொரு பெயரும் இதற்கு உண்டு.

இறைக் கட்டளையை மீறியமைக்காக மண்ணுலகுக்கு அனுப்பப்பட்ட ஆதம் (அலை) இத்தீவில் உள்ள மலையொன்றில்தான் இறக்கப்பட்டார். அதுவே இன்றைக்கு ஆதம் மலை என அழைக்கப்படுகிறது. அம்மலை உச்சியில் ஆதம் (அலை) அவர்களின் பாதச் சுவடு ஒன்று பதிந்திருப்பதாகக் கூறப்படுகிறது. இதைக் காண அரபுகள் அடிக்கடி இப்பகுதிக்கு வருவதுண்டு. அதன் காரணமாக அரபுகளுக்கும் இந்நாட்டிற்கும் நீண்டகாலத் தொடர்பு உண்டு.

இந்நாட்டின் வழியாகத்தான் அரபிகள் சுமத்திரா, இந்தோனேசியா, மலேசியா போன்ற நாடுகளுக்குச் சென்று தீன் நெறியைப் பரப்பினர். வணிகத்தையும் நடத்தினர். உலகப்புகழ் பெற்ற பயணி இப்னு பதூதா இந்நாட்டிற்கும் வந்து சென்று உள்ளார். அவர் எழுதியுள்ள குறிப்புகள் அவர் வருகையின்போது இந்நாடு இருந்த நிலையைத் தெளிவாக்குகிறது. இந்தியாவைப் போன்றே இலங்கையும் போர்த்துக்கீசியர், டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர்களின் ஆதிக்கப் போட்டிக்கு ஆளாகியது. இறுதியில் வென்ற ஆங்கிலேயர்களே இலங்கை சுதந்திரம் பெறும்வரை ஆண்டு வந்தனர்.

இந்திய எல்லையிலிருந்து 26 மைல் தொலைவில் உள்ள ஸ்ரீலங்கா 430கி.மீ. நீளமும், 220 கி. மீ. அகலமும் உள்ள தீவாகும். நாட்டின் மொத்தப்பரப்பளவு 65,610 ச. கி. மீ. ஆகும். மக்கள் தொகை சுமார் ஒன்றே முக்கால் கோடியாகும். இவர்களில் பெரும்பான்மையினர் சிங்கள மொழி பேசும் சிங்களவர்கள். வடக்கு, கிழக்கு மாநிலங்களில் தமிழ்மொழி பேசும் தமிழர்கள் அதிக எண்ணிக்கையினராக வாழ்கின்றனர். ஸ்ரீலங்காவில் வாழும் மிகச் சிறுபான்மையினரான முஸ்லிம்களின் தாய் மொழி தமிழேயாகும்.

இங்குள்ள ஆதம் மலை இஸ்லாமியப் புனித நினைவிடமாகக் கருதப்படுகிறது. இந்நாட்டிற்குத் தீனைப் பரப்ப வந்த பல இறைநேசச் செல்வர்களின் அடக்கவிடங்கள் பல இந்நாட்டில் உள்ளன. ஷாகுல் ஹமீது பாதுஷா நாயகம் இந்நாடு வந்து சென்ற வரலாறு உண்டு.

இஸ்லாமியத் தமிழ் வளர்ச்சிக்கு இந்நாட்டைச் சேர்ந்த கலாநிதி ஹாஜி ம.மு. உவைஸ் போன்றவர்கள் பெருந்தொண்டாற்றியுள்ளனர். உலக இஸ்லாமியத் தமிழ் ஆய்வரங்க நான்காவது மாநாடு இங்கு நடந்துள்ளது.

# பொருட் குறிப்பு அகராதி

ஈ



உ



எ



ஏ



ஐ



ஔ



க



கா



கி



கீ



கு



கூ



கெ



கௌ



ச



சா



சி

